Thamil pulavar
Agaravarisai
I
By
Ramasamy Pulavar



கழக வெளியீடு, க0கக

# தமிழ்ப்புலவர் அகரவரிசை

## இரண்டாம் தொகுதி

## (முதற் பகுதி)



ஆசிரியர்:

கருப்பக்கிளர் சு அ இராமசாமிப் புலவர்






திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி - 6. சென்னை - 1.
1962

சுப்பிரமணிய அருட்டிரு சதாசிவ இராமசாமிப் புல... 907)



Ed 1 May 1962



# THAMIZH PULAVAR AKARAVARISAI

SERIES II—VOL I






Appar Achakam, Madras-1.

# பதிப்புரை

மன்னு மாந்தர் வளம்பெற்று நன்னிலையராய் வாழ்ந்து பிறவிப் பெரும் பயன் எய்துதற்கு நாடும் மொழியும் நன்னெறியுமாகிய மூன்றும் முறையே உடல், உள்ளம், உயிர் போன்று திகழ்வன. இவற்றுள் நடுவணதாகிய மொழி நாட்டுக்கும், நன்னெறிக்கும் உயிர்போன்று உறு துணையாவது. அம் மொழியொன்றினாலேயே மக்கள் விலங்கினின்றும் உயர்ந்து துலங்குகின்றனர். மொழி யொன்றே விழியொத்து உயிரினும் ஓம்பப்படுவதாகிய நல்லொழுக்கத்துக்கு வழிகாட்டியாக விளங்குகின்றது.

அம்மொழியினை நலம்பல நல்கும் இலக்கண இலக்கியங் களானும், புகழ்நூல் பொருள் நூல்களாகிய தோத்திர சாத்திரங்களானும் வளர்த்துச் செழிப்புறச் செய்வோர் செந்நாப்புலவரேயாவர். மேலும் அப்புலவர் பெருமக்கள் அவ்வப்போது புரவலர்பால் பரிசில் பெறும் பொருட்டு விடுக்கும் சீட்டுக்கவிகளானும், புலவர் ஆக்கியளிக்கும் சிறந்த நூல்கட்கு வரைந்தளிக்கும் வளமார் சாற்றுகவி களானும் நாட்டு வரலாறுகளும், நல்லறிவுரைகளும் பல நயம் பெறக் காணலாம்.

அத்தகைய சால்பு நிறை புலவர் பெருமக்களின் செம்மை வரலாறுகளை நாம் ஒவ்வொருவரும் நன்கு தெரிந்து கொள்ளவேண்டியது சீரிய கடமையு முரிமையுமாகும். இவ் வரலாறுகளை எத்துணைப் பெருமுயற்சியுடன் ஆசிரியர் தொகுத்துள்ளார் என்பது அவர்தம் அரியமுன்னுரையால் தெரியவரும். அத்துறைவல்லராகிய திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்களைக் கொண்டு "தமிழ்ப்புலவர் வரிசை"

என்னும் பெயரான் விரிவாக எழுதுவித்துப் புலவர் அறுநூற்றைம்பத்தொன்பதின்மரைப் பற்றி இருபத்தைந்து புத்தகங்கள் வெளியிட்டனம்.

மேலும் ஆயிரத்தறுநூற்றுக்கு மேற்பட்ட புலவர்களின் வரலாற்றுக் குறிப்புக்கள் கிடைக்கப்பெற்றன. அவற்றைத் "தமிழ்ப் புலவர் அகரவரிசை" பகுதி-க, உ, ௩ என மூன்று புத்தகங்கள் முதல் தொகுதியாக வெளியிட்டனம். இம் மூன்றன்கண்ணும் ஆயிரத்தைந்நூறு புலவர்களின் வரலாறுகள் அடங்கியுள்ளன. இதுபோல் இந்நூல் "தமிழ்ப் புலவர் அகரவரிசை" (இரண்டாம் தொகுதி) முதற்பகுதி என்னும் பெயரான் வெளிவருகின்றது. இதன்கண் ஐந்நூற்று ஐம்பத்து நான்கு புலவர் வரலாறுகள் வெளிவந்துள்ளன.

இந்நூல் வெளியீட்டுச் செலவுத் தொகையின் ஒரு பகுதியை நன்கொடையாக வழங்கிய மைய அரசின் அறிவியலாராய்ச்சி—பண்பாட்டுச் செய்தித்துறை யமைச்சவைக்கு எங்கள் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

இதனை எழுதியுதவிய திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கட்குக் கழகத்தார் நன்றியுரித்தாகுக. இந்நூலினைப் பெருமக்களும், ஆசிரியர் மாணவர்களும், நூலகங்களும் வாங்கியும் வாங்குவித்தும் பயன் எய்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

தமிழ்ப் புலவர் அகரவரிசை நூலைத் தொகுக்கத் தொடங்கிய செய்தியைக் குறித்துத் தமிழ்ப்புலவர் அகர வரிசை முதல் தொகுதியின் மூன்று பகுதிகளிலும் விளக்க மாக எழுதியிருக்கின்றேன். இப்பொழுது இரண்டாந் தொகுதி வெளிவருகின்றது. அத்தொகுதி வெளிவந்த பிறகு சென்னை சிந்தாத்திரிப்பேட்டை வேதாந்த சங்கத்தில் உள்ள கோ. வடிவேலுச் செட்டியார் நூல்நிலையம், சிக்கல் பொருள்வைத்த சேரியில் உள்ள உகந்தலிங்கஞானதேசிகர் திருமடாலய நூல்நிலையம், திருவாரூர் மடப்புறத்தில் உள்ள குரு தட்சணாமூர்த்தி சுவாமிகள் மடாலய நூல்நிலையம், சென்னை இராசா அண்ணாமலைபுரத்தில் உள்ள வையாபுரிப் பிள்ளையவர்களின் திருமகளார் சரோசனி அம்மையாரின் வையாபுரிப் பிள்ளை நூல்நிலையம், இராமநாதபுரத்தில் உள்ள தாயுமான சுவாமிகள் சன்மார்க்க சங்க நூல்நிலையம், சிதம் பரம் மெய்கண்டவித்தியா சாலையில் உள்ள சொக்கலிங்கச் செட்டியார் நூல்நிலையம், இலக்கணச் சுவாமிகள் செப் பறைச் சுவாமிகள் நூல்நிலையம், சிதம்பரம் ஆறுமுக நாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலை நூல்நிலையம், சிதம் பரம் உலகமூர்த்தி தேசிகர் மடத்தின் நூல்நிலையம், சிதம் பரம் கனகசபை நகரில் உள்ள கிருட்டிணையர் நூல் நிலையம், வாலாசாபாத்தில் உள்ள வள்ளலார் மாணவர் இல்லத்தின் நூல்நிலையம், சென்னை அடையாற்றில் உள்ள டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை திருவெட்டீசுவரன் பேட்டையில் உள்ள டாக்டர் உ. வே. சாமிநாதையர் இல்லத்து நூல்நிலையம், சென்னை தியாகராய நகரில் உள்ள தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமயப்

பிரசாரநிலைய நூல்நிலையம் ஆகியவைகளில் இருந்த நூல்களெல்லாம் பார்க்கப்பட்டு எழுதப்பெறாத புலவர்களின் குறிப்புக்கள் எழுதப்பட்டன.

சென்னை அரசினருக்கு எழுதி அவர்களுடைய உடன்பாடு பெற்று, ஆவணக் களஞ்சியத்தில் (ரிகார்டு ஆபீஸ்) உள்ள பழைய நூல்களை 1-12-1959 முதல் 25-8-'60 வரை பார்வையிட்டுப் பல குறிப்புக்கள் தொகுக்கப்பட்டன. ஆயினும் எல்லாப் புலவர்களையும் பற்றிய குறிப்புக்களைத் தொகுத்து முடித்துவிட்டதாகக் கூறமுடியாது. ஆவணக் களரியிலேயே பல நூல்கள் நாட்பட்டபடியினால் தூளாகி அழிந்துபோய் விட்டதாகத் தெரிகிறது. அங்கு நான் நூல்களைப் பார்வையிட்ட காலத்தில் பலமொழி நூல்களும் அங்கு வந்து சேர்ந்த வரிசைமுறைப்படி அடுக்கப்பெற்றுப் பலமொழி நூல்களும் ஒருங்குவிரவிக் கிடந்தமையின், நான் குறிப்பிட்ட பல நூல்கள் பார்வைக்கு வரவில்லை. இப்பொழுது அங்கு நூல்களை மொழிவாரியாகப் பிரித்து வைக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அங்கு நூல்களைப் பார்ப்பதற்கு அப்பொழுது தமிழ்நாட்டின் கல்வியமைச்சராக இருந்து இப்பொழுது மைய அரசின் கனரகத் தொழிலமைச்சராக விளங்கும் உயர்திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் உதவிபுரிந்தனர். அவர்களுடைய உதவிக்கு நன்றிசெலுத்துங் கடப்பாடுடையேன்.

இவ்வாறு தொகுத்த வகையினால் இப்பொழுது ஏறக்குறைய ஆயிரங் குறிப்புக்கள் அகப்பட்டுள்ளன. இவ்வகரவரிசை நூல்களில் நூல்களின் பெயர்களையும் ஆசிரியர்களின் பெயரையும் அகரவரிசை முறையில் தொகுத்து வெளியிடுவது தமிழ் நூல்களின் பரப்பையும் அவைகளின் வளர்ச்சியையும் அறிய விழைவார்க்கு உதவியாக இருக்கு

மென்று அவ்வாறு செய்யலாயினேன். கழக ஆட்சிப் பொறுப்பாளரும் இவ்வகர வரிசை நூல்கட்கு வழிகாட்டியு மாகிய உயர்திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் தமிழ்ப் புலவர் வரிசை இருபத்தைந்து நூல்களில் வருபவைகளை யுஞ் சேர்த்துவிடலாமென்று கூறியமையின் அவைகளையுஞ் சேர்த்திருக்கிறேன்.

இவ்வகர வரிசைத் தொகுப்பு இத் தொகுதியோடு முடிவடைகிறது. இனிமேற் கிடைக்கப்பெறுங் குறிப் புக்கள் மறு பதிப்புக்களிற் சேர்க்கப்பெறும். இவ்வகர வரிசையிற் காணப் பெறும் புலவர்களைப்பற்றி விளக்கமாக அறிந்தவர்கள் தெரியப்படுத்துவார்களாயின் தமிழ்ப்புலவர் வரிசையின் பகுதிகளிற் சேர்த்து விரிவான வரலாற்றை எல்லாரும் உணருமாறு செய்யலாம். ஆகவே அறிந்த வர்கள் எழுதியனுப்புவார்களாக. தமிழ்ப்புலவர் வரிசை இருபத்தைந்து புத்தகங்களினும் வந்துள்ள புலவர் பெரு மக்களின் பெயர்களும் அகரவரிசையில் இறுதியிற் சேர்க்கப் பெற்றுள்ளன. அப்புலவர்களைப்பற்றி அறிய விரும்புவோர் அவ்வவ்வெண்ணுள்ள புத்தகத்தைப் பார்த்து அறிந்து கொள்ளலாம்.

பைந்தமிழ்ப் பண்ணை
கருப்பக்கிளர்
தஞ்சை மாவட்டம்
12-5-1962

சு. அ. இராமசாமிப் புலவர்



# தமிழ்ப் புலவர் அகரவரிசை

## (இரண்டாம் தொகுதி)

## முதற் பகுதி

---

### க. அகுமதிப்ருஹீம் ஆலிம்சாகிபு
(1910)

சோழ வளநாட்டில் நாகபட்டினத்தில் இருந்தவர். நாகை நாஷனல் உயர்நிலைப் பள்ளியின் இஸ்லாமியப் போதகாசிரியர். இவர் "நவாலங்கார மஞ்சரி" என்னும் நூலை இயற்றியிருக்கிறார்.

பதம்

வாருங்காரும் ஏழையைப் பாருந்தாருந் தாயே
  மக்கபதியே சொர்க்க நீதியே
மஹ்மூதே மனதிரங்குமே
  வாது தீது அகலவே
—வாருங்
வாடினேனே நாடினேனே பாடினேனே யான்
  மருவேதருவே குருவேதிருவே மருகமுல் தாரும்
மதிமன்னரே துதிசொன்னனே
  வந்தபுலவரைக் காருமே
வறுமை சிறுமை விலகவே"

என்பது இசைப்பாடல்களில் ஒன்று.

### உ. அகுமது லெவ்வை ஆலிம் சாகிபு

இவர் பதினெட்டாம் நூற்றாண்டிற் காயற் பட்டினத்தில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் நெய்னாலெவ்வை ஆலிம் சாகிபு. இவர் "தாய்மகளேசல்" என்னும் நூல் ஒன்றை இயற்றியிருக்கிறார்.

## ௩. அங்கப்ப பிள்ளை—நா,
(1894)

"நாவலர் பெருமான் நட்பி லற்புதன்
பூவுளோர் நமக்குப் பொருந்திய நன்னெறி
காட்டுமுந் நியோகன் கனப வாநியூர்
செய்நவந் தோன்றச் செனித்த பெரியோன்
சதுரன் சகுணன் சபைக்கலங் காரன்
நாகப்பன் ஈன்றருள் யூகப்பிர தாபன்
சங்கப் புலவனே நானெனும்
அங்கப்ப னென்னுடை ஆசிரி யன்னே"

என்று விராட்சிமங்கலம் வழிவழிப் புலவர் கவிராய கந்தசாமிப் பிள்ளையால் பாராட்டப்பெற்ற இவர் பவாநி என்னும் ஊரில் நாகப்பபிள்ளை என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றினர். சிறந்த புலவராகிய இவர் முருகப்ப செட்டியார் என்பவர் மீது "முருகப்ப நவரச சிலேடை" என்னும் நூலை இயற்றியிருக்கிறார்.

"ஆருந் துதிக்கையால் அன்டினரைத் தாங்குகையால்
கூரு மதமுகமே கொள்கையால்—சேருமெழிற்
பஞ்சரத்தி னஞ்சுகமே பன்னுமுருகப்பனுக்குக்
குஞ்சரத்தை ஒப்பாகக் கொள்"

என்பது யானைக்கும் முருகப்ப செட்டியார்க்கும் சிலேடையாகப் பாடியது. இவருடைய மனைவியின் பெயர் கன்னியம்மாள். அம்மாது காலமானபொழுது இவர் நாற்பது பாடல்களால் இரங்கற்பாப் பாடியுள்ளார். அவைகளுள் ஒன்று:

"கடற்பிறந்த தெள்ளமுதே கனிந்தபலாப்
பழரசமே கமழ்மென் ருழை
மடற்பிறந்த பூந்துணரே மகிழ்காதற்
பத்தினியே மனைத்தால் என்கை
தொடப்பிறந்த பூங்குயிலே தொல்வினையால்
உனையிழந்து துயர்கொண் டுன்றன்
உடன்பிறந்தார் படும்பாட்டை உணர்ந்திவண்நீ
வாராயோ உயர்வான் நின்றே"

என்பது. இவ்வாறு மனைவியின்மீது இரங்கற்பாப் பாடி அலறியவர்கள், இப் புலவரைத் தவிர வேறு யாரும் இருப்பதாகத் தெரியவில்லை.

## ச. அங்கமுத்து முதலியார்—கா.

சென்ற நூற்றுண்டின் பிற்பகுதியில் வாழ்ந்திருந்தவர் இவர். காசிப்பரதேசி என்பவரை ஆசிரியராகக்கொண்டு வடமொழி தென்மொழி ஆகியவைகளை நன்கு கற்றுணர்ந்ததோடு மந்திர தந்திரங்களையும் நன்கு அறிந்திருந்தார். "அட்டமாசித்து" என்னும் நூலைப் பிறமொழியில் இருந்து தமிழில் மொழிபெயர்த்தார். இந்நூல் 1894 ஆம் ஆண்டில் அச்சிற்பதிப்பித்து வெளியிடப்பட்டிருக்கிறது.

## ரு. அங்குசாமிப் பிள்ளை—ரெ.

(19 - நூ.)

இவர் ஊறப்பாக்கம் என்று கூறப்பெறும் ஊரில் இருந்தவர். இவர் எளிதாகக் கவிபாடுந் தன்மையமையப் பெற்றபடியால் வரகவியென்னப் பெற்றார். இவருக்கு அம்பிகைதாசர் என்றும் பெயர் வழங்கியது. இவர் "வம்சப் பிரதாபம்" என்னும் நூலைப் பாடியுள்ளார். அந்நூல் 'கருணிகர் புராணச் சுருக்கம்' என்றும் வழங்குகிறது. நூலைப் பாராட்டி, அரன்வாயல் வேங்கடசுப்புப் பிள்ளை, பட்டாலம் கோயம்பேடு வேணுகோபால பிள்ளை, பணையஞ்சேரி தெய்வசிகாமணிப்பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"கோதை சூட்ட வேதன் மீட்டும்
    கோதை மாற்றிக் கோதைகை
நாத கோட்ட மேவ பற்றி
    நடந்து வண்ணப் பந்தலில்
போதப் பாலி சாட்கு டம்
    பொலிந்த ரத்ந திபமும்
வேதம் ஓத ஓம மாதி
    விதிச டங்கு மேவினர்"

என்பது நூலில் ஒரு பாட்டு. இந்தக் கருணீகர் புராணச் சுருக்கம் சில ஆண்டுகளுக்கு முன்பு அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டிருக்கிறது. பாட்டுக்கள் பெரும்பாலும் நயமுடையவைகளாக அமைந்துள்ளன.

## சு. அங்குமுத்துப் புலவர்
## (1891)

"பாற்கட லுதித்தன பான்மைய நாயொரு
நாற்கவி யுந்நெறி நற்றமிழ் அகத்தியன்
சிந்துரங் காக்கத் திகிரியை ஏவும்
ஐந்தரு சொக்கலிங் கப்பெத்த ணேந்திரன்
மனமகிழ் கடிகை மாக்களிற் சிறந்தோன்
இனிதுண ரங்குமுத் தியற்கவி வாணன்"

என்று அறிஞராற் பாராட்டப்பெற்ற இவர், ஆற்றங்கரைச் சமத்தானம் என்னும் ஊரில் சொக்கலிங்கப் பெத்தண்ணற் பூபதி என்னும் பெருநிலக் கிழாரிடம் அவைக்களப் புலவராக அமர்ந்திருந்து அவரை மகிழ்வித்தார். அவர் மீது 'பொய்கைப்பள்ளு' என்னும் நூல் ஒன்றையும் இவர் இயற்றியிருக்கிறார். அப்பள்ளு இருநாற்றுப் பத்தொன்பது பாடல்களைக் கொண்டது.

மூத்தபள்ளி முறையீடு

"ஆண்டவரே உம்முடைய வழியடிமைப் பள்ளன்
அடிக்கொருவே டங்கொள்கிறான் அவன்கொழுந்த கள்ளன்
நீண்டவிலங் கிடுகாற்புண் ணினமாறவில்லை
நினக்கடிமைக் காளாயு நிசமிலைகேள் சொல்லை
கூண்டமுகை யிளையபள்ளி கொடுந்தமையல் வெறியால்
கொள்கிறனென் மேலதிக கோபமவள் குறியால்
பாண்டவர்கோன் சொக்கலிங்கப் பெத்தண்ணன் எல்லைப்
படிகடவி ராதவினுற் பாருமெந்தன் எல்லை"

என்பது பள்ளில் ஒரு பாட்டு.

## எ. அசனலிப் புலவர்

இவர் காலங்குடியிருப்பு என்னும் ஊரில் நல்லராவுத்தப் புலவர் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். கல்வி கற்றுச் சிறந்த புலமை பெற்று இசைப் பாடல்கள் பல இயற்றியுள்ளார்.

## அ. அச்சுத உபாத்தியாயர்
## (19 - நூ.)

இவர் புதுச்சேரியில் தோன்றியவர், கல்வி கற்றுப் புகழ் பெற்றவுடன் சென்னைமாநகரை அடைந்து புரசவாக்கத்தில்

தங்கினர். மாணவர் பலர் இவரிடம் கல்வி பயின்றனர். புரசை அட்டாவதானம் சபாபதி முதலியாரும் இவரிடங் கல்வி கற்றவரே. புலவர் விச்சூர் தாமோதர முதலியார் முதலிய சில அன்பர்களுடைய வேண்டுகோளின்படி இவர் சென்னை புரசைவாக்கத்தில் எழுந்தருளிய கங்காதரேசுவரர்மீது வருக்கப் பாமாலை என்னும் நூலைப் பாடியுள்ளார். ஒரு பாடலை அடியிற் காண்க.

"ஊனமாம் உடலை மனைவியைச் சுதரை
உலகவாழ் வினை நிலை யாக
மானம்வைத் துழலும் மதியிலி என்றுன்
மலரடிக் கன்பனுய் வாழ்வேன்
நானவர் புரமுன் றெரியெழ நகைத்த
நமற்கனை னேயெனைத் தடுத்தாள்
தினரட் சகனே புரசையம் பதியில்
திகழுங்கங் காதரே சுரனே."

இவர் பள்ளிக்கூடம் ஒன்று வைத்துக்கொண்டு மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்தவரென்பது உபாத்தியாயர் என்னும் பெயரினுனே தெளிவாம்.

## கூ. அடியார்க்கடியார் சுவாமிகள்

இவர் ஞான உலகம் பழமொழிப் போதம் என்னும் நூல்களை இயற்றியிருக்கிறார். இவருடைய ஊர் காலம் முதலியன நன்கு தெரியவில்லை. நூல் மூலமும் உரையுமாக 1932 ஆம் ஆண்டிற் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாட்டிலும் வேதாந்தக் கருத்துக்களையும் அதற்குத் தக்க பழமொழிகளையும் அமைத்து நூலை இயற்றியிருக்கிறார். "வழியிற் கண்ட குதிரைக்கு வைக்கோற்புரியே கடிவாளம்" என்பது ஒரு பழமொழி. இதனையமைத்துப் பாடிய பாட்டை யடியிற்காண்க.

"கிழமைப் பரஞா னத்துணர்வு
கிடைத்துச் சீவன் முத்திநெறி
உழியுற் றோர்தாந் தமையடைந்தோர்
உளத்தின் மெய்ந்நூல் உணர்ச்சியெனும்
விழியைக் கொடுத்துக் கிரமத்தால்
மேலா நிலையை உறச்செய்வர்
வழியிற் கண்ட குதிரைக்கு
வைக்கோற் புரியே கவினமரோ."

## கO. அடைக்கலம்பிள்ளை—எஸ். என்.

(20 - நூ.)

பாண்டிவளநாட்டில் திருவைகுண்டம் தாலுகா சிவகளை என்னும் ஊரில் தோன்றியவர். இவர் "நற்குடிவேளாளர் வரலாறு உரை" "வரராசைக் கோமதியந்தாதி" "செந்திலந்தாதி" "கலிநீங்குபத்து" முதலிய நூல்கள் இயற்றியுள்ளார்.

"கலனுருங் கொங்கையார் பங்கய வான்முகங் கண்டுகண்டைம்
புலனுளும் வன்மையிலா மனத்தோடு புலமிடிந்தப்
பலனே திலான்செயும் பாமாலை யேனுநின்பாதமுற
அலைமோது சீரலை வாய்க்குகனே அணிந்தாட்கொள்வையே"

என்பது செந்திலந்தாதியில் ஒரு பாட்டு.

## கக. அட்சர முதலியார்

(20 - நூ.)

இவர் 'மகுடவல்லி' என்னும் பெயருடைய கற்பனைக்கதை யொன்றை எழுதியிருக்கிறார். இக்கதையைத் தவிர வேறு நூல்கள் இவர்பெயரால் வழங்குவதாகத் தெரியவில்லை.

## கஉ. அண்ணுச்சாமி முதலியார்—திருத்தணிகைப்போரூர்

(20 - நூ.)

சென்னை பிரம்பூருக்கடுத்த சிறுவள்ளூரில் இருந்தவர். சென்னை பச்சையப்பன் கல்லூரியிற் பெரும்புலவராக விளங்கியிருந்த பூவை-கிருட்டிணசாமி முதலியார் என்பவரிடங் கல்வி கற்றுப் புலவரானுர். இவர் சித்திக்கணபதி போற்றிமாலை, சிவ பொன்னம்மைப்பாமாலை என்னும் நூல்களை இயற்றியுள்ளார்.

"வலதுகண் ஒளியைத் தந்து வாழ்ந்திடும் படிக்குச் செய்தீர்
இடதுகண் ணொளியைத் தாரும் என்குல தெய்வம் நீரே
மலைமகள் மகனே போற்றி மால்மரு மகனே போற்றி
தலைமுறை மூவேழுக்குந் தரிசனம் தாரும் போற்றி"

என்பது சித்திக்கணபதி போற்றிமாலையில் ஒரு பாட்டு.

## கரு. அண்ணமலைச் செட்டியார்—ப.
(1886)

இவர் ஆரணி சாகிர் திருமலை சமுத்திரம் சந்து-பழனியப்ப செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிக் கல்வியில் வல்லவராக விளங்கியவர். இவர் 'ஏகம்பரநாதர் தோத்திரப் பதிகம்' என்னும் நூலைப் பாடியுள்ளார்.

"சண்டனை உதைத்தபொற் சரணனே பிரணமிகு
நாமனே சோமதரனே !
நாவுபுலி பாம்புநுதி சாற்றவரு ளுங்கடைத்
தாரனே மேருகரனே !
தொண்டுபுரி மார்க்கண்ட னுக்கென்று மீரெட்டுத்
தொந்தமுடன் ஈந்தஅரனே !
சுரர்கள்துயர் அறஒருசு தன்றனை அளித்தநல்
தூயநன் னேயபரனே !
எண்டிசைய ருந்துதி இயற்றிநிற முப்பணியும்
ஈசனே மாபிலானே !
இனியசன காதிபர்க ளுக்கால நீழலில்
இருந்தருள் புரிந்ததிரனே !
அண்டம தளாவுமணி மண்டபமிகுந்திலகு
வந்தமிகு காஞ்சிபுரிவாழ்
அமலனெனு மாவிம்ப கமலனுரை யேதம்ப
அமலிமகிழ் ஏகம்பனே"

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## கச. அண்ணவி
(1889)

இவர், தாளை என்னும் ஊரில் ஊர் அதிகாரியாக விளங்கியிருந்ததன்றித் தமிழ்நூல்களை நன்கு கற்றும் இருந்தார். ஞானசவுந்தரியம்மாள் நாடகம் என்னும் நாடகநூல் ஒன்று இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது. இந்நாடகநூல் சிறந்த முறையில் அமைந்ததன்று.

"வஞ்சியர்க் கரசே எந்தன் மனைவியே சொல்லக் கேளு
வெஞ்சின மிருகமெல்லாம் வேட்டைக ளாட வேநான்
இன்சொல்லால் போறேன் எந்தன் இயல்பெருமகனை வைத்துத்
தஞ்சமாய் மனையில் வாழ்ந்து நயவுடன் இருப்பாய் பெண்ணே"

என்பது நாடகத்தின் பாடல்களில் ஒன்று. நாடக நூல்கள் அதிகம் பரவாதிருந்த அந்நாளில் இந்நூல் சிறந்த நாடகங்களில் ஒன்ருக மதிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

## கரு. அண்ணுவையர் சுப்பராய ஐயர்

இவரைப்பற்றிய செய்திகள் புலனுகவில்லை. முருகக்கடவுளிடத்தில் பேரன்புகொண்டொழுகினர். அதனுல் இவருடைய பெயர் சரவணபவதாசன் எனவும் வழங்கியது. இவர் "சிவசுப்பிரமணியர் பசனைக் கீர்த்தனைகள்" என்னும் நூலை இயற்றியுள்ளார். ஒருபாடலை அடியிற்காண்க.

பல்லவி

*மாமயில் வேலனுக்கு மங்களம்—நான்*
*மறைகாணுந் தேவனுக்கு மங்களம்*

அநுபல்லவி

*பூமிபுகழுந்திரு வேரகந்தனில்வளர்*
*சாமிநாத மூர்த்திக்கு மங்களம்—மாமயில்*

சரணங்கள்

*ஆதி அநாதியாகி அருவுருவாய் விளங்கும்*
*சோதி சொருபனுக்கு மங்களம்—மாமயில்*
*மின்னயில்வேல் மயூரம் விளங்குசிறைச் சேவலுக்கும்*
*அன்னையிருவருக்கும் மங்களம்—மாமயில்*
*சரவண பவதாசன் சந்ததம் பணிந்தேத்தும்*
*வரசன் முகவனுக்கு மங்களம்—மாமயில்*

## கசு. அநந்தநாராயணசர்மா—த.

இவர் கொங்குவள நாட்டில் சேலம்மாவட்டம் சேலந் தாலுகா பெருமாக்கவுண்டன் பட்டி என்னும் ஊரில் தருமராச சர்மா என்னும் அந்தணருக்குப் புதல்வராகப் பிறந்தார். இளம் பருவத்திலேயே கல்விகற்கத் தொடங்கிய இவர் மிகுவிரைவிற் சிறந்த தமிழ்ப்புலவரானுர். இவருடைய தமிழ்ப்புலமையை அறிந்த பலர் இவரிடங் கல்வி கற்கலாயினர். இவரிடங் கல்வி கற்றவர்களில் நாமக்கல் தாலுகா கண்ணூர்ப்படி சே.நாராயணை

யர் புதல்வர் வேங்கடரமணையர் முதலியோர் சிறந்த புலவர் களாயினர்.

நூல்கள் இயற்றத் தொடங்கிய இவர் கஞ்சகிரிச்சித்தேசர் சதகம், கஞ்சகிரிச்சித்தேசர் பதிகம், கஞ்சகிரிச்சித்தேசர் கும்மி, சேலம் சொர்ணம்பிகை பதிகம், சுப்பிரமணியர் தேவசேனுபதிக் கடவுள் பதிகம் முதலிய நூல்களை இயற்றினுர்.

கஞ்சகிரி யென்பது கஞ்சமலை என இந்நாளில் வழங்குகின் றது. இது சேலம் புகைவண்டி நிலையத்திற்குத் தென் மேற்கில் ஆறுகல் தொலைவில் உள்ளது. இதனில் எழுந்தருளிய சுவாமி பெயர் கஞ்சகிரிச் சித்தேசர். இவர் இயற்றிய சதகம் பிற சதகங் களைப் போலவே அறநெறி முறைகளை விரித்துக் கூறுகிறது. அந்தணர் சிறப்பு, அரசர் சிறப்பு, வணிகர் சிறப்பு, வேளாளர் சிறப்பு, கிரிவிசேடம், தீர்த்தவிசேடம், மூர்த்திவிசேடம், திரு வருட் சிறப்பு, நகரச் சிறப்பு, பலர்க்கும்பயன்படுவன, இறந்து மிருப்பவர், இருந்தும் இறந்தவர், உபகாரமில்லாதவை, உலோபியரியல்பு, அற்பர் வாழ்வினுல் குணம் வேறுபடல், மூதேவி வசிக்குமிடம், கணிகையரியல்பு, நாடகச் சிறப்பு, கலிகாலவியல், வேட்டகத்தினியல் முதலிய பல செய்திகள் கூறப்படுகின்றன. பாடல்கள் எளிய இனிய போக்கில் அமைந் துள்ளன. நூலைப் பாராட்டிச், சேலம் கல்லூரித் தமிழாசிரியர் சரவணப்பிள்ளை, முத்துவையர், பி. ஏ., வாங்கல் ஐயாச்சாமி முதலியார், கன்னூர்ப்படி வேங்கடரமணையர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"இடபமிசை வருபரம சிவகுமரன் அருளினுல்
எல்லோர்க ளுஞ்சரியென
இயல்பான சமயோசி தந்தினுக் குறுகவி
இயற்றியிந் நூலில் வைத்தான்
இணையிலா வரமுதவு காங்கேய னடிதொழு
திறைஞ்சும்ப்ர பந்த வசக்தி
எக்கா லுமேலான தக்கோர் சபாசென்
றியம்புந் தமிழ்ப்பு லவனே"

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று. நூலில் மான மில்லாமல் பிழைப்பவர் இவரென்று கூறும்பாடலை அடியிற் காண்க.

"தருமபத் தினியுடைய நாதைமனை நிலையென்று
நம்பிவாழ் கின்றபேரும்
தம்புதல்வி வாழ்மனையில் அன்பாக வேவந்து
சார்ந்துவாழ் கின்றபேரும்
அருமைதெரி யாநமுழு மூடர்மீ திற்கவிதை
அழகாய் உரைப்போர்களும்
அரியமனை யாட்டிதனை அப்புறஞ் செலவிடுந்(து)
அநுஉற் பிழைப்போர்களும்
பெருமைதரு செல்வமுண் டாயினும் தாழ்வான
பிச்சைகள் எடுப்போர்களும்
பேசரிய வெகுகடன் பட்டுக் கொடாமல்
பிதற்றித் திரிப்போர்களும்
கருதரிய மானமில் லாமற் பிழைக்கின்ற
கயவரிவ ராவரன்றோ?
கஞ்சனிகர் நற்குச ரஞ்சலிசெய் மெய்த்தேச
கஞ்சகிரிச் சித்தேசனே." (86)

இவர் சேலம் நகரத்திற் குடியேறி அவ்விடமே தம்முடைய வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தார்.

## ௧எ. அந்தோனிநாதர்
(1865)

புதுச்சேரியில் இருந்தவர். இவர் பதிமத்தேசு தூடண மறுத்தலாகிய "தருக்கக்கும்மி" என்னும் நூலை இயற்றியிருக்கிறார்.

## ௧அ. அபேதாநந்த சுவாமிகள்
(1913)

இவர் திருவருட்பிரகாச வள்ளலார் மரபினர். பூமலைக் குப்பம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். நிச்சல இராமாநந்த சுவாமிகளுடைய மாணவர் இவர் "இராமாநந்தமாலை" என்னுஞ் சிறிய நூல் ஒன்று இயற்றியுள்ளார். நூலின் குருவணக்கத்தை அடியிற்காண்க:

"பவமேவும் அவனியில் ஐயமுதற்
படுவேனைப் பாவம் நீங்க
அவமேவும் மடமொழித்துத் தத்துவத்தின்
திடமுணர்த்தி அதீதா நந்தச்

சிவமேவும் படிக்கருளி எனையடிமை
கொள்ளுமருட் செல்வன் எங்கோன்
நவமேவு நிச்சலரா மாநந்தன்
பாதமலர் தலைமேற் கொள்வாம்"

## ககூ. அப்பாச்சாமி
## (1873)

இவர் சோழவள நாட்டிலே வெற்றியூர் என்னும் ஊரிலே அரங்கைய மூப்பனார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிக் கல்விகற்றுச் சிறப்புடன் விளங்கியிருந்தார். இவர் மாகாளிபுரம் என்னும் ஊரில் எழுந்தருளிய அழகம்மை மீது சதகம் ஒன்று பாடியுள்ளார். அச்சதகம் திருநெல்வேலி முத்தமிழாகர அச்சுக் கூடத்தில் 1873ஆம் ஆண்டில் அச்சிற்பதிப்பித்து வெளியிடப் பட்டிருக்கிறது. இவரைப்பற்றி இதற்குமேல் ஒன்றுந்தெரிய வில்லை. நூலிற் பலவகையான பாடல்களும் விரவியுள்ளன. ஒரு பாடலை அடியிற்காண்க. வெற்றியூர் என்னும் பெயருடைய ஊர்கள் சோழவள நாட்டிலன்றிப் பாண்டி நாட்டிலும் சில உள்ளன.

பதினான்கு சீராசிரிய விருத்தம்

அமைதியோடு நினைமனதி னாற்றியா னித்தலும்
அசங்கத முருவாக்கினால்
அனுதினம் வழுத்தியத் தத்தினால் அகலாத
அன்புடன் அருச்சித்தலும்
கமனமுறு மடிகளால் வலம்வருத லுத்தமாங்
கத்தினா லேவணங்கிக்
கன்னத்தி னால்நினது புகழ்களைக் கேட்டலும்
கண்களால் இங்குநினது
விமலதிரு மேனியைத் தரிசித்த லென்னவே
விளங்கு முயர் வழிபாடெலாம்
வினையே னெழுங்கா யனுட்டித் துயச்சால
விரைவினில் எனக்கருளுவாய்
குமைவறு மியோகினியொர் சாமுண்டி கார்த்திகைக்
கொற்றியல கைக்கொடியினாள்
கூறும்பி ரச்செல்வி காத்தியா யினியெனக்
குதிகொளழகம்மை மாதே.

## உ0. அப்துல்கமீது மரைக்காயர்—செ. லெ.

(20 - நூ.)

சேரவள நாட்டினராகிய இவர், திருவாங்கூர் இயற்றமிழ் வித்துவான் சுல்தான் முகியித்தீன் என்பவரிடம் கல்வி கற்றுச் சிறந்த புலவரானார்; ஈழவளநாட்டிற்குச் சென்று அங்குத் தமது புலமையைப் பலருக்கும் பயன்படுத்திக் கொண்டிருந்தார். பாக்கள் இயற்றுவதில் வல்லவர். 'மெய்ஞ்ஞான வினாவிடை' என்னும் நூலுக்கு இரண்டு கட்டளைக் கலிப்பாக்களாற் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்றை அடியிற் காண்க:

"ஆதை யங்கவர் பின்புறு தந்தையும்
ஆன்ம சற்குரு வாயுமி லங்கிமெய்
வாதை வென்றுவ நிந்தமு கம்மது
மதினு சாகிபு என்குரு நாதனார்
கோதை யின்றுதெ ரிந்துகொ டுக்கவே
கொண்டு நினவர் கண்டுப லன்பெற
மேதை தங்குய ரச்சிடு வித்தனன்
மேலே யூரச னூரெனும் வேளரோ"

## உக. அப்துல்காதிறு புலவர்

தொண்டியில் வாழ்ந்திருந்தவர். பல இசைபாடல்கள் இயற்றியவர். இசைப்பாடல்கள் அச்சாகி வெளிவந்துள்ளன.

## உஉ. அப்துற்றகுமான் அண்ணாவியார்

காயற்பட்டணத்தில் வாழ்ந்திருந்த முஸ்லிம் புலவர். இசைப் பாடல்கள் பல இயற்றியுள்ளார்.

**பல்லவி**

"இந்தனை நாமதம் ஏதையா—என்றனையாள
இந்தனை நாமதம் ஏதையா

**அநுபல்லவி**

இந்தனை நாமதமேதோ முத்திரைமேவும் புயரே
சுத்தனருள் பெற்றுவளர் சுத்தியிற சூல்நபியே—(இந்தனை

சரணங்கள்

பாவகுல ஆசை நாவினேன்—பயமிருந்து
ஆவல்கொடி நாடி வாடினேன்
ஆவதறியாமற் கூறினேன்—சறபிலுள்ள
ஏவலுக் கெதிர்கள் பேசினேன்''

இஃது இசைப்பாட்டு ஒன்றின் ஒரு பகுதி.

## உரு. அப்பண நாயகர்
## (1890)

"ஏடகங் கொண்ட இன்னிசைச் சிகாமணி, அப்பனென்னும் அரியமாதவத்தான்'' என்று அறிஞர்களாற் புகழ்ந்து பாராட்டப் பெற்ற இவர் கரடிவாவி என்னும் ஊரில் இருந்தவர். இவர் வாணசுரனது கதையை நாடகமாக இயற்றியுள்ளார். அந்நூல் "வாணசுர நாடகம்'' என்னும் பெயரோடு விளங்குகிறது. அது நானூற்றறுபது பக்கங்களைக்கொண்ட பெரிய நூலாக உள்ளது. பலவகைப்பாடல்களும் உரைநடையும் அமைந்தது.

" அன்னையே வாணசூரன் அருந்தவக் கொழுந்தே கேளாய்
என்னையோ சனைநான் செய்நாய் ஈதெனக் கேற்கவில்லை
இன்னவன் இனியான் என்ற ஏற்பாடோன் றறிந்திடாத
மன்னனைக் கனவில் கண்டு மயங்கல்பெண் மதிதானம்மா''

என்பது விருத்தப் பாடல்களில் ஒன்று. இந்நாடகத்திற்குக் கோகுலாபுரம் வித்துவான் அருணசல முதலியார், திரிசிரபுரம் நித்தியானந்த அடிகள், தண்டலம் சுப்பராய முதலியார், தஞ்சை அமிர்தலிங்க முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். ஒருவர் நாடகத்தின் பெருமையைப் பின் வருமாறு புகழ்ந்துள்ளார்:

" வாதுசெயுஞ் சூரர்க்கதி வீரந் தோன்றும்
மட்டடங்காத் துட்டருக்கு விவேகந் தோன்றும்
கோதையர்க்குச் சாந்துவிகக் குணமே தோன்றும்
கொப்பெனவே காமுகர்க்குப் புத்தி தோன்றும்
தாதுவர்க்கு பாயசம்பிர தாயந் தோன்றும்
துரைகளுக்குந் தானதிக நீதி தோன்றும்
மாதவர்க்குப் பரகதியின் இன்பந் தோன்றும்
வாணசுர நாடகத்தின் மகிமை தானே''

## உசு. அப்பாச்சாமி உடையார்—நெல்லி.

(20 - நூ.)

சென்னைமாநகரில் இவ்விருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ்ப்புலவராக விளங்கியிருந்தவர். "முத்து விநாயகர் பஞ்சரத்தினம்," "முத்துக்குமாரசாமி தோத்திரம்" "ஆறுமுக சாமி தோத்திரம்" முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

"மன்னுதொல் காப்பியத் தமிழ்மறை தெளிந்துவளர்
மதிநடவு மாடநீடும்
மாமதுரை மீனாட்சி சுந்தரே சற்பனுவல்
மகிழ்கடைச் சங்கம்வாழ்நாள்
துன்னுமொரு நெறிவெற்றி வில்லெறுழிவனசரந்
தோன்றலாய்ச் சூழ்ந்தெனதுபேர்
சொல்லுமுட் டையெனப் பொன்போலு மெனவிதோ
தோமற வெழுந்ததுளியென்(று)
உன்னும்மு ளப்பொருள் பொய்யாத மொழியென்ன
ஓதிதவ முணர்விஞ்ஞான
உருவினரு ளானோக்கி சிவசண்முகாசரவ
ணோற்பவ வெனப்பணிந்த
முன்னுமதி புலமைக் களித்தவருள் பெறுவனோ
மூதெழிற் புதுவைநகர்வாழ்
முத்தர்க்கு மார்வமுறு சித்தர்க்கு மாரவரு
முத்துக்கு மாரகுருவே"

என்பது முத்துக்குமாரசாமி தோத்திரத்தில் ஒரு பாட்டு. இவருடைய தந்தையாரின் பெயரும் அப்பாச்சாமி உடையார் என்பதே. கந்தபுராணத்தின் சாரமாகக், 'கந்தபுராண சார சங்கிரகம்' என்னும் நூலையும் இவர் பாடியுள்ளார்.

"பூமனார் மகாரில் தக்கன் புதல்விநீந்
திமய மாதாய்ந்
தாமனாள் சூர்ம கேந்திரந் தனியர
சாற்றுங் காலை
மாமுனி வர்க்கா விசன் மருவியோ
திருப்பத் தேவர்
காமனை ஏவத் தீய்த்தக் கனதவர்க்
கினித ளித்தே"

என்பது நூலின் முதற்பாட்டு. நூல் அறுபத்தெட்டுச் செய்யுட்களால் முடிவுபெற்றிருக்கிறது.

## உரு. அப்பாச்சாமிச் செட்டி

இவர் வைசியகுளம் என்னும் ஊரில் இருந்தவர். "வாலி மோட்ச நாடகம்'' என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிருர்.

## உசு. அப்பாச்சாமி நயினர்

(19 - நூ.)

தென்னுர்க்காடு மாவட்டத்தில் திண்டிவனம் பகுதியில் உள்ள விடூர் என்னுஞ் சிற்றூரில் சைன சமயத்தில் தோன்றியவர். வடமொழியிலுந் தென்மொழியிலும் வல்லவர். சீவக சிந்தாமணி, நோலாமொழித்தேவர் சூளாமணி, மேருமந்தர புராணம், யசோதர காவியம் முதலிய சைன நூல்களைச் சொற்பொழிவு செய்வதில் வல்லவர். மேருமந்தரபுராணம் என்னுஞ் சைன நூலுக்கு இவர் சிறந்த உரை எழுதினர். 1960ஆம் ஆண்டிற் காலஞ்சென்ற பேராசிரியர் தத்துவ சூடாமணி சக்கரவர்த்தி நயினர் இவருடைய அருமைப் புதல்வரே.

## உஎ. அப்பாத்துரை முதலியார்—ஏ.

(19 - நூ.)

இவர் தொண்டைவள நாட்டில் ஏனப்பாக்கம் என்னும் ஊரில் தணிகாசல முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றித் தமிழும் ஆங்கிலமும் நன்கு கற்ருர். செங்கல்பட்டு மாவட்டத்தலைவரின் அலுவலகத்தில் கணக்காய்வாளராகப் பணி புரிந்திருந்தார். செய்யுள்பாடுந்திறனும் நன்கு அமையப்பெற்ற இவர் திருத்தணிகை முருகக் கடவுள் மீது, " திருத்தணிகை மாலை '' என்னும் நூலை இயற்றியுள்ளார். அம்மாலை முப்பது செய்யுட்களைக் கொண்டது.

> " தேவரெல் லாந்தொழச் செந்நாள் சிவந்த செழுமணியே
> மூவர்கள் போற்று முதல்வன் றன் மைந்த முழுமுதலே
> பாவகி கண்டிலே யோபன் னிருகன் படைத்துந்துயர்
> மாவல னேமன் னவனே தணிகை மலையரசே''

என்பது நூலில் ஒருபாட்டு.

## ௨௮. அப்பாவுச் செட்டியார்
(20 - நா.)

சென்னைமாநகரில் பல்லவபுரத்தில் இருந்தவர். வைதிக சைவ சித்தாந்த சண்ட மாருதம் ஸ்ரீ சோமசுந்தரநாயகருடைய மாணவர்களில் ஒருவர். இவர் திருவேகம்பமுடையார் இரட்டை மணிமாலை, காமாட்சியம்மை பஞ்சரத்தினம், குமரகோட்டப் பதிகம், கச்சபேசுரர் அட்டகம், சிவநாமாவளி முதலிய நூல்களை இயற்றியுள்ளார். பஞ்சரத்தினப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"உலகங்க ளியாவுமொரு சிற்றகட் டிடைமுன்
னொருங்குதவி யுங்குமரியென்
றேதரிய வேதமுதலாங்கலைக ளெல்லாம்
உலப்பில்சீர் புகழுமனையே
நிலவுலவு நீள்முடிக் கங்கையஞ் சடையினன்
நினையன்றி யொருதொழிலையும்
நெஞ்சகங் கொண்டுசெய வல்லனல னென்றால்
நினக்கொருவர் நிகரும்உளரோ
அலகிலா தோங்குபெரு கருணை சமுத்ரமே
ஆருயிர்க் குரியதுணையே
அம்புயத் தரிவைமார் இருவர்புடை நின்றவேல்
ஆற்றமகிழ் பெண்ணரசியே
மலையரையன் நற்றவந் துற்றபெரு நிதியமே
வளமோங்கு கச்சிநகர்வாழ்
மங்கலக் காட்சியணி துங்கர்நன் மாட்சிபணி
மங்கைகா மாட்சிமணியே."

## ௨௯. அப்பாவுப் பிள்ளை—தி. அ.

இவர் திரிசிரபுரத்தில் வேளாளர் குலத்தில் அருணாசல பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். திருக்குடந்தையில் சரவணமூர்த்தித் தேசிகர் என்பவரிடம் கல்வி கற்றவர். இவருடைய பெயர் முத்துச்சாமிப் பிள்ளை எனவும் வழங்கியது. இவர் 'சத்தியபாஷா அரிச்சந்திர விலாசம்' என்னும் நாடகத்தை இயற்றியுள்ளார். இவருடைய வரலாற்றுக் குறிப்புக்கள்,.

" சந்திய பாஷா அரிச்சந்திர விலாசம்
புந்தியாற் புகன்றஇப் புலவனைப் புகலில்
தென்றிசைச் சோழர் தன்குடை நீழல்
துன்றிய சிராப்பளித் தூய்பதி அதனுள்
உழுதொழில் வேளாண் உயர்குலத் துன்மை
வழுவிலா அருணு சலத்தவப் புதல்வன்
சிறந்திடுஞ் சதுர்மறை சிந்நாந்த சபா
உரந்திகழ் பள்ளியில் உணர்வுறக் கல்வியைப்
பயின்றனன் ஆதிப் பண்பினர் பலர்பால்
நயந்திடு கேள்வியில் நாள்தொறுஞ் சிறந்து
திருக்குட மூக்கில் சரவண மூர்த்திப்
பெருக்கிடுஞ் சைவத் தேசிகப் பெரியோன்
நன்மொழி கடவா நற்றவச் சீடருள்
முன்மொழி யாக மொழிந்திட வல்லோன்
திறலுடை அப்பா எனும்பெயர் அன்றிப்
பெருமுத்துச் சாமிப் பெருந்தகை யோனே "

என்னுஞ் சிறப்புப்பாயிர அடிகளாற் பெறப்படுகின்றன. புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், கோமளபுரம் இராசகோபால பிள்ளை, காஞ்சிபுரம் இராமசாமிநாயுடு, பெங்களூர் முருகப்பிள்ளை, மதுரநாயகஞ் செட்டியார். முதலியோர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். சுயம்வரத்தில் மாலையிட்ட தமயந்தியைப் பார்த்து அரிச்சந்திரன் கேட்டல்,

" என்னகா ரணந்தான் சொல்வாய் ஏந்திழாய் நின்க ழுத்தில்
மின்னல்போல் ஏது தாலி விளங்குதே உனது தந்தை
முன்னம்யார் தனக்கு உன்னை முடித்தனன் விவாகஞ் சொல்வாய்
நன்னலங் கடந்தே சூடி நடத்தலுந் தகுமோ மாதே."

## ௩௦. அப்பாவுப் பிள்ளை—சு.

சோழவளநாட்டில் கீழப்பழுவூர் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். உறையூர் வாஞ்சைலிங்க வைத்தியநாதச் செட்டியார் என்பவரிடம் கல்வி கற்றவர். தம் ஆசிரியர் இயற்றிய 'திருவுறந்தைப் பதிற்றுப்பத் தந்தாதி' என்னும் நூலுக்கு இவர்,

" மாமேவும் உலகினில் சென்னிநா டிதுவென
வயங்குநற் சென்னி நாட்டின்
மாதலம தாமுறந் தைப்பதியின் மாறார
மரநிழலில் வாழ்பதியினற்

றூமேவும் அம்போ ருகச்சரண மீதில்
துலங்கவே பப்பத்ததாந்
துகளிலந் நாதிகன் டான்கண்டு பயமெனச்
சொல்லிப் புகழ்ந்துபோற்றத்
தேமேவு மாலையணி மால்சிதம் பரவேள்செய்
திவ்ய நல் வரபுத்திரன்
தியாகராசப் பெயர்கொள் புலவன் நன் மாணவன்
சித்தாந்த வேதாந்தநூல்
பாமேவு பஞ்சலட் சணவிலக் கியவுததி
பருகிமழை பொழியுமேகம்
பக்தர்புகழ் வாஞ்சைலிங் கம்வைத் தியநாத
பாவலவ னென்குரவனே ''

என்னும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௬௧. அப்பாவு முதலியார்—ரா.
(1887)

இவர் கீரம்பூர் என்னும் ஊரில் இராசலிங்க முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். 'பாலகிருட்டிணானந்த சரிதம்' என்னும் சிறிய நூலை இவர் இயற்றியிருக்கிறார்.

" ஏதடியுன் பாலன் சாதுவோ கோபாலன்
இன்றெமுன யாடும் பெண்டுகள்பின் னோடும்
ஏகிமலர் பாரீர் நோகையரே வாரீர்
இம்மலர்த்தே னுமே செம்மையிற் கொள்வோமே
என்றிவனும் நாட வண்டுகள்பன் பாட
எற்றுபுனல் நீந்தி மற்றதனில் ஆழ்ந்தி"

என்பன நூலின் சில அடிகள்.

## ௬௨. அப்பாவு முதலியார்
(19 - நூ.)

இவர் தொண்டைவள நாட்டில் முடிச்சூர் என்னும் ஊரில் இருந்தவர். இவர் வைணவ சமயத்தினர். கூரேச விசயம், தென்னாசாரியப்பிரபாவ தீபிகை, சற்சம்பிரதாய தீபிகை, விட்டுணுதத்துவவிளக்கம், இராமாநுசநூற்றந்தாதி உரை முதலிய நூல்களை இவர் எழுதியுள்ளார்.

## ௩௩. அப்பாவு முதலியார்—இலக்கணம்
(19 - நூ.)

இவர் செஞ்சி நகரத்தில் சுந்தர முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். ஆங்கிலமுந் தமிழும் நன்கு உணர்ந்தவர். இவர் "அம்பைக்கனகம்" என்னும் நூல் ஒன்று இயற்றியுள்ளார். அது ஐம்பத்து மூன்று செய்யுட்களுடையதாக இருக்கிறது.

"அம்பை நின்ற பாலமேல் அருற்கடுத்த மூலமேல்
அம்பை யொத்த கம்பமேல் அணுகிருக்கும் விம்பமே
அம்பைகட் கலாபமே அணிந்தவன் சுரூபமே
அம்பை லிங்க மாகுமே அடைப்பவங்க ளேகுமே"

என்பது நூலில் ஒரு பாட்டு. மணலூர் சோமசுந்தர முதலியார், ஆரணி தியாகராச முதலியார், அரசூர் துளசிங்க முதலியார், கோ. பார்த்தசாரதி நாயகர், வேலூர் உலகநாத முதலியார், திரிசிரபுரம் நாகப்பபிள்ளை, தஞ்சைப் பெருமாளையர், சீரங்கப் பட்டணம் அருணகிரி செட்டியார், நாகமங்கலம் இலக்கணம் தாண்டவராய சுவாமிகள் முதலியோர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## ௩௪. அப்பியா சாரியர்

இவர் "சீரங்கமகத்துவம்" என்னும் புராணம் இயற்றியிருக்கிறார்.

## ௩௫. அப்புள்ளையார்
(18 - நூ.)

"ஆழ்வார்கள் வாழித்திருநாமம், திருவந்தாதி உரை, திருவிருத்த உரை" முதலிய நூல்களை இவர் இயற்றியிருக்கிறார்.

## ௩௬. அம்பலவாண அய்யர்
(1911)

இவர் தாத்தையங்கார் பேட்டை என்னும் ஊரினர், "கோட்டாற்றூர்க்கணேசர் பதிகம்" என்னும் நூலை இவர் இயற்றியிருக்

கிரூர். நொச்சியம் மீனாட்சிசுந்தரம்பிள்ளையின் மாணாக்கர் பாலகுரு பிள்ளை என்பவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். பதிகத்தின் பாடல் ஒன்றை அடியிற்காண்க.

“ மாடமலி மனைகளும் வேண்டிலேன் மயிலனைய
மடமாதரும்வேண்டிலேன்
மதுகைநிறை மைந்தரும் தரணியும் வேண்டிலேன்
மலிபுகழுமேவேண்டிலேன்
தேடரிய செல்வமும் நிகழுமொரு மதியனைய
குடைநிழல் இருந்துநேர்ந்து
நேயங்கள் ஆளுதலும் வேண்டிலேன் தீஞ்சுவைச்
செந்தமிழ்ப் பாப்புனைந்து
நாடரிய உன்பாத நளினங்களிற்புனைதல்
நம்பனடியார்களுக்கே
நாடொறும் வணங்குதல் விருந்துதவல் இவையெலா
நாளும்நாயேன்வேண்டுவேன்
காடரிய தரளமணி சங்குகருவிளுநல்
கதிர்செய்கோட் டாற்றூரில் வாழ்
கணநாத குணநீத வல்லபை மனோநீத
கடவுளர்கள் துதிபாதனே.”

## ௩௭. அம்பலவாணக் கவிராயர்
## (1812)

இவர் திருநெல்வேலியில் வாழ்ந்திருந்தவர். அக்காலத்தில் நாலடியார், திருக்குறள் முதலிய நூல்கள் அச்சிற் பதிப்பிக்கப் படாமல் ஓலைச் சுவடியாக வழங்கிக் கொண்டிருந்தன. இவர் மேற்படி நூல்களை நன்கு ஆராய்ந்து அச்சிட்டு வெளியிட்டார். 1812ஆம் ஆண்டில் இவர் வெளியிட்ட திருக்குறள், நாலடியார் முதலிய நூல்கள் ஒற்றெழுத்துக்கள் புள்ளியில்லாமல் உள்ளன

## ௩௮. அம்பலவாணப் புலவர் (1)
## (1911)

இவர் கோட்டாத்தூர் என்னும் ஊரில் இருந்தவர். சிறந்த புலமையுடையவர். திருவிளையாடற் புராணசதகம் என்னும் நூலுக்கு இவர் இயற்றிய சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று,

" அருள்வீர சைவசிகா மணியாய் இவ்வுலகிலருந்
 தமிழா ராய்ந்தே
மருவாருங் கொன்றையணி அரன்கதையை மாந்தர்செவிக்
 கமுதாய் வார்ப்போன்
சரியாம்ப்ர மோத்திரகாண் டச்சதகம் ருக்மாங்கன்
 சதகம் சொன்னேன்
திருவிளையா டற்சதகம் பாடியுல கோர்புகழத்
 திகழ்வித் தானே "

என்பது.

## ௩௯. அம்பலவாணப் புலவர் (2)

தென்பாண்டி நாட்டில் திருநெல்வேலியில் வடமலையப்ப பிள்ளையன் அதிகாரஞ் செலுத்திக்கொண்டிருந்த காலத்தில் சீவை குந்தம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தார். புராணச் சொற் பொழிவுகள் நிகழ்த்தி அதனுல் கிடைக்கும் சிறிய வருவாயைக் கொண்டு காலந்தள்ளிக் கொண்டிருந்த இவர் பிறகு வடமலையப்ப பிள்ளையனுடைய அவைக்களப் புலவராயமர்ந்து சிறப்புற்ருர். பின்வரும்பாடல் இவரால் இயற்றப் பெற்றதாகத் தெரிகிறது.

" ஏர்விற்றுப் பள்ளிற் றுடைமையெல்
 லாம்விற் றிருந்தமனைச்
சீர்விற் றனமுன்னைக் காணுத
 முன்தரி சித்தபின்பு
போர்விற் றடங்கை யரசே
 வடமலைப் பூபதியுன்
பேர்விற்று முன்விற்ற தெல்லாம்
 மறுபடி பெற்றனமே"

## ௪௦. அம்புஜு
(1910)

இப் பெயருக்குரியவர் ஆணு பெண்ணு என்று தெரியவில்லை. இவர் "அப்பாசாமி சாஸ்திரி" என்னும் பெயருடைய நகைச் சுவை நாடகம் ஒன்றை இயற்றியுள்ளார். மேற்படி நாடகம் ஐந்து அங்கங்களை உடையதாக விளங்குகிறது. இது பழைய கர்நாடகப் போக்கில் அமைந்தது.

## சக. அம்மமுத்து நாடார்—பொ.

பாண்டிவள நாட்டில் மீளவிட்டான் என்னும் சிற்றூரில் பொன்னையா நாடார் அவர்கட்குப் புதல்வராகத் தோன்றிய இவர் தெற்கு வீரபாண்டியபுரம் கருப்பசுவாமி கவிராயர் என்பவரிடங் கல்விகற்ருர். இவருக்குக் கவிராயர் என்னுஞ் சிறப்புப் பெயரும் வழங்கியது. இவர் ஏறல்மாநகர் சேர்மன் அருணசல சுவாமிகள்மீது "அருணசல சுவாமிகள் மாலை என்னும் நூலைப் பாடியுள்ளார்.

"ஆதி பராபரமே அண்டபகி ரண்டமெலாம்
சோதியாய்நின்ற சுடரொளியே சின்மயமே
நீதியுடன் எவ்வுயிர்க்கும் நிறைந்த பரம்பொருளே
நீதில்லா மெய்ஞ்ஞான சேர்மன் அருணசலமே"

என்பது மாலையில் ஒரு பாட்டு.

## சஉ. அய்யாவு முதலியார்—பா.
(19 - நூ.)

இவர் கூடலூர் தாலுகாவில் பெரியகுப்பம் என்னும் ஊரில் பாவாடை முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். கல்வியை நன்கு கற்றவர். இவர் "திருப்போரூர் வழி நடைக்கும்மி, முத்துவீராயி வர்னமெட்டு, தங்கச் சிந்துடப்பா" முதலிய சிறு நூல்களை இயற்றியுள்ளார். இந்நூல்கட்குத் திருமழிசை தமிழ்ப் புலவர் செகநாத முதலியார் என்பவர்;

"செழுமலர்ப்பூஞ் சோலைத்திருப்போரூர்க் கேகும்
வழிநடைப்பா வாமிதனை மண்மேல்—எழில்திகழும்
சாதுக்கள் கொண்டாடத் தண்டமிழி னுலுரைத்தான்
மேதக்கோன் ஐயாவு வேள்"

என்னும் பாடலால் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். நூலின் காப்புச் செய்யுளை அடியிற்காண்க.

"திருப்போரூர் வாழ்முருகன் திவ்வியபொற் பாதம்
விருப்போடு சேவிக்க மேன்மேல்—பருப்பதம்போல்
விஞ்சிவருந் தீமையெலாம் விட்டகலு மாகையினுல்
வஞ்சியே போய்வருவோம் வா."

## சரு. அரங்கசாமி அய்யங்கார்

(1911)

சோழவள நாட்டில் திருவரத்துறை என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இவருடைய பெயர் காண்டூர் அரங்காச்சாரி எனவும் வழங்கியது. இவர் "திருவரத்துறைநாத சதகம்" என்னும் சதகத்தைப் பாடியுள்ளார். இச்சதகம் குமரேச சதகம், அறப்பளீசுவர சதகம் முதலிய சதகங்களைப் போல் அறநெறியை விளக்குகிறது. இவர் காலக் கணிதத்திலும் வல்லவர்.

"இந்தஉல கத்தில் மனிதர்க்குத் தீக்குணம்
இழிவுள பத்துஎன்பார்
ஏதெனிற் பொய்யுரை கோட்சொலல் கோபித்தல்
எழில்பயன் இலாதசொற்கள்
வந்திடில் இதனையே வாக்குதீக் குணமென்பர்
வகையிலாக் களவாடலோர்
வழிதே தொழிற்செயல் கொலைசெயல் சூதாடல்
வளர்காய தீக்குணந்தான்
நிந்தையுள கொலைசெய நினைத்திடுதல் ஓர்காமம்
நிட்டித்தே ஆசைபெறுதல்
நிலையிலா தொருசித்த நெடுமனக் குற்றமாம்
நீணிலத் தவர்காணவே
அந்தமுடன் அவனிதனில் அமர்ந்தே இருந்திடும்
அகிலபரி பூரணனையே
அகத்தினிடை அகலாமல் நிறுத்திவை அனுதினம்
அரத்துறைப் பதிநாதனே"

என்னும் இப்பாட்டு ஆடவர்க்குள்ள தீக்குணம் பத்தைக் கூறுகின்றது. பிற பாட்டுக்களும் இவ்வாறே பலவகையான அறங்களைக் கூறுகின்றன.

## சச. அரங்கசாமி அய்யர்—அ.

(20 - நூ.)

இவர் குளித்தலை என்னும் ஊரினர். வடமொழி தென்மொழி இரண்டினும் வல்லவர். சைவசித்தாந்த நூல்களையுங் கற்றுத் தேறியவர். "சைவாகமப் பிராமாண்யம்" என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார்.

## ௪௫. அரங்கசாமி நாயுடு—கா. தி.

(20 - நூ.)

இவர் காஞ்சிபுரத்தில் தோன்றிக் கல்விகற்றுத் தேறினர். பிறகு சென்னைமாநகரையடைந்து நூல்கள் எழுதுதல் பத்திரிகை நடத்துதல் முதலிய தொழில்களில் ஈடுபட்டார். கேதாரீஸ்வர விரதமகிமை, இல்லறமாலிகா, இராமபராக்கிரமம், தயாபரசுந்தரி, சௌந்தராபாய், சுந்தராம்பாள், கமலவல்லி, ஆநந்தரங்கன், பூபாலன் புவனசுந்தரி, வாயாடிவம்பன் முதலிய பல கதை நூல்களையும் பிறநூல்களையும் எழுதியுள்ளார். இவர் அண்மைக் காலம் வரை நூலியற்றும் பணிபுரிந்தவர்.

## ௪௬. அரங்கசாமிப் பிள்ளை—ப.

(1883)

இவர் புதுக்கோட்டை நாட்டைச் சேர்ந்த புலவர் ப. முருகேசக் கவிராயருடைய உடன் பிறந்தாராவர். தமையனுரைப் போலவே இவரும் புலமை பெற்றுத் திகழ்ந்தார். திருத்தக்க தேவர் செய்த சிவகசிந்தாமணி முதலிய நூல்களை இவர் பல படிகளைக்கொண்டு ஆராய்ந்து 1883 ஆம் ஆண்டில் சென்னை அட்டலட்சுமி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

## ௪௭. அரங்கசாமிப் பிள்ளை—வி. உ.

இவர் தவசுகிராமம் என்னுஞ் சிற்றூரில் வாழ்ந்திருந்தவர். ஆயுள்வேத பண்டிதராக விளங்கியதோடு தமிழ்ப் பண்டிதராகவும் விளங்கினர். மகாபாரதத்தை இவர் அடிக்கடி சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்தபடியால் இவருக்கு, மகாபாரதப்பிரசங்கி என்னும் சிறப்புப் பெயரும் உண்டாகியிருந்தது. இவருடைய பாடல் ஒன்றை அடியிற்காண்க:

"திரைசெறிந்திரு மருங்கினும் மணிகள்
சிந்து கந்நதி சூழ்ந்திடும்
திருவிளங்குபெரு நகரில் வாழும்வள
வந்தை கோத்திர திலாக்கியன்

கரையில் சீர்த்திபுனை பிச்சை யப்பமகி
காவ லன்தவ பலத்தினுல்
கருணை ஓர்உருவ மாய்உ தித்திடும்அ
கத்தியப்பன் திறை கல்விமான்
புரைக டிந்தபடிக் காச னென்மதுர
புலவன் மிக்கபரி வொடுசொ லும்
பொருவில் தொண்டைமன் டலமெனுஞ் சதகம்
எளிதி னிற்பொருள் விளங்கவே
உரைசி றந்திட விளம்பி னன்அதை
உணர்ந்து நாணமிகு சேட னும்
ஒளித்த னன்பணி தலத்தில் அன்னவனிவ்
உலகெ டுப்பனெனல் பொய்ம்மையே.''

## ௪அ. அரங்கத்தம்மாள்
## (1889)

இவ்வம்மையார் தஞ்சை மாவட்டத்தில் திருக்குடந்தையில் கலியாண ராமையர் என்பவருக்குப் புதல்வியாகத் தோன்றியவர். இலக்கண இலக்கியப் பயிற்சி யொன்று மில்லாதவர். இசைப் பயிற்சியை மட்டும் பெற்ற இவர் பிரகலாதனுடைய வரலாற்றை இசைப் பாடலாகப் பாடத்தொடங்கி இடை இடையே விருத்தப் பாக்களும் விரவிவருமாறு பாடியுள்ளார். பாடல்களில் தவறுகள் நிறைந்துள்ளன. ''பிரகலாத சரித்திரம்'' என்னும் பெயருடைய இந்நூல் 1889 ஆம் ஆண்டில் அச்சிடப்பட்டிருக்கிறது.

## ௪௯. அரங்கநாதக் கவிராயர்

ஏறக்குறைய நூற்றாண்டுகளுக்குமுன்பு புதுச்சேரியில் வாழ்ந்திருந்தவர். இவர் பிரகலாதன் வரலாற்றை நாடகமாக எழுதியுள்ளார். இந்நாடகம் பழங்கால முறையை ஒட்டி அமைந்தது. நல்லாப்பிள்ளை இயற்றிய பாரதத்தை உரைநடையாக இயற்றியவரும் இவரே போலும்.

'' உலகதோர் மூன்றும் ஒருகுடைக் கிழாள்
உரம்பெறும் அவுணர்கட் கரசன்
இலகிய இரண்ய ராசரா சேந்திரற்
கெய்திய தேவியே உனக்கு

நிலவிய பொழுதில் சந்விட யத்தில்
நினைந்திட ஞானந்தை நவில்வேன்
தலைமையாம் அதனுல் துன்பம்போம் இன்ப
சாகரந் தினிதிருந் திடுமே"

இஃது இரணியன் மனைவியைப் பார்த்து நாரதர் இயம்பியது. இந்நூல் அறுபதாண்டுகட்கு முன்பு அச்சிட்டு வெளியிடப் பட்டிருக்கிறது.

## ரு௦. அரங்கநாதக் கவுண்டர்
(20 - நூ.)

பூத்துறை என்னும் ஊரில் பிரமக் கவுண்டர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் புதுச்சேரி பு. அ. பெரியசாமிப் பிள்ளை என்னும் புலவரிடந் தமிழ் கற்றுக் கவிவாணரானுர். தம் ஆசிரியர் இயற்றிய புதுவைக் கலம்பகம் என்னும் நூலுக்கு,

"பொன்மருமன் சீர்சால் புதுவைக் கலம்பகந்தை
நன்மதிஞர் மெச்ச நவின்றிட்டான்—தன்மகுணன்
பூமி புகழும் புலமை மிகும்பெரிய
சாமியெனும் பேராசான் தான்."

என்னும் நேரிசை வெண்பாவைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள் ளார். இவரைப் பற்றிய பிறசெய்திகள் புலனுகவில்லை.

## ருக. அரங்க ராகவாசாரியர்
(1897)

இவர் திருவகிந்திரபுரத்தலமான்மியம் என்னும் நூலை உரை நடையில் இயற்றியிருக்கிறுர். திருவகிந்திரபுரத்தில் வாழ்ந்திருந் தவர் என்று தெரிகிறது. தமிழ் வடமொழி இரண்டினும் வல்லவர் இவ்விருபதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் இருந்தவர். இவருடைய இன்னிசைப்பஃறெருடை வெண்பா ஒன்றை அடியிற் காண்க:

"பல்லோரு மேத்தும் பரம்பொருளைச் செம்முளரி
வெல்லுந் நடங்கண்கள் விட்டுணுவைச் சக்கரக்கைச்
செல்வனை வேதன் சிவன்முதலோர் காணுத
எல்லையனை என்றும் இறைப்பொழுதும் என்னெஞ்சில்

செல்லா ஒருவனைத் தென்னயிந்தை யூரானைத்
தொல்லை முதற்சுடரைத் தூமறைகள் ஈரிரண்டும்
சொல்லப் புகுந்தும் சொலமாட்டா வண்மையனைக்
கல்லையனங் காக்கவல்ல காற்பொடியெங் காவலனை
நல்லோர்க் கருள்புரியும் நந்தெய்வ நாயகனை
மல்லடர்த்த மாலை மகிழ்ச்சியுடன் வானவர்கள்
முல்லையொடு செங்கழுநீர் மொய்ம்மலர்கள் கற்பகங்கொண்
டொல்லைவந் தாயிரம்பேர் ஓதிஇறைஞ்ச அவர்
அல்லிடர் தீர அருளுடனே நோக்குகின்ற
வல்லி மலராள் மருமகன் மார்பினனைச்
சொல்லத் தொலையுந் துயர்."

## ருஉ. அரங்காச்சாரியார்

(20 - நூ.)

சோழவள நாட்டில் திருக்குடந்தையில் இருந்தவர். இந்து மதாபிமான சங்கம் என்னும் பெயருடைய சங்கம் ஒன்றில் இருந்து பல பொதுநலப் பணிகளைப் புரிந்தவர். தமிழறிவும் நன்கு நிரம்பப்பெற்ற இவர் "விஞ்ஞான ருதுசோபனம்" "அத்வைத கீர்த்தனம்" என்னுஞ் சிறு நூல்களைப் பாடியுள்ளார்.

" அஞ்ஞானம் போக்கும் அழிவின்மை யைக்கொடுக்கும்
விஞ்ஞானச் சோபனப்பா விள்ளவே—எஞ்ஞான்றும்
விண்பார் புகழும் வியன்பிரண வப்பொருளே !
கண்பார் கருணு கரா"

என்பது நூலின் காப்புப்பாடல். இவருடைய ஆசிரியர் பெயர் சீநிவாச யோகீந்திரர்.

## ருங. அரங்காச் சாரியார்—வே.

(20 - நூ.)

சென்னை மாநகரில் இருந்தவர். மருத்துவத் தொழில் செய்திருந்தார். தமிழ்ப் புலமையும் இவரிடம் அமைந்திருந்தது. ஏமலதா, சாத்வீமணி, இலக்குமி நாராயண தோத்திரமாலை என்னும் நூல்களை இவர் இயற்றியுள்ளார். இவருடைய தந்தையார் வேலாமூர் இராகவாச்சாரியார். இவர் வடமொழியையும் உணர்ந்திருந்தார். இவருடைய நூலுக்கு சிவாநந்தசாகரயோகீசு

வரர், சிவசங்கர பண்டிதர், கோ. வடிவேலுச் செட்டியார் ம. இராசகோபால பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

“தேசுறும் அவன்யா ரென்னில் நிகழ்தரு வயித்தி யத்தில்
மீசுரன் பரந்து வாச மெய்க்குலம் விளங்க வந்த
பூசுரன் ஆங்கி லத்தும் புண்ணிய ஆரியத்தும்
பேசுறு திரவிடத்தும் பிரபலன் என்பமாதோ”

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று. இலக்குமி நாராயண தோத்திரமாலைப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

“படியளந்த நெடுமாயோன் பலவுயிர்கட் கெப்போதும்
படியளக்குந் தலைவனெனும் பரிசடைந்து நிலவுவதும்
அடியவருக் கெதிர்தோன்றிப் பேரருளை அருளுவதும்
கடிமலர்ப்பூந் திருவேநின் கடைக்கணருள் நோக்கன்றோ?”

## ருச. அரங்கையங்கார்—ரா.

(1880)

பாண்டிவள நாட்டில் தேவகோட்டையில் இராமையங்கார் என்னும் அந்தணருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் கல்வி கற்று அட்டாவதானமுஞ் செய்து சிறப்புடன் விளங்கினர். தேவகோட்டைக்கு அண்மையில் உள்ள கண்டதேவியில் எழுந்தருளிய முருகக்கடவுள் மீது இவர் “வண்ணச்சந்தமாலை” என்னும் நூலைப் பாடியுள்ளார். தஞ்சை சதாவதானம் சுப்பிரமணியஐயர், வேதியன்குடி கத்தூரி ரெங்கய்யங்கார், திருவாரூர்ச் சொக்கலிங்க முதலியார் ஆகியோர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்கள். வண்ணப் பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க:

சேலெனமி ளிர்ந்துகட லாலமதை வென்றுமிகு
நீவிரம்வி ளங்குநெடு விழியாலே
சேணுறநி வந்துவளர் மேருவரை என்றுரைசெய்
சீர்மணிவ டங்குலவு முலையாலே
மாலதரி னின்றவர்கள் தோள்புணர நைந்துலக
மாலையின்அ லைந்துநனி திரியாதே
மாணிலகு முன்றனருள் மேவியுயர் கின்றகவி
மாலைபுனை யுந்திறமை அருள்வாயே

காலனையு தைந்துகடை ஊரதனில் அன்பனெதிர்
கானவிடை வந்நிவன் அருள்சேயே
காவிரிஅ ரங்கநகர் மேவியரவின் கண்வளர்
கார்முகில் உகந்தஎழின் முருகோனே
வாலனந டங்குலவு சீர்மையொடு செம்பொனெளி
மாரிபொழி கின்றநகர் உறைவோனே
வாகைமயில் நின்றடியர் பாடுதுதி கொண்டுமத
வாரணமு கன்பின்வரு பெருமாளே.

## ருரு. அரவமூர்த்தி உபாத்தியாயர்—வெ.

(20 - நூ.)

ஈழவள நாட்டில் கொழும்பில் தோன்றியவர். தந்தையார் பெயர் வெள்ளையன் பிள்ளை. அரவமூர்த்தியார் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தமிழ்ப் புலமை பெற்றுக் கொழும்புத் தமிழ்ப் பாடசாலையில் தலைமைத் தமிழாசிரியராக இருந்தார். இவரியற்றிய நூல்கள் தோத்திரப் பாமஞ்சரி, கடவுள் கலி வெண்பா, பேரானந்தக்களிப்பு, பரஞ்சோதிமாலை, தோத்திரப் பாப்பதிகம் முதலியன. தோத்திரப்பாமஞ்சரி என்னும் நூலில் கைலாயநாதர் அடைக்கலப்பத்து, முதலியவை அடங்கியுள்ளன.

"பதினாயிரந்தரஞ் சொன்னாலும் என்முகம்
பார்க்கவுன் மனமில்லையோ
பலபிள்ளை தம்மிலோர் பேய்ப்பிள்ளை மீதன்னை
பட்சமற் றிடுவதுண்டோ
சதமுள்ள தாயென்று நின்னையென் மனத்தினில்
தாபித்தி டாதகுறையால்
நட்டமுறத் துலகிலருள் நிட்டைசுக மற்றுத்
தயங்கினேன் இதுகாலமும்
இதுவுமுன் திருவருட் பாங்கன்றி வேறில்லை
எங்குநிறை கின்றசெல்வி
ஏழைமீ தின்னமும் வன்மம்வைத் தாலடிமை
எந்தநாள் ஈடேறுவேன்
கதியேயோர் துணையெனக் கைகுவித் துன்பதம்
கருதினேன் அரவமூர்த்தி
கைலாய நாதருக் கொருபாரிசத்திலுறை
கருணைக டாட்சியுமையே"

என்பது கருணைகடாட்சி உமைப்பதிகத்தில் ஒரு பாட்டு.

## ருசுரு. அரிகரதாசர்—ரா.
## (1910)

இவர் புதுக்கோட்டை நாட்டில் குடுமிமாமலை என்னுஞ் சிகாபுரத்தில் இராமசாமி ஐயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவருடையபெயர் மலையப்ப ஐயர் எனவும் வழங்கியது. இவருடைய புதல்வனுக்கு அம்மை பார்த்து மிகுந்த தொல்லைப் பட்டுக் கொண்டிருந்தான். இவர் தம் புதல்வன் படும் பாட்டைக்கண்டு உள்ளம் வருந்தினர். "அம்மையே நீதான் காப்பாற்ற வேண்டும்'' என்று இறைவியை நோக்கிப் பெரிதும் வேண்டிக்கொண்டு வருந்தியிருந்தார். அவ்வாறாக அந்நாட்டில் வயலோகமென்று பேர்விளங்கிய திருவயலூரில் எழுந்தருளிய முத்துமாரியம்மன் இவருடைய கனவில் எழுந்தருளி "அன்பனே! அஞ்சவேண்டாம்; என்மீது பாமாலை ஒன்று சாத்தி அபிடேகம் செய்வாயாக'' என்று கட்டளையிட்டு மறைந்தாள். அரிகரதாசர் 'முத்துமாரிபதிகம்' என்னும் நூலைத் திருவயலூர் முத்துமாரி மீது பாடினர். புதல்வன் நலமடைந்தான். இவர் அம்மனுக்குத் திருமுழுக்குப் பூசை முதலியன செய்து இப்பதிகத்தையும் அங்கு அரங்கேற்றினர். பதிகத்தின் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"மண்டலம் புகழ்முத்து மாரிமகமாயிவளர்
வன்சூலி கரகபாலி
வடிவுற்ற மாதங்கி ஓங்காரி ரீங்காரி
மகிடசங் காரிநீலி
சண்டிரண சாமுண்டி எண்டோளி ஆயிரம்
கண்ணிமா வினியோகினி
சடிவற்ச பில்விரு னியமேவ லோமமொடு
கண்பார்வை கண்டமாலை
கொண்டநீ ரழிவுநர வலிகுட்ட ரோகமும்
கொடியபா தகமந்தியும்
கோரசுர விப்பிருதி மாறநின் பெயரதைக்
கூறுமுன் னோடுமன்றோ?
தொண்டனுன் சேயனைக் கைகொடுத் தாளுசிவ
துரியமுத லாதிநிதியே
துங்கவய லூர்வாழும் மங்களகல்யாணியே
சுயமுத்து மாரியுமையே.''

## ருஎ. அரிகரபுத்திர உபாத்தியாயர்
(19 - நூ.)

இவர் பொய்கைப்பாக்கம் என்னும் ஊரில் இருந்தவர். இவர் "விவேகசிந்தாமணி" என்னும் பெயருடைய நூலை இயற்றியிருக்கிறார். இந்நூல் நீதி சிந்தாமணி, வெள்ளைச் சிந்தாமணி எனவும் கூறப்பெறும்.

## ருஅ. அரிகிருட்டிணநாடார்—சி. அ
(1910)

பாண்டிவள நாட்டில் ஏரல் என்னும் ஊரில் தோன்றியவர். இவர், "தெய்விகச்சித்து விளையாடற்சிந்து" என்னும் நூலை இயற்றியிருக்கிறார். ஏரல்மாநகரச் சிறப்புப்பாடல் ஒன்றை அடியிற்காண்க:

"திங்கள்மும் மாரி சிறப்புடன் பொழியும்
திருவளர் ஏரல்மா நகரில்
எங்கணும் வயல்கள் விளையமுக் கனித் தேன்
இயல்புடன் ஆறதாய்ப் பெருகி
பொங்கிடும் கரும்பின் சாறுகள் வழிந்து
புன்செயைச் சுற்றியே ததும்பும்
செங்கைவேல் பிடித்துச் செந்நிலம் பநிவாழ்
சிவசுப்ர மன்யரின் செயலால்."

## ருகூ. அரிபுத்திரப் பிள்ளை—சு. கு.
(1910)

திருநதிக்குன்ற நகரில் சீர்கருணிக குலத்தில் சுப்பராயப் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர், "திருமணப்பிள்ளையார் பஞ்சரத்தினம், தண்டபாணிக் கடவுள் பதிகம்", "பாலசுப்பிரமணியக் கடவுள் இசைப்பாடல்" முதலிய நூல்களைப் பாடியுள்ளார். நூலுக்கு க. தெய்வசிகாமணிப் பிள்ளை, வல்லநகர் வைத்தியலிங்கம் பிள்ளை, காமக்கூர் மு சுந்தரமுதலியார், ப. ஆதிமூலசுவாமிகள், வெ. செ. குப்புச்சாமி முதலியார், சம்புவராய நல்லூர்க்கணிதர் மா. முனிசாமிப்பிள்ளை.

அண்ணாமலைப் பிள்ளை, ந. முனுசாமி முதலியார், கணியம்பாடி லிங்காச்சாரியார், ஒசூர் சுயம்பிரகாசபிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"திங்களுங் கொன்றையுங் கெங்கையுஞ் சேர்சடைச்
சிவனுர ளித்தமுருகா
நெசமுகன் முடியைமண்மி சைவிழக் களைவிடும்
செயராம னுக்குமருகா
ஐங்கரக் கணராச குஞ்சரச் சோதரா
ஆறுமா முகமானவா
அடியனேன் இருவினைக் கொடியபா சத்திடை
அமிழ்ந்துரு நினியாளவே
செங்கைவேல் வல்லவிரு பங்கிளங் குறமாது
தெய்வதப் பிடியாளுடன்
சித்திரத் தோகைமேல் எத்திசைய ரும்போற்ற
சேவைதந் தாளவருவாய்
சங்கரன் உவக்குமலை மங்கையுமை மைந்தனே
சரவணேற் பவநாதனே
தண்டலை சூழ்நதிக் குன்றமீ தோங்கிவாழ்
தண்டபா ணிக்கடவுளே"

என்பது தண்டபாணிக்கடவுள் பதிகத்தில் ஒருபாட்டு.

## ௨௦. அருணகிரிநாத சுவாமிகள்

திருப்புகழ்பாடிய அருணகிரிநாதர் அல்லர். இவர் காஞ்சிபுரம் பிள்ளையார்பாளையத்தில் இருந்த மூதண்ட முதலியார் என்பவருக்கும் அவருடைய மனைவியாராகிய முத்தம்மையார் என்பவருக்கும் புதல்வராகத் திருவண்ணாமலையில் தோன்றியவர். செங்குந்தர் மரபைச் சேர்ந்த மேற்படி முதலியாரும் அவர் மனைவியாரும் மக்கட்பேற்றை விரும்பித் திருத்தலப்பயணஞ் செய்த போது தோன்றினர்.

இவர் தமிழ்மொழியை நன்கு பயின்று தமிழ்ச் செய்யுளை நன்ருகப் பாடுந் திறம்பெற்ருர். முருகக் கடவுள் மீது பல புகழ்ப் பாடல்களைப் பாடினர். வள்ளிநாயகன் மாலை என்னும் நூல் ஒன்றும் இவரால் இயற்றப்பட்டது. இந்நூல் இராமாயண சாரம், பாகவதசாரம், பாரதசாரம், தசாவதாசாரம், பிரதாப சாரம் முதலியவைகளைக் கொண்டுவிளங்குகிறது.

" பாதபங் கயமுந் திருமுகம் ஆறும்
பன்னிரு கரங்களும் மருங்கில்
மிதகின் றினியும் கனவிலும் மறவேன்
கேசவன் முராரிகோ விந்தன்
சிதரன் முகுந்தன் அச்சுதா நந்தன்
தேவகி நந்தனன் கண்ணன்
மாதவன் வரதன் மாயவன் திருமால்
மருகனே வள்ளிநா யகனே "

என்பது நூலின் முதற்பாட்டு. இவரையும் ஆதி அருணகிரி நாதரையும் ஒருவரெனச் சிலர் எண்ணினர். இவருடைய வரலாற்றைப் பின்வரும் தனிப்பாடல் ஒன்றும் ஒருவாறு கூறுகிறது:

" கார்முகில் வண்ணனும் கமலமலர் வாசனும்
காணவரி தாகி நின்று
கல்லால் அமர்ந்தவன் கருணைபெறு மாதர்பால்
கந்தவேள் துணைவ ராகச்
சூர்தனை ஒழிக்கவே தோன்றிமுசு குந்தனின்
தூண்டாப் படைத்துணைவராய்ச்
சோணுடு மேவிநிரு வாணுடும் ஆண்டசிவ
தோமில்செங் குந்தர் மரபில்
சீர்பரவு திலகமாய்த் திருவருணை யம்பதியில்
சிவனருளி னல்உ தித்துத்
தென்கடல் கடந்துமுரு கக்கடல் படிந்துலகு
செந்நெல்நற் பயிர்த ழைக்க
வார்குவடு தொறுநின்று வான்திருப் புகழ்மாரி
வருடித்த அருண கிரிமா
வள்ளன்மே கத்தினது வண்டிருப் புகழ்பாடி
வனசமா மலர்சூ டுவாம்."

## ௬௧. அருணகிரி முதலியார்—சிவ.

(20 - நூ.)

வடார்க்காடு மாவட்டத்தில் சோளிங்கபுரம் என்று திரிந்து வழங்குகிற சோழகங்கபுரம் என்னும் ஊரில் தோன்றியவர். சென்னைமாநகரை அடைந்து இலக்கண இலக்கியங்களையும் சைவசித்தாந்த நூல்களையும் ஓதி யுணர்ந்து சிறந்த சைவசித்தாந்தப் புலவராக விளங்கியவர். ஐதராபாத் நாட்டில் ஓர் அலுவலில்

அமர்ந்து என்பது ஆண்டுகட்கு மேலும் வாழ்ந்திருந்த இவர், பன்னிருதிருமுறைத் திரட்டு முதலான நூல்களை அச்சிட்டு வெளியிட்டிருப்பதன்றி வேதோக்த சிந்தாந்த விளக்கம், விபூதி ருத்திராட்ச மகத்துவவிளக்கம், பிரணவவித்தியா பரிமளம் என்னும் ஓங்கார விளக்கம், சைவ நித்தியாநுட்டானம் முதலிய நூல்களை எழுதியுள்ளார்.

## ௬௨. அருணசலகுரு (இராயவேலூர்)

தொண்டைவள நாட்டில் இராய வேலூரில் இருந்த இவர் நிசாநந்தபோதம் என்னும் நூலை நன்கு ஆராய்ந்து அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். பல நூல்களையுங்கற்றுப் புலமை பெற்றுத் திகழ்ந்தவர்.

" எல்லாரும் அறியவொரு மருந்து கேளு
எந்தெந்த நோயாளி தனக்குஞ்செய்ய
வல்லான்மை யவன்படுத்த நலத்தின் மண்ணை
மருந்துடனே முன்சேர்த்துமாப்புக்கூட்டிக்
கொல்லாதே எமனையிந்த மண்ணை வாரிக்
கூறிட்ட வைத்தியனே குருவாச் சப்பா
பொல்லாத பேர்களுக்கும் இம்மார்க்கத்தைப்
புகலாதே பூராய குருவென் றெண்ணே "

என்பது நூலின் பாடல்களில் ஒன்று. போளூர் சம்பத்துகிரி அச்சுத தாசர், இராய வேலூர் முனிசிபல் ஆபீசில் அலுவலாக இருந்த இரத்தின முதலியார் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" செய்யவே ஞானமுத சித்தரே நாயடியேன்
உய்ய ஒருதரம் நீ நோதினால்—வையகத்தில்
பொய்யனைத்தும் பாழாகிப் புண்ணியத்துக் காதரவாய்
மெய்யனைத்தும் மேலாகுமே "

என்பது இவர் இயற்றிய அமுதசித்தர் வணக்கப்பாடல்.

## ௬௩. அருணசலக் கவிராயர்—௧

இவர் சேற்றூரினர். கந்தசாமிக்கவிராயருடைய புதல்வர். இவர் "வேங்கடாசலபதி பிரார்த்தனை" "நவரத்தின மஞ்சரி" என்னும் நூல்கள் பாடியுள்ளார்.

பூமேவு செயமடந்தை பொருந்திவளர்
அருட்பெருமான் புவன மேத்தும்
தேமேவு பசுந்துளபங் கமழ்மார்பன்
மானுபுரி செழிப்புற் றோங்கக்
காமேவு நதிவளஞ்சூழ் மேழுமலைக்
கோவில்கொண்ட கண்ணன் முன்னம்
கோமேவு நிரைபுரப்பான் வரையேந்தி
நிடனேந்து கொண்டல் வண்ணன் ''

இது நவரத்தின மஞ்சரியில் ஒருபாட்டு. இவர் உடுமலைப் பேட்டை தாலுகா மானுபட்டிக்கிராமம் தையலண்ணக் கவுண்டர் என்பவர் மீது, ''நாணிக்கண் புதைத்த''லெனப் பெரும் பாலும் பெயர் பெற்று வழங்குகிற ''இடையூறு கிளத்தல்'' என்னும் ஒருதுறைக் கோவையும் பாடியுள்ளார்.

'' திருவளர் மார்பன் செயமாது வாழுந் திடபுயத்தான்
தருவள ரிகைத் துரைதைய லண்ணவித் தாரன்வெற்பில்
உருவளர்கின்ற சிவலிங்க சேவை உறப் புரிந்தாய்
கருவளர் மைக்குழலாய் சந்திசேவை கனிந்தருளே ''

என்பது கோவையின் முதற்பாடல், இக்கோவை நூறுபாடல் களையுடையது. இதற்குக் கா. குப்புச்சாமிக்கவுண்டர் என்பவர் குறிப்புரை எழுதியுள்ளார்.

## சுச. அருணாசல சுவாமிகள் (திருநின்றவூர்)
## (19 - நூ.)

இவர் திருநின்றவூர் என்னும் ஊரில் தோன்றியவர். திருமுல்லை வாயற்பதியில் எழுந்தருளிய கொடியிடைவல்லி யம்மன்மீது இவர் ஆசிரிய விருத்தம் பாடியுள்ளார். ஆசிரிய விருத்தப் பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க:

'' ஓயாத கருணைமழை பொழியுமுகி லேயகந்
துற்றசிவ ஞான அருளே !
உண்மைப்ர காசமுறும் அன்னமே! சொன்னமே!
உதிதமலர் பதும நிதியே!
மாயாத செல்வமே! ஆநந்த வெள்ளமே!
மகிமைபெறு மணிவி ளக்கே!
மறைமுடிவி னுக்குமெட் டாதநிரு வேசோதி
மயமான ஞான உருவே!

தோயாத அமிர்தமே எனையாண்ட தெய்வமே
துட்டநிக் கிரக பாலியே
துன்பம தகன்றுபே ரின்பநிலை மருவுவன்
தூயமந் திரமுரு வுவாய்
தேயாத ஊதிகா புரம்வளரு மாசிலாத்
தேவன்வல பாகத் துறும்
செவ்விய அனநடை மெல்லிஒவ்விய மனதுடை நல்லி
திவ்ய கொடியிடை வல்லியே''

## ௬௫. அருணாசல சுவாமிகள்—௬.

(1910)

இவர் திருத்தில்லையில் எழுந்தருளியிருந்த பொன்னம்பல ஞானதேசிகர் என்னும் பெரியாரிடத்தில் அறிவுநூல்களைக் கற்றவர். மேற்படி ஞானதேசிகரின் மாணவர். பகவற்கீதையைச் சொற்பொழிவு செய்வதில் வல்லவர். இவருடைய பெயருக்கு முன்னால் 'பகவற்கீதா பிரசங்கவித்துவான்' என்னும் அடைமொழியுங் காணப்படுகிறது. பகவற் கீதையை அடிக்கடி சொற்பொழிவு செய்தபடியால் இவருக்கு இப்பெயர் உண்டாகியது. இவர் சந்திரகாச நாடகம் என்னும் நூலுக்குப் பாடிய சிறப்புப்பாயிரப் பாடலை அடியிற்காண்க:

''முத்தமிழுஞ் சித்தமதில் நற்றமிழா யுற்றுவளர்
முதியோரிடத்தில் நேசன்
மொழிகள்சேர் கனிவாக இனியூரல்ச ரியான
முயர்சாதி மார்க்க துங்கன்
குற்றமெள் ளத்தனையும் சித்தம துதித்திடா
குணமேரு மானதுல்யன்
குருகுலத்தார்க்கெனக் கன்னனுர் பகர்சரிதை
குறைபிழை அகற்று சீலன்
நற்றவ சிநிவாச புத்திர னுதித்திலகு
நாவலர்க் குகந்த வாரன்
நற்புகழு மேராம சுவாமியந்தனன்
நற்சுவை ரசமி ரம்ப
கத்தனே யுத்திமதி நத்தியதோ சந்திர
காசனும் பிரப லத்தே
கடகபூ ரணசந்திர உதயம தெழுந்தநிகர்
கதைநாடக மோதுநலமே''

## ௬௬. அருணாசல தேசிகர் (காஞ்சி)
(1882)

தொண்டைவள நாட்டில் காஞ்சிமாநகரில் சென்ற நூற்ருண்டின் இறுதியில் வாழ்ந்திருந்தவர். இவர் சென்னையில் எழுந்தருளிய நாட்டுவர சித்திவிநாயகர் பேரில் "சோடசப் பாமாலை" என்னும் நூலையும், சென்னைக் கமலவிநாயகர்மாலை என்னும் முப்பது கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் அமைந்த நூலையும் இயற்றியுள்ளார். சோடசப் பாமாலைப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

" திருவினை அருளும் கலையினை அருளும்
திறத்தினை அறத்தினை அருளும்
உருவினை அருளும் பொருளினை அருளும்
ஒறுத்திடும் பகையையெய்ஞ் ஞானக்
குருவினை அருளும் முத்தியை அருளும்
குறித்திடுஞ் சதுர்த்திமா விரதம்
மருமலர்க் கானல் சென்னையில் நாட்டு
வரசித்தி விநாயக தேவே "

## ௬௭. அருணாசல நாவலர்—நா.
(1912)

பாண்டிவள நாட்டில் வீரவநல்லூரில் இருந்தவர். இவர் சங்கரன் கோவிலில் எழுந்தருளிய அம்மன்மீது "ஆவுடையம்மன் பாமாலை" என்னும் நூல் பாடியிருக்கிருர்.

" பூவில்வாழ் அயனும் காவல்செய் மாலும்
புண்ணியம் நண்ணுமா தவரும்
காவில்வாழ் வேந்தும் ஏவல்செய் துனது
காட்சிகன் டகமகிழ் வடைய
நாவில்வாழ் பவள்செம் பூவில்வாழ் பவளுன்
நயம்பெறப் பணிவிடை புரிய
ஆவல்கொண் டமர்ந்த கோவில்வாழ் சங்கர்
ஆவுடை என்னுங்கோ மதியே "

என்பது ஆவிடையம்மன் மாலையில் முதற்பாட்டு, இவருடைய பெயர் பூமிநாத தாசர் எனவும் வழங்கியது. "திருச்செந்தூர்ச்

சண்முகநாதன் பாமாலை'' ''சண்முகநாதன் கலித்துறை,'' ''சண்முகநாதன் சதகம்'' என்னும் நூல்களையும் இவர் இயற்றியுள்ளார்.

## சஅ. அருணசல பிள்ளை—வே.

(19 - நா.)

''.......................................................................
மன்னிய வாலி கண்டமா நகர்வயிற்
பன்னுறு வேலா யுதமால் பல்பகல்
நாளான் மையிற்செய் தவப்பேற் றுனுயர்
வேளான் மரபு விளங்குற உதித்தோன்
ஒழுக்கமுங் கல்வியும் உயர்குடிப் பிறப்பும்
விழுக்கறு வாய்மையும் மனுமுறை நீதியும்
கொடையுந் தருமமும் குறைவறு செல்வமும்
மிடையுநற் குணமும் மேவுறத் திகழ்வோன்
கற்றவர்க் கருளுங் கவின்பெறு கற்பகம்
அற்றவர்க் கீயும் அருநிதிக் குன்றம்
சைவசி காமணி சாந்த சாகரம்
தெய்வ பத்தியிற் சிறந்துறு சீமான்''

என்று திருவாவடுதுறைத் தாண்டவராய சுவாமிகளால் பாராட்டப்பெற்ற இவர் பாண்டிவளநாட்டில் வாலிகண்டபுரம் என்னும் ஊரில் வேலாயுதம் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத்தோன்றினர். கல்விச் செல்வமும் பொருட் செல்வமும் இவரிடஞ் சிறந்து விளங்கின. இவர், நெல்லை நாயகர் பதிகம், காந்திமதியம்மன் சந்தவிருத்தம், நெல்லை வடிவம்மையந்தாதி, ஞானனந்தக் கொம்மி, வீட்டுநெறிக் கலித்துறை, நன்னெறி வெண்பா ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். இவருடைய பாடல்கள் எல்லோருக்கும் பொருள் விளங்கத்தக்க எளிய முறையில் அமைந்துள்ளது.

இந்நூல்களைப் பாராட்டித் திருவாவடுதுறையாதின வித்துவான் தாண்டவராய சுவாமிகள், திருத்தணிகை விசாகப் பெருமாளையர். திருநெல்வேலி சாலிவாடீசுர ஓதுவாமூர்த்தி, முத்துக் குமாரசாமிக் கவிராயர், சுந்தர மூர்த்தியா பிள்ளை, அம்பலவாணக் கவிராயர், சிதம்பரநாதக் கவிராயர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" வஞ்சமிலா நெஞ்சத்தால் வாழலாம் வல்வினைபோய்
விஞ்சு நிருவேளை மேவலாம்—தஞ்சமுறுப்
பாவிகாள் நெல்லைப் பதிவாழ் வடிவாளைச்
சேவியா தேன்போறீர் செத்து "

என்பது இவர் இயற்றிய நன்னெறி வெண்பாவில் ஒரு பாட்டு.

## சுசு. அருணாசல முதலியார்—அ.

(1912)

சோழவள நாட்டில் கீழ்வேளூரில் இருந்தவர். புலியூர்ச் சுவாமிகள் என்பவருக்கு மாணவர். "குருவணக்க மணிமாலை" என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார்.

" புன்னெறியிற் செல்கின்ற போக்கதனை நீக்கிப்
பூங்கழலில் சேர்க்கவொரு கண்ணருளாம் கல்லால்
பின்னெறிந்து முன்னணைந்து முகமலர்ந்த நகையால்
முழுவினையும் நீக்கியருள் வாய்முத்தம் உதிர்ந்து
பின்னணைவாம் என்னவரும் பேயனேற் குன்றன்
பிரசமலர் தந்துநீங்காப் பிறவினை யறுத்து
நன்னெறியால் விளங்கவரும் என்றமணி விளக்கே
நீள்நாள்கள் கழிவதுவோ நிறைமலர்த்தாள் இருந்தே "

என்பது மாலையில் ஒரு பாட்டு.

## எ0. அருணாசல முதலியார் – நா

(19 - நூ.)

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் அம்பா சமுத்திரப் பிரிவில் உள்ள விரவநல்லூரில் நாராயணசாமி முதலி யார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் நூல் பல கற்றுச் செய்யுள் பாடும் திறம்பெற்றார். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் "வீரை பூமிநாதன் கலித்துறையந்தாதி, வீரை பூமிநாதன் ஆசிரியவிருத்தம், வீரை மரகதவல்லியம்மன் ஆசிரிய விருத்தம்" என்பன.

" கற்பகமாகி அருளளிப் பாய்இந்தக் காசினியில்
சொற்பன மீதினில் தோற்றுது தோற்றித் துயரறுத்த
அற்புதமான தென்விரையில் உன்றன் அருளொளியைப்
பற்பலகாலமும் பாராது பார்த்துப் பயனுறவே "

என்பது வீரைப் பூமிநாதன் கலித்துறையந்தாதியில் முப்பதாவது பாடல்.

## எக. அருணசலம் பிள்ளை (ஓமந்தூர்)

(1894)

இவர் ஓமந்தூர் என்னும் ஊரில் புலவராக விளங்கியிருந்தவர். 'படையூரந்தாதி' என்னும் நூலை இவர் பாடியுள்ளார். ஓமாந்தூர் சிவப்பிரகாச தேசிகர், மாணிக்கவாசக தேசிகர், நாராயணசாமிப் பிள்ளை, தாத்தையங்கார் பேட்டை குமாரசாமி ஐயர் குமாரன் இரேவண சித்தையர், தா. ம. சிவயோகியார், திருவானைக்கா சோமசுந்தரம் பிள்ளை ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"திருமா தவனி வருமாதுவாணி சிலையரிந்தோன்
ஒருமா தவர்கட னென்மாங்கிலிய முறக்கடலில்
பொருமாதவ நஞ்சு போனகபிர்மபுரீ சமதி
வருமாதவணங்கி கன்னவென் றேவழுந்திக்கருதே"

என்பது நூலின் மூன்ருவது பாடல்.

## எஉ. அருணசலம் பிள்ளை எஸ். கே.—1

(1910)

பாண்டிவள நாட்டில் மதுரை மாவட்டம் பெரிய குளம் கூற்றம் அரிகேசநல்லூரைச் சேர்ந்த சந்தன நல்லூரில் தோன்றியவர். இவருடைய பெயர் பொன்னையா பிள்ளை எனவும் வழங்கியது. இவர் திருவரிகைப் பதிகம், திருவிளையாடற் கும்மி, சந்தன நல்லூர் ஆயிரலிங்கேசர்மாலை, பகவதிமாலை அரிகேச நல்லூர்ச் சிவகாமிமாலை, சென்னிமலைப்பதிகம், புதுவைப்பதிகம் என்னும் நூல்களை இயற்றியுள்ளார். திருவரிகைப்பதிகத்திற்குக் கண்டமனூர் வேங்கட நரசிம்மையர் சாற்றுக்கவி வழங்கியுள்ளார்.

"பொருந்தநற் கினைறு வெட்டு வான் முயலப்
பூதமொன் றுதித்தல் போற் பொருவில்
திருந்தமு தருந்தத் தேவர்கள் ஒருங்கு
திரண்டுமுன் சென்றுபாற் கடலை

என்பது வீரைப் பூமிநாதன் கலித்துறையந்தாதியில் முப்பதாவது பாடல்.

## எக. அருணாசலம் பிள்ளை (ஓமந்தூர்)
## (1894)

இவர் ஓமந்தூர் என்னும் ஊரில் புலவராக விளங்கியிருந்தவர். 'படையூரந்தாதி' என்னும் நூலை இவர் பாடியுள்ளார். ஓமாந்தூர் சிவப்பிரகாச தேசிகர், மாணிக்கவாசக தேசிகர், நாராயணசாமிப் பிள்ளை, தாத்தையங்கார் பேட்டை குமாரசாமி ஐயர் குமாரன் இரேவண சித்தையர், தா. ம. சிவயோகியார். திருவானைக்கா சோமசுந்தரம் பிள்ளை ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" திருமா தவனி வருமாதுவாணி சிலையரிந்தோன்
ஒருமா தவர்கட னென்மாங்கிலிய முறக்கடலில்
பொருமாதவநஞ்சு போனகபிர்மபுரீசமதி
வருமாதவணங்கி கன்னவென் றேவழுந்திக்கருதே "

என்பது நூலின் மூன்ருவது பாடல்.

## எஉ. அருணாசலம் பிள்ளை எஸ். கே.—1
## (1910)

பாண்டிவள நாட்டில் மதுரை மாவட்டம் பெரிய குளம் கூற்றம் அரிகேசநல்லூரைச் சேர்ந்த சந்தன நல்லூரில் தோன்றியவர். இவருடைய பெயர் பொன்னையா பிள்ளை எனவும் வழங்கியது. இவர் திருவரிகைப் பதிகம், திருவிளையாடற் கும்மி, சந்தன நல்லூர் ஆயிரலிங்கேசர்மாலை, பகவதிமாலை அரிகேச நல்லூர்ச் சிவகாமிமாலை, சென்னிமலைப்பதிகம், புதுவைப்பதிகம் என்னும் நூல்களை இயற்றியுள்ளார். திருவரிகைப்பதிகத்திற்குக் கண்டமனூர் வேங்கட நரசிம்மையர் சாற்றுக்கவி வழங்கியுள்ளார்.

" பொருந்தநற் கிணறு வெட்டு வான் முயலப்
பூதமொன் றுதித்தல் போற் பொருவில்
திருந்தமு தருந்தத் தேவர்கள் ஒருங்கு
திரண்டுமுன் சென்றுபாற் கடலை

வருந்திமந் தரந்தால் மதித்திட அதனில்
வருங்கொடு விடத்தையு மனங்கூர்ந்
தருந்திய முதல்வா அனுதினம் அடியேற்
கருள்புரி அரிகைநா யகனே"

என்பது திருவரிகைப் பதிகத்தில் ஒருபாட்டு.

## எரு. அருணசலம் பிள்ளை—எஸ். கே. 2
(1912)

முன்னவருக்கு இவர் பெயரர். "நவநீத கிருட்டிணசாமி பதிகம்" கூடலூர்ப் "பவனிக்காதல்" என்பன இவரால் இயற்றப் பெற்றவை.

" சிவநீதச் செல்வந் திருக்கூட லூர்வாழ்
நவநீத கிர்ஷ்ணன்மேல் நன்குய்ந்—நவமாக
வன்பதிகம் பாட வருளா பரனடி
நன்பதிகங் கொள்வாய் நயந்து"

என்பது பதிகத்தின்காப்பு.

## எச. அருணசலம்—பிள்ளை (தஞ்சை-1)

சோழவள நாட்டில் தஞ்சை மாநகரில் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்திருந்த புலவர்களில் ஒருவர். இவரைப் பற்றிய செய்திகள் எவையும் புலனாகவில்லை. வேங்கடராம சாத்திரி என்பவர் இயற்றிய தஞ்சைமாநகர்ப் புராண உரை நடை நூலுக்கு இவர்,

" கஞ்சமலர் ஒடையில் கரிமூல மேயெனக்
கண்டருள் செயுங்கண் ணனே
காவென்று முனிவருந் தேவரும் இறைஞ்சிடக்
கண்துயிலே அரவில் நித்தோன்
அஞ்சாயுதந்திற் கிலக்காகி யேபுகழ்
அடைந்தவசு ரன்தஞ்ச னென்(று)
அன்னவன் பெயரைப் புனைந்ததல மான்மியம்
அமர்ந்தவட கலையா ழியைச்
செஞ்சொல்நா மத்தால் கடைந்துதென் கலைவழி
திரண்டுதெள் ளமுத மூறச்
செய்தவன் வேங்கட்ட ராமனென் பூசுரசி
காமணி எனப்பு கழ்ந்தே

மஞ்சுநிகராக் கொடை தருங்கிட்ன சாமிமக
வான்செய் தவந்து தித்து
வளர்வாசு தேவசிந் தாமணி யெனப்பலரும்
மகிழவச் சிட்டன னரோ ''

என்னுஞ் செய்யுளாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## எரு. அருணத்திரி ஐயர் (வெட்சியூர்)

(19 - நூ.)

இவர் வெட்சியூரில் வாழ்ந்திருந்தவர். வரைவட்டன்குடி சுப்பிரமணிய பாரதி என்பவரிடங் கல்வி கற்றுப் புலவரானார். இவர் இயற்றிய நூல்கள் அகப்படவில்லை. தஞ்சை ந. வீரபத்திரபிள்ளை இயற்றிய காமாட்சியம்மை பதிற்றுப்பத்தந்தாதி, காமாட்சியம்மை கலிவெண்பா என்னும் நூல்களுக்கு இவர்,

" பெருந்தடமா மதிற்றஞ்சைக் காமாட்சி
யம்மைபுகழ் பேணிக் கற்போர்
விருந்துணுமா றருந்தவத்தின் வீரபத்ர
நாவலனும் விண்டு நாவால்
திருந்தமிழ்தாப் பதிற்றுப்பத் தந்தாதி
கலிவெண்பாத் திரட்டித் தந்தான்
பொருந்துறவச் சிட்டதனே இராமசா
மிக்குரிசில் புகழ்பூண் டானே "

என்னும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## எசு. அருந்தவநாயகி—க

ஈழவள நாட்டில் தெல்லிப்பழை என்னும் ஊரினர். இவ்வம்மையாருடைய கணவனார் பெயர் கனகராயர். நூல்களைக் கற்றுநுண்மாணுழை புலம்பெற்ற இவ்வம்மையார் மங்கையர்க்கரசியார் வரலாற்றை உரைநடையாக எழுதியுள்ளார். நூலின் முகவுரையை அடியிற்காண்க:

" உலகெலாமென் றுமையொரு பாகன்
அடியெடுத் துதவ அகங்குழைந் துருகிச்
சேக்கிழார் பெருமான் ஆக்கிய பெரிய
புராணந் தன்னுட் பொலிவுடன் மிளிரும்
மங்கையர்க் கரசி என்றுபெய ரெய்திய
மாணியார் அவர்தம் மாபெருஞ் சரிதம்

அளியேன் இயம்புதற் கெளிதல வாயினும்
பரவிய சமண மதமது தன்னால்
தமிழக முற்ற இருளினை யோட்டிக்
கணவனின் மயக்க உணர்வினை அகற்றி
அவன்குல முற்ற பெரும்பழி துடைத்து
நாட்டிற் குற்ற கேட்டினை விட்டி
அரும்பணி யாற்றிய பெருந்தவக் கொழுந்தின்
மாசறு கற்பும் மனத்தின் திட்பமும்
அருளினிற் படிந்து நெருளுறும் அறிவும்
அகத்திற் சுரந்து புறத்திற் பாய்ந்து
பயில்வோர் மனத்தைப் பாகா யுருக்கும்
அன்பின் பெருக்கும் ஆர்த்தார்த் தெழுந்தென்
உள்ளக முருக்கி உறுபவம் போக்கி
அறிவொளி பெருக்கி அரும்பயன் தருமென
அங்கயற் கண்ணி பங்கனை அடைந்த
மங்கையின் மலர்ப்பதம் மனத்திடை யிருத்தி
அடைவோர் பாசம் அகற்ற வேண்டிக்
கருணை கொழிக்கும் அருளுருத் தாங்கிய
ஞான குருவை யோக ஒளியை
உள்குவர் நெஞ்சில் உறையும் பெரியனை
அகத்தினில் எழுதி அருட்பதம் வணங்கி
யானறி யளவையின் இயம்பினன் அதிலுள
குற்றங் களைந்து குணத்தினைத் தெரிந்து
கற்றல் அறிஞர் கடனா குமே.''

## எஎ. அருளைய அடிகள் (இராமநாதபுரம்)

தாயுமான அடிகளாரிடம் மாணவர்கள் பலர் இருந்தனர். அடிகளாரைப் போன்றே மாணவர்களும் நல்ல புலமை பெற்று விளங்கினர். அவ்வாறு விளங்கியவர்களில் இவர் ஒருவர். அடிகளார் வீடுபேறடைந்தபோது பாடிய பாடல்:

'' உலகினுக் கணியாம் இராமநா தபுரத்
துயர்கரை வாவியின் குணபால்
மலர்நிறை வனத்தில் சிவத்துறு நிட்டை
மருவிமெய் ஒருவிவே தாந்தத்
திலகிய பொருளாய் வானமாய் நிறையும்
எந்தையே மனதுபந் தமும்போய்
நிலையுற நினது திருவருள் அளிப்பாய்
நின்மலா நந்தமே போற்றி ''

## எஎ. அவிநாசிநாத சுவாமிகள் (திருக்கோவலூர்)
(18 - நூ.)

இவர் திருக்கோவலூரிலும் திருப்பாதிரிப்புலியூரிலும் ஞானியார் மடாலயத்தை ஏற்படுத்திய ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகளுடைய மாணவர்களில் ஒருவர். இவர் நெஞ்சு விடுதூது, சிகாமணிப்பதிகம், அபிடேகமாலை, அட்டகம், மங்களம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

## எகூ. அழகப்பெருமாள் பிள்ளை—ஆ
(1906)

சோழவள நாட்டில் இராசமன்னார் குடியில் பூவைசியசைவ வேளாள குலத்தில் ஆறுமுகத்தா பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத் தேர்ந்தவராகவும் செய்யுள் பாடுந்திற முடையவராகவும் திகழ்ந்தார். முனிசிப்பல் ஓவர்சியராகத் தொழில் புரிந்த இவர் ஓய்வு நேரங்களில் நூலியற்றும் பணியிலும் ஈடுபட்டிருந்தார். 'புலால் மறுப்பு' என்னும் உஙக பாடலுள்ள நூல் இவரால் இயற்றப்பட்டிருக்கிறது.

*" சீவர்கள் இடத்தில் அன்பிலாதவர்கள்*
*சிவனிடத் தன்புடை யவர்போல்*
*சீவர்கள் அறிய ஒழுகுதல் நடிக்கும்*
*செய்கையின் அளவதே யாகும்*
*சீவர்கள் இடத்தில் இரக்கமில் லவர்கள்*
*செப்பிடிற் றம்முயிர்க் குறுதி*
*ஆவதும் இலையென் றுலகெலாம் அறிய*
*அறைந்திடும் பழமறை அனைத்தும் "*

என்பது நூலில் ஒரு பாட்டு.

அட்டாவதானம் அரங்கய்யங்கார், வடுவூர் சுந்தரம்பிள்ளை, மன்னார்குடி கோவிந்தசாமி உபாத்தியாயர், கோபாலகிருட்டிண பிள்ளை, கோபால பிள்ளை, நமசிவாயச் செட்டியார் ஆகியோர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். பல ஆண்டுகட்கு முன்பு நூல் அச்சிடப்பட்டுள்ளது.

"திருவளர் கற்பகத் தெய்வத மாநகர்
வருமொரு காவிரி மட்டறப் பொழிதலால்
செந்நெற் காலியும் தேன்மலர் வாவியும்
பொன்னிறச் சண்பைப் பொலிதரு பொழிலும்
பல்வளஞ் செறிந்து பான்மதி தவழும்
செல்வ மாளிகை திகழ்தரு நிலையம்
நாரணன் திருவொடு நாடி அமர்தரும்
ஏரணங் குறுநல் இராச மன்னை
வேளான் மரபின் விளக்கெனப் படுவோன்
கேளமர் செல்வமுங் கீர்த்தியும் வாய்ந்தோன்
ஆறு முகப்பேர் அண்ணல் அளித்த
நீரூர் மேனி நிமலற் கடியன்
மேதகு கல்வி மெய்யறி வடக்கம்
ஈதலே முதலா இன்குணம் மிகவும்
வாய்ந்தநல் அன்புடன் மன்னிய மகிழ்வோன்
ஏய்ந்தபல் லுயிரும் இடுக்க ணுறுவகை
தேடிடும் விரதன் செந்தமிழ்ப் புலவன்
நாடிடும் பலரை நன்னெறி உய்க்கும்
பேரார் அழகப் பெருமாட் குரிசில்
பாரோர் உய்யப் படுகொலை தவிர்த்து
முத்திக் கான முதற்சா தனமாப்
பத்தர்க் கறிஞர் பகர்கா ருணியச்
செந்நெறி நாளும் சிறப்புற் றோங்கும்
நன்னயம் பெற நாடிய பன்னூல்
சாரங் காலந் தகுமிட னாகும்
ஒருதன் னனுபவம் தானும் ஒக்கச்
செம்பொரு ளாகச் சிறுவரும் உணர்தர
அம்புவி யதனில் அனைவரும் ஏற்பப்
புலான்மறுப் பென்னப் புகன்றனன் ஒருநூல்"

என்னும் இவ்வடிகள் இவருடைய வரலாறு முதலியவைகளைக் குறிப்பிடுதல் காண்க.

## ௮௦. அழகிய சிங்கராமாநுச பாகவதர் (திரு)
(20 - நூ.)

இவர் நடுநாட்டில் திருவெண்ணெய் நல்லூரில் இருந்தவர் இவர் புலமைத்திறம் அமையப் பெற்றவர். இக்காலத்தில் விழுப்புரம் என்று வழங்கும் சனகாபுரி மந்தைக்கரைமழுவேந்திய அம்மைச்சார் கோவில் முத்துமாரியம்மன் பேரில் பதிகம் பாடியுள்ளார். பதிகத்தின் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

" சீர்கொண்ட செஞ்சொற் பொலிந்ததமிழ் மாலைத்
திறங்கொண்ட தெய்வ நிலையால்
திகழ்கொண்ட தென்னு டிலங்கிமறை நடையாடு
திறல்கொண்ட நடுநா டிடைப்
பேர்கொண்ட பத்திமைப் பலவாகி நிலவுநீள்
பெரிதுவந் திடுபெயரினுல்
பெட்பமைந் தருளினேர் நட்பமைந் திடுகருணை
பிடுற விளங்கி மலிவாய்
கார்கொண்ட சோலையும் களி நிலாத் துண்டமும்
கவினமொளி கவிய வெளிகான்
கட்செவிக் குடைநிழல் அணிப்பணிக ளொடுமின்ன
கருதுமடி யவரேற்ற முன்
ஏர்கொண் டிலங்குமழு டமரக கபாலகரம்
ஏந்தியருள் நிலவு மணியே
இனியமொழி வளர்ஜனக புரியில்ஒளிர் எழில்கனக
இமையமக மாரியமையே "

## ௮௧. அழகிய நம்பி
### (18 - நூ.)

இவர் வைணவப்புலவர். "குருபரம்பை வரலாறு" என்னும் நூலை இவர் இயற்றியிருக்கிருர்.

## ௮௨. அழகிய மணவாள சீயர்

இவர், "திருவிருத்த வியாக்கியானம், திருவாய்மொழி வியாக்கியானம், பன்னிராயிரப்படி, தத்துவதியப்பிரகாசம், சாரிர கைக் கண்டியம், பகவத்கீதை வெண்பா" முதலிய நூல்களை இயற்றியிருக்கிருர்.

## ௮௩. அழகிய மணவாளதாசர் (புவனகிரி)

இவர் புவனகிரி என்னும் ஊரினர். 'பூங்கோவற்ருயார் திருப்பதிகம்' என்னும் நூல் ஒன்று இவர் பாடியிருப்பதாக அறியப்படுகிறது. பிற புலனுகவில்லை.

" தென்னிலங்கை நகர்புகுந்து தேவமாதர்
சிறையகலத் தனிச்சிறையில் இருந்தநேசார்
மின்இடைப்பெண் அரசிருர் விளையாட்டென்ன
விண்டொடுல களித்தழிக்கும் விமலச்செல்வி

என்னிகரில் நீங்களைத்து நின்னலான்மற்
றெவர்பொறுப்பார் ஈச்சுவரி எழில்சேர் வல்லி
பொன்னியெனப் புனல்சுரக்கும் பெண்ணை சூழ்ந்த
பூங்கோவல் தாயேநீ புரந்நாள்வாயே''

என்பது பூங்கோவற்றுயார் திருப்பதிகத்தில் ஒரு பாட்டு.

## அச. அழகிய மணவாளப் பெருமாள் நயினுர்

(15 - நூ.)

இவர் பிள்ளை உலோகாசாரியர் என்பவருக்கு இளவல். திருப்பாவை உரை, ஆருயிரப்படி, மாணிக்கமாலை. ஆசாரியம், அருளிச்செயல் இரகசியம், கண்ணினுண் சிறுத்தாம்பு முதலியவைகளை இவர் எழுதியிருக்கிறுர்.

## அரு. அழகிரிசாமி செட்டியார்—அ.

(20 - நூ.)

இவர் மதுரைநகர் பழைய குயவர்பாளையத்தில் இருந்த ...ரிசாமி செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றி ... இவர் 'பலவேட நாடகம்' என்னும் நாடகநூல் ஒன்றை ...ற்றியிருக்கிறுர். அந்நாடகம் "விகடப் பிரசங்கம்" எனவும் ...பெயர்பெறும்.

" நன்னூல்கா ரிகைநிகண்டும் நாய னுர்சொல்
நற்குறளும் நாலடியார் நட்பார் திவ்ய
தொன்னூல்கள் லாடமுதல் கற்ற வாணர்
துங்கமிகுஞ் செங்கமலந் துணைத்தாள் போற்றி
பன்னூலின் பயனறியாச் சிறியேன் இன்பப்
பலவேட நாடகமாய்ப் பாட லான
இந்நாலிற் பிழையிருக்கில் திருந்தி நேராய்
ஏற்றுமனம் பொறுத்தருள்வீர் இன்று மாதோ"

என்பது நாடகத்தின் அவையடக்கப் பாடல்.

## அசு. அழகுநம்பிக் கவிராயர்—பி.

இவர் சாலிச்சந்தை என்னும் ஊரில் இருந்தவர். அய்ய நாடார் என்பவரிடங் கல்விகற்றுத் தேறிய இவர், "கருணையாநந்த மணிமாலை" என்னும் நூலைப் பாடியுள்ளார்.

"சீருந் திருவுங் கனவாழ்வு மோங்கித் தினமகிழ்ந்தே
பாருந் துதிக்கும் பதம்பெறு வார்கணின் பங்கயப்பூ
நேருந் துணையடிக் காளாகி நின்று நிலைத்தவர்கள்
யாருஞ் செஞ்சாலி நகர்வாழ் பெருங்கரு ணாநந்தமே"

என்பது மேற்படி மாலையில் ஒரு பாட்டு.

## அஎ. அறிவனார்

இவர் 'பஞ்சமரபு' என்னும் நூலை இயற்றினார். அந்நூல் அடியார்க்கு நல்லார்காலத்தில் வழக்கில் இருந்தது. இப்பொழுது அந்நூல் மறைந்து விட்டதாகத் தெரிகிறது.

## அஅ. அறிவானந்தா (மாயூரம்)
(20 - நூ-)

இவர் கௌரிமாயூரம் பட்டமங்கலம் வேளாளத் தெ இருந்தவர். ஆயுர்வேதம் பஞ்சபட்சி சோதிடம் முதலியவை வல்லவர். எளிதாகச் செய்யுள் பாடும் வன்மையையும் பெற்றிருந்தபடியால் அருட்கவி என்றும் பாராட்டப்பெற் இவருடைய வரலாற்றை,

"பூவிரி கடுக்கை நேவருக் களித்துக்
காவிரி கரைசேர் காவிரித் துறையின்
சுப்பிர மணிய மெய்ப்பர னார்தியாச்
செப்பிர மணியச் சீர்மயில் வரத்தின்
அப்பெயர் அணைந்த திப்பியப் பதியோன்
தோளான் மலிபுகழ் வேளான் குலத்தில்
தமிழ்வளன் பழநி அமிழ்தினிற் கவிபயில்
புலவர் மரபிற் பொள்ளா மணியாம்
மாகோ பால சாமி வரத்தின்
மதிக்குலப் புலவோர் துதிக்க விதித்தோன்
சோதிட மருத்துவத் தொன்றூல் பழகி
மாதிடத் தவனடி மன்னு முளத்தின்
நாற்கவி கவிக்கும் நாவுடைத் திருவன்
அறிவா னந்தம் அளக்குங் காலை
அறிவானந்தம் ஆவ துணர்ந்தே
அறிவானந்தன் ஆய பெயரின்
அணையும்எம் மாதுலன் அனையன் மாதோ"

என்னுஞ் சிறப்புப்பாயிரவடி ஓரளவு விளக்குகிறது. இவர் பின்வரும் நூல்களை இயற்றியுள்ளார்.

க. புள்ளிருக்குவேளூர் வெண்பா வந்தாதி
உ. ஐயனார் பதிகப்பாமாலை
ந. மோன விளக்கு
ச. பஞ்சபட்சி தினச் சுருக்கக் கண்ணாடி
ரு. மதிசூடி அகவல்
௬. ததியூர் சின்னசாமி பதிகப்பாமாலை
எ. சிதானந்த சுவாமி பதிகப்பாமாலை
அ. சேத்தூர் விநாயகர் பதிகப்பாமாலை
௯. காழிதந்தர் நட்சத்திரப் பாமாலை
க0. சோதிட அறிவானந்த அனுபோக சேகரம்
கக. மாயூரநாதர் அபயாம்பிகைமாலை
கஉ. சுந்தரமாலை

"நெறிகெட்டு நீகெட்டு நின்போதங் கெட்டுக்
குறிகெட்டுந் நானதுவாய்க் கொண்டால்—உறுதி
வடிவமே நானாகி மாகதிர்போல் எங்கும்
வடிவுள்ளே நானாவாய் மன்"

என்பது வேளூர் வெண்பாவந்தாதியில் ஒரு பாட்டு.

## அ௯. அனந்த பத்மநாப சுவாமிகள் (மதுரை)

இவர் மதுரை மாநகரில் இருந்தவர். "ஞானானந்தமாலை" என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார். மேற்படிமாலை அகவற்பாவாக அமைந்துள்ளது.

"அர அர அர சிவ சிவ சிவ
அடியார் தம்முளத் தமர்ந்தவா னந்த
அறிவிற் குள்ளறிவு அருளுக் குள்ளருள்
உயிர்க்குயி ராகி உணர்கொளும் நமது
உலக வாழ்க்கையில் உழல வாழ்க்கையில்
உனைப் பொறுந்நரே வினைப் பொறுப்பெலாம்"

என்பது நூலின் தொடக்கம். இவர் இந்நூலையன்றி வேறு சில நூல்களுஞ் செய்துள்ளார்.

## கூo. அனந்தன்-1 (கூ)

தொண்டைவள நாட்டில் கூவம் என்னும் ஊரில் நாரணர் என்னும் கொடைவள்ளல் வாழ்ந்திருந்த காலத்தில் இருந்த புலவர்களில் ஒருவர். கூவத்து நாரணரைப் பாராட்டி,

" பாதி யிரவில் பசித்தவர்க்கும்
பகலில் பசிந்து நின்றவர்க்கும்
சோதி இழந்த முகத்தினர்க்கும்
சுகத்தை இழந்த மக்களுக்கும்
நாதி அற்ற குழந்தைகட்கும்
நலத்தை இழந்த நல்லவர்க்கும்
நிதி கண்ட நாரணனே
நினைத்து நன்மை செய்பவனே "

என்னுஞ் செய்யுளைப் பாடியிருக்கிறார். சேதுநாட்டில் அனந்தன் என்னும் பெயருடைய புலவர் ஒருவர் இருந்தாகவுந் தெரிகிறது.

## கூக. அன்னம்மாள்—பை

(20 - நூ.)

இவ்வம்மையார் பையனூரில் கருணிகர் குலத்தில் தோன்றியவர். இலக்கண இலக்கியப் பயிற்சியை மிகுதியாகப் பெற்றிராமலிருந்துஞ் செய்யுள்பாடுந்திறம் அமைந்து விளங்கினார். கண்ணனிடமும் ஆண்டாளிடமும் அன்புடையவர். இவர் 'கோதாபரிணயம்' (அஃதாவது ஆண்டாள் திருக்கலியாணம்) என்னும் நூலை இசைப் பாடல்களும் விருத்தப்பாடல்களும் அமையப் பாடியுள்ளார். இவ்வம்மையாரிடம் பெண்மணிகள் சிலர் கல்வி கற்று நலமுற்றனர். இவ்வம்மையார் சாவித்திரி சரித்திரம் என்னும் நூலுக்கு இப் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

" உலகமொரு பதினான்கும் உட்கொண்ட அண்டமதில்
உயர்பூ விருந்த வல்லி
ஒங்குகிரி வரதனுக் குக்கன்னி செய்தீந்த
உத்தம னுதித்த தலமாம்
ஓயாத சன்மார்க்கர் சுவர்னரொடு சட்பியும்
உயர்கீர்த்தி பெற்ற புவியாம்
ஓமெனும் ஆரியன் வாழுமகி சாரதலம்
ஒளிர்பத்தி சார னெழிலைந்

திலகமென வேபுலவர் புகழ்கோலி ஞன்மதித்
திடுதிவ்ய க்ஷேத்ரம் அருகில்
திரனும் நாரா யணச்சாமி நாயுடுமுன்
சென்மசா பல்ய மதனுல்
செனித்தனன் புட்பால அப்பாயி வேளெனும்
திரசெம் பிரபிர பலன்
செப்பரிய கன்னியாம் காமாட்சி மங்கையைத்
திருமணஞ் செய்ய அவள்தன்
கலனணிந் திடுமேனி கருசெனித் திடுமுன்னர்
கருணைமிகச் செனித்த உள்ளம்
காதல்பொறை ஈகைதயை கற்பினில் அருந்ததி
கணவனுக் கினிய ளாகிக்
காசினியெ லாம்புகழ ஈன்றனளோர் செல்வியவள்
கமலையை நிகர்ப்ப தோடு
காயா நிறங்கொண்ட திருமாலின் அருளினுல்
கலைமக ளாயுதி கர்த்துப்
பலபல விதங்களில் உளஞ்செலுத் தாமலே
பத்மினி சரித்ரம் ஒன்றைப்
பண்புறச் செய்திட்ட அன்புடன் புவிமீது
பாவைசா வித்ரி நோன்பைப்
பத்திரச கந்தமொடு சித்திரித் திந்தவள்
பைந்தொடி கிருட்ண வேணி
பாரினிற் கல்வியா யுள்மிக்கு வாழ்கெனப்
பணிவஞ ரியன்க முலையே.''

## கூஉ. ஆண்டியப்ப கவுண்டர்—நா. கு.

(20 - நா.)

தென்னூர்க்காடு மாவட்டத்தில் தூக்கணம்பாக்கம் என்னும் ஊரில் பள்ளிக்கூடம் ஒன்றுவைத்து மாணவர் பலருக்குக் கல்வி போதித்துக் கொண்டிருந்தார். செய்யுள் பாடுந் திறமையும் இவருக்கு அமைந்திருந்தது. "முத்தாலராவுத்தன் பஞ்சகம்" 'பூவாலே ஐயனூர் பஞ்சகம்'' முதலிய நூல்களை இயற்றியுள்ளார். முத்தாலராவுத்தன் பஞ்சகப்பாடல் ஒன்றை அடியிற் காண்க:

'' சீர்பூத்த சென்னியில் அணிந்தபொற் பாகையும்
திலகநுத லுங்கருணை சேர்
செங்கமல நயனமும் திகழ்நாசி யுந்துடித்
திடுசெழுங் கருமீசையும்

ஏர்பூத்த செம்பவள வாயிலொளிர் புன்னகையும்
மின்னொளிர் குழைச் செவிகளும்
ஏய்ந்தமந் தரமலை அடுத்தநின் றோள்களும்
இலங்குளுவை கோற்கை மலரும்
நார்பூத்த இடையில்கட் டிட்டசல் லடமுமண
நாறுபூந் துணைய டிகளும்
நாடியான் கண்டுதரி சிக்கவென் புரவிமேல்
நணுகிவந் தருள்நல்கு வாய்
பார்பூத்த பற்பல வளங்கள்நிறை தூக்கணும்
பாக்கம்வாழ் பரிசுத் தனே
பந்நாலும் இருநாறு மெத்நாலு வன்பரவு
முத்நாலு ராவுத் தனே.''

## கூரு. ஆதிச்சதேவன் (சிறு)

(13 - நா.)

இப்புலவருடைய முழுப்பெயர் சிறுபெருச்சியூர்க் கொடிக்கொண்டான் பெரியான் ஆதிச்சதேவன் என்பது. இவர் மாறவர்மன் சுந்தரபாண்டியனுடைய அரசியல் அதிகாரிகளுள் ஒருவனும் தேனாற்றுப்போக்கிலுள்ள நியமம் என்னும் ஊரினனுமாகிய கண்டன்உதயஞ் செய்தான் காங்கேயன் என்னும் தலைவன்மீது காங்கேயன் பிள்ளைக் கவி என்னும் நூலைப் பாடி அதற்குப் பரிசிலாகச் சாத்தனேரி என்னும் ஊரில் இறையிலிநிலங்களைப்பெற்று வாழ்ந்திருந்தார். இச்செய்தி இராமநாதபுரம் மாவட்டம் திருப்புத்தூர்த் தாலுகா பெருச்சி கோயிலில் காணப்படும் கல்வெட்டு ஒன்றால் அறியப்பெறுகின்றது.

## கூச. ஆதிநாராயண செட்டியார்—சை. ஏ.

(19 - நா.)

'' உலகெலாம் போற்றும் ஒருதனி முதலாய்
அலகில் சராசரம் அனைத்தினும் தானாய்ச்
சச்சிதா நந்த சர்வபூ ரணனை
இச்சையோ டேத்தும் இடைவிடாத் தூயோன்
இரவும் பகலும் இனிதுட னேத்தி
அரனடி யார்க்கனம் அளித்திடும் அன்பன்
கனிதநூல் யாவுங் கசடறக் கற்றுப்

பணிவிடை தொண்டர்க்குப் பலகாற் செய்வோன்
கவிமழை பொழியும் புவியுறு கந்தரம்
அவியறி விணைத்நான் டொளிர்தரு நீபம்
கலைகளாங் கடலைக் கடந்திடு கவிஞரால்
பலகாற் புகழும் பண்டிதத் திறந்தோன்
ஆகம முடிபெலாம் அன்புடன் தேர்ந்து
பாகமாய் அரியசித் தாந்தமும் பார்த்து
இம்மையின் நலனும் மறுமையின் நலனும்
செம்மையி நல்லெனச் சீயென விகழ்ந்தோன்
ஆதிநா ராயணன் அருந்தமிழ்ப் புலவோன் ''

என்று திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளையின் மாணவர் குமாரசாமி முதலியாரால் பாராட்டப் பெற்ற இவர் தென்மொழி வடமொழி இரண்டினும் வல்லவராகச் சிறந்து விளங்கினர். வடமொழியில் இருந்த ''நவரச சிந்தாமணி'' என்னும் நூலைத் தமிழில் பெயர்த்து வெளியிட்டிருக்கிறார். இந்நூல் காலக்கணிதம் பார்ப்பதற்கு உதவியாக உரைநடையில் அமைந்தது.

## கூரு. ஆதிமுத்து ரெட்டியார்-1 (ரா)
(1910)

திண்டிவனம் தாலுகா தென்ஆலப்பாக்கம் என்னும் ஊரில் பண்டகுலம் ஆதி-இராமசாமி ரெட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் பத்திராசல, ''இராமதாசு நாடகம்'' இயற்றியுள்ளார்.

'' செகமது புகழுந் தாயார் தேவர்கள் மகிழும் நேயாள்
நகைமுக வதன தூயாள் செனனவாக் குடைய வாயாள்
சகலவை போக பாக்ய சவுந்திர வநியா ளம்மன்
மகமதி மறையோர் கோத்ர மங்கையும் வருகின் றுளே ''

என்பது நாடகத்தில் ஒரு பாட்டு.

## கூசு. ஆத்திரேய கிருட்டின சாத்திரி (திரி)
(1910)

இவர் திரிசிரபுரத்தினர் என்பதைத் தவிர வேறொன்றுந் தெரியவில்லை. 'தாயுமானவர் பஞ்சரத்தினத் திருப்புகழ்' என்னும் நூல் பாடியிருக்கின்றார். பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை

யவர்களுடைய மாணவராகிய சா. இராகவாச்சாரியார் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

" துத்தமுறு சேயசைய துக்கமொடு லோசனச
லத்திநனை சூசகமும் நலேமேல்
வாடுமிரு கைத்தலமும் மாளென வுரைத்தயரும்
வாயுமுவ கைக்குவழி யெனவே
துப்புலவு மேனியுடைச் செட்டிமக ளோதிவர
அக்கினியு மேனமொடு கரமீது
ஆகவரு முக்கணம ரிசிமறைத் தக்கணமுன்
தாயெனவு ருக்கொளுநற் றுணையே"

என்பது ஒரு பாட்டின் காற்பகுதி.

'தர்மாம்பிகை வாரப்பதிகம்' என்னும் நூலையும் இவர் இயற்றியுள்ளார். திங்கட் கிழமைக்குரிய பாடலை அடியிற் காண்க:

"மங்களமா நின்துதியை மகிழ்ந்தேன் இல்லை
மதிகெட்ட மானிடரை மதித்த லைந்தேன்
தங்களிகள் தேனுண்டு நகுபண் பாடும்
தருசூழும் ஐயாற்றில் தாயே என்னை
இங்களித்துப் போற்றுமல் இகழ்ந்தால் நீ தான்
இனியெனக்கு நற்றுணையாய் இருப்பார் யாரே
திங்களிலே வந்தெனது திமை தேய்த்துந்
தீராத வல்வினைநோய் தீர்த்தா ளம்மே."

## கூஎ. ஆத்மநாத பாகவதர்

### (19 - நூ.)

இவர் திருப்பெருந்துறையில் வாழ்ந்திருந்தவர். புராணக் கதைகளையும் இதிகாசக் கதைகளையும் காலப்போக்கின் பொருட்டு மக்களுக் கூறுவதும் பாடல்களாகப் பாடி நடித்துக் காட்டுவதும் இவருக்கு வேலை. "கலியாண நாடகம்" என்னும் பெயருடைய நாடகம் ஒன்று அந்நாளில் மிகுந்த பிழையுடன் வழங்கிவந்தது. இவர் அதிலிருந்த குற்றங்குறைகளைக் களைந்து சுத்தமான பதிப்பாக அச்சிட்டு வெளிப்படுத்தினர். அந்நாடகம் இக்காலத்திற்குப் பயன்படாமற் போனபடியால் பிறகு எவரும் பதிப்பிக்க வில்லை.

"வேலுப்பிள்ளைக்குப் பெண்கேட்க
வெங்குப்பட்டருந் தோன்றினர்
வாலுப்பிள்ளைக்குப் பெண்கேட்கச்
மாதவய்யருந் தோன்றினர்
சாலுப்பிள்ளைக்குப் பெண்கேட்கச்
சவுந்தரராஜயருந் தோன்றினர்
சிலுப்பிள்ளைக்குப் பெண்கேட்கச்
சிதம்பரஜயருந் தோன்றினர்"

என்பதைப் போன்ற பாடல்கள் இதிற்பல உள்ளன.

## கூஅ. ஆநந்தசண்முக சரணாலய அடிகள்

(20 - நூ.)

இவர் தஞ்சை மாவட்டத்தில் முத்துப் பேட்டைக் கண்மையில் உள்ள தில்லைவளாகம் என்னும் ஊரில் சிவாநந்த அநுபூதி நிலையமடாலயம் என்னும் பெயரோடு மடலாயம் ஒன்று அமைத்துக்கொண்டு அதில் எழுந்தருளியிருந்தார். இலக்கண இலக்கியப் பயிற்சியில் வல்லவர். "சிவனே குகனெனச் செப்புமிந்நூலே" என்னும் உரைநடை நூலையும் வேறு சில நூல்களையும் இயற்றியுள்ளார்.

"சீர்பூத்த திருவானைக் காவரங் கமெனும்பதியைத்
தென்பாற் கொண்டே
ஏர்பூத்த வடதிசையின் எழிலாரும் வெள்ளறையும்
இலங்கா நிற்கப்
பார்பூத்த நெய்க்குப்பை யெனுநகருக் கதிபதியான்
பண்பு மிக்கான்
வார்பூத்த தனமனையோ டில்லறநல் லறமாக
மருவி வாழ்வோன்"

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## கூகூ. ஆரோக்கியசாமி பிள்ளை—அமுதகவி

(20 - நூ.)

இவர் கோலார் பொன்வயலில் இருந்த சித்திரகவி நாவலராகிய செ. துரைசாமிப் பிள்ளை என்பவரிடம் கல்வி கற்றார். "கமலோற்பவக் காருண்ய தியான பசனை" என்னும் இசைப்

பாடல் நூல் ஒன்றை இயற்றியுள்ளார். மாணிக்கமாலை என்னும் நூலுக்கு இவர் பாடிய சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்றை அடியிற்காண்க. இவருடைய பெயருக்கு முன்னால் அமுதகவி என்னும் சிறப்புச்சொல் ஒன்றுங் காணப்பெறுகிறது.

"அருளின்பம் ஏற்றுமெம நமலக் கோமான்
அருட்கமல அடிபோற்றி அவனி மாக்கள்
மருளின்ப மாசுபிணி மனநோய் நீர்க்கும்
மகிமைநிறை ஆரோக்ய மிர்தா யின்மேல்
பொருளின்பம் ஓங்கசநக் கவியைப் பாடிப்
புகழ்பவரு மாணிக்க மாலை யென்றோர்
தெருளின்ப நூலளித்நான் அனைவர் வாழ்த்தும்
சித்ரகவி பொன்னுச்சாமி நிரன் மாதோ."

## ௧௦௦. ஆலிம் புலவர் (காயல்பட்டினம்)

பதினெட்டாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் காயற்பட்டினத்தில் பெரும்புலவராக (மகாவித்துவான்) விளங்கியிருந்தவர். இவருடைய முழுப்பெயர் செய்கு அப்துல் காதிறு நயினர் லெப்பை ஆலிம்புலவர் என்பது. இவர் பல நூல்களும் இசைப் பாடல்களும் பாடியுள்ளார்.

பல்லவி

நம்பினேன் பையல் ஏழை—நாளும்
செம்பொன்மாமலர்த் தாளை

அநுபல்லவி

இன்பஞ்சேர் மக்கம் வாழும்—எங்கும்
இசையுங் கீர்த்தியெந் நாளும் பூவில்
இம்மை மறுமையின் முகமது நபியேஉமை—நம்பி

என்பது இவருடைய இசைப்பாட்டு ஒன்றின் தொடக்கம்.

## ௧௦௧. ஆலிம் சாகிபு (தென்காசி)
(1914)

இவர் பாண்டிவள நாட்டில் தென்காசியில் இருந்தவர். 'மணிமுத்து மாலை' என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார்.

“ ஆதிஅந்த முங்கடந்த அஃதைப் போற்றி
அகண்டபரி பூரணத்தின் அருளைப் போற்றி
சோதிகலி மாவதுவின் சுடரைப் போற்றி
சொருபமாய் வந்ததிரு நருளைப் போற்றி
நீதியுள்ள சரகதுவின் எரியைப் போற்றி
நேரிக்கும் இருபானி னறிவைப் போற்றி
காதிசெய் கப்துல்காத ருெலியைப் போற்றி
கற்பித்த பிதாஇருவைப் போற்றி னேனே ”

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கO௨. ஆழ்வார் பிள்ளை—நா.

இவர் வேடநத்தம் என்னும் ஊரில் இருந்தவர். ஐயாச்சாமிப் பிள்ளை என்பவருடைய வேண்டுகோளுக்கிணங்கி இவர், வைப்பாறு என்னும் ஊரில் எழுந்தருளிய, வில்லாயுதமுடைய ஐயனர் பேரில் பதிகம் ஒன்று பாடியுள்ளார். அப்பதிகத்தின்பேர் “வில்லாயுதமுடைய ஐயனர் பதிகம்” என்பது. இதற்குக் காட்டு நாயக்கன்பட்டி சுப்பிரமணியக் கவிராயர், வேடநத்தம் குமாரசாமியா பிள்ளை, முத்துசாமியா பிள்ளை என்பவர்கள் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

“ உனக்கே திருத்தொண்டு செய்தடி பேணி யொழுகவெந்நன்
மனக்கோ தகல அருள்புரி வாய்திரு வைப்பநகர்
தனக்கே திருப்பதி யாயுவந்தாய்நடந் தோள்நனிலே
புனற்காவித் தாரணி வில்லாயுதமுடைப் பூசுரனே ”

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கOௗ. ஆளவந்தார்—ரா.

மதுரை மாவட்டம் திருமங்கலம் தாலுகா கள்ளிக்குடியைச் சேர்ந்த வடக்கம்பட்டி என்னும் ஊரில் இராமசாமி ரெட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் தக்க அறிஞர்களிடத்திற் கல்வி கற்றுச் சிறந்த புலவராகித் திகழ்ந்தார். அரங்கச்சிலேடை வெண்பா, கூடற்கலம்பகம், எழுகூற்றிருக்கை சூடிக்கொடுத்தாள் பதிகம், அழகர் சோடசகலாமாலை, இயதீந்திர மாலை என்னும் நூல்களை இவர் இயற்றியுள்ளார். திருவில்லிபுத்தூர் அப்புவையங்கார், அநுமந்தம்பட்டி சீனிவாசையங்கார்,

மதுரை அரங்கசாமி நாயுடு, சேற்றூர் இராமகிருட்டிணநாவலர், இராமநுச நாவலர், எதிராசாச்சாரியர், குண்டலக்குத்தூர் வேங்கட ராமாநுசர், அழகிய மணவாள இராமாநுச ஏகாங்கி சுவாமிகள், சங்குமுத்துக் கவிராயர் என்போர் இந்நாலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். கூடற்கலம்பகப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

“கடல்கடைந் தமுதம் ஈந்தவர் காமக்
கடல்கடைந் தமுதமீந் திலர்வெங்
கதிர்மறைத் திரவுதந்தவ ரந்தன்
கதிர்மறைத் திரவு தந்திலர்நெய்க்
குடங்களைத் தழுவித் துய்த்தவர் கொங்கைக்
குடங்களைத் தழுவித்துய்த் திலரோர்
கோதைதாழ் குழலை முடிந்தவர் சரிந்த
கோதைதாழ் குழன்முடித் திலர்சென்
மடமறுமானைக் கொன்றவர் நாண
மடமுறுமானைக் கொன்றிலர் கான்
வழங்குமாவாய் பிளந்தவரலர்நாய்
வழங்குமா வாய்பிளந் திலர்சிர்
அடைசிவன் சிலையை ஒடித்தவர் மதன்போர்
அடைசிவன் சிலை ஒடித்திலரால்
அணிதிகழ் கூடல் அழகரென் றிடல்பேர்
அழகது செயற்குநன் றலவே.”

இப்பாடலைப் போலவே பிற பாடல்களும் நயமுடையனவாகத் திகழ்கின்றன.

## ௧0௪. ஆறுமுக உபாத்தியாயர்—மு.

இவர் ஈழவள நாட்டில் யாழ்ப்பாணம் வட்டுநகரில் தமிழ் வித்தியாசாலை உபாத்தியாயராக இருந்தவர். இவர் சிறுத் தொண்ட நாயனார் புராணம் என்னும் நூலை இயற்றியுள்ளார்.

“சித்தம்பெரிய சிறுத்தொண்டர் எங்குளரோ
அன்புடைய தொண்டர் வருவரகத் தெழுந்தருளும்
ஆனொருவ ரில்லா மனைபுகுதோம் அம்மையே நாம்
இக்கணமே தொண்டர் வருவரகத் தெழுந்தருளும்
ஈங்கிருக்கக் கடனுமில்லை ஆத்தியின்கீழ் நாமிருப்போம்”

என்பது நூலின் தொடக்கம்.

## க0ரு. ஆறுமுக உபாத்தியாயர்—ரா.

(19 - நூ.)

இவர் தேவபுரம் என்னும் ஊரில் செங்குந்த குலத்தில் இராமசாமி முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றி இலக்கண இலக்கியங் கற்றுப் புலமையடைந்தார். பள்ளிக் கூடம் ஒன்று ஏற்படுத்திப் பிள்ளைகள் பலருக்குக் கல்வி கற்பித்துக் கொண்டிருந்தபடியால் உபாத்தியாயர் என்னும் பெயரும் இவருக்கு உண்டாயிற்று. இவரைக் குறித்து மற்றொரு புலவர்: "மாகடல் உடைசூழ் உலகினில் சிறந்த வளஞ் செழிக்கின்ற, தேவாதூர் மருவு செங்குந்தர் குலத்தினில் உதித்த மணியென வாலறிவுள்ள, தேகனும் இராமசாமி மன்னனுக்கோர் சேயென யாவரும் புகழும் திண்புயன் ஆறுமுகக் கவிவாணன்" என்று கூறியுள்ளார். இவர் வடிவுடையம்மை பஞ்சரத்தினம் முதலிய நூல்களைப் பாடியுள்ளார். பாடல் ஒன்றை அடியிற் காண்க.

"நீர்கொண்ட மேகத்தை நிகர்கொண்ட பொற்குழலும்
நித்திலச் சுட்டி நுதலும்
நிலைகொண்ட சுடர்கவச குண்டலச் செவிகளும்
நீடுகரு ணைக்கண் களும்
ஏர்கொண்ட வயிரமூக் குத்தியொளிர் நாசியும்
இளநகை புரிந்த வாயும்
இனியவர தாபயமும் உனிநட மருகுலம்
ஏந்துசெம் பதும கரமும்
தார்கொண்ட மார்பமும் இடையிலொட் யாணமொடு
தாங்குகன காம்பரமு நல்
நமர நூ புரசரண யுகளமுங் கண்டடிமை
நரிசிப்ப தெந்த நாளோ
பேர்கொண்ட சுகனசன சேவித அலங்கார
பிசாட் சரப்ர மேயி
பெற்றிபெறும் உத்தமர்கள் நத்தருவி சித்ர நிறை
பெற்றதிரு வொற்றி வடிவே."

## க0சு. ஆறுமுக உபாத்தியாயர் (கரந்தை)

(19 - நூ)

இவர் சோழவள நாட்டில் தஞ்சைமா நகரத்தில் கருந்திட்டைக் குடியில் பள்ளிக்கூடம் ஒன்று அமைத்துப் பிள்ளைகளுக்குக்

கல்வி கற்பித்துக்கொண் டிருந்தார். இவருக்குத் திடீரென்று கொடிய நோய் ஒன்று உண்டாகியது. அந்நோய் நீங்கும் பொருட்டு இவர் பலவகையான மருந்துகளைச் சாப்பிட்டுப் பார்த்தார். எவ்வளவோ மருந்துகளைச் சாப்பிட்டுப் பார்த்தும் இவருக்கு அந்நோய் சிறிதும் நீங்கவில்லை.

ஒருநாள் இவர் பெரியவர் ஒருவரைக் கண்டார். தம்முடைய நோயின் கொடுமையை அவருக்கியம்பினர். அவர் இவரைப் பார்த்து, "நீ அறுமுகப் பரமனைப் போற்றி வழிபடுவாயாகில் உனக்குள்ள இந்த நோய் விரைவில் நீங்கிக் குணம்பெறுவாய்" என்று கூறினர்.

இவர் அன்று முதல் அறுமுகப் பெருமானைப் போற்றி வழி படத் தொடங்கினர். காலையிலும் மாலையிலும் நாள் தவருமல் போற்றி வழிபட்டார். நோய் சிறிதுந் தணிந்திலது. ஒருநாள் துறவியொருவர் இவருடைய கனவில் தோன்றினர். அவ்வாறு தோன்றியவர் தண்டபாணிக்கடவுளே. அவர் இவரைப் பார்த்து "அன்பனே! வருந்தாதே. நம்மீது இசைப்பாடல் பல இயற்றுவாயானல் உன்னைப் பிடித்துள்ள நோய் நீங்கிக் குணம் பெறுவாய்" என்று இயம்பினர். உடனே இவர் விழித்துக்கொண்டார். கனவில் தோன்றியவர் பழநியில் எழுந்தருளிய தண்டபாணிக் கடவுளே என்று ஐயமறத்தெரிந்தார். அன்று முதல் இசைப் பாடல்கள் பலவற்றை இயற்றி முருகக்கடவுளின் திரு முன்பு அன்புப் பெருக்கோடு பாடத் தொடங்கினர். அன்று முதல் இவரைப் பற்றியிருந்த நோய் நீங்கத் தொடங்கியது. இவர் விரைவில் குணம்பெற்ருர்.

இவர் இயற்றிய பாடல்கள், "சிவசுப்பிரமணிய சுவாமி கீர்த்தனை" என்னும் பெயரோடு அச்சாகி வெளிவந்துள்ளது. அதனைப் பாராட்டி ஐயாச்சாமி முனிவர் கும்பகோணம் சீனிவாச ஐயர், நாலு கவிப்பெருமாள் இராமசாமி ஐயங்கார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

இராகம்—மோகனம்—கலியாணி—சம்பைதாளம்

**பல்லவி**

**"கரந்தையம்பதிக் கந்தனே வந்து**
**காத்து ரட்சியும் எந்தனே**

அநுபல்லவி

திருந்தும் பன்னிரு தோளனே—வள்ளி
 தெய்வயானை மணாளனே (கரந்தை)

சரணங்கள்

குமரகுருபர நாதனே—இன்பம்
 கொடுக்கும் மயிலேறும் பாதனே
அமரர் முனிவருந் தினந் தொழும்
 ஆதியே பரஞ்சோதியே"

என்பது இசைப்பாட்டு.

## கoஎ. ஆறுமுக ஞானதேசிகர் (சுய)

"பசுபதி யான பயறணி மகாலிங்
கேசன் வாழும் கேதமில் உடையார்
பாளைய மென்னும் பண்பெழு நகரில்
மரபு விளங்க மகேசனை வழிபடும்
நாட்டிய தர்ம நலம்பெறச் செய்யும்
கார்காத்த வம்ச கற்பகத் தருவென
அருண்மிகு வள்ளலாய் அவதரித் தவனும்
திருமால் மருகன் திருப்பெயர் வாய்ந்த
ஆறுமுகமென் றமர்குரு பரனே"

என்று பாராட்டப் பெற்ற இவர் உடையார் பாளையத்தில் கார்காத்த வேளாளர் குலத்தில் தோன்றினர். திருமழபாடி சுயம் பிரகாச ஞானதேசிகரிடம் அருளுரை பெற்றார். வேதாந்த மெய்யறிவாளராக விளங்கிய இவர் கைவல்ய நவநீதத்திற்கு உரையெழுதியுள்ளார்.

## கoஅ. ஆறுமுக நாயகர் (சென்னை)

"..........................................
பாகிய நெறிசெலாப் பளகறு சீலன்
பக்தியின் மிக்கோன் பணிமொழியுடையோன்
நற்றிறந் தவரை நாடும் நடையோன்
நன்னூல் உணர்ந்தோர் நன்குவந் தென்னும்
பன்னூல் உணர்ந்தோன் பதியியல் அறிந்தோன்
அந்தாதி யில்லான் அருள்பெற் றோங்கன்
அந்தமில் பேற்றை அடைந்திடு மாறு

கலித்துறை யொழியக் கவினுறக் கட்டளைக்
கலித்துறை யாலந் தாதி கழறினன்
மாறு முகங்கொளா மாட்சிமை வாய்ந்த
ஆறு முகனெனும் ஆன்றநா வலனே ''

என்று வல்லி. ப. தெய்வநாயக முதலியாரால் பாராட்டப் பெற்ற இவர் சென்னை திருவல்லிக் கேணியில் அரிசி மண்டியொன்று நடத்திக்கொண்டிருந்தார். தமிழறிவும் தக்காங்கமையப்பெற்ற இவர் 'மயிலைபாதி வான்மியூர்பாதி கலித்துறையந்தாதி' என்னும் நூலை இயற்றியுள்ளார். சிவாநந்த சாகரயோகீசுவரர், கோ. வடிவேலுச் செட்டியார் தி. முத்துராம பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

'' ஏரெழுத் தைந்துஞ் செறிந்தொ ருருவமர்ந் தேயருளால்
பேரெழுத் தைந்நா மயிலாபுரிநிதம் பேணி நின்றல்
நாரெழுத் துந்தொண்டு நன்னெஞ்ச மேசெயனுடு வமே
பாரெழுத் தும்வினைபற்று தவனருள் பற்றுதற் கே ''

என்பது நூலின் முதற்பாட்டு.

இவர் சர்வசித்தி விநாயகர்மீது இரட்டைமணிமாலை என்னும் நூலும் பாடியுள்ளார். சிவாநந்த சாகரயோகீசுரர், கோ. வடிவேலுச் செட்டியார், நெல்லி அப்பாச்சாமி உடையார், வல்லி ப. தெய்வநாயக முதலியார் முதலியோர் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

'' பொன்பூத்த கொன்றை புரிசடையில் வைத்துகந்து
மின்பூத்த கொம்பேந்தும் வேழமுகன்—நன்பூத்த
தாட்டா மரையில் தயங்குமறைத் தேனி னங்கட்கு
ஊட்டியருள் ஒங்கவைத்தான் உன் ''

என்பது நூலின் முதற் பாட்டு.

## கoகூ. ஆறுமுக நாயகர். கொ. வீ.

(20 - நூ.)

இவர் சென்னை மாநகரில் வாழ்ந்திருந்தவர். சேஷாத்திரி கவிராயர் என்பவரிடங் கல்வி கற்றவர். கந்தர் அகவல், கந்தர் வெண்பாப் பதிகம், கந்தசாமி பஞ்சரத்தினம் ஆகிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

" தேவரெலாந் தொழுகயிலை மலையுடையான்
திருக்கண்ணின் பொறியால் உற்றுய்
காவிருவோர்காப்பக் கழுநீரின்
பதியுறையுங் கந்தா கற்ற
நாவலருக் கருள்வரதா நான்மறையின்
முடிவதனை நல்கி நின்றேய்
மூவர்தம வினைபுரிந்தோய் முதுசென்னைப்
பதிமேவு முருக வேளே "

என்பது பஞ்சரத்தினத்தில் ஒரு பாட்டு.

## கக௦. ஆறுமுகப் பண்டாரத்தார்—சு.
## (20 - நூ.)

இவர் பழநிமலையில் வாழ்ந்திருந்தவர். கந்த புராணம் முதலிய நூல்களை நன்கு கற்றவர். இவர் கோயமுத்தூர் மாவட்டம் சாமளாபுரம் கிராமம் வேலாயுதம் பாளையத்தில் உள்ள கொங்கணகிரி முருகக்கடவுள்மீது வண்ணத் திருப்புகழ், பஞ்சரத்தினயமகமாலை முதலிய நூல்களைப் பாடியுள்ளார்.

" சத்தான புந்தி குன்றச் சித்தார வித்தை தங்கித்
தத்தாடு விக்குமந்த்ரத் தனமானர்
தற்பார முற்ற கொங்கைக் கொப்பே தெனக் கிரங்கிச்
சற்போத மற்று முங்கிக் கனகாம
உத்தேசம் வைத்து நங்கைக் குச்சாடனந்தை வந்தித்
துற்கோலம் வெட்கிமங்கித் திரியாமல்
உற்றே உனக்கு கந்த பொற்பே வனற்றவங்கட்
கொட்டாய்ச் சொலிக்க நன்றைப் புரிவாயே
கொத்தா மரக்கர் கும்புக் கொட்டார முற்று நொங்கிக்
குப்பாசம் விட்டொடுங்கச் சுடுவோனே
குற்றேவ லுற்ற தொண்டர்க் கற்றேடி முற்பவங்கட்
கொட்பா வியற்று கந்தக் குமரேசா
புத்தேளிர் கட்கிரங்கிச் சிற்சேம முத்திதந்தப்
பொற்பாத வந்த சுந்தரப் புகழ்வேலா
புக்கேர் கிரிக்கண்வந் தத்தற்சோதி மிக்கசந்தப்
பொற்றுள் சிறக் குநின்ற பெருமானே "

என்பது வண்ணத் திருப்புகழில் ஒருபாட்டு. பல பாடல்கள் நயஞ்செறிந்து இன்பம் பயக்கின்றன.

## கககூ. ஆறுமுகப் புலவர்—க.
(1910)

இவருடைய பெயருக்கு முன்னுல் இலேப்புள்ளி மஞ்சிக குல திலகனுகிய கறுப்பன் குமாரன் என்னும் அடைச்சொற்கள் காணப்பெறுகின்றன. இவர், "சண்முகக் கடவுள் அக்கரமாலே" என்னும் நூலேப் பாடியுள்ளார். கோவிந்தப்பணிக்கர், இராவுண்ணிப்பணிக்கர் என்போர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" மணமுலவு துங்கசர வணபவனை மாயவன்
மருகனைஎம் முருக வேளை
மாதுமை பயந்தகுரு நாதனைக் கிரவுஞ்ச
மலேதுளேந் துளவே லனைப்
பணம் உலவும் உரககங் கணதரனை மகிழ்வித்த
பாலனைச் சீல குணனைப்
பச்சைமயில் வாகனனை விச்சைதரு சண்முகப்
பைந்தொடைக் கந்தனைச் சீர்க்
குணமுலவு வள்ளிதோள் புணருமா றிருபுயக்
குன்றனைப் பின்றியகரும்
கூந்தலந் தெய்வானை காந்தனைச் செந்தனைக்
குன்றுதொறு நின்ற குகனை
ரணமுலவு சூரர்தம் கணமொடுக் கியதின
ரட்சகனை மெச்சி மொழிய
ராவுணி யெனுங் குரவர் சேவடியு மெங்களே
ரம்பனையும் நம்ப வருமே "

என்பது பதிகத்தின் காப்புப்பாடல்.

## ககஉ. ஆறுமுக முதலியார்—பு.

தொண்டைவள நாட்டில் புங்கத்தூரில் துளுவவேளாளர் குலத்தில் தோன்றினர். இவருடைய தந்தையார் பெயர் வீராச்சாமிமுதலியார். இவருடைய வரலாற்றுக் குறிப்புக்களைப் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார்,

" தொண்டைநன் னுட்டுத் துளுவவே ளாளன்
கானளாம் பூந்துணர் வானளாம் பொதும்பர்
பொன்னெயில் பொதிந்த நன்னர்சால் கரும்படாம்
புகரற நிகர்க்கும் நகைமையி னேங்கிய

புங்கத் தூரிடைத் தங்கும் வாழ்க்கையன்
பன்னரு முத்தமிழ் நன்னய முணர்ந்தோர்க்
கார வன்பினன் விராச் சாமிவேள்
அருந்தவப் பேற்ருல் வரும்புத் திரன்"

என்று குறிப்பிடுகிருர். நன்கு கல்வி பயின்று புலமைத்திறம் அமையப்பெற்ற இவர், கச்சியப்ப முனிவர் இயற்றிய விநாயக புராணத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு சுருக்கமான உரைநடையும் பாட்டுமாக "விநாயக மான்மியசாரம்" என்னும் நூல் இயற்றியுள்ளார். இந்நூல் ஆங்கிலம் 1877 ஆம் ஆண்டில் பூண்டி அரங்கநாத முதலியார் அவாகளுடைய முயற்சியால் அச்சிற் பதிப்பித்து வெளியிடப்பட்டது.

"ஆதிசிவ னிடந்துணர்ந்த அயனுல் தேர்
வியாத முனி அன்பி னேடும்
ஓதுகனு பந்தியமான் மியமுல கோர்
உய்யவா ரியத்து ரைத்த
மாதவர்பார்க் கவர்கமல மலரடியு
மற்றதைவண் டமிழாற் சொன்ன
திநிலா வடுதுறையெங் கச்சியப்ப
முனிபதமுஞ் சென்னி சேர்ப்பாம்"

என்பது. இவர் முதல்நூல் ஆசிரியர்கள்மீது வணக்கமாகப் பாடிய பாடலாகும் புரசை அட்டாவதானஞ் சபாபதி முதலியார், நு. சந்திரசேகர முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ககரு. ஆறுமுக முதலியார் (சென்னை)

(20 - நூ)

திருத்துருத்தி இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகளின் வழி முறையில்வந்த, ஈசூர் சச்சிதாநந்த அடிகளாரிடம்வேதாந்த நூல்கள் பலவற்றை நன்கு கற்றமையானே இவர் சிறந்த புலமையெய்தப்பெற்று விளங்கினர். சச்சிதாநந்த அடிகளாருக்கு எழுத்தாளராக அமைந்து ஆசிரியர் கூறுபவைகளை யெல்லாம் எழுதுபவராகவும் விளங்கினர். செய்யுள் பாடுந்திறமும் அமையப்பெற்ற இவர் 'திருமுருகன் அருட்பாமாலை' என்னும் நூலுக்கு,

" இருக்காதி மறைமுடிவின் அந்தரங்கத்
தியலுணர்ந்து எளிதில் யாரும்
திருக்கடைய மருதகிரிக் குகனருளால்
திருமுருகன் அருட்பா சொற்குன்
மருக்குலவுங் கோயிலூர் மரபில்வரு
செல்லப்ப மகிபன் பொற்குள்
ஒருக்காலும் உளந்தொருவாச் சன்முகா
னந்தமுனி ஒருவன் மாதோ "

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்.

## கககச. ஆறுமுகம் பிள்ளை—அ.
(1912)

இவர் முசிரி என்னும் ஊரில் அப்பாவுப் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். 'முசிரி விசுவேசர் மாலை' 'விசாலாட்சியம்மை பதிகம்' 'ஆறுமுகக் கடவுள் பதிகம்' ஆகிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். சிரங்கம் குரு சுப்பிரமணிய ஐயர், அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், முசிரி அப்பாய் நாயுடு, அ. மாணிக்கம்பிள்ளை, பண்டிதை மனோன்மணியம்மாள் ஆகியோர் இந்நாலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" பாவலர் புகழும் நாவலூர்ப் புலவன்
பரவைதன் புலவிதீர்த் தருள
ஆவலோ டுரைத்த ஏவல்கொண் டாரூர்
அணிமறு கிரவினில் தூது
போவது குறித்த தேவனே என்பால்
பூமகள் அருள்விழி நோக்கம்
மேவுறச் செய்வ தறிதுகொல் முசிரி
விமலனே விசுவநா யகனே "

என்பது விசுவேச மாலையில் ஒருபாட்டு.

## கககரு. ஆறுமுகம் பிள்ளை—மு.
(1883)

கொங்குவள நாட்டில் சோழிய பாக்கு என்னும் ஊரில் முருகப்ப பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். நல்லியற்பள்ளி உபாத்தியாயர் ஆறுமுகம் பிள்ளை என்பவரிடங்

கல்வி கற்றுத் தேறினர். செய்யுள் செய்யுந்திறம் இவருக்கு நன்கு அமைந்திருந்தது. இவருடைய வெண்பா ஒன்றை அடியிற் காண்க.

"மயில்முருகன் மீது மலைப்பதிகம் உய்ப்பத்
துயிர்வருக்க மாலையையும் ஓர்ந்து—நயமுடனே
ஆசில் பழநியப்ப ஐயர்சொல அச்சிட்டான்
வீசுபுகழ் வீரப்ப வேள்."

## கககரு. ஆனைகட்டி முனிசாமி முதலியார்

(19 - நூ.)

வடார்க்காடு மாவட்டத்தில் ஆரணி என்னும் ஊரில் ஆனைகட்டி இராமசாமி முதலியார் என்பவருக்கு முதற் புதல்வராகத் தோன்றியவர். ஆனைகட்டி அவல்தார் முனியப்ப முதலியார் என்பவருக்கு வளர்ப்புப் புதல்வராக அமைந்தவர். தமிழ் நூல்களை நன்கு கற்றுத் தேறித் தமிழ்ப்பெரும் புலவராக விளங்கியவர். சந்தம், வண்ணம் முதலிய செய்யுட்கள் பாடுவதில் வல்லவர். முருகனை உளமுருகப் பாடிப் பாடிப் போற்றிய பண்பு மிக்கவர். இவர் பாடியுள்ள வணக்கச் செய்யுட்கள் சிறந்த பொருட் செறிவும் நடைமிடுக்கும் உடையன. படிப்போர் அருணகிரியார் பாடலோ என மதிக்கத்தக்க தகுதியுடையன. திருக்கயிலாய பரம்பரைத் திருக்கோவலூர் ஆதீனம், சாகீர் ஆரணி திருமலை சமுத்திரம் ஞானியார் மடாலயத்தில் திருக்கோயில் கொண்டருளிய முருகனை நாளும் பாடிப் பரவியுள்ளார். மேற்படி மடாலயத்து நான்காவது குருமூர்த்திகளாகிய ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய தேசிக மூர்த்திகள்பால் தீட்சை பெற்றவர். இவர், 'பொருள் விளக்க நிகண்டு' என்னும் நூலை இயற்றியுள்ளார். ஆரணி போர்டு உயர் கலாசாலையில் முதன்மைத் தமிழ்ப் புலவராக விளங்கியிருந்து 1940 ஆம் ஆண்டிற் காலஞ்சென்ற சிவ. ஆ. மாசிலாமணி முதலியார் என்பவர் இவருடைய அருமைத் திருமகனவர், சிறந்த பாவாணராகவும் செந்தமிழ்ப் புலவராகவும் விளங்கும் பாலகவி ஆ. மா. சிவஞான முதலியார் என்பவர் இவருடைய பெயரர். இவர் இயற்றிய பொருள் விளக்க நிகண்டுச் செய்யுள் ஒன்றை அடியிற் காண்க.

"குக்குடம் பறவை நாகம் கோழியு மிருபே ராகும்
குக்கலே இரும லுச்சி குகைமுழை முனிவர் வாசம்
அக்கரம் லிபிநம் ஓர்நோய் அக்காரம் குளமே யாடை
எக்கல்போர் குவையே யூர்தி யேறலே சொரிதல் எட்டல்."

## ௧௧௭. இரகீம் கான் சாயபு—பா.

(20 - நூ.)

தூத்துக்குடி என வழங்குந் திருமந்திர நகரில் பாக்கர்கான் சாயபு என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் தக்கவாறு தமிழறிவு பெற்று, ஆங்கிலத்திலும் நல்ல பயிற்சியுடையவராய் விளங்கினர். தூத்துக்குடி முன்சிபு கோர்ட்டில் அலுவலில் இருந்தார். கலம்பகம் ஒன்றும் இவர் இயற்றினர். 'திருமக்காப் பள்ளு' என்னும் நூலை நன்கு ஆராய்ந்து அச்சிட்டு வெளியாக்கினர், இவரைப் பற்றிய சில செய்திகள் கீழ் வருஞ் சில அடிகளினும் பெறப்படுகின்றன.

"பொழின்மிகு நன்னகர்ப் புதூர்ப்பதி தனிலருட்
டொழின்மிகுங் குத் தூபாந் தோன்றலைப் போற்றி
கனபுகழ் கொண்ட கலம்பகம் ஒன்றை
மனமகிழ்ந் துரைத்த மாவறி வுடையோன்
ஆரியகலைபல அறிந்தோன் இன்னும்
சீரிய செந்தமிழ் தெளிவுறத் தேர்ந்தோன்
தீன்குலத் தவருட் டிலகமா யுதித்தோன்
நான்கு கவியும் நன்குற நவில்வோன்"

திருமக்காப் பள்ளின் முகப்பில் சிறப்புப்பாயிரம் பாடிய இவர்,

"தேனேங்க இன்னிசைக ளார்க்கும்பல
கனியுதவுஞ் சிறப்புந் தோன்றி
வானேங்கு பொழில் பருதா தனிற்சிறக்கு
முகியித்தீன் வலிகள் கோமான்
ஊனேங்கு மோர்கள்வ னறிவடைய
அருளினரென் னுளத்தும் ஞானம்
தானேங்கும் கதிபெறவே மலரடிகள்
சிரமிசையான் தாங்கினனே"

என்று குரு வணக்கப்பாடல் பாடியுள்ளார். பாடல்கள் விளக்கமாக அமைந்திருத்தலோடு பொருட் செறிவும் உடையனவாகத் திகழ்கின்றன.

## ௧௧௮. இரத்தினசபாபதி செட்டியார் (பழவை)

“ குஞ்சரக் கையின் கோட்டுறு தாழை
எஞ்சலி லாமக ரந்த மிர்ங்கடல்
அலையுடன் சேர்ந்தளா யயலில் வாழைக்
குலைநிகர் நெற்குலை கொண்டார் வயலில்
வாய்ந்து களமர் வடிவிற் படிந்தே
ஏய்ந்த மணந்தரும் இயல்பினைக் காட்டித்
திகழ்தரு பழவைத் தென்பதிக் குறிஞ்சி
மகரிஷி கோத்திரம் மாநிலம் பெருகற்
கிலகுழன் றுங்குடி என்றும் வைசிய
குலம்வரு வள்ளல் குலமணி குணமணி
கச்சாலைச் செட்டியார் கற்புக்கரசியார்
மெச்சிடு சிவக்கியா னம்மையார் மேனாள்
செய்தவந் திரண்டு வையகம் வந்தோன்
தெய்வ பத்தியும் சீலமும் வாய்மையும்
இரக்கமும் ஏனைய நற்குணம் யாவும்
இருந்தற் கேற்ற இயல்பினன் நற்றமிழ்
ஆங்கிலங் கற்ற பேரறி வாளன்
ஓங்கிய பெரியோர்க் குற்றநன் னேயன்
..................................................என்று”

பிரம்பை பொன்னுவேற் பிள்ளையால் இவ்வாறு பாராட்டப் பெற்ற இவர் தொண்டை வளநாட்டில் பழவேற்காடு என்னும் ஊரில் வைசிய குலத்தில் கச்சாலைச் செட்டியார் என்பவருக்கும் சிவக்கியானம்மையார் என்பவருக்கும் புதல்வராகத் தோன்றிக் கல்வியை நன்கு கற்றுச் சிறந்த தமிழறிஞராகவும், சென்னை வைசிய சங்கத் தலைவராகவும், கந்தசாமி கோயில் தருமத் தலைவராகவும், உமாமகேசுரர் தமிழ் வேதபாராயணச் சபைத் தலைவராகவும் மற்றும் பல திருக்கோயில்களின் பேரறச் செயலாளராகவும் அமர்ந்து நற்பணிகள் செய்தார்.

“அறுபத்து மூவர் இரட்டைமணிமாலை” என்னும் நூல் ஒன்று இவரால் பாடப் பெற்றிருக்கிறது. நூலின் பாடல் ஒன்றை அடியிற் காண்க.

“ சாற்றுந் தலங்கட்கு வெண்பாக்கள் சாற்றிய ஐயடிகள்
போற்றுங் கணம்புல் விளக்கின் முடிதரு புண்ணியர் சீர்
மாற்றமிற் கோவை தருகாரி நாயனார் மன்புரந்து
வேற்றுமை நீக்கும் நெடுமாறர் பொன்னடி வேண்டுவமே”

## கககூ. இரத்தினசபாபதிப் படையாட்சி
(20 - நூ.)

இவர் வில்லியனூருக்கு அடுத்த அருமாதிப்பிள்ளை சாவடி என்னும் ஊரில் இருந்தவர். பழங்கால முறைப்படி நாடக நூல்களை இயற்ற அறிந்திருந்த இவர், "மணிக்கிரீவன் சலக் கிரீடை நாடகம்" என்னும் நூலை இயற்றியுள்ளார். கடவுள் வணக்கப் பாடலை அடியிற் காண்க.

"சீரார் கைலைச் சிவனுமையும் செவ் வேள்வள்ளி தெய்வானை
காரார் மாயன் இந்திரையும் கமலன் வானி பலதேவர்
ஏரார் அடியைப் பணிந்தேற்றி எங்கும் புகழும் மணிக்ரீவன்
ஓரா லீலை தனையுலகில் தொடர்நா டகமாய்ப் பாடுவனே"

## கஉ௦. இரத்தின சபாபதி முதலியார்—மு.
(1891)

இவர் சென்னைக்கு அண்மையில் உள்ள ஆலந்தூரில் ஆயுள் வேதியர் முத்துசாமி முதலியார்க்கு அருமைப் புதல்வராகத் தோன்றியவர். மருத்துவ முறைகளில் தேர்ச்சி பெற்றிருந்த தோடு தமிழ்ப் புலமையிலும் சிறந்து விளங்கினர். இவர் "துரோபதை துகிலுரிதல் நாடகம்" பாடியுள்ளார். திருஎவ்வுளூர் இராமசாமி செட்டியாரும், அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியாரும் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

வீமன் துரியோதனனைப் பார்த்து விளம்புவது,

"எங்கள்முன் நிற்கும் அந்த எழில்துரோ பதையைத் தொட்டுப்
பங்கமே செய்யின் நீரிப் பாரினில் விகர்ணனைத் தான்
துங்கவே விட்டு மற்றைத் தொண்ணூற் றுன் பதுபேர் தம்மைச்
சங்கடப் படவே யாவி சங்கரிப் பேன்நான் வாரீர்.

## கஉக. இரத்தினவேலு முதலியார்—வேலூர்

தொண்டை வளநாட்டில் இராயவேலூரில் இருந்த இவர் ஆங்கிலத்தை அறிந்திருந்ததோடு தமிழையும் நன்கு உணர்ந்து செய்யுள் பாடுந் திறனடைந்து விளங்கினர். அருணசலகுரு

என்பவர் பிழையற ஆராய்ந்து வெளியிட்ட ஙிசானந்த போதம் என்னும் நாலுக்கு,

"உலகிலோர் சரநூலின் உண்மையெல்லாம்
உணர்ந்த நன்மேல் நிசானந்த போதந் தன்னை
நலம்பெறவே அடைவரெனச் சித்தர் சொன்ன
நன்னூலை ஆராய்ந்து நயப்பினோடு
திலதமணி முகம் போலத் தெளிவா யார்க்கும்
தெரிந்திடவே வெளியிட்டான் திருத்த மாகப்
பலகலைகள் உணர்ந்துபண் டிதனு யிந்தப்
பாரிலரு ணுசலப்பேர் படைத்தா னன்றே"

என்னும் பாடலோடு இன்னெரு பாடலையுஞ் சிறப்புப் பாயிர மாக இயற்றியிருக்கிருர். இவர் உலக நூலோடு அறிவு நூல்களையும் நன்கு பயின்று மறுமை நெறியைக் கடைப்பிடித்து நின்றவர்.

## கஉஉ. இரத்தினம் சாமி—எம்.

(20 - நா.)

இவர் திருவாரூரில் இருந்தவர். முருகக் கடவுளிடத்துப் பேரன்புடையவராகிய இவர், வள்ளிநாயகி திருமணப் பதிகம், சுப்பிரமணிய தோத்திர மணிமாலை, திருப்புகழ்ச் சந்தப் பாடல் முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார். பாடல்கள் எளிய முறையில் இனியனவாக அமைந்துள்ளன. தோத்திர மணிமாலைப் பாடல் ஒன்றை அடியிற்காண்க:

"செப்பரிய ஒப்பற்ற நவரத்ன கசிதமுடி
செகந்தனில் இலங்கு குகனே
சிங்கார வடிவுநிறை தேவர்கள் புகழ்ந்திடும்
சிவபிரான் அருமை மகனே
ஒப்பரிய வெற்றிவேல் வச்சிரத் தோடு
முன்னன்கு கரமோங்கு முருகா
ஒருவித விபத்துமே உலகினில் தொடராமல்
உகந்துநவு மாயன் மருகா
முப்புரம் எரித்தபர சிவன் மகிழும் உமையவள்
ஓங்காரி பெற்ற சேயா
மூவாது சரவணப் பொய்கைவிளை யாடுமுக
மூவிரண் டான தூயா

எப்புவிக் கன்னியாம் வள்ளிதெய் வானைக்கு
இன்பம ளிக்கும் நேயா
இவ்வேளை வந்துஉன் தெரிசனம் தருகுவாய்
ஈசனே கார்த்தி கேயா!''

## கஉ௩. இரத்தினம் பிள்ளை—பு. து.
(1909)

''பைங்கூழ் செழிக்கப் பகர்பல வளங்கள்
கூட்டங் கொண்டிடு வேட்டங் குடிவாழ்
காமனும் விரும்பும் கவினெடு பொறைகொள்
காமிப்பிள்ளை காதல்கொள் புதல்வனும்
அருளொடு கல்வி அறிவுடை யோனும்
எப்பா வலரும் இயம்பிடு வோனுமாம்
இரத்தினம் பிள்ளை என்றநற் புலவன்''

என்று கண்ணுமரைக்காயர் என்பவரால் புகழ்ந்து பாராட்டப் பெற்ற இவர் தஞ்சை மாவட்டத்தில் வேட்டங்குடி என்னும் ஊரில் வாழ்ந்தவர். ஆங்கிலம், தமிழ் ஆகியவைகளை நன்கு கற்றுத் தேறியவர். திருமுல்லைவாயிலில் அஞ்சல் நிலையத் தலைவராகத் தொழில் புரிந்திருந்ததோடு தமிழாராய்ச்சியிலும் ஈடுபட்டிருந்தார். இவருடைய தந்தையார் பெயர் திருக்காமிப் பிள்ளை. இவர் திருக்குறளின் அறத்துப்பால் பொருட்பால்களை உரைநடையாக எழுதியிருக்கிறார். அந் நூலைப் பாராட்டி, சு. பொன்னேதுவார், கண்ணுமரைக்காயர், பில்லாலி வீரராகவப் பிள்ளை முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

''வேட்டங் குடிவாழும் வேட்டங் குடியுடையான்
ஈட்டங் கொளும் புகழை ஈண்டுமிக — நாட்டியிடு
சற்குணரத் னம்பிள்ளை சாற்று குறள்வசனம்
எற்குணர இன்பமிகு மே''

என்பது பொன்னேதுவார் பாட்டு.

## கஉ௪. இரத்தினம் பிள்ளை—பொ.
(20 - நா.)

சென்னை மாநகரில் நரசிங்கபுரத்தில் பொன்னுசாமிப் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் பூஞ்சோலை என்

னும் ஊரில் இருந்த முத்துவீரநாவலர் என்பவரிடந் தமிழ் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்ருர். திருப்போரூரில் எழுந்தருளிய வேம்படி விநாயகர் மீது இவர் இரட்டை மணிமாலை என்னும் நூலைப் பாடியுள்ளார். அட்டாவதானம் பூவை. கலியாணசுந்தர முதலியார், ஆ. நா. கபாலமூர்த்திப் பிள்ளை, களத்தூர் முனிசாமிப் பிள்ளை, வி. ஏ. சிங்காரவேலுப் பிள்ளை,பி.வி. இராமதாசம் புலவர், தணிகை பாலசுப்பிரமணியம் பிள்ளை, பா. முனிசாமிப் பிள்ளை, திரிசிரபுரம் ஆ. பெருமாள் பிள்ளை, முத்துவீர நாவலர் முதலியோர் இந் நூற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

> "சமரப் பதிவளர் நிம்பந்தே சாருந்நந் தாவளமே
> இமயப் பதிவளர் அம்மை பயந்த இமிழ்மதலாய்
> தமரங் கிளையொடு நேராமன் மெல்லிய சம்பவந்தில்
> கமலந் ததும்ப இருவிழி பெற்றதைக் காண்கிலமே"

என்பது இரட்டைமணி மாலையில் ஒரு பாட்டு.

## கஉரு. இரத்தினவேலு உபாத்தியாயர்
## (சரவண அருஞ்சல)
## (20 - நூ.)

இவர், சரவண அருஞ்சல என்னும் சொற்களையும் தம்முடைய பெயருக்கு முன்னால் பெற்றுள்ளார். புதுவையில் இருந்த இவர் அந்நகரிற் சிறந்த தமிழறிஞராகத் திகழ்ந்த பு. அ பெரியசாமிப்பிள்ளை என்பவரிடம் கல்வி கற்றுத் தமிழில் தேர்ச்சி பெற்ருர். கல்விச் சாலை ஒன்று அமைத்துக் கணக்காயராகப் பணிபுரிந்தமையின் உபாத்தியாயர் என்னும் பெயரும் இவரைச் சேர்ந்தது. தம்மாசிரியர் பெரியசாமிப் பிள்ளை இயற்றிய புதுவைக் கலம்பகம் என்னும் நூலுக்கு இவர்,

> "பார்புகழு மாற்குப் பகர் கலம்ப கம்புதுவை
> ஆர்பெரிய சாமிப்பேர் ஆசிரியன்—ஏர்நிகழ
> ஆயும் புலவர்க் கமிழ்தெனவே செய்திட்டான்
> நாயினுமிக் கன்புடையான் நான்"

என்னும் பாடலைச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்.

## கஉசு. இரத்தினவேலு பாண்டியர்—ச.
(20 - நூ.)

தொண்டை வளநாட்டில் சென்னை மாநகரத்தை யொட்டி யுள்ள சுங்குவாரபுரி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இயல் இசை, நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்லவர், "கனயோக மனமோகன நாடகச் சிங்கம் என்று சிறப்புப் பெயர் பெற்றவர். இவர் அந்நாளில் பெருங் கொடை வள்ளலாக விளங்கியிருந்த பெ. மா. மதுரைப் பிள்ளை என்பவருக்குக் கீழ்வருஞ் சீட்டுக் கவியைப் பாடினர். இவரியற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை. கீழ் வரும் பாடல் மதுரைப் பிள்ளையின் மீது பலரும் பாடிய பாடல்களை ஒன்றாகத் தொகுத்து அச்சிட்டப் பெற்ற நூலிற் காணப்பெறுகிறது.

"நறைபூத்த நிலவுதவழ் மணிமாட கதிர்கூட
நலமோங்கு சென்னை நகரில்
நாவலர் குழுக்களெவ் வேளையியலும் இயலுமிசை
நாடகத் தமிழ்மூன் றையும்
நல்லிசையி லுரைசெயஃதோர்ந்து நாகணசுகம்
நயந்தொலி முழங்கு பொழில்சூழ்
நன்னகர மந்நகரில் நாற்கவியின் மிக்கவரு
நாடகச் சிங்க மென்பர்
மறைபூத்த கலைவிசித மதுமாந்தி முத்தமிழை
மழையெனப் பொழியு மேகம்
மாகரையின் மோதுதிரை சூழ்புவியி லெங்கணும்
மன்னர்புகழ் இரத்ன வேலன்
மன்னுபல ஆங்கிலயர் கலனுல வைராவதி
வளந்தரும் இரங்கோ னில்வாழ்
மாதரும துரைமதுரை துரைவள்ள லெனவுலகில்
வளர்கீர்த்தி யாவர் பெற்றார்?
தறைபூத்த பொன்னகர்த் தருவனைய ஈகையும்
தருபுலவர் பாமாலையும்
தங்குமெழின் மணிபார்ப ராயபகதூரெனத்
தகுந்தகு மெனத்துதிக்கச்
சகமெலாந் துதிதருநல் நீதிதனி லேவழாத்
தருமதுரை நீயென் னவே
சாற்றரிய பிள்ளைமது ரைப்பிள்ளை நின்னிடம்
தமியன்விண் ணப்ப முளதால்

றைபூத்த கண்டன்மகன் மாதுல னருட் பேறு
கானவரும் ஒருகு சேலன்
கவிதைசொலும் இளவல்மிகு சிறுவர்பலர் குழீஇவளர்
கதியிதென அறைதல் மிகையோ
காதலாத் தந்துதவ வள்ளல்நீ என்றுனது
கருணைசெய இதுவே தரு
கனகமழை பெய்தெனது மனநிலுறு மிடிதிரது
கருணைசெய இதுதருணமே''

## ௧௨௭. இராகவதாசர் (மயிலை)

"..........................................................................
அனையவன் எவனெனில் நினைவுறப் புகல்வேன்
கேண்மின் கேண்மின் பான்மைகள் நீடு
பெருமையிற் கதிக்குந் திருமயிலைப்பதி
கதித்தவ னற்குடி உதித்தவ னெண்சீர்
சமரச பாஷியம் அமர்பித் தாந்தம்
திவ்விய கவியொழி கவ்விய முதிரம்
இலக்கணம் ஐந்தோ டிலக்கியம் பலவும்
பஞ்சகா வியமோ டெஞ்சாப் பொருத்தம்
இரண்டடி யோடி ரண்டடி சாக்கியர்
ஆழ்வா ராதிகள் தாழ்விலாப் பன்னூல்
உணர்ந்தவன் எனப்பெயர் அணிந்தவன் பிறர்போல்
நயவஞ் சகமாய் அயலோர் மயங்க
பிரசங் கம்வின் முரசொலி யில்லான்
புருடவே சியர்போல் வரிசைகள் காட்டி
உண்டி வளர்க்காப் பண்டிதத் தொழிலோன்
அருட்கவி என்றே மருட்கவி சாற்றி
சமயது டனங்கள் சமயோ சிதமாய்ப்
புகன்று திரியாப் புனிதவித் வானெனும்
மாசி ராகவ தாசன்என் போனே''

என்று பூஞ்சோலை முத்துவீர உபாத்தியாயரால் புகழப்பெற்ற இவர் சென்னை திருமயிலையில் வாழ்ந்திருந்தார். திருப்போரூர்க் கந்தர் கழலணி விண்ணப்பமாலை என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார். நூலின் பாடல் ஒன்றை அடியிற் காண்க,

" செய்யவேண்டுந் தேசிகனே திருப்போரூரார்
சிவக்கொழுந்தே
கையன் கொடியன் மிகுபாவி கன்மத் தொழிலே
கைக்கொண்டு

பொய்யே பேசித் திரிகின்ற புலையன் செய்யும்
விண்ணப்பம்
அய்யே கேட்டின் றேயிரங்கி அருள்செய் திடுவாய்
அறுமுகனே ''

## கஉஅ. இராகவ முதலியார்—சி.

(19 - நூ.)

தொண்டை மண்டலத்தில் சென்னை சிந்தாத்திரிப் பேட்டையில் இருந்தவர். இலக்கண இலக்கியங்களை நன்கு பயின்றதுடன் எ. நா. முத்துச்சாமி முதலியார் என்னும் இசைவாணரிடம் இசை நூல்களுங் கற்றுப் புகழ் பெற்றார் "திருஞான சம்பந்தர் வரலாற்றுக் கும்மி" என்னும் நூல் இவரால் பாடப் பெற்றுள்ளது,

'' அட்ட திசைபுகழ் ஞானசம் பந்தன்மேல்
அருந்தமிழ்க் கும்மிப் பாடல்சொல்ல
விட்டுணுக் காழிகொடுந்தவி மலன்சேய்
வெற்றிவி நாயகன் காப்பதாமே''

என்பது நூலின் தொடக்கம், இந்நூல் வெகுகாலத்திற்கு முன்பு அச்சாகியுள்ளது.

## கஉகூ. இராகவாச்சாரியார்—சா.

(20 - நூ.)

சோழவள நாட்டில் திருக்கண்ணமங்கை என்னும் ஊரில் தோன்றியவர். திரிசிரபுரம் பெரும் புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்களிடம் கல்வி கற்றவர். சொற்பொழிவு செய்வதில் இவர் மிகச் தேர்ச்சிபெற்று விளங்கினமையால் இவருக்குப் 'பிரசங்க சாகரம்' என்று சிறப்புப் பெயரும் உண்டாகியது. இவர் 'கண்ணம்மாள்' அல்லது "பஞ்சாயத்து நாடகம்" "கமலாநந்த லகரி" என்னும் நூல்களை இயற்றியிருக்கிறார்.

'' பூமிசை அயனும் புராரியும் மறையும்
பொன்னகர்ப் புனிதனுஞ் சுரரும்
பீமிசைச் சுடரும் யோகரும் மற்றை
விரவுறு சராசரம் அனைத்தும்

தூமமுங் கனலும் போன்மெனத் தோய்ந்தும்
நோய்கிலா ஒருதனி முதல்வன்
தாமரைச் சரணிச் சவையுளோர் தம்மைச்
சந்ததங் காத்தளித்திடுமால்

என்பது நாடகத்தின் காப்புப் பாடல்.

இந்நாடகத்தைத் தவிர 'இலக்குமி தோத்திரம்' மிருச்சகடிகம்' 'காசின் மகிமை' 'ஞானசித்தசம்பு' என்னும் நூல்களையும் இயற்றியுள்ளார்.

## கஅ௦. இராகவாச்சாரியார்—கா.

(20 - நூ.)

தொண்டைவள நாட்டில் காஞ்சிமா நகரில் தோன்றியவராகிய இவர் தமிழ் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமைபெற்றார். திருவல்லிக்கேணி இந்து உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்திருந்தார். துருவனுடைய வரலாற்றைக் கூறும் 'துருவவெண்பா' என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார். நூல் இருநூற்றெண்பத்தாறு வெண்பாக்களைக் கொண்டு விளங்குகின்றது.

" இங்ஙனமோர் நாளில் இளையாள்சேய் உத்தமனும்
தங்கியெழிங் காதனத்துந் தந்தைமடி—பொங்குறவே
ஏறி யிருக்க எழில்துருவன் அம்மடியில்
ஏறுபெற ஏற விழைந்து "

என்பது நூலில் ஒரு பாட்டு. இந்நூலுக்கு மு. இராமைய முதலியார் என்பவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

தமிழ்மொழியை அன்றி வடமொழியிலும் நிறைந்த புலமையுடையவர். மகாகவியாகிய போசமன்னனால் வடமொழியில் இயற்றப்பட்ட சம்பு ராமாயணத்தைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். சுந்தரகாண்டத்தில் அநுமான் கடல் தாண்டப் பேருருக் கொண்டு நிற்றலைக் குறித்துப் பாடிய பாடலை அடியிற் காண்க:

" அலைநிறைந்தபே ரம்பு ராசியில்
அடியமுழ்ந்தவும் விரைவில் வெல்லுவான்
கலைநிறைந்தமா மதிமு கத்தியைக்
கருதுபேருருக் கொண்டு காலமகன்

புலைநிறைந்தமீன் புகுளும் வானநிப்
பொருந ரங்குநீர்ந் திவலைமாலைதன்
தலைநிறைந் தொளிர்ந் துலவ நின்றனன்
தழுவு வானவர் விழுமம் ஏகவே.''

இராசேசுவரி பதிகம், திருவெண்பா, இராசராசேசுவரி மாலை முதலிய பிறநூல்களையும் இவர் இயற்றியுள்ளார். இராதாபுரம் என்னும் ஊரிலும் இவர் வசித்திருந்ததாகத் தெரிகிறது.

## கநுக. இராசகோபால ஐயர்—பீ. ஆர்.

இவர் தஞ்சை மாவட்டம் நன்னிலந் தாலுகாவைச் சேர்ந்த போலகம் என்னும் ஊரிற்பிறந்தவர். இவருக்குப் பாட்டியற்றும் ஆற்றல் இளமையிலிருந்தே அமைந்திருந்தது. புலமைக் கல்வி கற்றுத் தஞ்சை மாவட்டம் பாபநாசம் விக்டோரியா உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகத் தொண்டு செய்தார். இவரால் குருபரன் பதிகம் முதலிய நூல்கள் இயற்றப் பெற்றுள்ளன. குருபரன் பதிகத்தைப் பாராட்டித் திம்மப்பையர், கரூர் மாணிக்க முதலியார், வெண்பாச் சிலேடைப்புலி வேம்பத்தூர்ப் பிச்சுவையர் குமாரர் மகாதேவ பாரதியார், குளித்தலை குருசாமி முதலியார், ஈ. வி. அப்பாவு முதலியார் என்போர் சிறப்புப் பாயிரம் இயற்றியுள்ளனர். ஒரு பாட்டை அடியிற் காண்க.

'' பணியணியும் பரமனுர் பாகந் தமர்ந்தபொற்
பனிவரை உயிர்த்த தேவி
பரிவோடு மீன்றதொரு பன்னிருகை ஐயனே
பாலவடி வேல உனையே
பணியுமுன தன்பர்மனம் அதிலமரும் அரியவிரு
பங்கயத் தாளை நிதமே
பரவுமிவ் வெளியனேற் கருள்புரிய இதுகனம்
பசியமயில் மீதில் வருவாய்
கனிகொண்ட துளவமார் கருணைமுகில் மருகனே
காருண்ய கன்ய குகனே
கமலமிசை அமர்பிரமன் முடிபடக் குட்டிமுன்
கைகட்டி அவனு நிற்க
அணிஉலக அமரர்முதல் அனைவர்களும் அதிசயித்
தானந்த வாரி பெருக
அப்பிரண வப்பொருளை அப்பரனுவப்புறச்
செப்பியவெ னப்ப குருவே.''

## கஙுஉ. இராசகோபால தாசர்—ப.

(1916)

சோழவள நாட்டில் குற்றாலத்தில் பஞ்சபூத கியானி இராம தாசு என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் திருமால் மீது 'ஆதிகேசவமாலை' 'தோடயமங்களம் இசைப்பாடல்' முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

" சென்னெல் விளைந்து செழிந்தோங்கு
மாமிந்தத் தேசத்திலே
கன்னங்கள் செய்வதும் காறு
துரைப்பதும் கரிசனமாய்
முன்னென்று பேசிப் பின்னென்று
பேசும் மூடர்களை
என்னென்றுயான் சொல்லுவேன் எனைக்
காத்தருள் ஆதிகேசவனே "

என்பது மாலையில் ஒரு பாட்டு. இவர் அவ்வளவாகத் தமிழ்நூல் ஆராய்ச்சியில் வல்லவர் அல்லர் என்பது பாடல்களாற் பெறப் படுகின்றது.

## கஙுஙு. இராசகோபால பிள்ளை மு.

(1872)

தொண்டை மண்டலத்தில் சென்னைமா நகரில் திருவல்லிக் கேணியில் இருந்தவர். இவருடைய குலம் கோவைசியகுலம். தந்தையார் பெயர் முத்துக்கிருட்டிண பிள்ளை. இவர் அப்பாக்கிய தேசிகர் என்பவருக்கு மாணவராகி நூல்களைக் கற்றுப் புலமை பெற்றதன்றித் தம்முடைய ஆசிரியராகிய அப்பாக்கிய தேசிகர் மீது அந்தாதியும் பாடியுள்ளார். பல பேரவைகளில் இவர் சொற் பொழிவுகள் நிகழ்த்திப் பலரும் பயனடையச் செய்தார். கோ. இராசகோபால பிள்ளை, காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு, கோயம்பேடு வேங்கடரங்க ராமாநுச தாசர், திருநீர்மலை, திருநாராயண தாசர், இராயப்பேட்டை சீநிவாச முதலியார், புரசை சுந்தர ராமநுசபிள்ளை, புதுவை இராமாநுச நாவலர் முதலியோர் இவருடைய காலத்தினர். அவர்கள் இவருடைய நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்கள்.

" பாடத் தெருள் தரும் அப்பா ரியன்றன் பதுமசரண்
கூடத் தவம்புரி மாந்தர்பொற் ருள்சிரங் கொண்டுபுகழ்த்
தாடந் தெளிவொன்றும் இல்லாத மாக்கள் அடியரென
வேடந் தடையும் மதியின ரெப்பயன் மேவுவரே "

என்பது அப்பாக்கிய தேசிகர் அந்தாதியில் ஒரு பாட்டு.

## கஈ௪. இராசண்ண நாயுடு—தி. கு.

(20 - நா.)

இவர் திரிசிரபுரம் வீமநகரில் தோன்றியவர். ஆங்கிலம் தமிழ் ஆகியவைகளை நன்கு கற்ருர். செந்தமிழில் சிறந்த புலமையும் நன்கு அமைந்தது. மருங்காபுரி சமத்தானத்தில் பாரஸ்ட்-டிப்டி-ரேஞ்சகராகத் தொழில் புரிந்திருந்தார். சமத்தானத் தலைவராகிய கிருட்டிணவிசய பூச்செய மகாராசா என்பவருக்குப் புதல்வன் பிறந்தபோது இவர் கடுசு கண்ணிகளைக் கொண்ட தாலாட்டு நூல் ஒன்று பாடினுர். அந்நூல் 'மருங்காபுரித் தாலாட்டு' என்னும் பெயருடையது. நூலைப் பாராட்டித் திரிசிரபுரம் ஆ. கா. பிச்சை இபுராகிம் புலவர், வரகநேரி தி. கு. சோமசுந்தரம்பிள்ளை, தி. ம. பொன்னுச்சாமிப் பிள்ளை, தஞ்சை உலகநாத பிள்ளை, கடலூர் கிருட்டிணசாமிப் பிள்ளை, சென்னை கிருட்டிணையர் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். தாலாட்டுக் கண்ணிகள் சிலவற்றை அடியிற் காண்க. பாடல்கள் யாவும் இனிய நீர்மையில் எளிதாக அமைந்துள்ளன.

" கண்வளராய் கண்வளராய்
கண்மணியே கண்வளராய்
மன்ஞேர் புகழ்மருங்கை
மாமணியே கண்வளராய்
மாணிக்கவைர
மரகதத்தினுல் இழைத்த
ஆணிப்பொன் தொட்டிலிலே
அன்பேநீ கண்வளராய்
மருங்கா புரிநகராள்
மன்னுகிருட்டிண விசயனுக்குப்
பெருங்கா தலனுகிப்
பிறந்தவனே கண்வளராய் "

## கருடு. இராசப்ப முதலியார்—சிவ சி. வா.

திருப்பாதிரிப் புலியூருக்கு அண்மையில் உள்ள கரையேற விட்ட நகர் என்னும் ஊரில் இருந்தவர். பெரும் புலவராக விளங்கியிருந்த க. ரா. சிவ சிதம்பர முதலியாரிடங் கல்வி கற்றவர். கரையேறிய நகரில் 'சைவசித்தாந்தத் திருவாராதனை ஸ்கந்த பசனை சபை' ஒன்று அமைத்து அதற்குத் தலைவராக இருந்து பணியாற்றியவர். "இவர் கபாலிசர் பசனைக் கீர்த்தனம்" என்னும் நூலைப் பாடியுள்ளார். இந்நூலைப் பாராட்டித் திருமயிலை கோடீசுவர ஐயர், கோ. வடிவேலுச் செட்டியார், வல்லி ப. தெய்வநாயக முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" கூத்தாடும் ஐந்துகரக் குஞ்சரமே மாமயிலைக்
காத்தாடுங் காதற் கபாலிசன்—கீர்த்தனப்பா
சொல்லவா தோன்றுதுமே சொற்பொருளெலாம் அமைந்து
வல்லவா நீயருளு வாய் "

என்பது நூலின் காப்புப் பாட்டு. இவர் 'கந்தர் சஷ்டிப் பிரபாவ நவகம்' என்னும் நூலும் இயற்றியிருக்கிறார்.

" சார்ந்திடுமெய் யன்பரவன் தரிசனஞ்செய்
தின்புற்றே நந்த மக்குந்
நேர்ந்தபொருள் உதவுகையால் நிகழ்ந்திடுமிச்
சீர்களெல்லா நிலவு மென்றால்
கூர்ந்திடு நுண் மதியுடையீர் கொடுத்தவர்சார்
பால்நீரே குறித்துக் காண்மின்
தீர்ந்திடுமோ அற்பமதா உதவிவரைத்
தென்குறளால் தெளிந்தி டீரே "

என்பது நூலில் ஒருபாட்டு. மற்றும் இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் கந்தர் பஞ்சகப்பாமாலை, திருத்தணிகைப் பஞ்சரத்தினம் முதலியன.

## கருசு. இராசம் நாயுடு (கோண்டூர்)
(1912)

கோண்டூர் என்னும் ஊரினர். இசைப்பாடல் பாடுதலினும் வல்லவர். இளமைப் பருவத்திலேயே செய்யுள் பாடுந் திறம்

பெற்றிருந்தமையால் இவருடைய பெயர்க்கு முன்னுல் பாலகவி என்னுஞ் சிறப்புச் சொல்லுஞ் சேர்ந்து நின்றது. இவர் கோண்டூரில் கோயில் கொண்டு எழுந்தருளிய முத்தாலம்மன் மீது பதிகம் ஒன்று பாடியுள்ளார். அப் பதிகம் ''முத்தாலம்மன் பதிகம்'' என்று பெயர் பெறும். பதிகப் பாடல் ஒன்றை அடியிற் காண்க.

'' மண்டலந் தனின் மிக்க மலரடிக் கணவரும்
மாட்சியுடன் பணிந்து நின்ருர்
மாண்புடன் கவிவாணர் ஆகவே இப்புவியின்
மகிமைபெற் ருர்கள் சிலபேர்
எண்ணரிய கம்பிரம் ஆனவுரு ஏற்றி நல்
எழின்முந்தி நான்அடைந்தார்
எண்டிசை ராசர்கள் இந்திராதி அமரராய்
இருந்துசெங் கோல்புரிந்தார்
விண்டிலா ஐம்பொறியை வெறுத்துமெய்ஞ் ஞான
வீரரா ஞர்கள் சிலபேர்
விண்ணவரை ஏவல் கொளும் மண்டலா திபனை
இலங்கை மாநகர்வேந் தனைத்
தண்டித்துச் சிதைதனை மீட்டுநன் மகுடமணி
தான்கொண்ட மாலின் தங்காய் !
தண்ணமருஞ் சோலைசூழ் திண்ணமருங் கோண்டூர் வாழ்
தையல்முத் தாலம் மையே.''

## கருஎ. இராச யோகாந்த அடிகள் (முகுந்து)
(20 - நூ.)

இவர் முகுந்து குருசுவாமிகள் என்னும் பெரியாரிடம் வேதாந்த நூல்களை நன்கு கற்று அறிவு சிறந்து விளங்கினுர். வேதாந்தக் கருத்துக்களை அமைத்து, ''அத்துவிதானு பவகீர்த்தனைகள்'' என்னும் நூலை இயற்றியிருக்கிருர்.

'' அருமையுள வெனதுகுரு முகுந்தே யுன்றன்
அடியிணையென் முடியிருத்தி அன்பி னுலே
கருவிகர ணுதிகளை மலராய்ச் சாத்திக்
கைகுவித்தேன் இவ்வேளை கருணை கூர்வாய்
சுருதி மிக வோலமிடுஞ் சுடரி ரண்டின்
துளக்கமதை விளக்கியருள் சுகமே தெய்வத்
திருமருவு மூலகுரு மரபில் வந்த
சிவமௌனஞானதே சிகனுந் தேவே''

என்பது இவர் தமது நூலுக்கு முன்னால் இயற்றிய குருவணக்கம்

## ௧௫௮. இராசா சாத்திரியார்
(1911)

வடமொழியிலும் தென் மொழியிலும் வல்லவர். வரகவி. அ. சுப்பிரமணிய பாரதி என்பவரின் உதவியைக் கொண்டு இவர் 'விக்ரமோர்வசியம்' என்னும் நாடகத்தை வடமொழியில் இருந்து தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார். மற்றும் இவரால் எழுதப்பட்ட நூல்கள், மீனாட்சி சுந்தரன், அற்புத ராமாயணம், சாரதாநந்தர் முதலியன.

## ௧௫௯. இராசேந்திரம் பிள்ளை—பா. அ. அ.
(19 - நூ.)

இவர் சென்னை மாநகரில் வாழ்ந்திருந்தவர். இலக்கண இலக்கியங் கற்றுப் புலமைத்திறம் அமைந்து புலவராக விளங்கிய இவர் மகாவிகட தூதன் என்னும் பத்திரிகை யொன்றை நடத்திக்கொண் டிருந்தார். அற்புத அலங்காரத் தசரதநச் சிந்தாமணி என்னும் நூலுக்கு இவர் வழங்கிய சிறப்புப் பாயிரப் பாடலை அடியிற் காண்க.

" ஒப்பேதும் இல்லாத உயர்வரத்தால் நிறைந்தகதிர்
உடையினானை
உம்பர்கணஞ் சூழ்ந்திறைஞ்சும் உயர்சுதனை அளித்ததவ
உரிமை யானை
முப்போதுங் கன்னிமையில் குன்றாத தெய்வஅருள்
முடியினானை
மூதறிஞர் புகழ்வேளை நகர்வாழும் ஆரோக்கிய
முதல்வி தன்னை
எப்போதும் மறவாது சிந்தனைசெய் துரைசாமி
எனுநா வல்லோன்
இன்னிசைகள் நீடுநச ரத்நச்சிந் தாமணிப்பேர்
இனிய நூலை
இப்போதுஞ் செந்தமிழால் இசைத்துத்தாய் உரிமைதனக்
கிலக்கு மாகி
இருநிலத்திற் பெரும்புலமை விளங்குபெருந் தகைமுடிபூண்
டெழுந்தான் அம்மா."

## கசம். இராதா கிருட்டிண ஐயர்—சி. எஸ்.
(20 - நூ.)

சோழவள நாட்டில் திருக்குடந்தையில் வாழ்ந்திருந்த இவர் லோகானுகூலன் என்னும் இதழ் ஒன்றை நடத்திக்கொண்டிருந்ததோடு "பக்தி விளக்கம்" "தத்துவ ஞானபோதினி" "மகாத்து மாக்கள்" முதலிய நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்.

## கசக. இராதாகிருட்டிணையர் (புதுக்கோட்டை)
(20 - நூ.)

இவர் புதுக்கோட்டையில் இருந்தவர். ஆங்கிலந்தமிழ் வடமொழி ஆகியவைகளை நன்கு கற்றுணர்ந்து மும்மொழிப் புலவராக விளங்கிய இவர் புதுக்கோட்டை அரசர் கல்லூரியில் தலைமையாசிரியராக அமர்ந்து பணிபுரிந்தார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்தேர்வாளராக விருந்தார். தமிழாராய்ச்சியில் மிகுந்த ஊக்கம் உடைய இவர் செந்தமிழ்ப் பத்திரிகையில் கட்டுரைகள் எழுதினர். தமிழ் நூல்களைப் பற்றியும் அவற்றின் உரைகளைப் பற்றியும் அவைகளை இயற்றிய புலவர்களைப் பற்றியும் அறியலான செய்திகளையெல்லாம் தொகுத்து ஆராய்ச்சி முறையில் " தமிழ் மொழி விளக்கம் " என்னும் நூல் ஒன்றை எழுதினர். கணித நூல்களும் எழுதி 1917 ஆம் ஆண்டிற் காலமானர். அப்பொழுது பலரும் வருந்தி இரங்கற்பாக்கள் பாடினர். மின்னு நூருத்தின் என்பார் பாடிய இரங்கற்பாக்களில் ஒன்றை அடியிற் காண்க. இவர் தமிழ்ப் பத்திரிகையில் எழுதிய கட்டுரைகள் பலராலும் பாராட்டப் பெற்றன.

" நற்றமிழில் வடமொழியில் ஆங்கிலத்தில்
ஒருபுலமை நடாத்தி நின்ருேய்
கொற்றவர்கள் புகழுமெங்கள் குருமணியே
குருவுனைப்போற் குவல யத்தே
எற்றினியாங் காணவல்லேம் பிரிந்துயர்
எங்குரைப்போம் யாங்க ளிங்கே
உற்றரற்ற விட்டனை நீ கண்டகங்கம்
யாதுகொலோ ஒளிர்வான் போந்தே."

## கசஉ. இராமகிருட்டிண முத்து நாடார்
(1911)

இவர் வா. ஏறல் நாடாப்பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். ஏறல் மாநகரம் சேர்மேன் அருணசலசுவாமி களின் "சித்து விளையாடல் அம்மானை" என்னும் நூலைப் பாடியுள்ளார்.

"மேகந் தனைப்பழிக்கும் மெல்லிய நற் கூந்தலினள்
தோகைமயி லைப்பழிக்கும் சொல்லரிய சாயலினள்
இந்திராணிக் கொப்பாய் இலங்கும் அழகுடையாள்
அன்னந் தனைப்பழிக்கும் அழகு திருநடையாள்"

என்பது அம்மானையிற் சில அடிகள்.

## கசரு. இராமசாமி அய்யங்கார்—சீ.
(1909)

இவர் பாண்டிவள நாட்டில் கண்டனூரைச் சேர்ந்த பாலையூரில் ஆனைமுகக் கடவுளுடைய அருளைப் பெற்று விளங்கியவர். இவர் ஆனைமுகக் கடவுள் மீது சதகம் ஒன்று இயற்றியுள்ளார். அச்சதகம் 'விநாயகர் சதகம்' எனப்பெறும். வைணவராகிய இவர் ஆனைமுகக் கடவுளின் அருளைப் பெற்றது வியப்பே. சதகத்தின் பாடல் ஒன்றை அடியிற் காண்க. கடவுளின் உண்மையை உணர்ந்தவர்கள் சிவபிரானுக்கும் திருமாலுக்கும் வேறுபாடு காட்டார்கள்.

"கற்றோர்கள் உறவுதனை விட்டுமுழு மூடர்வங்
    கணமது பிடித்த பேரும்
கனகமுடி மன்னவர் குறிப்பறிந் தேநடக்
    காமல் திரிந்த பேரும்
பெற்றோர்கள் மனதுருகி வாடவெகு தர்மங்கள்
    பெருமையாய்ச் செய்த பேரும்
பெண்டாட்டி பிள்ளைதனை நம்பியே கூடப்
    பிறந்தவரை விட்ட பேரும்
உற்றாரிடம்பகைத் தன்னியரை நேசரென்
    றுட்கொண் டிருந்த பேரும்
ஒழியாத துன்பங்கள் பெற்றிடுவ ரென்றே
    உரைத்திடுவர் மேலோர் களே

வற்ருத தெள்ளமுத நிறைவாவி வேலைதனில்
வாசஞ்செய் பரிபூரண
வளமான திருநீடி வளர்பாலை நகர்மேவு
மதவாரணக் கடவுளே ''

இவர் சந்திரகாச நாடகம் என்னும் பெயருள்ள நாடகம் ஒன்றையும் இயற்றியிருக்கிருர். மேற்படி நாடகத்திற்கு சு. அருணுசல சுவாமிகள், கவிராச கந்தசாமிப் பிள்ளை, யாழ்ப்பாணம் அ. சபாபதிப் பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## கசசு. இராமசாமி அய்யங்கார்—எம். எஸ்.
(20 - நூ.)

இவர் விசயநகரம் அரசர் கல்லூரியில் வரலாற்றுப் புலவராக விளங்கியிருந்தவர். எம்.ஏ., வரையில் கல்வி கற்ற இவர் உரைநடை நூல்களை நன்கு எழுதும் திறம்பெற்று விளங்கினுர். இவர் சேலம் மாவட்ட வரலாறு, திருநெல்வேலி மாவட்ட வரலாறு முதலிய உரைநடை நூல்களை எழுதியுள்ளார்.

## கசரு. இராமசாமி அய்யர்—அ.
(20 - நூ.)

சோழ வளநாட்டில் லால்குடி என வழங்குந் திருத்தவத் துறையில் அமிர்தம் அய்யர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் தம்மைக் கணபதி தாசர் எனவுஞ் சொல்லிக் கொண்டார். தமிழ் இலக்கண இலக்கியங்களைத் தக்காரிடம் கற்று லால்குடி போர்டு உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி புரிந்திருந்தார். இவர் கந்தரானந்தத் துறை என்னும் நூல் ஒன்றை இயற்றியுள்ளார்.

" பாகுஞ்செந் தேனும்பைம் பாலும்உவமிக்கிற் பாவையர் சொற்
காகுமொப் போவென் றலையின்றை யேயிவை யத்தனையும்
வேகு நரகுக்கு வித்தல வோவிதை விட்டினிமேல்
போகும் வழிக்குத் துணையாவை வேலனைப் போற்றுவையே''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கசகு. இராமசாமி அய்யர்—சு.

பாண்டி வள நாட்டில் இராயவரத்தில் வசித்திருந்த சுப்பிரமணிய ஐயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். குன்றைச் சிலேடை வெண்பா முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். குன்றைச் சிலேடை வெண்பாவுக்கு, மழவைச் சிதம்பர பாரதி, அட்டாவதானம் வாலசுப்பிரமணிய அய்யர், குன்றக்குடி வீர பத்திரக் கவிராயர், கானுடு காத்தான், பஞ்சாபகேச அய்யர் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" வாடைக் குழன்மடவார் வாயொலியும் வாரணமும்
கோடைக் குயிற்குமுறுங் குன்றையே—வேடம்
பலவனேவார்க் குந்தன் பதங்களுருப் பொன்னம்
பலவனேவார்க் குந்தன் பதி "

என்பது குன்றைச் சிலேடை வெண்பாவில் ஒரு பாட்டு.

## கசஎ. இராமசாமி அய்யர் (கல்லிடைக்குறிச்சி) (1910)

இவர் பாண்டி வள நாட்டில் கல்லிடைக் குறிச்சியில் இருந்த வர். வடமொழி, தென்மொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் வல்லவர். இந்து செகண்டரி உயர்நிலைப் பள்ளியில் தலைமை யாசிரியராக இருந்த இவர் வட மொழியில் காளிதாச மகா கவியினுல் இயற்றப்பட்ட குமார சம்பவத்தைத் தமிழில் பாடல் களாக மொழி பெயர்த்திருக்கிருர். பாடல்கள் எதிலுஞ் சேர்ந்த தாக இல்லை. பாட்டில் எதுகைமோனை ஒன்றுமில்லை. பெய ரளவுக்குப் பாடலாக இருக்கிறது.

## கசஅ. இராமசாமி அய்யர்—சு. (20 - நூ.)

திருவிளையாடற் புராணத்தை இசைப் பாடலாகப் பாடிய வராயனேந்தல் சுப்பிரமணிய ஐயருடைய புதல்வராகிய குன்றக்குடி சுப்பிரமணிய சுவாமி பேரில் பதிகம் முதலி யிருக்கிருர்.

" சுந்தரம் இணைந்தகுழல் சிந்துரம் அணிந்தநுதல்
கஞ்சமலர் அஞ்சும்விழியார்
கமலமலர் அடியிலே பிடியனைய நடையிலே
கலையிலகு துடியிடையிலே
மந்தரமெ திர்த்தடர்ந் திறுமாந்த முலையிலே
வாளெனும் விழிவலையிலே
மயல்பற்று நிலையிலே நயமொத்த கலையிலே
மனமுற்றி டாதருளுவாய்
சுந்தர மிகுந்துவளர் சந்த்ரவத னும்புயா
சுரசித வரப்ரசாதா
சுத்தநிட் களதிப நித்யநின் மலரூப
துட்டநிக் ரகபூபனே
கொந்தலர் அணிந்தபுய இந்திரன் மகிழ்ந் துதவு
குஞ்சரி அணைந்தகந்தா
கொன்றையம் புலிமருவு கின்றசெஞ் சடிலரருள்
குன்றையம் பதிமுருகனே !"

என்பது குன்றக்குடி சுப்பிரமணியர் பதிகத்தில் ஒருபாட்டு.

## கசகூ. இராமசாமி ஆசாரி (கந்தேகவுண்டன் சாவடி) (20 - நூ.)

கொங்குவள நாட்டில் கோயமுத்தூர் மாவட்டத்தில்போத்த னூருக்கடுத்த கந்தேகவுண்டன் சாவடியில் இருந்தவர். இவர் ஐங்கரன் மாலை, கணேச பஞ்சகம், ஆலடி விநாயகர் தேவாரப் பதிகம், கந்தமாநகர் பரமேஸ்வரப் பதிகம், கந்தமாநகர் தண்ட பாணிப் பதிகம் கூடிய "தோத்திரப் பிரபந்தங்கள்" என்னும் நூலை இயற்றியுள்ளார். சென்னை பு. எ. வரதராச நாயகர், திருமயிலை புலவர் சோ. மு. இலட்சுமணப்பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். ஐங்கரன் மாலைப் பாடல் இது.

" வானவர் முனிவர் சித்தர்கள் மறையோர்
மண்முழு தேத்திடு முக்கண்
ஞானவான் பொருளே நாரணன் பிரமன்
நாதமுந் தொடர்வரு மணியே
மோனவர் உளத்தே முளைத்தெழும் அமுதே
முக்கணு மூஷிகம் ஏறும்
தேனுலாஞ் சடையாய் சிற்சுகப் பொருளே
சித்தனே எனக்கருள் புரியே"

## கரு௦. இராமசாமி ஆச்சாரி—ம.

(20 - நூ.)

பாண்டி வள நாட்டில் சிவகங்கை சமத்தானத்தில் பெரிய ஒலேக்குடி என்னும் ஊரில் விசுவப் பிரம குலத்தில் மலையாண்டி ஆசாரி என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் "நயினர் தோத்திரம்" என்னும் நூலைப் பாடியுள்ளார். மேற்படி தோத்திரம் முப்பது பாடல்களையுடையது. ஒரு பாடல் :

" சிவமயமே சிவமயமே என்ற பேர்க்குச்
சென்மவினை வாராது திண்ணந் நானே
அவ்மதியால் அறியாமல் மோசம் போனோர்
அலைகிருர் வையகத்தில் அகந்தையாகத்
தவமுடையோர் வாழ்வல்லால் மற்றவெல்லாம்
நங்காது என்றகுணந் தங்கிடாமல்
குவலயத்தில் ஆசையுற்றேன் சுரும்புநாதா
குறிதெரிய அருள் புரிந்து இரட்சிப்பாயே "

## கருக. இராமசாமி ஐயங்கார்—கரந்தை

(19 - நூ.)

தஞ்சையைச் சார்ந்த கரந்தையில் வாழ்ந்திருந்தவர். ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைப் பாக்களையும் இவர் நன்கு இயற்றக்கூடிய ஆற்றல் பெற்று விளங்கினமையால் இவருடைய பெயர் நாலுகவிப் பெருமான் இராமசாமி ஐயங்கார் என வழங்கியது. இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரம் தெரியவில்லை. ஆறுமுக உபாத்தியாயர் என்பவரால் இயற்றப் பட்ட "சிவசுப்பிரமணிய சுவாமி கீர்த்தனை" என்னும் நூலுக்கு இவர் பின்வருஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

" சீர்மேவு தஞ்சைமா நகர்க்கரந் தைப்பதி
சிறந்துவாழ் குமர குருவை
சிந்தையி லுகந்தன தினம்புகழ வந்தனது
சிறுமையுறு துயர் நிரவும்
பார்மேவு பத்தர்களில் உத்தமகு ணநிதிப்
படிவம்வே ளாளர் குலமாம்
பாவலர் உகந்திடும் ஆறுமுக நாவலன்
பாடுமிக் கந்தர் பசனம்

பேர்மேவு கொச்சகப் பாமுதற் கவிகளின்
பிரிவுகளை ஆய்ந்து நன்காய்
பேருலகில் அகந்தனில் உணருமப் பெயர்களே
பேசரும் பிணிகள் தீர்ந்து
ஏர்மேவு முப்பத்து முக்கோடி தேவர்கள்
இறைஞ்சிடுங் கந்த வேள்தன்
எழின்மிகும் பதமனுதி வாழ்ந்திருப் பாரென
இயம்புவார் உலகி னோரே.

## கருஉ. இராமசாமி ஐயங்கார்—க.
(20 - நூ.)

சென்னை மாநகரினர். இவர் பரதன், சாவித்திரி, நளன், பாண்டவ விசயம் முதலிய நாடகங்களை இயற்றியுள்ளார்.

## கருங. இராமசாமி ஐயங்கார்—சருக்கை
(20 - நூ.)

பி. ஏ. வரையில் ஆங்கிலக் கல்வி கற்றவர். தமிழிலும் செய்யுள் நூலியற்றத்தக்க புலமை வாய்ந்தவர். புட்பபாண விலாசம் என்னும் நூலை வடமொழியில் இருந்து தமிழிற் செய்யுளாகப் பாடியுள்ளார். மற்றும் இவரால் இயற்றப்பெற்ற நூல்கள், மேன்மொழித்தரளம், சுகுணேசர் அல்லது நட்புங் காதலும், இந்துமதி அல்லது கற்பரசி, உஷாபரிணயம். விக்கிரமோர்வசீயம் கமலினி என்பன. இவர் வடமொழியினுஞ் சிறந்த புலமையுடையவர். நூலின் முகப்பில் உரிமையுரையாக இவர் இயற்றியுள்ள பாடல் ஒன்றைக் கொண்டு இவருடைய ப... ச்சிறத்தை ஒருவாறுணர்ந்து கொள்ளாலாம்.

பஃருழிசைக் கொச்சகக்

“ சடைகொண்ட சிவனுமைசேய் த
நடைதந்த பெருமையுறீஇ நா
பாண்டிவள நன்னாட்டில் ப
மாண்டபுகழ் முச்சங்கம் வ
அதனருகர் உற்றபொழில்
மதுரநிறை தமிழ்தானுப்
அந்தவத்தின் பயனனைத்

விந்தகுமார் மணியசிவ மேலோன்றன் மரபினனு
ஓங்குமறை நான்கினினும் உயர்சாம வேதியனுந்
தேங்குபுகழ்க் கோவிந்த சிவனுர்பால் வலம்புரிவெண்
சங்கினிடந் துதித்த முத்தம் தானெவே தோன்றியன்பிற்
துங்கமிகுங் கலைதெருஞ் சூரியநா ரணப்பெரியோய்!

(இது தரவு)

ஆடகமாச் சபையோனை அநுதினமுந் தொழுதேத்திப்
பீடுறுசீர்ப் பெரியரைநீ பேணுதலும் பெருமைகொலோ
சபாபதிச்சீர் வாரிதியைச் சார்ந்துதமிழ் மாரிபொழி
தபோநிதியே எனயாங்கள் சாற்றுதலும் புகழாமோ
இயற்றமிழா சிரியரென இன்தமிழ்ப்பா வாணர்சொலல்
கயற்கணியி னுரதற்குக் கருதுமொரு வியப்பாமோ
கலைக்கன்னி வலவிழியாக் காணுமிற்கு முனைப்போல
இலக்கணமு இலக்கியமும் இனிதுரைப்போ ருளரேயோ
சுனைப்போதாங் காப்பியத்திஞ் சுவையறியுஞ் சுரும்பனையாய்
நினைப்போலச் செந்தமிழின் நிகழ்ந்தவலோர் தாமுளரோ
வேற்குமரன் இணையடியை மிகைச்சுமிற்கு முன்றனையா
நாற்கவிப்பா வலனென்று நவிலுதலும் விந்தைகொலோ
மதுரநிறை மேன்மொழியும் வடமொழியுந் தெரிந்தவனைச்
சதுரமொழி வல்லனெனச் சாற்றுதலுந் தகவேயோ
நாடகமும் இலக்கணமும் நாடியுரை செய்தருளி
ஏடவிழும் புகழ்பெறுதி எனச்சொலலும் இறும்பூதோ

(இவையெட்டும் ஈரடித்தாழிசைகள்)

அதனுஅல்,

(இது தனிச்சொல்)

முத்தமிழ் நாடக மொழியுந் திறமெமக்
கெத்துணை யும்மிலை யென்றியா மோர்ந்தும்
நண்பர் வேண்டலிற் பண்புடன் செயுமிது
கல்லணி யெனினுங் கருணைமேய்
மெல்லணி மலரென மேற்கொள் வாயென:

(இஃது ஆசிரியச் சுரிதகம்)

" புலிமுனி தனக்குந் தில்லைமணி மன்றுட்
பொலிவுற நடனம் புகழ்பெறச் செய்தவன்
கருவழிப் புகுத்தா தருளு மெந்தையை
மனமெய் வாக்கால் தினமு மேத்திச்
சசியின் மணுளன் தவத்திற் காகக்
கசிவுறு மனத்தனய்க் கமண்டலம் அதனைக்
காக்கை வடிவாய்க் கவிழ்த்த ஐங்கர

நாதன் தாளிணை நந்நலை மிலைச்சி
ஆதியில் தமிழ்தரும் அகத்திய னவன்றன்
சோதி வடிவாய் மேதினி யதனில்
வந்தவ தரித்த சுந்தர மூர்த்தி
ஆடு மரங்கினர் ஆதரத் தொடு
நாடுறு சீர்த்தி நாடக வியலிணைப்
பாடிய எந்தை பகலவன் றானெனப்
பல்கலை எமக்குப் பகருறும் அண்ணல்
வேதியர் திலகன் விளங்குநா மத்தன்
சூரிய நாரா யணப்பெருந் தகையோன்
சீரிய தாள்மலர் சிரமேற் கொண்டுதெள்
அமிழ்தினு மினிய அருங்கவி சொல்லிய
சிவப்பிர காசனுஞ் சைவ சிகாமணி
புகழினை எடுத்துப் புகலுதிற் பாமென''

''திங்களணி சலடமௌலிச் சிவன்முனே
வளைகொண்டு தெருக்கள் தோறும்
மங்கையர்கட் கணிவதுபோல் சூடகந்தோ
டரைத்துகிலும் வாங்கிப் போகத்
தங்களறி வழிந்துமயல் தனிபூண்டு
தளரும்வளை தவழ்பு லஞ்சூழ்
மங்கலமா மணிமதுரைத் தொட்டிலிலே
வளர்தமிழை வணக்கஞ் செய்வோம்''

## கருச. இராமசாமி ஐயா (தஞ்சை)

(20 - நூ.)

இவர் சோழவள நாட்டில் தஞ்சை மாநகரில் பிரமசிட்ட பண்டிதராக இருந்த வெ. குப்புச்சாமிராசு என்னும் பிரமாநந்த சுவாமிகளிடம் வேதாந்த நூல்களை நன்கு ஓதியுணர்ந்து புலமை பெற்றவர். திருவேங்கடநாதர் இயற்றிய கீதாசாரத் தாலாட்டு என்னும் நூலுக்கு இவர் பதவுரை இயற்றியிருக்கிறார்.

''கடம்பொழி துயராங் கடல்கடந் தருள்பெற...
கடம்பொழி கயந்தலைக் கழல்கரம் ப...
கடம்பணி போலாங் கட்டவிழ்த் தின்...
கடம்பணி வேலன் கழல்சிரஞ் சூட்டு...

என்பன நூலில் விநாயகர் முருகக்கடவுள் ...
பெற்றவை.

## கருரு. இராமசாமிக் கவிராயர் (அட்டாவதானம்)
(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் புளியங்குளம் என்னும் ஊரில் அருணா சலக் கவிராயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இராமநாதபுரம் சமத்தானப் புலவராக இருந்த சோடசாவதானம் சரவணப் பெருமாள் கவிராயருக்குப் பெயரர். இவர் மதுரை மார்க்கண்டமாலை, ஒருதுறைக்கோவை, மதுரைக்காதல், மதுரைத் தோப்புச் சிங்காரப்பதம் என்னும் நூல்களைப் பெ. மா. மதுரைப் பிள்ளை என்பவர் மீது பாடியுள்ளார். ஆ. வ. சுந்தர இராமையர், அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், பு. த. செய்யப்ப முதலியார், செல்வ தேவராசபிள்ளை, சோ. முத்திருளப்ப பண்டிதர், புலவர் கோபால பிள்ளை, பண்டிதை மனோன்மணி யம்மாள், தஞ்சை சட்டாவதானம், வைரக்கண் வேலாயுதப் புலவர் ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள் ளனர்.

"மலையான் புலவர்க்குச் செம்பொனெந் நாளும் வழங்குதற்கு
மலையா னிரையயன் முண்டபி ரான்தன் மருகன்வெண்கு
மலையானை முன்சிறை வைத்தானைத் தந்தருள் வாய்பழநி
மலையானைப் போற்றிய மாலாமதுரை நன் மார்க்கண்டனே"

என்பது மார்க்கண்ட மாலையில் ஒரு பாட்டு.

## கருசு. இராமசாமிக் கவிராயர்—சி.
(19 - நூ.)

இவர் சென்ற பத்தொன்பதாம் நூற்றுண்டில் தென் குழந்தாபுரி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தார். இவரைப் பற்றிய பிற செய்திகள் புலனுகவில்லை. இவர் மகா பாரதக்கும்மி என்னும் நூலை இயற்றியிருக்கிருர்.

"சிறைந்தாம் வேதமெனச் செப்புமகா பாரதத்தைப்
பார்மீது கும்மியெனப் பாடுதற்குச்—சீர்மிகுந்த
பஞ்சாக் கரமுடைய பாக்கியனே என்னுடைய
நெஞ்சக் கமலமதில் நில்"

என்பது காப்புப் பாடல்.

" அந்தமிகு மந்தி னுபுரந் தில்பான்
டவர்க்கும் கௌரவர்க் கும்நடந்த
விந்தையைக் கும்மிப் பாட்டா லுரைக்கத்
தொந்தி விநாயகன் காப்பாமே "

" முச்சக மெச்சவே பாரதச் சண்டை
முடிந்த கதையை மொழிந்திடவே
செச்சை யணியு மலர்ப்பதந்நான் திருச்
செந்தூர் முருகன் பதந்துணையே "

இது நூலின் தொடக்கம்.

## கரு௭. இராமசாமிக் கவிராயர்—சே.
## (19 - நூ.)

இவர் சேதனப் பட்டு என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இவரைப் பற்றிய செய்தி யொன்றும் விளக்கமாகவில்லை. திருப் போரூர்ச் சுப்பிரமணியர் பேரில் இவர் இயற்றிய "இரட்டை யாசிரிய விருத்தம்" என்னுஞ் சிறு நூல் ஒன்று அறியப்படுகிறது.

" ஆதிமுரு கன்பிரம தேவைசிறை வைத்தமெய்ஞ்
ஞானமுரு கன்வி நோத
ஐங்கரற் கிளையமுரு கன்புகழ்தி ருக்கைமச்
சாவநா ரஞ்செய் முருகன்
அடர்தினைப் புனமதனில் வேங்கையுரு வாமுருகன்
அருமைகுற வள்ளி மகிழ
ஆண்டிக் கிழச்சொருப மானமுரு கன்சரவ
ணத்தடம் அமர்ந்த முருகன்
பாதிமதி வேணியற் கோதுமுரு கன்சமணர்
பகையறுத் திட்ட முருகன்
படருமயி லைப்பதியில் அங்கத்தை யும்பூம்
பாவையுரு வாக்கு முருகன்
பரலோக சுரலோக முருகனெ திராகவெனைப்
பாரா திடத்தில் நிந்தை
பகரெனது சத்ருசம் மாரமுரு கன்மித்ரு
பட்சத் தமர்ந்த முருகன்
தாதவிழ்க டம்பணியு முருகனிந் திராணிமகள்
தன்னைப் புணர்ந்த முருகன்
தனியாவி னன்குடிகொள் முருகனென் குறைதவிர்த்
தாளும்வடி வேலுமுருகன்

சந்தமும் சிந்தைகுடி கொண்டுதுதி செய்பவரைத்
    தடுத்தாட்கொண் டருளு முருகன்
சச்சிதா நந்தமுரு கன்கௌரி யருள்பவிரு
    தண்டோள் விளங்கு முருகன்
நீநிலா தற்புதம் தருமுருகன் மந்திரா
    தினகர்த் தவ்ய முருகன்
சிவமுருகன் மகிழினிய தவமுருகன் மதிவதன
    செயகார்த்தி கேய முருகன்
செஞ்சொல்முரு கன்வனச செங்கைமுருகன் திருச்
    செம்பொன்மயி லேறு முருகன்
செகமேயடி யவர்பெருக மகிழ்முரா ஓரியின்மருக
    திகழ்சமர புரிமு ருகனே ”

என்பது இரட்டையாசிரிய விருத்தத்தில் ஒரு பாட்டு. இது பத்துப் பாடல்களைக் கொண்ட பதிகமே. மற்றும் இவர் சரசுவதி தோத்திரம் என்னும் நூலும் பாடியுள்ளார்.

## ௫௮. இராமசாமிச் செட்டியார்—சொ.

பாண்டி வள நாட்டில் கரிவலம் வந்த நல்லூரில் சொக்க லிங்கஞ் செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர். சிறந்த தமிழறிவு பெற்றுத் திகழ்ந்தார். பால் வண்ணநாதர் கோயில் அறப்பணியாளராகத் திகழ்ந்த இவர் அப்பெருமான் மீது “திருக்கருவைப் போற்றிப் பாமாலை” என்னும் நூலையும் இயற்றியுள்ளார்.

“ மாலயன் காணார் போற்றி
    மலரடி முடியைப் போற்றி
காலனை உதைத்தாய் போற்றி
    காமனை எரித்தாய் போற்றி
வேல்விழி உமையாள் போற்றி
    வேணுவில் உதித்தாய் போற்றி
பால்நிற வண்ணன் போற்றி
    பரமனே போற்றி போற்றி ”

என்பது நூலில் ஒரு பாட்டு.

இவர் வேறு புலவர்களைக் கொண்டும் இச்சிவபதியைக் குறித்து நூலியற்றச் செய்ததாகத் தெரிகிறது. இவருடைய செய்யுட்கள் எளிய போக்கிலமைந்தவை.

## கசூ௦. இராமசாமிச் செட்டியார்—வே. நா.

(20 - நூ.)

புதுச்சேரியில் இருந்தவர். இவர் கலைமகள் அருளோடு திருமகள் அருளையும் பெற்றிருந்தார், செய்யுட்களை நன்கு இயற்றுவார். பு. அ. பெரியசாமிப் பிள்ளை என்பவர் இயற்றிய புதுவைக் கலம்பகம் என்னும் நூலுக்கு இவர்,

"மாமறையோன் சுதன்ருணு என்று வேதம்
வகுத்துரைந்த நன்றியிந்த உலகுபூப்பத்
நாமரையா னைக்கோப்பூழ் தன்னை லிந்து
சங்கரிக்குந் தொழில்முக்கண் ணனுக்குத் தந்து
வாமமிகும் இவ்விருவர் தம்மோ டன்பா
வானகமு மண்ணகமு மற்றுங் காப்பான்
நேமமுள வரதனெனு மொழிக்கி ணங்க
நீர்ப்புதுவைக் கலம்பகத்தை நிகழ்த்தினனல்"

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## கசூக. இராமசாமிப் பிள்ளை—சி.

(1910)

இவர் சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த நன்னிலம் பிரிவு கமலாபுரம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இனிமையான செய்யுட்களைப் பாடத்தக்க புலமையடைந்து விளங்கினமையால் இவர் 'மதுர கவி வித்துவான்' என்று கூறப் பெற்றார். இவர் எட்டுகுடி என வழங்கும் எட்டி குடியில் எழுந்தருளிய வேலவர் மீது "எட்டிகுடி வேலவர் மாலை" என்னும் நூலைப் பாடியுள்ளார். இம்மாலை முப்பத்திரண்டு பாடல்களையுடையதாக விளங்குகிறது. மாலையின் பாடல் ஒன்றை அடியிற் காண்க.

"தெய்வானை வள்ளிமண வாளா வாவா
தேசிகனே வாசவனர் மருகா வாவா
பையரவை அணியுமரன் சுதனே வாவா
பார்வதியாள் பாலகனே வேலா வாவா
வெய்யவன்போல் இலங்குகின்ற அயிலென்றேதும்
வேல்பிடித்த ஆறுமுகவேந்தே வாவா
வையகத்தில் யான்பணிய மயில்மீ தேறி
வரவேணும் எட்டி குடி வாழும் வேலே.

## ககூஉ. இராமசாமிப் பிள்ளை—சி.

(1910)

இவரைப் பற்றிய செய்தியொன்றுந் தெரியவில்லை. இவர் "முகுந்தன் பதிகம்'' என்னும் பதிகம் ஒன்று பாடியுள்ளார். முன்னவரும் இவரும் ஒருவரேபோலும்.

" பூதலந் தன்னிலே இரணியன் கொடுமைகள்
பொறுக்காமல் தேவ ரெல்லாம்
புலம்பிய காலமதில் அரக்கன்சேய் புகன்றிட்ட
பொதுத்தூணில் வருசிங்கமே
மாதவன் ஆகிய யாதவ குலத்தனே நின்
மைந்தனெனை ஆண்டருள்வாய்
மாய சொருபனே மணிமந்திர காரனே
மருவுசாமள வர்ணனே
ஆதரவாக எனையாண்ட கிருட்ணனே நல்ல
ஆதி வராக ரூபனே
அநேககோடி பாவம் அடியன்யான் செய்திடினும்
அன்புடன் பொறுத்தாளுவாய்
பாதமதை நம்பினேன் பட்சம்வைத் தாளுவாய்
பாற்கடல் குடிகொண்டவா
பரவாசு தேவனே பக்தரை ரட்சிக்கும்
பரமதயாள முகுந் தனே ''

என்பது முகுந்தன் பதிகத்தில் ஒருபாட்டு.

## ககூ௩. இராமசாமி முதலியார்—நா. வே.

(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் தென்காசிப் பிரிவு கீழப்பாவூர் என்னும் ஊரில் வேங்கடாசல முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். திருவருளால் எளிதாகவே செய்யுளியற்றும் ஆற்றல் இவருக்குண்டாகியது. அதனால் அருட்கவி என்னுஞ் சிறப்புப் பெயரும் பெற்றார். இவர் கீழப்பாவூ ரென்னும் பாகை மாநகரில் எழுந்தருளிய சிவகாமியம்மன் மீது "சிவகாமியம்மன் ஆசிரிய விருத்தம்'' என்னும் நூலை இயற்றியுள்ளார். நூலின் பாடல் ஒன்றை அடியிற் காண்க.

" எப்போதும் உனதுதிரு நாமமே புகலுவோர்
ஈசனடி யார்க்கிருவோர்
ஏழைக் கிரங்குவோர் ஆணவம் அடக்கினேர்
இசைபாடு வோர்அந்தணர்
தப்பாது நதிதோய்ந்து குருபூசை செய்தறந்
தனைநடத் துவரிவர்களைத்
தாழ்மையொடு பணியவும் அவர்கள்சொல் என்செவி
தனக்கமு தெனக்கொள்ளவும்
முப்பாவி னுவிலுன் றனைந்நோந்தி ரஞ்செய்யும்
முறைமையும் பரியில்வாடும்
முதியவர்க் கன்னங் கொடுக்குமதி யுந்தந்து
முந்தியும் எனக்கருளுவாய்
அப்பாவி யானுலும் உனதிதயம் அறியுமற்
றோரறிகு வார்ஏழையை
அன்பர்கள் தினம்பரவு தென்பாகை நகரில்வளர்
அம்மைசிவ காமிஉமையே "

மற்றும் இவர் "திருவாலியீசுரர் தோத்திரப் பாமாலை" என்னும் நூலையும் பாடியுள்ளார். சங்குக்கவிராயர், மதுரைத் தேவார பாராயணம் அ. முத்துச்சாமி பிள்ளை ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" செந்திரு மாலும் பூவில்வாழ் அயனும்
தேடினுந் தேடுதற் கெட்டா
தந்தரங் கடந்தும் பாதலந் தனைந்தும்
அருபியாய் நின்றமெய்ப் பொருளே
சந்ததநினது பதமலர் துதிசெய்
தமியனைக் காத்தருள் புரிவாய்
இந்தநல் வேளை பாகைவாழ் திருவா
லிசுரா ஏகநா யகனே "

என்பது தோத்திரப் பாமாலையில் ஒருபாட்டு.

## ௧௬௪. இராமசாமி முதலியார் (அரிய)
## (1910)

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள அரியநாயகிபுரம் என்னும் ஊரில் இருந்தவர். இவர் சென்னிகுளம் அண்ணுமலை ரெட்டியாருடைய காவடிச் சிந்தின் பண்ணமைந்த "அருண்ஞான சிந்து" என்னும் நூலைப் பாடியுள்ளார்.

மேலகரம் சொ. சுப்பிரமணியக் கவிராயர், திருநெல்வேலி பால்வண்ண முதலியார், கோ. சுந்தரமூர்த்தி பௌராணிகர், குலசேகரபுரம் உயரவிளை சிவராமலிங்கம் பிள்ளை ஆகியோர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். 'புள்ளிக்கலப மயிற்பாகன்' என்னும் சந்தம் அமைந்த சந்தப் பாட்டின் முற்பகுதியை அடியிற் காண்க.

" எண்ணாதெல் லாமுள்ளெண்ணும் மனமே—சும்மா
ஏக்கமுற்று வாடுவதேன் தினமே—இக
இன்பந் துறந்துபர இன்பம் பொருந்துநல்லோர்
இனமே சார் கனமே 1
கஞ்சா அபின்கட்குடி யாதே—குடிந்துக்
கருத்தழிந் தேவின்மடி யாதே—காணும்
அஞ்சவத்தை உற்றறியும் அறிவுதா னாகப்படி
யாதே துடி யாதே 2
அண்ணாக்குன் னாக்குமந்தி நாடு—அதில்
அசையுங்கால் கண்டதுடன் கூடு—மேலை
அண்டமதிற் சென்றொடுங்கி ஆகாச மாகியதே
பாடு முத்தி விடு. 3
..................................... "

## ககூரு. இராமசாமி முதலியார்—சா.

(1883)

பாறை நகர் என்னும் பிரமபுரியில் சாமண்ண முதலியார் என்பவருக்குத் தலைமைப் புதல்வராகத் தோன்றியவர். அவ்வூரில் இருந்த பழநியப்பக் குருக்களையா என்னும் அறிஞரிடத்தில் கல்வி கற்றுத் தேறினார். நல்ல அறிஞராகிய இவர் தம்முடைய ஆசிரியராகிய பழநியப்பக் குருக்களையா இயற்றிய பதிகத்திற்கு,

" தவமிகும் பிரம புரியெனும் பாறைத்
தனிநகர் வாழ்சுந்த சைவன்
பவமிலா உபமன்னி யரிஷி கோத்ரப்
பழநியப் பண்ணல்பார்க் கமுதா
நவமதாம் உய்யற் பத்துயிர் வருக்கம்
நலங்கிளர் பழநியம் பதிகம்
தவறிலா தியற்றல் கேட்டுவி ரப்ப
தயாநிதி யச்சிலிட் டனனே "

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## கசுசு. இராமசாமி முதலியார் (பாலூர்)

(19 - நூ.)

தொண்டைவள நாட்டில் பாலூர் வடபாதி என்னும் ஊரில் இருந்தவர். இவர், 'பிரமவிலாசம்' என்னும் நூலை இயற்றியிருக்கிறார். அந்நூல் பிரமத்தின் செய்திகளைப் பற்றிக் கூறுகிறது. நூறுபாடல்கள் அடங்கியது. பாடல்களில் ஒன்றை அடியிற்காண்க.

" ஞானியாய் இருக்கும் பேர்க்கு
நாள்தொறும் அன்ன மிட்டு
மானியாய் இருந்து வாழ்த்தி
வணங்கியே சேவை செய்தால்
யோனியிற் பிறப்ப தில்லை
உலகத்தில் இறப்ப தில்லை
மேனிகழ் தேவ ருக்கு
விளைவிக்கும் பிரமம் ஒன்றே."

இவரியற்றிய தனிப் பாடல்களில் ஒன்று,

" தந்தைதாய் ஒன்றான தருணத்தில் சற்குரு
தவழ்ந்துவிளை யாடி யங்கே
தன்னிச்சை யாய்ப் புகுந் துதரத்தில் கெர்ப்பமாய்த்
தப்பிநாம் உதித்து வந்தோம்
சந்ததி விளங்கவே சதாசிவப் பிரமமும்
சரியைகிரி யைக்குன் னேயே
தவறுது செய்யவைத் தென்னைமெய்ஞ் ஞானத்தில்
தங்கும் படிக்க ருளினர்
சந்தேக மில்லையது சரியாக நம்புவாய்
சத்தியம் இதுசத் தியம்
சகலமும் உணர்ந்தநீ சஞ்சலம் அகற்றியிரு
சர்வமும் பிரம சொருபம்
சிந்தைதனில் அப்பரன் இருந்தாட்டு கின்றனன்
தேகம தநித்த மென்பார்
செகமென்ப தியாவையும் கானலின் புனலரன்
திருவடியில் மனம்வைப் பையே"

என்பதாகும். இவருடைய நூலுக்குப் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், கந்தாடை துரைசாமி அய்யங்கார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## கசூஎ. இராமசாமி ரெட்டியார்—ரா.

இவர் கூடலூர்த் தாலூகா உள்ளேரிப்பட்டு என்னும் ஊரில் நத்தம் இராயல் ரெட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் பழனிதண்டாயுதபாணிமீது பதிகம் ஒன்று பாடியுள்ளார்.

" திங்களுங் கங்கையர வணிபரம னுர் விழியில்
நிகழுமறு பொறிதோன்றிடத்
திக்கடவுள் அநலேயும் சரவணப் பொய்கைவிட
சிறுமதலே ஆறுகவும்
மங்கையுமை யாள்மனம் மகிழ்ந்திரு கரங்களால்
மார்போ டணைத்தெடுக்க
மன்னியொரு வடிவான நின்னுடைய மகிமையை
மண்டலந் தேவர்கள் அறிவார்
பங்கயன் மண்டையணி பவர்குரு கனிகையில்
பற்றியிவ் வுலகை வலமாய்ப்
பாங்குடன் வருபவற் கீவலென இபமுகன்
பார்த்தேங்க வேண்டும் என்று
தங்கமயி லேறியுல கேழும்வல மாய்வந்த
தந்தையே எனேயா ளுவாய்
தண்டா ரணிப்புலவர் கொண்டாடு பழநிவளர்
தண்டா யுதக் கடவுளே "

என்பது பதிகத்தில் ஒருபாட்டு.

## கசூஅ. இராம சுப்பிரமணிய ஐயர்
(19 - நூ.)

இவர் புதுக்கோட்டை நாட்டினர். வாரூர் வால குமாரசாமியின் அன்பராக விளங்கியிருந்தவர். இவர் 'குமாரசைலாட்டகம்' என்னும் வடமொழி நூலேத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடியிருக்கிருர். அந்நூலேப் பாராட்டிக் குடந்தை நடேச ஐயர், திருமுல்லே வாசல் முத்துச்சாமி ஐயர், காருகுடி நாராயணசாமி ஐயர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" பொன்னிவர்ந்த மகுடமோடு பொற்பமைந்த நற்குழை
மின்னுமாறு வதனமக்க மேனிமஞ்ஞை யூர்திவேல்
பன்னுசத்தி பன்னிரண்டு பாணிவார ணப்படம்
மன்னுபுல்வ யன்மலேக்கு மாரவேலே வாழ்த்துவோம் "

என்பது நூலில் ஒருபாட்டு.

## கசுகூ. இராமச் சந்திர ஐயர்—எம். ஆர்.

(20 - நூ.)

இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் திருவக்னிசுவரபுரம் என்னும் மேலநத்தம் கிராமத்தில் சுதேசவைத்தியராக இருந்தவர். இவர் அம்மையின் அருளையுஞ் செம்மையாகப் பெற்றவராகலின் இவருடைய பெயர் அம்பிகாதாஸ் எனவும் வழங்கியது. இவர் 'பாலையா நந்தமணிப் பாடல்' என்னும் நூலை இயற்றியுள்ளார்.

" நட்டநடு வோங்குமணி நாளுடு நின்றமணி
நல்லபரஞ் சோதி மணியே
அட்டமா சித்திமணி அட்டாங்க யோகமணி
எட்டுமெட் டாத மணியே
சிட்டருற வானமணி சிமாட்டி யானமணி
செகதேக மான மணியே
இட்டமிக வானமணி இகபரத் நாடுமணி
பாலையா நந்த மணியே "

என்பது நூலில் ஒரு பாட்டு.

## களo. இராமச்சந்திர புலவர்—வீ. அ.

(19 - நூ.)

இவர் தொண்டைமண்டலத்தில் வல்லகாளத்தி நகர் என்னும் ஊரில் அயோத்திதாச கவிராச பண்டிதர் என்னும் புலவருக்குப் புதல்வராகத் தோன்றிப் புலவராகத் திகழ்ந்தார். 'புரூரவச் சக்கரவர்த்தி நாடகம்' என்னும் பெயருடைய நாடக நூல் ஒன்றை இவர் இயற்றியிருக்கிறார். அந்நூலின் நான்முகம்: "சகல புவன சராசரங்களையும் சிருட்டித் தழிக்கும் பகவன் அருளால் இப் பூமியின்கண் விளங்கும் இந்திரபுரம் என்னும் பதியில் அரசு நடாத்திய புரூரவச் சக்கரவர்த்தி சரித்திரத்தைச் சென்னை வேளாள தேனும்பேட்டைப் பாலிய சுகசங்கித விநோத நாடக சபையாரிதை நாடகமாகச் செய்தளிக்க வேணுமெனக் கேட்டுக் கொண்டதன்பேரில் புரூரவச் சக்கரவர்த்தி சநிபகவான் மாய்கையால் அநேக இடர்களை அனுபவித்து மறுபடியும் இந்திர புரத்தை வந்து சேர்ந்து பட்டாபிடேகஞ் செய்துகொள்ளுகிற

வரையில் அடியேன் சிற்றறிவிற் கெட்டியவாறு நூதன இந்துஸ் தான் ஜாவளிவர்ண மெட்டுகளாற் செய்யுட்களமைத்து அதற்குப் பொருந்திய விருத்தங்களும் வசனங்களும் இயற்றி வெளி யாக்கினேனாகையா லிதிற்குேன்று மிலக்கண விலக்கிய வழுக் களைக் கற்றறிந்த மகான்கள் குறைகூருமலு மடிமையைப் புகழாமலும் இகழாமலும் புண்ணியவானுடைய சரிதையைத் தெரிந்துகொள்வீர்களெனத் தங்கள் பெரும்பேற்றினை விரும்பு கின்றவனுகிய இங்ஙனம் வி. அ. இராமச்சந்திர புலவன்'' என்பதாம்.

"சீர்பூத்த விண்ணவர்பன் னவர்கள் தேடும்
தெய்வமே கருணைதரும் இனிய மான்பே
தார்பூத்த வல்லபைக்கு உகந்த சத்யத்
தன்னமுதே மறைபுகலும் அரிய வாழ்வே
வார்பூத்த மாபுரூர்வச் சக்ர வர்த்தி
வளமோங்கும் சரிதையதை வழுத்தப் பூவில்
பேர்பூத்த சிவனுமையாள் ஈன்றெ டுத்த
பெட்புளவி நாயகன்தன் கழல்நமஸ்தே''

என்பது நூலின் காப்புப் பாடல்.

இவர் காலத்தில் இரங்கோனில் பெ. மா. மதுரைப் பிள்ளை யென்னுஞ் செல்வர் ஒருவர் இருந்தார். அவரிடம் உதவி பெற்ற பலரில் இவரும் ஒருவர். அவர் மீது இவர் இயற்றிய பாடல் களில் ஒன்றை அடியிற் காண்க:

"பூமியுங்குன் டலம்பரிதி குபேர னுற்கை
புட்கலந்தோ டகிலசரா சரம்வ குத்த
நேமிவல வன்பரசு பாணி மாயன்
நேர்த்தியுமை லக்குமிஏ ரம்பன் சாமி
நாமகள்பா ரதியுங் கள்கருணை யாலே
நவிலுமிரங் கோனெங்கள் ராய பாதூர்
மாமதுரைப் பிள்ளைவளம் ஆயுள் நீடி
வந்ததினுல் வாழ்த்துப்பா வசனிப் பாமே''

இவர் மேற்படி மதுரைப் பிள்ளை மீது பல இசைப் பாடல்கள் பாடியுள்ளார். அவைகள் "மதுரைக் கீதம்'' என்று பெயர் பெற்றுள்ளன.

## கஎக. இராமதாசப் புலவர்—பி. வீ.

(20 - நூ.)

இவர் சென்னைமாநகரில் வாழ்ந்திருந்தவர். பூஞ்சோலை முத்துவீர நாவலர் என்பவரிடந் தமிழ்க் கல்வியை நன்கு கற்றுத் தேறினர். இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழினும் வல்லவர். பேரவைகளிற் சொற்பொழிவு நிகழ்த்துவதினுங் கெட்டிக்காரர்.

> " நத்துவத்தின் நிலையறியும் முதுகலைதேர் நாவலன்நசாவ தானி
> முத்துவீ ரப்பெரியன் நம்மிடமு ணர்ந்துகலை முகடாம் போரூர்
> சித்திதரு நிம்பனடி இரட்டைமணி மாலையினைச் செய்தளித்தான்
> பத்திமிகும் ரத்தினமென் னும்பெயரான் மதிமிகுநற் பாவ லோனே "

என்னுஞ் செய்யுளைப் போரூர் வேம்பாடி விநாயகர் இரட்டைமணிமாலை என்னுஞ் செய்யுள் நூலுக்குச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்.

## கஎஉ. இராமதாசர் (பொற்களந்தை)

(1871)

இவர் பொற்களந்தைப்பதி என்னும் ஊரில் இருந்தவர். திருமாலிடத்திற் பெருமால் கொண்டு பாமாலை புனைந்து பணிந்தவர். இவர் இசைப் பாடல் முதலியவை இயற்றுவதினும் வல்லவராக இருந்தவர் என்பது " சங்கீத சாகித்ய வித்வாம்சர் " என்று இவருக்களிக்கப்பட்டுள்ள சிறப்புச் சொல்லாற் பெறப்படுகிறது. இவர் அலர்மேல்மங்கை மாலை என்னும் மாலையைப் பாடியுள்ளார். கட்டளைக் கலித்துறையால் அமைந்த அம் மாலை நூறு பாடல்களைக் கொண்டது.

> " காய்வெஞ் சினத்தன் கொடும்பாவி
> நீயென்றென் கண்முன்வந்து
> வாய்விண் டுரைக்கினு நின்னையல்
> லாற்கதி மற்றறியேன்

தாய்வின் டலந்தினின் மேவி
யுலாவிநற் றண்டரளம்
வேய்வின் டொளிர்திரு வேங்கடம்
வாழலர் மேன்மங்கையே"

என்பது மாலையில் ஒரு பாட்டு. இவருடைய இயற்பெயர் வேறென்றும் இராமதாசரென்பது அன்பு காரணமாகப் படைத்திட்டுக் கொண்ட பெயரென்றும் உணரப்படுகிறது. இவர் இயற்றிய பிற நூல்கள் கிடைத்தில.

## களஙூ. இராமநாத கவிராயர் (புளியங்குடி)

(1888)

இவர் புளியங்குடி என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். போடி நாயக்கனூர்ப் பெருநிலக்கிழார் இராசபாண்டிய நாயகர் பேரில் 'பள்ளுப் பிரபந்தம்' என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார். அப் பள்ளு 'தென் காசைப்பள்ளு' எனப் பெறும்.

"சிட்டருக்கும் துட்டருக்கும் வாட்கை தோன்றச்
செஞ்சுடர்க்கும் ஆம்பலுக்கும் நிகரி தோன்றச்
சட்டமிடுந் திருமலைப்போ டய்ய னின்ற
சமுகனெனுந் தென்மலைராசைய போசன்
கட்டளையிட் டருள்முறைமை தழைக்கு நாட்டில்
காரிகையாள் மூத்தபள்ளி வரவு கண்டே
இட்டமுடன் கண்டதுகா ணுதநாகம்
இரண்டொன்றிற் கிளைஞர்மதி இளைத்த நாமே"

இது மூத்தபள்ளி வரவு. இந் நூலுக்கு மதுரைத் திருஞான சம்பந்தர் ஆதினப் புலவர் சுந்தரலிங்க பிள்ளை சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## களச. இராமநாத பிள்ளை (தூத்துக்குடி)

இவர் திருமந்திர நகர் என்னும் தூத்துக்குடியில் வாழ்ந்திருந்தவர். மருத்துவம், மந்திரம், காலக்கணிதம் முதலியவைகளிலும் வல்லவர். தூத்துக்குடித் தலபுராணம், "திருமந்திரநகர்த் தல புராண சங்கிரக வெண்பா" முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். திருமந்திரநகர்த் தலபுராண சங்கிரக வெண்பாவுக்கு கௌரிமாயூரம் சீநிவாச சர்மா, சீநிவாச ஐயர், ந. சிவகுருநாத பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"கோதண்ட ராமன் குனிசிலையால் ராவணனை
மாதண்டஞ் செய்ய மனத்தெண்ணி—மூதண்டம்
ஓங்கு பொழில்சூழ் உயர்காசி பேச்சுரன்குள்
ஈங்குபூ சித்தான் இயைந்து"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## களரு. இராமநாதன் கவிராயர் (ஆழ்வார் குறிச்சி) (1800)

இவர் ஆழ்வார் குறிச்சி என்னும் ஊரில் ஏறக்குறைய இருநூறு ஆண்டுகட்கு முன்பு இருந்தவர். இவர் "சிவசயிலப் பள்ளு" என்னும் பள்ளு நூலினைப் பாடியுள்ளார். மூத்தபள்ளி முறையிடுதலை அடியிற் காண்க:

"கும்பிடுகிறேன் விழுந்து கும்பிடுகிறேன் மூன்று
கோழியும் அவலும்வைத்துக் கும்பிடுகிறேன்
கம்பினல் அடியாதேயும் கும்பிடுகிறேன் கருங்
காக்கைமூக்கு நயினரே கும்பிடுகிறேன்
வம்புவார்த்தை சொல்லாதேயும் கும்பிடுகிறேன்சிறு
வளைதடிக் கையனரே கும்பிடுகிறேன்
நம்பொறுது பள்ளன் செய்யும் வஞ்சகமெல்லாங் கேளும்
நானுரைத்துப் பண்ணையாண்டே கும்பிடுகிறேன்
கொட்டிலில் ஒருநாள் வரச் சொன்னலும்வாரான் வந்து
கூடிக்கலந்தென் காமக் குறைச்சலுந் தீரான்
கட்டிய நீரணை குளங்களைப் பாரான் பின்
கனக்கவே உடைக்கும் உடைப்புகளைத் தூரான்"

## களசு. இராமநாதையர் (நல்லூர்)

சோழவள நாட்டில் நல்லூர் என்னும் ஊரில் இருந்தவர். திருநல்லூர் இரட்டை மணிமாலை, 'கலியாணசுந்தரர் பதிகம், ஆண்டார் பதிகம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

"இருக்காதி வேதந் திசைகண்ட ராவணன் தன்பலத்தின்
பெருக்கா லெடுக்கப் பெருவிர லூன்றிய பிஞ்ஞகனே
திருக்கா விரிக்கரை மேவிய நல்லூர்த் திகம்பரனே
இருக்கே னினியுன் மலர்ப்பதங் காணு தொருதினமே."

என்பது இரட்டை மணிமாலையில் ஒரு பாட்டு.

## கஎஎ. இராமப் பிரமயோகி (முக்தி)

இவர் 'முக்தி சோபனம்' என்னும் நூலை எழுதியுள்ளார். இவர் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலியன விளங்க வில்லை. நூல் ஆங்கிலம் 1905 ஆம் ஆண்டில் அச்சாகி வெளிவந்துள்ளது நூலில் விடுபேற்றிற்கான வழி பக்தி முதலிய அறிவுரைகளும் யோகாசன முறைகளும் கூறப்பட்டுள்ளன.

## கஎ௮ இராமலிங்க செட்டியார் (சேலம்)

பதினெட்டாம் நூற்றுண்டில் சேலத்தில் சிறந்த தமிழறிஞராக விளங்கிய இவர் இராமாயணச் சொற்பொழிவு செய்வதினும் பாரதச் சொற்பொழிவு செய்வதினுஞ் சிறந்து விளங்கினர். செய்யுள் பாடுந்திறம் நன்கு அமையப்பெற்ற இவர் பல நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். சிங்காரரச மஞ்சரி உரைக்குப் பாடிய சிறப்புப் பாயிரத்தை அடியிற் காண்க:

'' தடநதிப் பவளச் சடாமகுட சுகவன
 நயாநிதியை இனிதுவாழ்த்தித்
தகுபழநி நகர்மாம் பழக்கவிச் சிங்கத்
 தமிழ்ச்சக்ர வர்த்திஇந்நாள்
வடகலைப் படியே வழுத்துசிங் காரரச
 மஞ்சரியை ஆங்குதற்கு
வாய்த்திடத் தெளிவாக வளர்மாரியப்பமதி
 வலனிடு பொழிப்புரையுடன்
கூடவிடந் தமுதெனக் காண்பவர்கள் யாவரும்
 கைக்கொளச் சேலமூதூர்
கனயோக நனவைசிய குலசிகா மணிகளுப
 காரர்வர்த் தகசிரேட்டர்
திடபுயக் கோவிந்த சாமிமக ராசனுயர்
 செல்வவேங் கடராமவேள்
செப்புமிவர் இருவரும் சென்னையச் சேற்றிமகிழ்
 சீர்த்திநிலை நாட்டினரரோ ''

## கஎகூ. இராமலிங்க செட்டியார் சி. ஆ. வெ. (1912)

இவர் சுப்பிரமணியபுரம் என்னும் ஊரில் இருந்தவர். கந்த புராணச் செய்தியை அமைத்துக் "கந்தர் அம்மானை'' என்னும் இந்நூலைப் பாடியுள்ளார். தஞ்சை சதாவதானம் சுப்பிரமணிய

ஐயர், திருவாரூர் நவநீத கிருட்டிண பாரதியார், தஞ்சை கருணைப் பிரகாச சுவாமிகள், இராமநாதபுரம் தங்கவேலுச் சாமித்தேவர், உத்திரமேரூர் துரைசாமிநாயகர், சுப்பிரமணியபுரம் சுவாமிநாத தேசிகர், கெடியன் செட்டியார், பூவுற்றகுடி மீனாட்சி சுந்தர தேசிகர், நல்லமா காளிப்பட்டி தெய்வ சிகாமணிக்குருக்கள் தஞ்சை சுவாமிநாத பிள்ளை, சிவ. சோலை முத்துப்பிள்ளை, சிதம்பரம் அ சாமிநாத பிள்ளை முதலியோர் இந் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"பூமாதின் நாதன் புகழ்முருக வேள்கதையை
நாமா நருளால் நலம்பெறவே கூறுதற்கு
மிக்க விசய நகர் மேவும் விநாயகன்றன்
நக்கஅர விந்தமலர்த் தாளிரண்டுங் காப்பாமே
காசினியின் மேன்மை கனத்தசுப்ர மண்யபுரத்
நாசையுடன் மேவுசுந்தர ஐங்கரன்தாள் காப்பாமே
திருவாழ் பெருந்துறைசைத் தேவபிரான் ஆன்மேசர்
இருபொற் கமலமலர் எழிற்பதங்கள் காப்பாமே
மலைமகளாய்ப் பூவுலகில் வந்து தவம்புரியும்
தலயோகாம் பிகையினது தாளிணைகள் காப்பாமே"

என்பது நூலின் தொடக்கம்.

## க௩0. இராமலிங்க முதலியார்—வே.

19-ஆம் நூற்றாண்டின் இறுதியிற் சென்னை மாநகரத்தில் வாழ்ந்திருந்தவர். தமிழ்ப் புலமை, மருத்துவம், காலக்கணிதம் முதலியவைகளில் வல்லவர்; கெவுளி சாத்திரம் முதலிய பல நூல்களை இவர் ஆராய்ந்து அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். இடையிடையே பாடல்களைப்பாடி இடைச் செருகலாவுஞ் சேர்த்திருக்கிறார்.

"விட்ட கெவுளி குரலொன்றும்
விண்ட இரண்டுந் தனலாபம்
வட்ட மஞ்சும் இருநிதியம்
வருமே நான்கு கால்நடைகள்
எட்டும் ஆறும் ஆகாது
எண்ணில் ஏழில் ஆள்வரத்து
சட்டப் பல்லி குரல்மூன்றும்
சாவுண் டென்று சொல்மாதே"

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## கஅக. இராமலிங்கம் பிள்ளை—வ. க.

(20 - நூ.)

வடாற்காடு மாவட்டம் ஆரணியில் இருந்தவர். தமிழ் நூல்களை நன்கு ஓதியுணர்ந்த இவர் புராணச் சொற்பொழிவுகள் செய்வதிலும் செய்யுட்கள் இயற்றுவதிலும் வல்லவராகத் திகழ்ந்தார். இவர், "புத்துமாரியம்மன் தோத்திரம்" என்னும் நூல் ஒன்று பாடியுள்ளார்.

"தொண்டைநாட் டெல்லைக்குந் தென்பாலு மாகியே
சோழநாட் டிற்கு வடபால்
தொக்கநடு நாட்டினில் மிக்கவள மோங்கவே
சோலைகள் இருக்கு மிடமாய்
பண்டையொரு கான்யாறுதென்புறம் இலங்கவே
பாரித்த ரோட்டி னொருபால்
பத்தரா நியரெலாம் மிக்குள கிராமங்கள்
பரவியே சூழ்ந்தி ருக்கக்
கொண்டநின் கோலமே கண்டுதொழு வார்க்குநற்
கோயிலும் அமர்ந்தி அருளுள்
குறைவிலாப் புத்தென எழுந்துபன் னகவுருக்
கொண்டநின் சோதி ரூபம்
கண்டவ ரெலாமிந்தத் தொண்டுபுரி வோமென்று
கைதொழ இருக்கும் அமுதே
கருமாச்சி பாளையம் அமர்ந்துவளர் அம்மையே
கனபுத்து மாரி யுமையே"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## கஅஉ. இராமாநந்த சுவாமிகள்—நெல்முடிகரை

(20 - நூ.)

பாண்டிவளநாட்டில் திருப்பூவணம் நெல்முடிகரையில் இருந்தவர். இவரைப் பற்றிய செய்தி தெரியவில்லை. இவருடைய பாடல்கள் "இராமாநந்த சுவாமிகள் திருப்பாடல் திரட்டு" என்னும் பெயரோடு அச்சிடப்பட்டுள்ளன. நூலில் "மனோன் மணிமாலை, தேசோமயமாலை, ஆநந்தம், ஆதியே, நல்லவள்' திருமுகத்தான், வாழ்வெனவும், சந்திரரும் சூரியரும், பூரணிக் கண்ணி, குருபரன் கண்ணி, கீர்த்தனம், வேல்வெண்பா,

நாராயணப்பத்து, பூங்குடி கற்பகநாதர் பதிகம், அளவாய்க் கோட்டை செப்புநாதர் பதிகம் ஆகிய பகுதிகள் அடங்கி யுள்ளன.

"பூரணமாய் நிறைந்தாளே புந்திதனில் உறைந்தாளே
போற்றும் அன்பர்
காரணமாய் அறிந்தாளே கனகசபை உறைந்தாளே
காட்சி யெல்லாம்
தோரணமாய்ச் சமைந்தாளே சுகவாரி தொகுத்தாளே
தொண்ட னேனை
ஆரணமாய் நின்றாளே அன்பரொடு கூட்டுதற்கிங்
கழைத்தேன் அம்மா"

என்பது மனோன்மணிமாலையில் ஒரு பாட்டு.

## கஅரு. இராமானுச ஐயர் (கொமரலிங்கம்) (1910)

இவர் கொங்குவளநாட்டில் கொமரலிங்கம் என்னும் ஊரில் இருந்தவர். கண்ணுடிப்புத்தூரில் திருக்கோயில் கொண்டுள்ள அழகுநாச்சியம்மன் மீது பதிகம் ஒன்று பாடியுள்ளார். அப்பதிகம் 'அழகுநாச்சியம்மன் பதிகம்' என்னும் பெயரையுடையது.

"மெத்தப் பிலுக்குநடை கச்சைத் தகர்க்குமுலை
மெய்ச்சித்தி ரத்தின் வடிவும்
மிக்கக் கருத்தகுழல் இக்கைப் பழித்தமொழி
மின்னெப்ப மன்னும் இடையும்
முந்தைப் பழித்தநகை நந்துக் கிணைத்தகள
முற்றப் பசுங்கிள் ளையார்
மொய்ச்சந்த முங்கண்டு நச்சித் திரிந்தென்றும்
முற்றுந் தரிந்திரி களாய்
சுத்தப் பயித்தியர் எனக்கத்தி யேசுப்ர
தோகையர் மயக்கில் விழ்ந்து
துட்டப் பிணிக்குட்ட வெட்டைக் கிரந்திக்குச்
சோம்பித் திரிந்திடாமல்
சித்தம்ப்ர மிக்குமெனைப்பந்திக்கு மேவவருள்
சித்திக்கு முத்தி வடிவே
சீதர சகோதரிசிர் பாகரி நிதங்கருணை
செய்யழகு நாச்சி யுமையே"

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு. இவர் செல்வக் கணேசர் பதிகம் என்னும் பதிகமும் பாடியுள்ளார்.

## கஅச. இராமாநுச செட்டியார்—கோ

(20 - நா.)

புதுச்சேரியில் நெல்லிமாநகரில் கோபால செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் பு.அ. பெரியசாமிப் பிள்ளை என்பவரிடங் கல்வி கற்றுத் தமிழறிவு பெற்றுச் சிறந்தார். பல பொதுநலச் செயல்களில் ஈடுபட்டு விளங்கினர். செய்யுள் பாடுவதினும் வல்லவராகிய இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை. தம்முடைய ஆசிரியரின் நூல் கட்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"கார்வளர் சோலை நீர்வளர் தடத்துத்
துறையினி லென்று முறையு மோதிமம்
பேட்டுடன் கூடி யோட்ட மெடுக்கத்
தேமாஞ் சினைமிசை நாமான் புறவே
பயிலு மிசையுடைக் குயில்வா யடங்க
மன்ற லாற்றித் தன்றுணை தந்த
அன்றில் மனமிகக் கன்றி வாடப்
படர்சிறைப் பிள்ளைகள் அம்பினைந் தருக்களில்
... ... ... ... ... ... ..."

இஃது இவர் இயற்றிய சிறப்புப்பாயிரம் ஒன்றின் தொடக்கம்.

## கஅரு. இராமாநுச தாசர் (திருத்தில்லை)

(20 - நா.)

திருத்தில்லையில் இருந்த வைணவப்பத்தர். இவர் வீர நாராயணபுரம் என்னும் காட்டுமன்னர் கோவிலில் எழுந்தருளி யுள்ள வீரநாராயணன் பேரில் நவரத்தினம், அநுமான் பேரில் பஞ்சரத்தினம், சீனிவாசப் பதிகம், அழகியமன்னனுர் அட்டகம் முதலிய நூல்களைப் பாடியிருக்கிறுர்.

"ஒளிமேவும் மணிவடங்கண் டுவக்கும் ரத்ன
ஓங்கலென வேபருத்த முலையார் தங்கள்
அளிமேவுந் துகிலதனை வாரிப்புன்னை
அழகியநன் மரமதனில் ஒளித்த தேவே
களிமேவுங் கிளிமொழியாள் யசோதை தாய்க்குக்
கருணையுடன் அண்டமெலாம் கனிவாய்க் காட்டி
வெளிமேவும் பராபரமே சீநிவாச
வித்தகமே வெறியேன் நான் எனையாள் வாயே"

என்பது சீனிவாசப் பதிகத்தில் ஒரு பாட்டு.

## க௨௬. இராமானுசம் பிள்ளை (நெரிஞ்சிக்கோரை)

(19 - நூ.)

இவர் சோழவளநாட்டில் உடையார்பாளையம் பிரிவு நெரிஞ்சிக்கோரைவட்டம் என்னும் ஊரில் கர்ணமாகத் தொழில் புரிந்து கொண்டிருந்தவர். தமிழ்நூல்களை நன்கு கற்றிருந்த படியால் நாடகம் முதலியவைகளை இயற்றும் ஆற்றலும் அமையப்பெற்றவராக விளங்கினர். "மன்மத நாடகம்" என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றுள்ளது.

"இந்தவித மிருகங்கள் மையலாக
எதிர்சூரத லீலைகளை எல்லாங் கண்டு
நந்திமயங் கிடுங்காலம் இந்தக் கோலம்
நம்மையல்லால் அரன்தவத்தில் நடப்ப தேது
சிந்தையினில் மயங்கியவர் ஞானக் கண்ணால்
சிலைமாரன் வாளியெனச் சித்தந் தேர்ந்து
கந்தமலர்க் கணையெல்லாம் பொடியதாகக்
காட்டியபஞ் சாட்சரத்தால் ஓட்டி னரே"

என்பது நாடகத்தில் ஒரு பாட்டு.

## க௨௭. இராமானுசாச்சார்யர்—ம. வீ.

(20 - நூ.)

வடமொழியிலுந் தென்மொழியிலும் வல்லவராகிய இவர் கும்பகோணம் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராக இருந்தார். மகாபாரதத்தை அச்சிற்பதிப்பித்து வெளியிட்டார். "இலாங்மன்ஸ் தமிழ் இலக்கணம்" முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

## க௨௮. இருளப்ப செட்டியார்—ரா.

(20 - நூ.)

இவர் கூடலூர் தாலுக்கா மாளியம்பட்டு என்னுஞ் சிற்றூரில் இராமலிங்க செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். சோலை வீரசைவமடாலயம் சிவயோக மூர்த்தி களாதீனம் அப்பாத்துரை ஐயர் என்பவரிடங் கல்வி கற்றவர். இவர் முருகர் கவசம் என்னுஞ் சிறிய நூலைச் செய்துள்ளார்.

"கன்ருல் விளவெறிந்த கண்ணன் துதிக்க
நன்குன்றத்தூரில் நான்வந் துதிக்க
மாற்ருர் தம்மை மாளச் செய்த
தேற்ருய் எனக்குத் தெளிவிக்க முருகா
ஆறுமுகந் தோய் அபயம் உனக்கு"

என்பன கவசத்தில் சில அடிகள்.

## கஅகூ. இலக்குமிநாராயணப் புலவர் (சோழனம்மானை)

இவர் எவ்வூரினர் எக்காலத்தினர் என்னுஞ் செய்தியொன்றும் புலனாகவில்லை. இவர் "சோழனம்மானை" என்னும் அம்மானை நூலை இயற்றியுள்ளார். இச் சோழன் தன் மகனைத் தேர்க்காலில் இட்ட மனுநீதிச் சோழனவன்.

"சீத மதியுஞ் சூரியனும் தெற்குவடக்குற் றெழுந்தாலும்
ஓதநிறை நீர் சுவறிடினும் உரைக்க அரிய உயர்பு பெறும்
வேத முழுதும் பொய்த்தாலும் வேண்டு மகவா சையினுலே
பேத மாயிவ் வேடனையே பிடித்துத்தள்ளி விடுவேனே"

என்பது நூலில் ஒர் ஆசிரியவிருத்தம். இந்நூல் அழகுநம்பிக் கவிராயர் என்பவரால் ஆராயப்பட்டு அச்சாகி வெளிவந்துள்ளது (1920).

## ககூ௦. இலக்குமியம்மாள் (வளவனூர்)
(1910)

இவ்வம்மையார் நடுநாட்டிலே வளவனூரிலே இருந்தவர். பொதுவான கல்வியறிவை உடைய இவர், "சிலவதி சரித்திரக் கும்மி" "கண்ணப்பநாயனுர் கும்மி" ஆகிய நூல்களைப் பாடியுள்ளார்.

என்னமாய்த் தெரிந்து உரைப்பேன்
ஈசன் கதையை (என்)
க. ஆதி அந்தமும் அற்ற
அகண்டஸ் வரூபன் செய்த
அற்புத லீலையை
அறிந்துநான் தமிழாற் சொல்ல— (என்)
உ. எட்டும் ரெண்டும் எனக்கு
இன்னதென் றறியாத
மட்டிப் புத்தியிற் பிறந்து
மகாதேவன் சரித்திரத்தை. (என்)

என்பது நூலின் தொடக்கம்.

## ககக. இலாடமுத்து உடையார்—செ.

(20 - நூ.)

விருத்தாசலம் என வழங்கும் பழமலைப் பக்கத்தில் உள்ள இடையூரில் செல்லமுத்து உடையார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் இடையூர்ச் சொக்கநாதேசுவரர் பேரில், "அமிருதப் பிரவாகம்" என்னும் நூலையும், மீனுட்சியம்மை பேரில் "சிவரத்தின விருத்தம்" என்னும் நூலையும் பாடியுள்ளார்.

"அலைகடல்நஞ் சுண்டமரர்க் கமுதம் ஈந்தாய்
அருமறையும் கலைபலவும் அமர்ந்து போற்ற
மலைமகளுக் கொருபாகம் அளித்த நாதா
மாலயற்கும் எட்டாமல் வளருஞ் சோதி
கலைமகளுக் குரியோன்றன் கபாலங் கொண்டாய்
காமனையும் ஏமனையுங் கடிந்த ஈசா
பலமருவும் இடைநகர்வாழ் சொக்க நாதா
பதம்பணிந்தேன் பிறவிக்கடல் அழுந்தி டாயே"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ககஉ. இராமலிங்கம் பிள்ளை—நா.

(20 - நூ.)

இவர் திருத்தில்லைக்கு அண்மையில் உள்ள நகராமலை என்னும் ஊரில் கார்காத்த வேளாண் மரபில் நாராயண பிள்ளை என்பவர்க்கு நற்றவப் புதல்வராக 1897 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் பதினுன்காம் நாள் தோன்றினர். இவருடைய முன்னேர்களும் வழிமுறையாகக் கல்விநலம் அமையப்பெற்றவர்கள். இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்து ஆசிரியர்களிடம் கல்வி கற்றுப் புலமை பெற்றுர். தாம் கற்ற கல்வியை மாணவர் பலருக்குப் போதித்துப் புலவராக்கினுர். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் தமிழாசிரியராகவும் பணிபுரிந்தார்.

"நகரா மலையெனும் நன்னகர் வாழ்ந்தோன்
பகர்வே ளான்குலம் பயந்த படிமையன்
நன்னூ லாதிய தொன்னூல் பலவும்
மயக்கறக் கற்று மாணவர்க் கீந்த
ஆசான் சொற்பொருள் அணிநலம் அமைய

மாசறு செய்யுள் யாத்திடும் வல்லுநன்
அருணைக் கலம்பகப் பொருள் நயம் விரித்தோன்
திருப்பனந் தாள்வளர் செந்தமிழ்க் கல்லூரித்
தமிழ்ப்பணி புரிந்த தகைமை யாளன் ''

என்னும் அடிகள் இவருடைய வரலாற்றைக் கூறுகின்றன. இவர் தில்லைநவமணிமாலை, பிறவிக்கஞ்சி அலமரல், புன்மைக் கிரங்கல், வழிபடாமைக்கிரங்கல், வேண்டுகோள் வெண்பா முதலிய பதிகங்களும், கடகபந்தம், கமலபந்தம், சுழிகுளம் முதலிய ஓவியக் கவிகளும் இயற்றியிருத்தலோடு திருவருணைக் கலம்பகத்திற்கு உரையும் எழுதியுள்ளார். அவ்வுரையைப் பாராட்டிச் சீகாழி முத்துத்தாண்டவராய பிள்ளை,

" திருநாமம் ஐந்துடையார் திருவருணைக்
கலம்பகத்தைச் சிறக்க ஆய்ந்து
பெருநாம உரையியற்றிப் பேரறிஞர்
உளமகிழப் பிறங்கத் தந்தான்
கருநாமந் துடைப்பவர்வாழ்ந் துறைநகரா
மலைக்கமைமர் காரா என்சீர்
தருநாம இராமலிங்க பூபதிநாற்
கவிசொலுமுத் தமிழ்வல் லோனே "

என்று சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். தில்லைநவமணிமாலைப் பாடல் ஒன்றை அடியிற் காண்க.

" இன்றரு பலத்த இலஞ்சிசூழ் காவினில்
வண்டிசை காட்ட வன்னிகள் பாடக்
கம்புளின் குரலே கனையொலி முழவாக்
கொம்பரின் மஞ்ஞை கூத்தினைக் குயிற்றக்
குருகினங் காணூஉக் குளிர்மகிழ் தூங்குறூஉம்
பருகுபால் பொருஉம் பாடல் சான்ற
மாசறு மனத்தினர் வதிதரு தில்லை
ஆசறு மாடக அம்பலக் கூத்த
நின்னைக் காண்முனே நிச்சலும் பழிச்சுபு
என்னைக் காவென நின்னைத் தழுவ
மறலி தன்னை மகிதலந் தன்னில்
இயலுற உதைத்தே இன்புறு கருணை
வழங்கினை யாகலின் வந்தனன் நின்சரண்
எழுமலந் துடைத்தருள் வழங்கும் வணமே.''

இவர் 1956ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் முப்பத் தோராம் நாள் இறைவன் திருவடி நீழலையடைந்தார்.

## கக௩. உதுமானயினுர் லெப்பைப் புலவர் (காயல்)

இவர் காயற்பட்டணத்தில் வாழ்ந்திருந்தவர். முகமதிய சமயத்தினர். சிறந்த தமிழ்ப் புலவர். இசைப்பாடல்கள் பல வற்றையும் தனிப்பாடல்கள் பலவற்றையும் பாடியுள்ளார்.

"மதிநில வழைந்தோர் வாரார் மாநிலத்துள்ளோர் வாழ்த்தும்
அதிவித குறைஷி யோர்கள் அருஞ்சல வார்த்தை யோதப்
பதிபுவி நடுங்கச் சொர்க்கப் பவனியுல் லாசமாக
அதிபதி களுக்கு மேலாம் அதிபதி வாரார் வாரார்"

இஃது இசைப்பாட்டின் தொடக்கம். பாடல்களில் பல பிற மொழிக் கலப்புகள் மலிந்துள்ளன.

## கக௪. உலோகநாத முதலியார்—பா.

(1910)

இவர் தொண்டைவள நாட்டில் காவேரிப்பாக்கம் என்னும் ஊரில் பார்த்தசாரதி முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினுர். சென்னை மாநகரை அடைந்து அந்நாளிற் சென்னையில் சிறந்த வித்துவாகை விளங்கியிருந்த ம. இராசகோபால பிள்ளையிடம் இலக்கண இலக்கியங் கற்றுத் தமிழ்ப் புலமை பெற்ருர். அரசினர் ஆட்சி அலுவலகத்தில் வேலை பார்த் திருந்தார். இவர், "திருக்குருகைப் பிரான் உயிர்மெய் வர்க்க மாலை" என்னும் நூலைப் பாடியுள்ளார். நூலைப் பாராட்டிக் கிறித்துவக் கல்லூரித் தமிழாசிரியர் கோபாலாச்சாரியார், கோ. வடிவேலுச் செட்டியார், ஆ. மே. சென்னகேசவலு நாயுடு, சே. முத்துக்கிருஷ்ண நாயுடு, ம. இராசகோபால பிள்ளை, மகாதேவ முதலியார், கா. ர. கோவிந்தராச முதலியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"ஆனந்த மான அரங்கன் திருவடிமேல்
ஆனந்தம் ஆனஓர் ஆயிரம்பா—ஞானந்தேர்
நன்குருகை நாதனெழில் தாரணியோர் தாம்வாழப்
பன்புடனே தந்தான் பரிந்து"

என்பது மாலையில் ஒரு பாட்டு.

## ககரு. எதிராசனார் (முத்து)

(20 - நூ.)

இவர் கூத்திபாறை என்னும் நல்லூரில் முத்துக்கிருட்டிண மதுரகவி ராமானுச தமிழ்ப் பண்டிதர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினார். தம்முடைய தந்தையாரிடமே இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த அறிஞரானார். இவர் பூதர விலாசம் என்னும் நூலுக்குக் கொடுத்த சாற்றுக் கவியொன்றை அடியிற் காண்க:

"பூதர விலாச நாணிக்கண் புதைந்தல்
பூமது மாந்தும்வண் டோச்சி
ஆதர முடனே மருங்கணை குதலென்
ருகுமுந் நூலினை மருதூர்ச்
சீதரன் அனைய நாகய சாமிச்
செய்யகா மயநரேந் திரன்மேல்
கோதர மனநாட் டவர்மதன் பொன்னுங்
கூடல்நா வலனிழைத் தனனே"

## கககா. ஏகநாதர் (சித்தர்)

சித்தர்களில் ஒருவர். இவருடைய பெயர் பிரமானந்தச் சித்தர் எனவும் வழங்கும். சமாதி சூத்திரம் கஉ. பிரமாநந்தச் சித்தர் பாடல் ௬௪. என்பன இவரால் இயற்றப் பெற்றுள்ளன.

"தானதுவான சதாசிவங் கண்டால்
ஏனது சமூலம் எடுத்துநீ வந்து
ஊனது வாசி உருப்படக் களித்துக்
கோனது துண்டங் குறுகி யெடுத்திடே"

என்பது சமாதி சூத்திரப் பாடல்களில் ஒன்று,

## ககஎ. ஏகமுத்து ஆசாரி—கு. ல.

(1910)

பாண்டிவள நாட்டில் தூத்துக்குடியில் இருந்தவர். செந்தமிழ்ப் பாடல் இயற்றுவதினும் காலக்கணிதம் கணிப்பதினும் வல்லவராகிய இவர் "அருணாசல சுவாமிகள் பதிகம்" என்னும் பதிகத்தைப் பாடியுள்ளார். தூத்துக்குடி இலக்கண வித்துவ

சிரோன்மணி நல்ல பெருமாள் கவிராயர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"பிறப்பதற்கிங் கரிதான மனுடர் தம்பில்
பேதமெனுங் குற்றமதைக் கடிந்தே யொன்றுய்த்
திறப்படுத்தி யதனினுமோ ஞானத்தொண்டு
திறமலா தவர்க்கெட்டாத் தெய்வ மாகி
உறக்கருணை உனதன்ப ரிடத்த மர்ந்தே
உலகிலெட்டெ ழுத்துடைய ஐயன் பாதம்
வரத்தருளால் ஏரல்நகர் தனிற்சமாதி
வந்தஅரு ணாசலதீ சுகமி வாயே"

து பதிகத்தில் ஒரு பாட்டு,

## ௧௯௮. ஏகாம்பர ஐயர்—௪.

(1910)

திருத்தில்லையில் சதாசிவ ஐயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். சபாநாயகர் திருவனந்தல் காலை சந்திக்கட்டளை வெ. தில்லை நாயக முதலியாருக்கு மாணவராகி அவரிடம் இலக்கண இலக்கியங் கற்றுத் தேறிய இவர், "கற்பக விநாயகர் இரட்டைமணி மாலை" என்னும் நூலைப் பாடியுள்ளார்.

"ஓமென் னெழுத்தின் ஒளியாய் விளங்கி உலகினுள்ள
நாமெப் பொருட்குந் தனித்தனியே அருள் நாம்அளித்துத்
தூமென் னிதய மலர்க்கற் பகனும் சுடர்மணியே
ஆமென் னளிமலர்த் தாள்தலை தந்தெனை ஆண்டுகொள்ளே"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௧௯௯. ஏகாம்பர நாவலர்—௭.

(20 - நூ.)

இவர் வல்லிபுரம் என்னும் ஊரினர். சென்னை பெரிய மேட்டில் வசித்திருந்தார். தமிழ்ப் புலமை நிரம்பப் பெற்றவர். இவர் மதுரைப் பிள்ளை என்பவருக்குப் பல பாடல்கள் இயற்றினார். அவற்றுள் ஒன்றை அடியிற் காண்க,

"அலைகடல்சூழ் புவியதனில் அருந்தவத்தோர்
அகமகிழும் அனந்த மான
கலைகள்பல நூல்பயிலும் கவிவாணர்
புகழுவரு கனதை பெற்ற
விலைமதியா மணிசெழிக்கும் விண்ணவர்க்கும்
அரிதான விளங்கும் இந்தர்
தலைநகர மாஞ்சென்னை வேப்பேரி
தனிலுதித்த தரும சீலன்"

## உ௦௦. ஏகாம்பர முதலியார்—செஞ்சி

(20 - நூ)

இவர் நடுநாட்டில் செஞ்சி என்னும் ஊரில் இருந்த சித்திரகவி முதலிய பாடல்களை நன்கு பாடக்கூடியவர். இவர் சந்திரமதி மாலை என்னும் நூல் பாடியிருக்கிறார். அந்நூலில் அரிச்சந்திரன் சந்திரமதி ஆகியோர் தோற்றம், சந்திரமதியின் முற்பிறப்பு, அவர்களுடைய அரசாட்சி முதலிய செய்திகள் அடங்கியிருக்கின்றன. நூலின் காப்புச் செய்யுளை அடியிற் காண்க. நூல் புகழேந்திப் புலவர் பாடிய நங்கைப் பாட்டு வரிசையைச் சேர்ந்தது.

"சீர்புகழுஞ் செகத்திலுள்ளோர் செயல தாகச்
செப்புமொரு நன்னெறியை உடைய மன்னன்
பேர்புகழும் அரிச்சந்திரன் செனன மோடு
பூவைசந்திர மதியினுட பிறப்பை யுந்தான்
தார்புகழுஞ் செந்தமிழால் தரணிமீது
தான்விளங்க அரிச்சந்திரன் அம்மானை யென்னும்
கார்புகழுஞ் சந்திரமதி மாலைசொல்லக்
கணபதியின் கமலபதங் காப்புத் தானே"

மற்றும் இவர் கர்ண மகாராசன் நாடகம், சித்திராங்கி நாடகம் முதலிய நாடகங்களையும் இயற்றியுள்ளார்.

## உ௦க. ஏகாம்பர முதலியார்—கருங்குழி

(20 - நூ,)

இவர் கருங்குழி என்னும் ஊரில் இருந்தவர். "விநாயகப் பிரபாவ விளக்கம்" என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார்.

"பேரார் கணேசப் பெருமான் புகழ்பாடிச்
சீரார் திருவடியைச் சேவித்து—நாரார்
விநாயகப்ர பாவம் விளம்பிநிதஞ் சித்தி
விநாயகன்றா னேவேண்டு வேன்"

என்பது நாலின் காப்புப் பாடல். நூல் விநாயக புராண சாரமாக அமைந்துள்ளது.

## உ0உ. ஏகாம்பர முதலியார்—புரசை

(20 - நூ.)

சென்னை மாநகரத்தினராகிய இவர் இரங்கோனை யடைந்து "சுதேச பரிபாலினி" என்னும் பத்திரிகையை நடத்திக் கொண்டிருந்தார். "இராமநாதன் செட்டியார் சரித்திரம்" முதலிய உரைநடை நூல்களையும் இவர் எழுதியிருக்கிறார்.

## உ0௩. ஏகாம்பரன்—வ.

(20 - நூ.)

சென்னை மாநகரில் வாழ்ந்திருந்த இவர் தொண்டை மண்டலம் துளுவ வேளாளர் கலாசாலைத் தமிழ்க் கழகத்தின் கௌரவ காரியதரிசியாகப் பணிபுரிந்திருந்தார். இவரைப் பற்றிய பிற செய்திகள் புலனாகவில்லை. இவர் சென்னை கந்த கோட்டத்தில் எழுந்தருளிய கந்தசாமி மீது இரட்டை மணி மாலை முதலிய நூல்கள் பாடியுள்ளார்.

"பிறங்கும் அகத்திய னார்க்குந் தமிழைப் பெருமையுடன்
அறங்குல வத்திரு வுள்ளங்கொண் டோதிய அற்புதனே
கறங்கு முரசதிர் சென்னையில் மேவிய கந்தப்பனே
இறங்கு மிடர்தவிர்த் தென்றெனைக் காக்க இசைந்தருளே"

என்பது இரட்டை மணி மாலையில் ஒரு பாட்டு.

## உ0௪. ஏசுதாச பிள்ளை (தரங்கை)

தஞ்சை மாவட்டத்தில் தரங்கம்பாடியில் இருந்த கிறித்துவராகிய இவர் சிறந்த புலவராக விளங்கினார். அவ்வூரில் இருந்த அய்யாப்பிள்ளை என்பவர் காலமானபோது இவர் பாடிய இரங்கற்பாக்களில் ஒன்றை அடியிற் காண்க.

"சீரயன் சித்தமோ தேவர்கள் சினமோ
சேயர்கள் செய்தவக் குறையோ
நேருயர் பெரியோர் மனமதின் துயரோ
நேசர்கள் செய்திட்ட பிழையோ
பாருயிர் மீது பரிவிலா எண்ணமோ
பாரியாள் பதறின மொழியோ
ஆருயர் அண்ணல் கழலினை அடைந்தாய்
அய்யாப் பிள்ளைமா தவனே."

## உ௦ரு. ஐயம் பிள்ளை—இ. வி.

(20 - நா.)

ஈழவள நாட்டில் யாழ்ப்பாணத்தில் புலோலி என்னும் ஊரில் இவர் 1857ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களுக்குச் சரியான பிங்கள ஆண்டு தைத்திங்கள் இருபத்திரண்டாம் நாள் விநாசித் தம்பிப் பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றினார். இவர் வரலாறு: "இவர் ஒரு நூலையாயினும் முறையாக ஆசிரியரிடத்துப் பயின்றவரல்லர். ர, ற, ழ, ள, வித்தியாச மொழிகள் தாமும் இவருக்குத் தெரியாது. அங்ஙனமாய இவர் தம்முடைய கால மெல்லாம் கம்மத்தொழிலினும் வர்த்தகத் தொழிலினுமே கழித் துக் கொழும்பு சென்று வர்த்தகஞ் செய்த காலை கதிர் காமக் கடவுளின் திருவருளால் ஆங்குள்ள மகானாகிய திரு பரமஹம்ச பரிவிராசக யானைகுட்டிச் சுவாமிகளின் தரிசன மாத்திரையானே உலக விரத்தியும் அன்பும் மேலிடப் படைவீடு ஆறனுட் சிறந்து விளங்கும் திருச்செந்தூர்ப் பதிபுக்கு அடியார் வேண்டியன வற்றை வேண்டியாங்கு எளிதில் தோன்றியருள்பவரும் ஸ்ரீமத் குமரகுருபர சுவாமிகள் முதலிய ஆப்தர்க்குச் சொற் சுவை பொருட்சுவை செறிந்த கவிகளைப் பாடும் வரத்தைப் பிரசாதித் தருளியவரும் ஆகிய ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளைத் தரிசித்து, கண் ணீர் ஆருய்ப் பெருக உரோமம் புளகிப்ப ஆநந்தக் கூத்தாடி அன்புடன் தொழுது வந்தார். பெருமானுடைய திருவருளால் பாடுஞ்சத்தி தோன்றப் பாடினார். அதுவே முதன் முதல் தெரி சித்த தலம். இந்நூலைப் பார்க்கும் ஒவ்வொருவரும் கடவுளின் பேரன்பாற் பாடப்பெற்றதென்று வியப்படையாதிரார். இத னாற் குமரகுருபர சுவாமிகள் திருச்செந்தூர்ப் புராண ஆசிரியர் முதலாய மகான்களும் மேலாய தெய்வத் திருவருள் கிடைத்துப்

பாடினார்கள் என்பதிற் சந்தேகமின்று'' என்று இவர் இயற்றிய ''சிவபாத தோத்திரபூடணம்'' என்னும் நூலின் முகவுரையில் கூறப்பட்டுள்ளது.

இவர் தேவகோட்டைக்குச் சென்றிருந்த போது அங்குள்ள அன்பர்களுடைய விருப்பப்படி பதிகம் ஒன்று பாடி இராமன் செட்டியார் என்னும் பெயருடைய ஒருவரின் நோயைத் தீர்த்தாராம். இவர் இயற்றிய சிவபாத தோத்திர பூடணம், திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், கழுகுமலை, சங்கரநாராயணர் கோயில், தாருகாபுரம், திருப்பால் வண்ண நல்லூர், சிவகிரி, தென்மலை, தேவதானம், சேத்தூர், திருச்சதுரகிரி, தென்கடம்ப வனம், மதுரை, திருவாப்பூர், திருப்பூவணம், காளையார் கோயில், திருவாடானை, இராமேசுரம், தேவகோட்டை, வைத்திசுவரன் கோயில், சிதம்பரம், திருவண்ணுமலை, செருத்தணிகை, திருப்போரூர் ஆகிய பதிகட்கு ஒவ்வொரு பதிகம் அமைந்ததாக விளங்குகின்றது.

'' கருணைக் கடலே கற்பகமே கானப் பேருறை கண்மணியே
அருணைக் கரசே அற்புதனே அருளே அழகார் உருவாகி
மருணை ந்தகல வடியர்மனத் நாடுஞ்சோதி மணிவிளக்கே
இருணை ந்தகல அருள்சுரந்து எளியேன் றனையிங்காள்வாயே ''

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## உ०சு. ஐயா (மணவாள மாமுனிமாலை)

(20 - நூ.)

இவருடைய முழுப்பெயர் இன்னதென்று விளங்கவில்லை. இவர் காலத்திலேயே இவரைப் பலரும் '' ஐயா! ஐயா!'' என்று அழைத்துக் கொண்டிருந்தபடியால் இவருடைய இடுகுறிப் பெயர் மறைந்து ஐயா என்னும் காரணப் பெயர் நிலைபெற்று விட்டது. இவர் ''மணவாள மாமுனி மாலை'' என்னும் நூல் இயற்றியிருக்கிறார்.

'' பூந்தாம மொய்கழல் மார்பனைப் பாடும்புத் தேன்மலர்த்தாள்
நாந்தாமங் கெய்த அருணெறிக்கோன்கழல் நண்ணியளி
மோந்தாமந் தாமம் புனைமண வாள முனித்தெய்வமே
மாந்தாமங் காவெனு மெய்ஞ்ஞானந் தந்தெமை வாழ்விப்பையே ''

என்பது நூலின் முதற் பாட்டு.

## உ0எ. ஐயாக்கண்ணு ஓதுவார்—சி.

இவர் சிதம்பரம் என்னுந் திருத்தில்லையில் இவ்விருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்தவர். தேவாரப் பதிகங்களை இசையுடன் ஓதும் ஓதுவாராகப் பணி புரிந்திருந்ததோடு சிவகதைகளைச் சொற்பொழிவு செய்வதிலுஞ் சிறந்து விளங்கியிருந்தார். உக்கடை அண்ணாச்சாமித் தேவர் என்பவருடைய விருப்பப்படி 'மாரியம்மை பஞ்சரத்தினம்'' என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார்.

''தஞ்சமென் றுனையெனு வஞ்சனேன் எனினுநின்
தண்ணருள் கொடுத்தருளுவாய்
தாயலாற் சேய்செய்பிழை யார்கொலோ நீக்கியித்
தரணிதனில் ஆதரிப்பார்
விஞ்சுவெண் சுதைதானு மணிமாட மிமிசை
விளங்குறு நிலாமுன்றிலில்
மேவுமடமாதரொடு விண்தேவ மாதரும்
விரவியம் மனையாடுழி
நெஞ்சமிக் காதல்கொளும் இருநிலத் தேவர்களும்
தேடியாங் கெய்தித்தங்கள்
நேரிழைகள் இவர்கொலென் றிமையினுற் கண்டுதோள்
ஞெமுங்குறப் புல்லிக்கொளா
மஞ்சமீக் கொடு நலந்துய்க்கும் உக்கடையில்
மருவுநித் தியாநந்தியே
வாரிமலர் தூவியடி யார்துதிசெய மாரிமக
மாயியெனு மாரியம்மையே.''

என்பது பஞ்சரத்தினத்தில் ஒரு பாட்டு.

## உ0அ. ஐயாச்சாமி முதலியார்—வாங்கல்

(20 - நூ.)

இவர் வாங்கல் என்னும் ஊரினர். பூந்துறையிற் பெரும் புலவராக விளங்கியிருந்த காளியண்ணப் புலவரின் புதல்வராகிய சுந்தரம் பிள்ளையிடத்தில் கல்வி கற்றுப் புலமைபெற்றார். இவரைப்பற்றிய பிற விவரங்கள் தெரியவில்லை. அநந்தநாராயண சர்மா என்பவர் இயற்றிய கஞ்சகிரிச் சித்தேசர் சதகம் என்னும் நூலுக்கு இவர்,

“ தடமருவு குமரேசர் உபயசர ணம்புயம்
நனைய னு தினம்ப ரவுவோன்
சாதுசன சங்கப்ர சங்கந் துகந்தசெந்
தமிழ்வாண ருக்கு ரியவன்
சங்கீத சாகித்ய வித்வசன நேசன்
சரோருக மடந்தை வாசன்
தலைமையொடு பெருமையம் புரிதனிற் பரிவுடன்
சஞ்சரிக் கின்ற நிபுணன்
படவரவு புனைவிமலர் அடிபுகழும் எசுர்வேத
பாரக குலத்து தித்தோன்
பவுரோகி தன்தரும ராசமறை யோன்பெற்ற
பண்புள குமார சீலன்
பைந்தமிழ் உகந்துரை அநந்தநாராயணன்
பதுமவதி மேவு ஞான
பத்தியொடு கஞ்சகிரி சித்தேசர் மீதினில்
பாமாரி பொழியும் மேகம்
சுடருலவு கடலுலகில் தமிழ்வா ரிதிக்குளே
சுமங்கல எழுந்தெ டுத்துச்
சுகந்தரு சுரஞ்சித மிகுந்தமது ரந்தரும்
சொற்கள்மரு வப்பு னைந்தே
சுதையெனுஞ் சதகமிதை இதயங் களிக்கவே
தூயவர் தமக்க ளித்தான்
சுபகர தயாரச சரஸ்வதி விலாச
சொரூபலா வண்ய துல்யன்
இடபமிசை வருபரம சிவகுமரன் அருளினால்
எல்லோர் களுஞ்ச ரியென
இயல்பான சமயோசி தத்தி னுக் குறுகவி
இயற்றியிந் நூலில் வைத்தான்
இணையிலா வரமுதவு காங்கேயன் அடிதொழு
திறைஞ்சும்ப்ர பந்த வாக்கி
எக்காலு மேலான தக்கோர் சபாசென்
னியம்புந் தமிழ்ப்பு லவனே ”

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ௨௦௯. ஐயாச்சாமி முதலியார்

## (1910)

இவர் தாதாபுரம் என்னும் ஊரில் இருந்தவர். சிறந்த புலவர். திமிரி சோமநாதேசுவரர் மீது இவர் தோத்திரப்பா என்னும் நூலைப் பாடியுள்ளார், இதில் சுந்தர வல்லியம்மை

பதிகம், விநாயகர் பதிகம், சுப்பிரமணியர் பதிகம், சண்டேசர் பதிகம் முதலியன அடங்கியுள்ளன.

" மதிநீறு புனைநிலக மலர்முகங்கள் ஆறும்
மனியாழி எனுங்கருணை மலர்விழியி ராறும்
நதிவேணி அரன்மகிழ ஞானநவில் வாயும்
நருவாகு வலயமொளிர் நயவரையி ராறும்
அதிபாவி மலையலையை அறுத்த அயில் வேலும்
அரமகளும் குறமகளும் அமர்ந்த இருபாலும்
திதிநீடு பதமயிலுந் தெரிசனந்தந் தருள்வாய்-
திருவளருந் திமிரிநகர் சிவசிவசன்முகனே "

என்பது சுப்பிரமணியர் பதிகத்தில் ஒரு பாட்டு.

## உகா. ஐயாத்துரை ஐயர்-(கபித்தலம்)

சோழவள நாட்டில் கபித்தலம் பாடசாலையில் தமிழாசிரியராக இருந்தவர். தமிழ்மொழியிலும் வட மொழியிலும் புலமை அமையப்பெற்ற இவர் அவ்வூரிலிருந்த துரைசாமி மூப்பனருடைய விருப்பப்படி வடமொழியில் இருந்து திருப்புல்லாரணிய மான்மியத்தைத் தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார். இவர் நாலின் இறுதியிற் பாடியுள்ள வாழ்த்துப்பாடலை அடியிற் காண்க.

" அந்தணர் அமரர் வாழ்க ஆனினம் பெருகி நல்க
பந்தமா யெழிலி பெய்து பலித்திடப் பைங்கூ ழெல்லாம்
சிந்தையோ டரச ரென்றுஞ் செவ்விய கோலே யோச்ச
விந்தையாம் புல்லாரன்ய மான்மியம் விளங்க வென்றும்"

இவருடைய நூலுக்குத் திரிசிரபுரம் வி. கோவிந்த பிள்ளை சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## உகக. ஒப்பிலாமணிப் புலவர் I

இவர் சோழவள நாட்டில் திருக்கண்ணமங்கை என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். அறிஞர் பலரையும் பிடித்தாட்டிய வறுமைப் பேய் இவரையும் பிடித்தாட்டியது. ஊர் ஊராகச் சுற்றிக்கொண்டிருந்தார். தொண்டைவள நாட்டில் சுற்றுப் பயணஞ் செய்து கொண்டிருக்கும்போது கொடைவள்ளலாக விளங்கியிருந்த கூவத்து நாரணரைப் பற்றிக் கேள்விப்பட்டார்.

அவரைக் காணும் பொருட்டுக் கூவத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். இடைவழியிலேயே கூவத்து நாரணரைக் கண்டார். ஆயினும் அவர்தாம் கூவத்து நாரணர் என்னுஞ் செய்தி இவருக்குத் தெரியாது. இருவரும் உரையாடினர். நாரணர் இவரைத் தம்முடைய இல்லத்திற்கு அழைத்துக்கொண்டு சென்ருர். நன்கு பாராட்டிப் போற்றினுர். அதன் பிறகே தம்மை யழைத்துக் கொண்டு வந்தவர்தாம் கூவத்து நாரணர் என்னுஞ் செய்தி இவருக்கு விளங்கியது. பிறகு இவர் தம்முடைய மனைவி மக்களோடு கூவத்திலேயே வந்து தங்கியிருந்தார். இவர் நூல்கள் இயற்றியதாகத் தெரியவில்லை. வள்ளலாகிய கூவத்து நாரணர் காலஞ்சென்றபோது இவர் மிகவும் உள்ளம் வருந்தி,

> " இடுவோர் சிலரே இரப்போர் பலரே
> கெடுவாய் நமனே கெடுவாய்—படுபாவி
> கூவத்து நாரணனைக் கொன்ருயே கற்பகப்பூங்
> காவெட்ட லாமோ கரிக்கு "

என்னுஞ் செய்யுளைப் பாடியுள்ளார்.

## உகஉ. ஒப்பிலாமணிப் புலவர் II

இவர் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலியன விளங்கவில்லை; நூல்களும் இவர் இயற்றியதாகத் தெரியவில்லை. தனிச் செய்யுட் சிந்தாமணியில் இருபத்தொரு பாடல்கள் இவருடையனவாக வழங்குகின்றன. அவற்றுள் ஒருபாடலை அடியிற் காண்க :

> " மாநர்க் கிதங்கவி வாணர்க்குச் சால வணக்கங்குரு
> நாதர்க்கு நீதியொ டாசார நன்பில் நயந்தவர்க்குக்
> கோதற்ற வாசகம் பொய்க்குப்பொய் கோளுக்குக் கோளறிவில்
> ஆதர்க்கிரட்டிப் பறிவுடை யோர்செய்யு மாண்மைகளே "

## உகங. ஓரியூர்ச் சர்க்கரைப் புலவர்

இவர் ஓரியூர் என்னும் ஊரினர். இவரைப்பற்றிய செய்திகள் விளங்கவில்லை. சேதுபதி மன்னர்பால் பாடிய நவராத்திரிப் பாடல் ஒன்று அடியில் வருகிறது.

" பூரணி மனோன்மணி முகவைவா ழீசுவரி
புண்ணியர்க ளிதயா சனி
புரந்தரி கவுமாரி ராசரா சேசுவரி
பொற்கமல அடிப ரசுவாம்
தாரணி நரேந்திரர்கள் திறைகொண்டு வந்துபணி
தானகன் னுவ தாரன்
சத்ரபதி நிதிபதி பாற்கரச் சேதுபதி
தவபுத்ர குணசாந் தமால்
ஏரணி புயாசலன் ராசரா சேசுவரன்
இரத்னமணி முடிசூ டியே
எண்டிசையோ டுலகெலாம் நிகிரிசெல ஓர்குடை
இருந்தரசு புரிய நாளும்
சீரணியு மார்க்கண்டன் வயதுமிரு நிதியமும்
தேர்ச்சிபெறு கலைஞா னமும்
சீர்த்தியுஞ் சந்ததி விருத்தியுஞ் செல்வமும்
செங்கோலும் வாழ்க வென்றே "

## உகச. கங்காதரசிவா—சி. மு.

(20 - நூ.)

சென்னைமா நகரில் வசித்திருந்த இவர் சுந்தரமூர்த்தி நாயனருடைய புராணத்தை நாடகமாக இயற்றியுள்ளார். அந் நாடகம் 'சுந்தரமூர்த்தி நாயனர் நாடகம்' என்று பெயர் பெற்றுள்ளது. நாடகத்தின் இடையிடையே இன்னிசைப்பாடல்களும் நிறைந்துள்ளன. இசைப்பாடல் ஒன்றை அடியிற் காண்க:

கல்யாணி—ஆதி

பல்லவி

மகிழ்வேனே நானே என்மானே
மதிமுக ரதிஅதி குணவதிமிக (மகிழ்)

அநுபல்லவி

புகழ்பெறு மெழிலாருயர் நங்கையே
புகலொணுதபெருந் தகைமை நாயகியே (மகிழ்)

சரணம்

நாடுவாய் நதிமதி அணி பரனையே
பாடுவாய் பரகதி தரும் அரனையே
நீடுலாவு முயர் நெறிதனை உன்னியே
கூடினேன் குறையேகிட உன்னையே (மகிழ்)

## உகரு. கங்காதரபால தேசிகர்—தே. சி.

(20 - நூ.)

சென்னையில் வாழ்ந்திருந்தவர். சில பசனைக்கூடங்கட்கு ராக இருந்த இவர் ஆறு அவதானங்களைச் செய்யக்கூடிய இருந்தபடியால் சட்டாவதானம் என்று கூறப்பெற் இவர் 'சண்முகக் கடவுள் துதிப்பத்து' என்னும் நூலைப் நக்கிருர்.

பனிமா மலைக்கொடியின் முலைப்பா லருந்திவால்
பருகுவ டெழுந்த முருகா
பாரோர்க ளிக்கமிவன் றோளேறி விளையாடு
பவளச்செம் மேனி யுடையாய்,
கனியாக முனிநார தன்வேள்வி தனிலுற்ற
தகரேறு கொண்ட குமரா
தகைவேல நினதுமலர்க் கண்ணோக்கி இதுவேளை
தமியனுக் கருள்பு ரிகுவாய்
அனியாய மாய்க்கெட்டு மும்மல பவக்கடலில்
ஆழாமல் நாளும் உன்றன்
அம்போ ருகத்தாளை மறவா திருக்கறின்
அன்புகொண் டாண்டரு ளுவாய்
வாய் மணங்கமழும் வள்ளிதெய் வானையுடன்
கனசினக ரத்து மேவும்
கருதரிய சரவணப வாநந்த சமரபுரிக்
கருணைப் பிரவாக மணியே ''

லில் ஒருபாட்டு.

## . கசராச முதலியார்—பெ. லோ.

(19 - நூ.)

பங்களூரில் இருந்தவர். திரிசிபுரம் கோவிந்த ல்வராகிய தி. கோ நாராயணசாமிப் பிள்ளையிடம் லக்கியங் கற்றுத் தமிழ்ப்புலமை பெற்றவர். டோன்மெண்டு சன்மார்க்க வித்தியாபி வர்த்தனி பிமாசிரியராக இருந்தவர். இவர் திருநாகைப் மிக நீண்ட ஆசிரியப்பா ஒன்றினல் சிறப்புப் ள்ளார்.

"கிராமலே யரனும் கராமலே யரனும்
மன்னிய நிலேயும் முன்னிய கலேயும்
என்றும் வாழ்வதோர் மன்றும் மாண்பும்
பொன்றுதல் இல்லாப் பொருளும் புகழும்
குன்றுதல் இல்லாக் கொள்கைத் தாயதோர்
திரிபிர புரந்தான் துரிபிறப் புரந்தான்
கல்வி யென்னுங் கனேகடல் நன்னே
மாந்தியே நின்றேன் மகாவித் துவசன
சேகரன் என்றே தெளிந்தோர் ஈட்டம்
செப்பிட வாழ்வோன் தேசுடைச் செல்வன்"

என்பது சிறப்புப்பாயிரத்தின் தொடக்கம்.

## உகஎ. கச்சியுவரங்க துரை (உடையார் பாளே (20 - நூ.)

இவர் உடையார் பாளேயத்தில் பெருநிலக் கிழாராக யிருந்தவர். பொருட் செல்வத்தோடு கல்விச் செ பொருந்தப் பெற்ற இவர் "நறுமலர்ப் பூங்குழல் நாய என்னும் நூலேப் பாடியுள்ளார். மேற்படி மாலே முப் பாடல்களேக் கொண்டது.

"பயறணி நாதர் வலப்பாக மேவிய பைங்கொடியே
எயிறணி புன்னகை யன்னறங் கன்னுக் கிடுவிரு
கயறணி யாவரு ேணுக்கம் படைத்த கருங்கண்ணி
நயமிக நல்கு நறுமலர்ப் பூங்குழல் நாயகியே"

என்பது மாலேயில் ஒரு பாட்டு. இவரையும் இவரு ஞேர்களேயும் புகழ்ந்து போற்றிப் புலவர்கள் யுள்ளனர். இவர்மீது கனகசபைக் கவிராயர் எ பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க.

"சித்திபதி புத்திபதி நித்யபதி கணபதித்
தேவன்ச கோதர பதி
ஸ்திதிமதி கொடுத்திடும் திருவே ரகப்பதி
செல்வனருள் பெறுச ரஸ்பதி
செந்தமிழ் இலக்கியம் இலக்கணம் எனச்செ
சிந்துபதி வீர சைவத்
தினபதி எனச்சொலும் கனகசபை நாவலன்
தேர்ந்தெழுதி விட்ட நிருபம்

சத்திரபதி புத்ரபதி சித்ரபதி மித்ரபதி
சாஸ்த்ரபதி நேத்ர பதியாம்
சந்தான பதியுலகு வந்தாளு நிதிபதி
தருந்தான பதியா கிய
சக்ரபதி யானபொன் விக்ரகப் பதியாந்
தராபதி சிமாச னபதி
சங்கநிதி பதுமநிதி பெற்றபதி ரதபதிகெ
சாதிபதி சேனு பதி
நத்தும்ப்ர சித்தபதி வித்வபதி சிபதியை
நாடுறும் பிரகஸ் பதி
நரபதிசிர் பாபதி குலாதிபதி சேதுபதி
ராசர்துதி செய் திடுபதி
நற்பெருமை மிக்கவளர் மேருவிற் கொடிகட்டு
ராச்யசாம் ராச்ய பதியாம்
நன்றிமகிழ் சின்றபதி கச்சியுவ ரங்கமகு
டாதிபதி நன்கு காண்க
சித்தச னெனத்திகழ் இலட்சண மிகுந்திடு
திறற்சிங்க பதியா கிய
சீர்பெற்ற நின்பாட்டனுர்பெற்ற புகழுலால்
செப்பவே ருெருவர் உளரோ
செகமெலா மெச்சுநின் சமுகமது வந்திடும்
சீட்டுக் கவிக்கி சைந்து
சிரித் தலத்தின் புராணமதை யச்சிடச்
சிந்தைமகிழ் தந்தருள் வையே,''

## உகஅ. கடப்பேரி சுப்பிரமணிய சிவாச்சாரியார்—சு. (1913)

இவர் மதுராந்தகத்தில் இருந்தவர். ''கந்தபுராண வசனச் சுருக்கம்'' என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார்.

'' வேல் வாழி மயில்வாழி சேவல்வாழி
வேறுமுள படைவாழி விளங்கு தண்டைக்
கால்வாழி அருள்பொழியும் விழிகள் வாழி
கவின்குலவும் ஈராறு கரங்கள் வாழி
மால்வாழி வாழியெனப் பணிந்து வாழ்த்து
மலைமாது தருமுருகன் மகிழ்ந்த வாறு
பால்வாழி எனையாளுங் கருணை வாழி
பங்கிருந்த மங்கையர்தம் பதங்கள் வாழி''

என்பது நூலின் இறுதி வாழ்த்தாக அமைக்கப்பட்ட பாட்டு.

## ௨கக௯. கடிகா சதகம் அம்மாள்—சு.

இவ்வம்மையார் வேதாந்த தேசிகர் காலத்தில் இருந்த சிறந்த புலமையாட்டியார். வைணவ சமய நூல்கள் பலவற்றைக் கற்றுத் தேறியவர். வைணவ பிரம தந்திர சுதந்திர சீயர் திருவடிகளைப் பற்றுகக் கொண்டவர். நடாதூர் பெரியம்மாளுக்குப் பௌத்திரி. இவ்வம்மையாரின் தந்தையார் பெயர் சுதரிசனு சாரியர். இவருக்குப் பல புலவர்கள் கொடுத்த நூறு சமுசைகளை ஒரு கடிகையில் முடித்துக் கொடுத்தபடியால் இப்பெயர் உண்டாகியது. இப்பெயர் வருவதற்கு முன்னுல் இவருக்கிருந்த இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை.

## ௨௨௦. கடிய நன்னியார்

சங்க காலப் புலவர்களில் ஒருவர். இவர் ‘ கைக்கிளைச் சூத்திரம்'' என்னும் பெயரோடு நூல் ஒன்று செய்திருக்கிருர். பிற நூல்களில் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்ட சில சூத்திரங்களைத் தவிரப் பிற சூத்திரங்கள் மறைந்தொழிந்தன. இவருடைய நூல் “கடிய நன்னியார் கைக்கிளைச் சூத்திரம்'' என்னும் பெயரோடு வழங்கியது.

“ இருநிலைக் காம மன்றிக் கைக்கிளை
யொருநிலைக் காம மாகக் கூறிய
விலக்கண மரபி னியல்புற நாடி
யதர்ப்பட மொழிந்தனர் புலவ ரதுவே
பெறுதி வெண்பா வுரித்தாய் மற்றதன்
இறுதி யெழுசீ ராசிரி யம்மே.”

என்பது சூத்திரங்களில் ஒன்று.

## ௨௨௧. கட்டளை வரதராச பிள்ளை (மைசூர்)
(19 - நூ.)

இவர் மைசூரில் இருந்தவர். சீரங்கபட்டணத்துக்கு வடக்கேயுள்ள மேலைக்கோட்டை என்னும் திருநாராயணபுரத்தில் எழுந்தருளிய பெருமாள்மீது கலம்பகம் ஒன்று இயற்றியிருக்கிருர். இவர் ஆங்கிலத்திலும் தமிழ்மொழியினும் புலமை

யமையப் பெற்றவர். நூல் உரையோடு விளங்குகிறது. திருமால் தான் அழியாப் பதந்தர வல்லவர் என்று கலம்பகத்தில் இவர் பாடிய பாடல் ஒன்றை அடியிற் காண்க:

" நஞ்சமென முந்நறிவ ழிந்துதனி யன்புகொடு
தந்திமுக னுந்து மயில்வேள்
நஞ்சமமர் கண்டனுமை யென்பவரை அன்பொடு
நவின்றுநினம் அஞ்சலி செய்விர்
எஞ்சுமவர் மங்கிடுப தந்தருவ தன்றியிலை
யென்றும்யது குன்றின் மிசைவாழ்
மஞ்சனைய நங்கள்பர மன்கழல் வணங்கல்செயின்
மங்கலில் பதந்தருவனே "

## உஉஉ. கணபதி ஆசாரியார்—ஙீ.

(1904)

இவர் கோட்டாறு என்னும் ஊரில் நீலகண்ட ஆசாரியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். நித்தியானந்த அடிகள் என்பவர்க்கு மாணவராகி இலக்கண இலக்கியங் கற்றுச் சிறந்த புலமை பெற்றார். இவர் கன்னியா குமரிப் பகவதியம்மன் மீது பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார். அந்நூல் 1904 ஆம் ஆண்டில் அச்சாகியுள்ளது.

" கற்றைவெண் திங்களங் கோவைபோல் நிலவுமிழ்
கழுந்தின்முத் தார மாடக்
கார்கோளின் ஊர்ந்துமதி கவ்வுமா டரவனைய
கதிர்மணிச் சுடிகை யாட
ஒற்றைவெம் பருதிவட மாகியிள வெயில்காலும்
ஒள்ளரை வடங்க ளாட
உசனருக் கிணைசெய்வச் ரந்தொடிக ளாடமெய்
ஒளிர்பசுங் கதிர்க ளாட
மற்றைநாள் கோள்வளைந் நாங்குபித் ரப்பணிகொள்
மறைவெஞ் சிலம்பா டிட
வனசனு டந்தேவர் குரிசிலா டச்சேடன்
மடிதுயின் முகுந்தனு டச்
சிற்றையென் றகிலாண்ட கோடாண்ட பைங்குழவி
செங்கிரை யாடி யருளே
தென்குமரி நகரில்வாழ் என்குமரி அம்மைநீ
செங்கிரையாடி யருளே.

என்பது செங்கிரைப் பருவத்தில் ஒரு பாட்டு.

## உஉரு. கணபதி ஐயர் (குடந்தை)

(20 - நூ.)

சோழவள நாட்டில் குடந்தையில் வாழ்ந்திருந்தவர். மகா வித்துவான் என்று வழங்கப்பெற்ற இவர் இயற்றிய தனிப் பாடல்கள் சில கிடைக்கின்றன. நூல்கள் இயற்றிய விவரந் தெரியவில்லை. பெ. மா. மதுரைப் பிள்ளை என்பவர் மீது பாடிய பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க:

"மாமேவு பொற்புண்ட ரீகநிகர் வளமைமலி
மன்னுமயி ராவதி குலாம்
மணியிரங் கோனகரி வாசமக ராசவிசு
வாசமா ராய பகதூர்
காமேவும் உபகார கனதீர அதிகார
கம்பீர மதுரை மன்னு
கார்மேக நீநடன மயிலியான் இரவிநீ
கமலம்யான் நிறைமதியு நீ
தேமேவும் அல்லியான் அன்னைநீ பிள்ளைநான்
சிந்தையின் மறந்த போதும்
சிறிதுமற வேலைய நினதுசமு கங்கண்டு
செந்தமிழ் விளம்பு மென்றன்
நாமேவு பாக்கியங் கைசொல்லு மெய்சொல்லு
நான்சொல்வ தென்னை வாழி
நல்லசுந் தரசித்தி ஐங்கரன் கருணையால்
நாளுநீ வாழி மாதோ."

## உஉச. கணபதி ஐயர்—எஸ். சி.

(20 - நூ.)

இவர் வாழ்ந்திருந்த இடம் முதலியன விளங்கவில்லை. "வேலூர் விநாயக மூர்த்தி பதிகம்" என்னும் பதிகத்தை இவர் பாடியுள்ளார்.

"கல்விசேர் அறிவிலேன் காசினியில் வீணுய்க்
கற்றவர் சொல்லை அறியேன்
கனமான உடலையே காதலித் துழலுவேன்
கருதிலேன் உன்னை நாளும்
செல்வமே மெய்யென்று தேடித் திரிந்துநான்
செய்யாத தொன்று மில்லை
தேசோம யானந்த நின்கருணை என்னையும்
திருவடிக் காளாக் குமோ

பல்வளச் சோலையொடு நல்லெழிற் பண்ணைமலி
பார்புகழ் வேளூ ரனே
பக்தசன கோடிகள் நித்தமுந் துதிசெயும்
பரமசற் குருநா தனே
நெல்லியங் கனியுண்ட நல்லிசைப் புலவியை
நேயமாய்ப் பணிகொண் டவா
நீலகிரி மீதிரவி தானுதய மானதென
நீள்விசாகக்க டவுளே.''

## உஉரு. கணபதிப் பிள்ளை (தஞ்சை)

சோழவள நாட்டில் தஞ்சை மாநகரில் இருந்தவர். இவரைப் பற்றிய செய்தி யொன்றுந் தெரியவில்லை. இவர் "ஆறுமுகக் கடவுள் ஆசிரிய விண்ணப்பம்'' என்னும் பதிகத்தைப் பாடியுள்ளார். பாடல்கள் சந்தவின் பத்தோடு சிறந்து விளங்குகின்றன.

" கங்கைமுடி நாதனுக் குற்றவிரு மகவினில்
கயமுகன் கருணை னெனவும்
கந்தனே அம்மம்ம குருமன மிக்குளான்
கள்ளத் தனந்தில் மனியாம்
கொங்கைநிமிர் வள்ளிதெய் வானைக்கு மட்டுமுறு
குங்குமச் சுவடு பூண்ட
குன்றனைய புயனெனக் குவலயஞ் சொல்வதொரு
கொள்கையொரு கொள்கை யாமோ
சங்கைநிற் கில்லையோ தயவுநான் இல்லையோ
சாந்தகுணம் இல்லை யோநீ
தான்வருவ தில்லையினி நான்விடுவ தில்லைமுச்
சந்திஉன் மடிபி டிக்க
மங்கையுமை போந்துனைச் சிறியனை யேந்துமுன்
வந்துனருள் தந்து தவுவாய்
மன்னமரர் விறுமிக மின்னலொளியாறுமுக
வன்னமயி லேறு குகனே "

என்பது நூலில் ஒரு பாட்டு.

## உஉசூ. கணபதிப் புலவர்—செ. கோ.

(20 - நூ.)

தற்காலப் புலவர்களில் ஒருவராகிய இவர் ஆனைமுகக் கடவுளுடைய அருளைப்பெற்று அருணகிரிநாதருடைய திருப்

புகழ்ப் பாடல்களைப்போன்ற அரியபாடல்கள் நூறுபாடியுள்ளார். அப்பாடல்கள் 1933 ஆம் ஆண்டில் சென்னையில் இருந்து வெளியாகியுள்ளன. இவர் 'கவிபூடணம்' என்னுஞ் சிறப்புப் பெயரும் பெற்றவர் என்பது, பெயருக்கு முன்னால் அமைந்துள்ளமை கொண்டு பெறப்படுகின்றது. அந்நாளில் இவர் பெங்களூர்த் தண்டில் வாழ்ந்திருந்தார் என்றுந் தெரிகிறது. இவருடைய பாடல்கள் "கணேசர் திருப்புகழ்" என்னும் பெயரோடு வெளியாகியுள்ளன. ஒரு பாட்டை அடியிற் காண்க.

" சீதவம்புய மாலா நமோ நம
ஞான சுந்தரி லோலா நமோ நம
சிவசங்கம லீலா நமோ நம சுமுகாய
சீரிலங்கிய ரூபா நமோ நம
ஆகமந்துதி நாமா நமோ நம
சேதனந்தரு தேவா நமோ நம முடிவான
வேதமந்திர மூலா நமோ நம
ஆலமுண்டவர் பாலா நமோ நம
விடு தங்கிய சீலா நமோ நம துதிபாடும்
வேளைவந்தரு ளானே நமோ நம
மூலவஞ்சுழி யோனே நமோ நம
விரமிஞ்சிய கோனே நமோ நம விகடாய
மாதவஞ்செறி ஈசா நமோ நம
மூஷிகம்புற வாசா நமோ நம
மாசிலன்பரி னேசா நமோ நம உயர்வான
மாநிலந்தொழு வேதா நமோ நம
சீபதந்தரு நாதா நமோ நம
மாகுணங்குடி நாதா நமோ நம மறவாத
காதல்நெஞ்சவர் தாசா நமோ நம
நிதில் அங்குச பாசா நமோ நம
காசி லம்பர மேசா நமோ நம வெகுநிய
காலனஞ்சிட நேராய் நமோ நம
ஈறிலங்கர விரா நமோ நம
காவலிங்குற வாராய் நமோ நம கணநாதா.

## உ௨எ. கணபதியப்ப பிள்ளை—க.

(19 - நூ.)

இவர் திருநெல்வேலிக்கடுத்த பாளையங்கோட்டையில் பாரதச் சொற்பொழிவாளராக விளங்கிய கந்தப்பபிள்ளை என்ப

வருக்குப் புதல்வராகத் தோன்றியவர். தமிழ் இலக்கண இலக்கியப் பயிற்சியில் வல்லவராகிய இவர் கணக்காயராகப் பணி புரிந்திருந்தார். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரம் தெரியவில்லை. குருசாமிதாசர் என்பவர் இயற்றிய துருவசரித்திர நூலுக்குப் பின்வருஞ் செய்யுளைச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்:

"மணிகொண்ட செஞ்சூட் டனந்தன்மிசை அறிதுயில்
வளர்ந்தருளு நெடிய திருமால்
மங்களா கரிசெல்வ மாதுதுள வணி மார்பில்
வாழமகிழ் கரிய பெருமான்
அணிகொண்ட கழலிணைகள் துதிசெய்து தனதுபெய
ராலமைந் துளபுதுமை சேர்
அரியபதம் அதுபெற்ற துருவனது சரிதத்தை
அன்புமிகு பண்பி னாலே
பணிகொண்ட செந்தமிழில் இசைவுறச் செவியமுத
பானமாப் பாடல் செய்தான்
பரவுபுகழ் வன்னிய குலத்தில்வரு வேங்கடா
சலவேள் தவப்பா லகன்
கனிகொண்ட மதியூகி இருவினையின் அனுபவங்
களையுணரும் அறிவி வேகி
கருநேமி வளைபூமி மகிழ்நாம குருசாமி
கன்யகுண புன்யவா னே."

## உஉஅ. கணபதியா பிள்ளை—மு.

(20 - நூ.)

இவர் குன்றக்குடி (இராமநாதபுரம் மாவட்டம்) என்னும் பதியில் இருந்தவர். தந்தையார் பெயர் முத்துசாமிப் பிள்ளை. இவர் மருத்துவத்திலும் தமிழிலும் சிறந்த புலமை பெற்றவர். இவர், தெய்வத் துதித்திரட்டு, கதிர் காமக் காவடிச்சிந்து, பனையூர்ப் பன்மணிமாலை, குன்றக்குடி வீரமாகாளிமாலை, வீரம்மைக் கண்ணி, கல்லல் மூத்து விநாயகர் மும்மணிமாலை, நற்கனியம்மன் நவரத்தின மாலை, நற்கனியம்மன் சந்த விருத்த மாலை, நற்கனியம்மன் கட்டளைக்கலிப் பாமாலை, நற்கனியம்மன் சட் பஞ்சகமாலை, நற்கனியம்மன் ஆனந்தக்களிப்பு மாலை, பாம் பாட்டிச் சித்தர் மெட்டுமாலை, மூளைக் கொட்டுக்கும்மி, நற்கனி யம்மன் தாலாட்டு, நற்கனியம்மன் கொச்சகமாலை, தோகையடி

விநாயகர் துதிக்கைமாலை, சண்முகநாதர் சந்தமணிமாலை, வீர மாகாளியம்மையார் பல பாமாலை, தேவாதி மகான்கள் திருவருண் மாலை, சமரசானந்த சங்கீத மாலை முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

"காலனளி யாலமொழி காமவிழிக் கடையாலும்
கானமுகில் நானெனுவி னேநமலர்க் குழலாலும்
பாலமதி போலமதி பாலமணிப் பணியாலும்
பாவையரி னுவலுறு பாவிமனந் துயர்தீராய்
ஞாலமுணு மாயரக நாயகருட் குதுகூலம்
நாடுமரு காதுறவி நாரதர்செப் பியமாதை
மாலையிடு வாலிபவு மாதருசற் குருநாதா
மாகமடர் நோகைமலை வாழ்குமரப் பெருமானே"

என்பது சண்முகநாதர் சந்த மணிமாலையில் ஒரு பாட்டு.

## உஉகூ. கண்ணதாசர்—அ.

இவர் கிளியாறு நகர் என்னும் ஊரில் அருணாசல பிள்ளை என்பவருக்கு அருந்தவப் புதல்வராகத் தோன்றினார். "நீரடி வாசியம்மன் திருப்பதிகம்" என்னும் நூல் ஒன்றை இவர் இயற்றியுள்ளார். இவருடைய பெயருக்கு முன்னால் 'மதுரகவி' என்னுஞ் சிறப்புப் பெயருங் காணப்பெறுகிறது. இவருடைய பாடல் ஒன்றை அடியிற் காண்க.

"மலராகி மலருளே மணமாகி எங்கெங்கும்
வாசனை வீச விலையோ
மந்திர வெழுத்துமாய்ப் பொருளுமாய் அன்பர்க்கு
வந்தருள் செய்ய விலையோ
திலகமாய் அதனுளே நெய்யுமாய் வேண்டும்
செகந்துயிர்க் குதவ விலையோ
தேகமாய்ச் சிவனாய் நின்றநீ அதுசெயும்
செயலெலா முனதல் லவோ
உலகிலுள உயிரினில் எனதுயிரு மொன்றென்
னுனக்கு மறியா விடயமோ
ஊழூழி காலம்நின் அருள்வாழி வாழிநின்
ஊழியன் செனன மாயை
வலையறுத் தெனையாள்வ துன்கடமை சிற்றேரி
மதகயலில் ஒளிர் நின்னடி
வாசிமக ராசிவிசு வாசிபிர காசியெனும்
வாசிமக தேவியு மையே."

## உருo. கண்ணுச்சாமி முதலியார்—சி.
(19 - நூ)

பத்தொன்பதாம் நூற்ருண்டின் இறுதியில் வாழ்ந்திருந்தவர். இவர் 'பாவினங்கள்' என்னும் நூலைப் பாடியுள்ளார். அந்நூல் வேளாங்கண்ணி அர்ச். ஆரோக்கிய மாதாவின் பெயரில் சிலுவை வெண்பா, இன்னிசை, புலம்பல், கொச்சகம், பஞ்சரத்தினம் ஆகியவைகளால் ஆகியது.

"மணிகொண்ட அம்பரமும் மாநிரம் பாதலம்
வகுத்தளித் தழிக்கவல்ல
தினிகொண்ட கருணைவளர் ஆறுலட் சணதேவை
செகவிகல் கள்அகல்பரிவாய்ப்
பணைகொண்ட குடிலினிடை உதவுபரி பூரணி
பகரரிய தயைகாரணி
அணிகொண்ட கன்னியா ரோக்யமரி அன்னையே
அடியனைக் காத்தருள்வையே."

என்பது பஞ்சரத்தினத்தில் ஒரு பாட்டு.

## உருக. கண்ணுவையர் (தருமதானபுரம்)
(1887)

சென்ற பத்தொன்பதாம் நூற்ருண்டின் இடையில் தருமதானபுரம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தார். பாரதத்தைச் சொற்பொழிவு செய்வதில் இவர் திறமையுடையவராய் விளங்கினர். "பாரதப் பிரசங்கம்" என்னுஞ் சிறப்புச் சொல் லொன்றும் பொருந்தியது. இவர் இயற்றிய செய்யுளொன்றை அடியிற் காண்க:

"மணிகொண்ட வாரியரு காம்புதுவை
வாழ்வோர் மதித்தகௌ ரிக்குலத்தே
வந்ததொரு பெரியதம் பிக்குரிசில் மைந்தரா
மகிமைபெறு சீநி வாச
மாதா மனுக்கிளைய நாரா யணசாமி
மதியூகி யான புலவன்
மறைநாலோ டைந்தென்ன ஓதுமிதி காசமா
மாபா ரதத்தொ டைந்தாய்த்

துணிகொண்ட நீதியினை உள்ளபடி காட்டியே
துய்யநெய் வத்தருளையும்
சோர்விலா வகைசொற்றி டும்பெரிய கரியநாய்ந்
தொன்றுதொட் டேவரு வநாய்ச்
சுமங்கல மிருந்ததமிழ்ச் சொன்மணிக் கோவையாச்
சுரோத்திரா நந்த நலமாய்த்
துன்பகன் றுய்ந்தசா ரங்கதர னூர்புகழ்ச்
சொற்சரித மாப்பு னைந்தான்
பணிகொண்ட சயனனுங் கருணை நிதிக்குரிய
பக்தர்பால் பத்தி செய்த
பாக்கியவி சேடமொரு நற்குணங் குடிகொண்ட
பரிபக்வ மான மனமும்
பரசமய நிந்தனை செயுந்தீக் குணத்தரொடு
பற்றிலாச் சமர சமுமே
படிமிசை உருக்கொண்ட தென்னலா மிங்கிதன்
பணிவுறுந் தன்மை கண்டால்
அணிகொண்ட பேரவைக் கிடையொரு விளக்கோ
நலஞ்சொல்மலர் மன்மா லையோ
அரியவித் துவசெனர்கள் கொண்டாடு மணியோதென்
அலையுதவ வருதர ளமோ
அவனியிடை யொன்றுநிலை யானபுக ழாட்சியோ
அதிமதிஞர் கண்காட் சியோ
அம்மம்ம இச்சரிதம் என்றிடச் செய்தவிவன்
ஆயுள்நீ டூழி வாழி."

## உ௬உ. கத்தூரி ரங்கய்யர்—ஏ. எஸ்.
(20 - நூ.)

சென்னை மாநகரில் மயிலாப்பூரில் பி. எஸ். உயர்நிலைப் பள்ளியில் உதவியாசிரியராக இருந்தஇவர், ஆங்கிலம் வடமொழி தமிழ் ஆகியவைகளில் நல்ல புலமை பெற்று விளங்கினர். இவர் மகாபாரதக் கதையை ''மகாபாரத வினவிடை'' என்னும் பெயரோடு வினவும் அதற்கேற்ற விடையும் எழுதி எல்லோரும் நன்கு உணர்ந்து கொள்ளுமாறு வெளியிட்டுள்ளார்.

## உ௬௬. கந்தசாமி உபாத்தியாயர் (புதுவை)
(20 - நூ.)

புதுவையம்பதியில் புலமை பெற்றுத் திகழ்ந்த மாபெரும் புலவர் பு. அ. பெரியசாமிப் பிள்ளையிடம் புதுவையில் எண்ணற்ற

...ப் புலமை பெற்று விளங்கினர். அத்தகைய ...க்கந்தசாமி உபாத்தியாயரும் ஒருவர். பள்ளி ...சிரியராகப் பணி புரிந்தமையின் உபாத்தியாயர் ...சால் இவரை நாடியது. தம்மாசிரியரியற்றிய ...ம்பகத்திற்கிவர்,

...னதுக் கோர்சுகந்நை எய்துவித்து நான்முன்செய்
...மப் பவத்தைக் களைந்ததே—தன்மமிகும்
...ரார்ந் தொளிர்பெரிய சாமியென்னல் லாசான்சொல்
...ரார் கலம்பகமாந் தேன் ''

...னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார். இவரியற்றிய சில பதிகங்கள் இப்பொழுது கிடைக்கவில்லை.

## உ௬௪. கந்தசாமிக் கவிராயர்—அ.

பாண்டிவள நாட்டில் விருதுநகரில் இருந்தவர். தந்தையார் பெயர் அண்ணாமலைப் பிள்ளை. கந்தசாமிக் கவிராயர் இசைப்புலமையிற் சிறந்து திகழ்ந்தார். சாலிச்சந்தை கருணாநந்த சுவாமிகள் மீது இவர் "கருணையா நந்த மாலை" என்னும் மாலையைப் பாடியுள்ளார். இராமலிங்கக் குருக்கள் பெருநாழி குமரய்ய நாடார் தே. சு. சங்கரலிங்க நாடார் சிவநதி நாராயண நாடார் என்போர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" அன்னநேர் நடையார் மின்னைநேர் இடையார்
அமிழ்தினும் இனியசொல் லுடையார்
சொன்னநேர் நிறத்தைத் தடித்தெழுந் தனத்தைத்
துதிப்பதே தொழிலதா யுடைய
என்னையாள் கடவுள் நின்னையே அல்லால்
ஏழைகண் டுய்யுமா றுளதோ
கன்னல்வாய் வயல்சூழ் சாலிமா நகர்வாழ்
கருணையா னந்தசற் குருவே "

என்பது மாலையில் ஒரு பாட்டு.

## உ௬௫. கந்தசாமிப் பிள்ளை (மதுரை) (1903)

இவர் மதுரை மாநகரில் இருந்தவர். இவருடைய பெயருக்கு முன்னால் " மதுரை மாநகரம் சுந்தர செயவீர சூர தீர கவிராச "

என்னும் அடைமொழிகள் காணப்பெறுகின்ற
தர்ஷா சரித்திரம்' என்னும் நூலை எழுதியுள்ளா
நடையில் அமைந்துள்ளது. மற்றும் இவரால்
நூல் சத்தியவசனி சரித்திரம் முதலியன.

## உ௲கசு. கந்தசாமிப் புலவர் (வடகை

இவர் வடகரைத் துரையவர்கள் பேரில் ட
என்னும் நூலைப் பாடியுள்ளார்.

ரு. அரிவைப் பருவம்

அரிவைப் பருவமிவள் நானையா—உமக்கு
மருவப் பருவமான மானையா
தெரிசொற்றமி ழைக்கரை கண்டுதமிழ்ப்
பொதியக்கிரி யைத்திரை கொண்டுவளர்
திரிகூட பதிகாந்த பெரியசாமிரா சேந்த்ரா.

இது பல்லவியும் அனுபல்லவியும், ஏழு பருவங்கட்கும் நீளமான இசைப்பாடல்கள் அமைந்துள்ளன.

## உ௲எ. கந்தசாமிப் புலவர் (கோட்டையூர்)

(20 - நூ.)

இவர் கோட்டையூரில் வாழ்ந்திருந்தவர். ஊற்றுமலைச் சமத்தானப் புலவராக விளங்கி அவ்வூர்ப் பெருநிலக் கிழாருடைய உதவியைப் பெற்றிருந்தார். இவர் 'திருஞான சம்பந்தர் மீது இரட்டை மணிமாலை' என்னும் நூலைப் பாடியுள்ளார்.

"பாலனந் நங்க மளித்தடியாரைப் பரவுபரி
பாலனந் நங்கருண் மந்திரமேவுசம் பந்தவுள்ளன்
பாலனந் நங்கடையோர்க்கு மெய்விடருள் பாவலவென்
பாலனந் நங்க நமனணுகாதுகண் பார்த்தருளே"

என்பது இரட்டை மணிமாலையில் ஒரு பாட்டு.

## உ௲அ. கந்தசாமி முதலியார்—குருநாத

(20 - நூ.)

திருத்தில்லைப் பதியினராகிய இவர் பிற்காலத்தில் சென்னை மாநகரில் வாழ்ந்திருந்தார் என்று தெரிகிறது. இவருடைய

தந்தையார் பெயர் குழந்தைவேல் முதலியார். இவருடைய பெயருக்கு முன்னால் சிதம்பரம்—குருநாத—என்னும் அடைமொழிகள் காணப்பெறுகின்றன. இவர் வடமொழியில் இருந்த காளிதாசன் வரலாற்றைத் தமிழ்மொழியில் "கவிரத்தின சிந்தாமணி" என்று பெயர் கொடுத்து விரிவாக எழுதியிருக்கிறார்.

"எட்டாத வடமொழியில் முன்னஞ் சொன்னர்
இலகுகவி மககாளி தாசன் காதை
ஒட்டாத மற்றோரும் உணரும் வண்ணம்
ஓங்குதமிழ்த் தெளிவுபெறு நடையிற் சொன்னன்
மட்டாருஞ் சோலைவயல் சூழுஞ் சென்னை
மாநகரில் மாட்சியுறுங் குழந்தை வேலின்
தட்டாத தவப்புதல்வன் கந்த சாமி
நாரணியில் தமிழ்மாதுந் தழைக்க வென்றே"

என்பது பாயிரப் பாடல்களில் ஒன்று.

## உகூகூ. கந்தசாமி முதலியார்—வா.
## (1894)

தொண்டைவள நாட்டில் வாலாசா நகரத்தில் வீராச்சாமி முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். பன்னூற் பயிற்சியும் இனிதமையப் பெற்ற இவர் "பாலிகா போதினி" என்னும் சிறிய உரைநடை நூலை இயற்றியுள்ளார். இந்நூல் சிறு பெண்களுக்கு அறிவு புகட்டுவது.

"சீரார் உலகுதனில் செந்தமிழால் நங்கையர்தம்
பேராருங் கற்பினிலை பேசவே—ஏராரும்
மாதங்கத் தானின்றமைந்தன் ஒருகோட்டு
மாதங்கத் தாளேத்து வாம்"

என்பது நூலின் கடவுள் வாழ்த்துப் பாடல்.

## உசுo. கந்தப்ப உபாத்தியாயர்

தொண்டைவள நாட்டில் காஞ்சிபுரத்தில் இருந்தவர். இலக்கண இலக்கியப் பயிற்சியில் தேர்ச்சி பெற்றிருந்த இவர் பள்ளிக்கூடம் ஒன்று அமைத்து மாணவர்களுக்குக் கல்வி

போதித்துக் கொண்டிருந்தார். அதனால் மக்கள் இவரைக் கந்தப்ப உபாத்தியாயர் என்று அழைக்கலாயினர். இவர் கபோத வாக்கியம் என்னும் நூலைப் பாடியுள்ளார். அந்நூல் இருநூற்று முப்பத்தொரு பாடல்களைக் கொண்டது. இராமபிரானிடம் அடைக்கலம் புகுந்த விபீடணரைப் பார்த்துச் சினங்கொண்ட சுக்கிரீவனுக்கு இராமபிரான் இயம்பிய இரண்டு புருக்களின் வரலாற்றுச் செய்தியைத் தன்னகத் தடக்கியது.

"தேவியைத் தவிர்க்கோணுது செய்திடுந் தானமல்லால்
பூவையைக் கொல்லோணுது பூதலத் தோருக்கென்ன
மேவியே தியிலிப்போ வேடனுக் கிரைதா னென்று
ஆவியே துணிந்து விழும் ஆணெனுங் கபோதந்தானே"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## உசக. கபாலமூர்த்திப் பிள்ளை—ஆ. ந.
(20 - நூ.)

இவர் திருநெல்வேலி சுப்பிரமணியபுரம் சோசேப்பு நாடார் என்பவரிடங் கல்வி கற்றவர். பர்மா எண்ணெய்க் கம்பெனியில் எழுத்தாளராகத் தொழில் புரிந்து கொண்டிருந்த இவர் இனிமை யான பாடல்களையும் நன்கு பாடுவதில் புகழ் பெற்றிருந்தார். அதனால் இவருடைய பெயருக்கு முன்னால் "மகா மதுரகவிப் புலவர்" என்னுஞ் சிறப்புப் பெயரும் அமைந்து நின்றது. போரூர் வேம்படி விநாயகர் மீது பாடப்பெற்ற இரட்டை மணி மாலை என்னும் நூலுக்கு இவர்,

"கினியாடுந் தாளான் அமரூர்நிம் பற்குக் கிளைத்திரட்டை
மணிமாலை நன்று வளமே புரைத்து மதிமிகுந்தான்
அணிமுத்து வீரநன் ருவலர் மானவ னுங்கலைதேர்
பனிதரு ரத்தினப் பேருடையோன் நல் பரிவினனே"

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார். இவருடைய தந்தையார் பெயர் நயனப்ப பண்டிதர். இவர் காலக் கணிதத்திலும் வல்லவர். இவர் காலத்தில் பெ. மா. மதுரைப் பிள்ளை யென்பவர் சிறந்த வள்ளலாக விளங்கியிருந்தார். அவர் மீது இவர் "மதுரை மையற்பா" என்னும் நூலை யியற்றியுள் ளார் நூலின் முருகக் கடவுளின் துதியை அடியிற் காண்க.

திருப்புகழ்ச் சந்தம்

" சீலமுள தாயர் தந்தை—மாதுமனையானமைந்தர்
சேருபொருளாசைநெஞ்சு—தடுமாறித்
திமையுறு மாயைகொண்டு—வாழ்வுசதமாமிதென்று
தேடினது போகவென்று—தெருவூடே
வாலவய தானகொங்கை—மேருநுதலான திங்கள்
மாதர்மய லோடுசிந்தை—மெலியாமல்
வாழுமயில் மீதுவந்து—தாளிணைகளானதந்தென்
மாயவினை தீரவன்பு—புரிவாயே
சேலவள நாடன்மஞ்ச—ளாரவயல் சூடுமிஞ்சி
சேணிலவு தாவுசெம்பொன்—மணிமேடை
சேருமம ரேசர்தங்கள்—ஊரிதெனவாழ்வுகந்த
சீரமிகு சூரைவென்ற—திறல்விரா
ஆலவிட மேவுகண்டர்—கோலமுட னிடுமன்றுள்
ஆடல்புரி யீசர்தந்தை—களிகூர
வானமொழி யேபகர்ந்த—சோலைமலை மேவிநின்ற
வானவரெலாம் வணங்கு—பெருமானே "

## உசஉ. கபீபு முகம்மது ராவுத்தர்—வ. அ. (1901)

இவர் பாண்டிவள நாட்டில் சாத்தூர்ப் பிரிவு வடமலை புரத்தில் வ. ந. அலியார் ராவுத்தர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இராமநாதபுரம் சீமை பெருநாழியில் இருந்த ஞானசிகாமணி யென்னுஞ் சிறப்புப்பெயர் உடைய, கா. முகமது இபுருகிம் புலவர் என்பவரிடம் கல்வி கற்றார். திருப்பரங்குன்றம் சிக்கந்தர் சாயபு ஒலியவர்கள் மீது "பலசந்த வழிநடை அலங்காரச் சிந்து" என்னும் நூலைப் பாடியுள்ளார். துரைசாமி புரம் முத்துக் கருப்பக் கவிராயர், குண்டலக்குத்தூர் திருவேங் கடக் கவிராயர் கோலவாறுபட்டி சோமசுந்தர ஐயர், சிக்கந்தர் ராவுத்தர், பொன்னப்ப பிள்ளை ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். நூலின் காப்புச் செய்யுளை அடியிற் காண்க:

" மருக்கமழ்பூஞ் சோலைசெறி மண்டபங்கள்
இலங்கியொளிர் மதுரை யோரம்
தருக்கள்மிகு திருப்பரங்குன் றினில்வளர்சிக்
கந்தரொலி தருகா வுக்குப்

பெருக்கமுயர் அலங்கார வழிநடைச்சிந்
நிசைந்தமிழால் பேச வேண்டி
உருக்கமுடன் இறைவனையாம் எந்நாளும்
உளத்திருந்தி ஓதுவோமே''

## உசரு. கமலம்மாள்—சு.

இவ்வம்மையார் பொள்ளாச்சி என இக்காலத்தில் வழங்கும் பொருளாட்சி என்னும் ஊரினர். இவ்வம்மையாருடைய கணவனார் பெயர் சுப்பிரமணிய ஐயர். இவ்வம்மையார் "ஆறுமுகன் பதிகம்'' என்னும் பதிகம் பாடியுள்ளார். பதிகத்தின் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

'' ஆறுமுக மாயினுய் அன்பினர் துயர்க்கெலாம்
ஆறுமுக மாக விலேயோ
ஆனந்த நிலயமே அழகனே குமரனே
அடியேனை ஆண்டருள் செயாய்
விறுபெறு மயிலேறி வேண்டியவர் முன்சென்று
மென்மலர்ச் சரணம் அருள்வாய்
வேதனைச் சிறையிட்டு நான்மறைப் பொருள்கேட்டு
மிக்கபிரணவமுரைத்தாய்
தேறுமடியேன்பழைய வினைதீர்த்து நின்னுடைய
சேவடியை அடைய அருள்வாய்
சிவசுப்பிர மணியனே திருமாலின் மருகனே
தேவதேவேச தனையா
ஆறுதலை கொண்டருளும் ஐயனுடல் வாமமுடை
ஆநந்த வல்லி புதல்வா
ஆனந்த மூர்த்தியே அடியவர்க் கெளியனே
ஆறுமுக மான குகனே.''

## உசச. கரக சிவாசாரியார் (நல்லாற்றூர்)

இவர் நல்லாற்றூர்ச் சிவப்பிரகாச சுவாமிகளின் வழிமுறையைச் சேர்ந்தவர் என்றும் சத்தியவாச மடம் என்னும் மடத்தில் இருந்தவர் என்றுந் தெரிகிறது. இவர் திருவள்ளுவர் பிள்ளைத் தமிழ் இயற்றிய அமுதபானியார் என்பவருடைய வரலாற்றை முந்நூறு அடிகள் கொண்ட ஆசிரியப்பாவால் இயற்றியிருக்கிறுர்.

" மழைமதந் நந்தி மாமுகந் நானடி
தழைசடை ஐம்முகன் தன்னருட் சிரடி
நல்லுமை கந்நன் ஞானவி ரன்அடி
வெல்லும்ஐங் குரவர் விந்நகர் பொன்னடி
சிவஞான பாலையன் சிவஒளி யானடி
அவஞானம் போக்கும் அமுதபானி யானடி
அலர்புகழ் வள்ளுவ அண்ணலார் திருவடி
மலர்நலை சூடி மலிஇருள் அகற்றுவாம்."

என்பது கடவுள் வாழ்த்துப் பகுதி. இந்த அமுதபானியார் வரலாறு இயற்றியிருப்பதைத் தவிர இவர் வேறு நூல்கள் இயற்றியிருப்பதாகத் தெரியவில்லை.

## உசரு. கருப்பசாமிக் கவிராயர்—ச.

(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் எட்டையாபுரத்தைச் சேர்ந்த தெற்கு வீரபாண்டியபுரம் என்னும் ஊரில் சன்னசித் தேவர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர், "பொன்னாட்சியம்மன் அம்மானை" என்னும் நூலைப் பாடியுள்ளார். சங்கர சுப்புப் பிள்ளை, இராமசாமி உபாத்தியாயர், இராமசாமித் தேவர், கறுப்பசாமித் தேவர் அம்மமுத்துக் கவிராயர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். நூலாசிரியர் தம்முடைய வரலாற்றைத் தாமே பின் கண்டவாறு பாடுகிறார்:

" பொய்யா மொழியுடையோன் புண்ணியத்தி லேசிறந்தோன்
ஐயறவு நீங்கும் அமுர்தகுண சாலி
விசவித்தை நன்னையிந்த மேதினியோர் கொண்டாட
நிசவித்தை யாக்குவிக்கும் நீதி மிகுஞ்சுமுகன்
நலம்புகழு வர்மமுந் தகுஞ்சிலம்ப மும்படித்துச்
சிலம்பர்கள் கொண்டாடுஞ் சிலம்பவித்தை யுந்தேர்ந்தோன்
உண்டிதங்கள் பேசும் உலகோர் பிணிநீக்கும்
பண்டிதர்க ளின்மிகுந்த பண்டிதமும் பார்க்க வல்லோன்
கடம்ப மலர்ப்பாகன் கந்தவேள் தன்பதத்தைச்
சடம்பொருந்த வேவணங்கச் சலியா மனமுடையான்
பொன்னுசை நீங்கப் புவியிலிரப் போர்க்கருளும்
சன்னசித் தேவர்மைந்தன் சத்யகுண சீலன்
கலைபலவு மேபடித்துக் காசினியோர் கொண்டாட
உலைவுதவி லாதசர்க்கார் உத்யோக மும்புரிந்து

பொய்யா மொழிபுகலும் புதுமையினு லேயமைந்த
பொய்யா மொழிமுத்துப் புன்னியவா னுக்கிளேயோன்
புள்ளிமயி லேறும் புனிதன் அயிற்கரத்நான்
வள்ளிமயில் கேள்வன் மலர்த்நாள் மறவாதான்
ஆரைக்கூட்டம்மிகுந்த அழகுநதி நீர்சூழ்ந்த
பாறைக்கூட்டம் நகரில் பண்பாய் வளர்ந்திடுவோன்
செகராசர் மெச்சுஞ் சிராமா யணபுலி
மகராச தேசிகனே மனதில் மறவாதான்
தொந்துமலர்த் தேன்பெருகிச் சூழ்ந்தவயல் புன்செய்களில்
முத்துநவ தான்யம் முறுக்காய் வளர்ந்து பல்கும்
மன்விரர் பார்த்து மகிழ்ந்துமே கொண்டாடும்
தென்விர பாண்டி புரந்திறமாக வாழ்ந்திடுவோன்
திருப்பத் தியநாகத் தேவி சகாயமதால்
கருப்பச்சா மிக்கவிஞன் கழறினன்கான் இக்கதையை''

## உசகூ. கலியாண சுந்தராச்சாரி—பி.

(1911)

இவர் பிக்கபாடி என்னும் ஊரினர். உரைநடை நூல்கள் இயற்றுவதினும் செய்யுள்கள் பாடுவதினும் வல்லவர். இவர் இராமாநந்த சர்மா சரித்திரம், அருணகிரிநாதர் அற்புத சரித்திரம், விநாசகாலே விபரித புத்தி, வீண் பக்தி வேடதாரி, மர்ம சாத்திர தர்ம போதினி, புருடத் துரோகி, நம்பிக்கைத் துரோகம் என்னும் நூல்களே இயற்றியிருக்கிருர். "விஸ்வ கர்மோபதேச வீர கண்டாமணி'' என்னும் நூலும் இவரால் இயற்றப்பெற்றது.

"கல்வி மறந்தோம் கைத்தொழில் இல்லோம் கதிகெட்டோம்
செல்வ மிழந்தோம் சிரும மிழந்தோம் சிறியேமாய்ப்
பல்லவரோடும் பாகம டைந்தே பாழ்போனேம்
அல்லல் ஒழிக்கும் அருநெறி நேடற் கணேயோமோ?''

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## உசஎ. கலியாண சுப்பிரமணிய அய்யர்—எ.

(19 - நூ.)

இவர் கோயமுத்தூரில் எல்லேயர் என்பவருக்குப் புதல்வ ராகத் தோன்றியவர். இவர் தரும நாடகம் என்னும் நாடகத்தை

இயற்றியிருக்கிருர். அந்நூல் தருமர் வைகுந்த நாடகம் எனவும் மகாவிந்த நாடகம் எனவும் பெயர்பெறும். நாடகத்தைப் பாராட்டிக் கோயமுத்தூர்க் கிருட்டிண ஐயர், சாமக்குளம் சுப்பிரமணிய ஐயர், கோயமுத்தூர்ச் சுக்கிரவாரப்பேட்டை அய்யாவு செட்டியார், கணபதி செட்டியார், இடிகரை அரங்கசாமி நாயகர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"ஆதரவாய்ப் பஞ்சவர்கள் நகரம் நீங்கி
அன்றுபுவி அளந்தபதம் தன்னை யேத்தி
மாதொருத்தி தொடர்ந்திடவை குந்தஞ் சேர்ந்த
மகாவிந்த சரிதையை நா டகமாப்பாட
ஏதும்வகை அறியாத சிறியேனுங்கள்
இணையடியே துணையெனவின் றெழுதுஞ் செஞ்சொல்
வாதுகவித் தமிழ்சொரியும் புலவிர் பெற்ற
மைந்தர்புகல் மழலையென வுளங்கொள் வீரே"

என்பது நூலின் அவையடக்கப் பாடல்.

## உசவு. கல்லுளிச்சித்தர்

இவர் சித்தர்களில் ஒருவர் "கல்லுளிச்சித்தன் போனவழி காடு மேடெல்லாந் தவிடுபொடி" என்னும் பழமொழி ஒன்று நமது நாட்டில் வழங்கிவருவதை எல்லோரும் உணர்வர். இவர் கையில் பெரிய உளியொன்றை உடையவராக இருந்தார் என்றும் அதனுற்ரும் சென்ற வழியில் ஏற்பட்ட தடைகளையெல்லாம் தகர்த்துக்கொண்டே சென்ருர் என்றுஞ் சிலர் கூறுகின்றனர். மேற்கூறிய பழமொழி இதனை உறுதிப்படுத்துவதாக இருக்கிறது. இவர், "கல்லுளிச்சித்தர் சொருப நிலை கூ" "கல்லுளிச் சித்தர் பாடல்" என்னும் நூல்களை இயற்றியுள்ளார்.

"பிர்மசொ ருபந்தை நாடு—உன்
கரும வினைஓட வழிதனைத் தேடு
மர்மந் தெரிவிக்கும் வீடு—கண்டு
தரும நெறிமுறை தன்னிஸ்நீ கூடு
ஆதி பரம்பொருளைப் போற்றின்—எந்தன்
ஆத்தாளின் பாதந்தை மனதினில் ஏற்றி
சோதிச் சுடரொளியை நோக்கி—எங்கள்
தூயகுரு பதமலரைச்சிரமீது தாக்கி"

என்பன இவருடைய பாடல்களில் ஒருபகுதி.

## உசகூ. கவிகுமுத சந்திரபண்டிதன் திருநாராயணன் (12 - நூ.)

கல்வெட்டால் அறியப்பெறும் புலவர். புதுச்சேரிக்கருகில் உள்ள திரிபுவனி என்னும் ஊரிலுள்ள சிவன் கோயில் மண்டபத்தின் தென்மதிலில் மூன்றாங்குலோத்துங்கனது இருபத்தேழாம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டொன்று உள்ளது. திரிபுவனி மாதேவிச் சதுர்வேதமங்கலம் என வழங்கப்பெற்ற திரிபுவனியூரினரும் 'கவிகுமுத சந்திரன்' என்ற சிறப்புப்பெயர் பெற்றவருமான திருநாராயணபட்டன் என்பவர் 'குலோத்துங்க சோழ சரிதை' என்ற காவியம் ஒன்று பாடினரென்றும், அஃது அரசன் விருப்பப்படி அவ்வூர்ப் பேரவையில் அரங்கேற்றப்பெற்று நன்மதிப்படைந்ததோடு, காவிய ஆசிரியர்க்கு அவ்வூரில் இறையிலி நிலம் பரிசளிக்கப் பெற்றதென்றும் அக்கல்வெட்டில் குறிக்கப் பெற்றுள்ளன. நூல் அந்நாளிலேயே மறைந்தது போலும்.

## உருo. கவிவீரநல்லான் (துரைசாமிபுரம்) (1911)

கவிவீர நல்லான் பாண்டிவள நாட்டில் கோவில்பட்டி கூற்றம் துரைசாமிபுரம் என்னும் ஊரில் இருந்தவர். கூத்திப் பாறை மதுரகவி முத்துக்கிருட்டிண இராமாநுசர் என்பவரிடங் கல்விகற்றுப் புலவரானார். மேற்படி துரைசாமிபுரம் இலட்சுமிபதி நாயக்கர் மக்கட் பேறின்மையால் மனங்கவன்று நூலொன்று மக்கட் பேற்றின் பொருட்டுச் செய்தருள்க வென்று இவரிடம் கேட்டுக்கொண்டார். இவரும் அதற்கிரங்கிப், "பசுந்தைப்புத்திர பாக்கியமாலை" என்னும் இந்நூலை இயற்றினார்.

" துட்டக் கொடுவெங் கலிதவிர்ந்து
சுவர்க்க லோகப் பதிமேவி
மட்டற் றிலங்கு மண்டபத்தே
வானோர் இறைவன் தனைப்போல
இட்டத் தரம்பை மின்னார்கள்
இனிது நடிப்ப இருந்தாலும்
சிட்டச் சுதர்கட் கிணையாமோ
அருள்க பசுந்தைச் சிவக்கொழுந்தே "

என்பது மாலையில் ஒரு பாட்டு.

## உருக. கழுகாசலப் புலவர்
(19 - நூ.)

இவருடைய இடுகுறிப்பெயர் இன்னதென்று தெரியவில்லை. திருக்கழுக்குன்றம் என்னுங் கழுகாசலத்தில் சில காலந் தங்கியிருந்தபடியால் கழுகாசலப் புலவர் என்று காரணப்பெயர் பெற்ருர். இவருடைய கைகால் உறுப்புக்கள் நோயாற் குறைந்து நடக்கமுடியாத கிடக்கை நிலையை அடைந்தார். திருக்கழுக்குன்றத்திற்குப் போய்த் தேவ தேவனுகிய சிவபிரானை வழிபட்டுத் தம்முடைய நோயைப் போக்கிக்கொள்ள விரும்புவதாகத் தம்முடைய உறவினர்களிடத்தில் கூறினர். அவர்கள் இவரைத் திருக்கழுக்குன்றத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் இறை வழிபாடு செய்யச் செய்தனர். ஆயினும் இவருக்கு நோய் உடனே நணப்படவில்லை. இவரோ நோய் தீராவிடின் ஊருக்கு வருவதில்லை யென்று உறவினர்களிடம் உறுதியாகக் கூறிவிட்டார். ஆகவே அவர்கள் இவரை ஒரு வண்டியில் இருக்கச் செய்து மலையடிவாரத்தில் விட்டுவிட்டுப் போயினர். பிறகு இவர் மழை வெயில் எதையும் பொருட்படுத்தாமல் வண்டியில் இருந்தவாறே அண்டர்பிரானை எண்ணிய மனத்தினராயிருந்தார். கழுக்குன்றத்திற்கு வந்து மலைவலஞ் செய்து செல்வோர் நல்வினையின் பொருட்டு இவர் இருந்த வண்டியையும் சிறிது சிறிது தொலை இழுத்துக்கொண்டுபோய்ப் போட்டு விட்டுச் சென்றனர். இவ்வாறு வண்டியில் இருந்தபடியே அம்மலையை ஒருமுறை வலம் வந்தவரானுர். பிறகு மலையின் அடியில் இறைவன் திருமுன்பு இருந்தவாறே 'கழுகாசல சதகம்' என்னும் பெயரோடு சதகம் ஒன்றைப் பாடினுர். கடவுளின் தெய்வத் திருவருளால் தம்முடைய குறைநோய் ஒழியப்பெற்று முழுநலம் அடைந்தார்.

" திருநாளிலே வெறுநாளிலே சிவனேயுன தடிவாரம்வந்
தொருநாளிலே யொருநாழிநின் றுனை யோதிலேன்எனை ஆள்வையோ
அருணுசலா அமுதாகரா அரிசேவிதா அகிலேஸ்வரா
கருணுலயா கமலாலயா கழுகாசலா கழுகாசலா "

என்பது சதகத்தில் ஒரு பாட்டு. இவர் பாடிய சதகம் "கழுகாசல சதகம்" என்று பெயர்பெறும். பாடல்கள் இனிய முறையில் படிப்பவர்கட்கு இன்பமூட்டும் வகையில் அமைந்துள்ளன.

## உருஉ. களஞ்சேரி அண்ணுச்சாமிப் பிள்ளை

(20 - நா.)

இவர் களஞ்சேரி என்னும் ஊரினர் என்பது பெயருக்கு முன்னல் அமைந்திருக்குஞ் சொல்லைக்கொண்டு உணரலாம். இவர் மாணவர் பலருக்கு இலக்கண இலக்கியங்களைப் போதித்த தன்றித், திருவேரகம் சுப்பிரமணியர் நான்மணிமாலை, திருவேரக யமகக்கட்டளைக் கலித்துறை, திருவேரக நிரோட்டக யமகவந் தாதி முதலிய நூல்களைப் பாடியிருக்கிருர். இவர் சென்ற காளயுக்தியாண்டு (1918) சித்திரைத் திங்கள் பத்தாம்நாள் இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைவன் திருவடி நிழலையடைந்தார். அப்பொழுது இவருடைய மாணவர்களில் ஒருவராகிய க. கிருட்டிணசாமிச் சேனைநாட்டார் என்பவர்,

"சீர்கொண்ட தஞ்சைமா நகர்மன்னர் மன்னரின்
திகழ்வைத்ய சாலை மரபில்
சேர்ந்திடும் பிடகநூல் கலைஞர்களி லேவாசு
தேவன் தவத்து தித்தோன்
ஏர்கொண்ட விசயஅண் ணுசாமி நாவலன்
ஈசன்முத லோர்கள் மிதில்
எழிலுறும் பாமாலை சூடிப்பல் கவிகளும்
ஏத்துதிரு நீலகண்டர்
நார்கொண்ட சரிதை நாடக உருவமாகவே
நந்துவின் னதித்தென்கரைத்
நன்களஞ் சேரிசிவ ஞலயத் தருகினில்
தருகருப்பந்தி னிமுல்
பார்கொண்ட வைம்பா னிரண்டாண்டு சித்திரைப்
பத்தெனுந் தேதி திங்கள்
பன்புறும் மிதுனலக் கினபூர நாள்தனில்
பரனடி கலந்தன னரோ"

என்னுஞ் செய்யுளைப் பாடியுள்ளார்.

## உருரு. களக்கோட்டிலிங்கக் கவிராசர்

இவர் சங்கரலிங்கக் கவிராசர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றித் தந்தையிடமும் பிற புலவர்களிடமும் இலக்கண இலக்கியங்களைக் கற்றுப் புலவரானுர். இவரால் இயற்றப்

பெற்ற நூல்களில் பொட்டல்புதூர் என்று பெயர் வழங்கிய புதுவைமாநகர் முகையதீன் ஆண்டவர் "பஞ்சரத்தினப்பாமாலை" என்பதொன்று அறியப்பெறுகிறது. நூலுக்கு வீரவநல்லூர் பீர்முகையதீன் புலவர், திருநெல்வேலி கந்தசாமிக் கவிராசர், ஆதிமூர்த்திக் கவிராசர், சுரண்டை ஆதிநாராயண பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"தன்னிகரி லாதநின் சந்நிதியில் வந்துனது
நாள்பணிந் துருகிடாத
நன்மையேன் எனினுமிந் நரனியோர் நின்புகழ்
நான்சொலக் கேட்டுவந்து
சென்னியின் மிதிலிரு கைகளுங் கூப்பியே
சேவிக்க யானறிகி லேன்
செவியினு லாகிலும் நின்பெருமை கேட்கிலாத்
தீமையேனுகி னேயோ
மன்னுபுகழ் நின்னடியை உள்ளத்தில் என்னுது
மருவுமூ வாசை வைத்து
மனதுஞ் சலித்தனன் இனியேனும் நின்னடி
வழுத்தநல் வரமருளு வாய்
பொன்னிலகு மணிமேடை மாடகூ டத்தில்வாழ்
பூதலத் தோர்இ றைஞ்சும்
புதுவை நகர் வளர்பள்ளி வாசலுள் அமர்ந்தருள்
போதமே கருணை முகிலே."

## உ௬ச. கறுப்பசாமியா பிள்ளை—கே.
## (1913)

பாண்டிவள நாட்டில் எட்டையபுரம் சமத்தானம் புதியம் புத்தூர் வணிதம் சாமிநத்தத்தில் இருந்தவர். இவர் 'சங்கர விநாயகர் பதிகம்' என்னும் நூலைப்பாடியுள்ளார்.

"ஆரணம தானமறை யானவனும் நாரணனும்
அம்புலிக் கங்கை சூடி
ஆரியசர வணபவன் பரியகுலி சாயுதன்
ஆனகண புந்தேளிரும்
பூரணமா நால்நினைப் பணிவரது மெய்யெனப்
புகழுமுயர் வேதம் யாவும்
பொன்னுலகு முதலான மன்னுலகு தோன்றியெப்
பூசைக்கு முதல்வனுக

வாரணவ தனமாகி வாரணத் துவசர்க்கு
வாரணனும் ஆகு முதல்வா
வல்லபை இடமாக நல்லுபய மெனவைத்து
வளர்கின்ற முந்தி முதலே
தாரனத் தானையித் தரணிதனில் ஏழைக்குத்
தருகவென வந்த நிதியே
சடாமகுட நடமகவ கடாவிகட நிடவுசித
சாமிநகராதி பதியே"

என்பது சங்கரவிநாயகர் பதிகத்தில் ஒரு பாடல்.

## உடுடு. கற்பூர திருவேங்கடசாமி செட்டியார்

மதுரை மாவட்டம் பெரியகுளம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்த இவர் திருவேங்கடேசுரர் சதகம், இராமர் பதிகம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். பாலசுப்பிரமணிய பாரதியார், செல்லக்காமாட்சி உபாத்தியாயர், ஏழுமலை முத்துசாமிச் செட்டியார் ஆகியோர் இவருடைய நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"சுந்தர மிகுந்திலகு மணிமகுட சோதியணி
துலகுசெங் கமல முகமும்
தூயர்க் கிரங்குமிரு கருணைவிழி யுஞ்சுகுணர்
சொல்லித் துதிக்கு மறையும்
சந்ததமும் அன்புகொண் டடியர்கட் கருள்தரும்
தளிரிய லுலாவு மார்பும்
சண்டப்ர சண்டகோ தண்டமணி கின்றதட
சயிலநிக ரான தோளும்
அந்தரத் தமரர்தொழு தணிமுடிகள் தாழ்ந்ததிரு
அழகுபொலி கின்ற தாளும்
அல்லாது வேறேது துணையோதும் அடியேனை
ஆண்டருள வேண்டும் நாளும்
சிந்தைகுடி கொண்டிலகு சிதரத யாபரா
தீவினைகள் தீர்க்க வருவாய்
சிந்துரம் அழைக்கவரு கன்னமணி வண்ணபூம்
பண்ணைவளர் சிரா மனே"

என்பது இராமர் பதிகத்தில் ஒரு பாட்டு.

பாடல்கள் யாவும் இப்பாடலைப் போலவே இனிய விழுமிய போக்கில் அமைந்துள்ளன. கடுமையான போக்கும் எளிமையான போக்குமில்லாத நடுத்தரத்தைச் சேர்ந்தவை.

## உருகூ. கனகசபாபதி ஐயர்—சாமி
(19 - நா.)

சோழவள நாட்டில் மாயூரத்திற் கண்மையில் உள்ள கூறை நாட்டில் வீர சைவப் புலவராக விளங்கிய சாமிநாத ஐயர் என்ப வருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் திரிசிரபுரத்துப் பெரும் புலவர் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடங் கல்வி கற்றுர். சி. தியாகராசச் செட்டியார், திருவாவடுதுறை ஆதீனம் இராம லிங்கத் தம்பிரான் உ. வே. சாமிநாதையர் முதலியோர் இவரோடு கல்வி கற்றவர்கள். இவர் இயற்றிய நூல்களில் "திருவாரூர்ச் சிலேடை வெண்பா" என்பதொன்று அறியப்படுகிறது. அந் நூலைப் பாராட்டித் திருவாவடுதுறை ஆதீனம் ஆறுமுக அடிகள், இராமலிங்கத் தம்பிரான், சி. தியாகராசச் செட்டியார், சாமிமலை கனகசபைக் கவிராயர், நாகப்ப செட்டியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" சுந்தரஞ்சேர் வீதிகளும் தூயவெழி லாடவரும்
அந்த விராமனைநேர் ஆரூரே—சந்த
முகமாதங் கத்தார் முருகர் நமையீன்ற
நகமாதங் கத்தார் நகர் "

என்பது நூலின் முதற் பாட்டு.

## உருஎ. கனகசபாபதித் தேவர் (அருப்புக்கோட்டை)
(20 - நா.)

பாண்டிவள நாட்டில் அருப்புக்கோட்டையில் சிறந்த புலவராக விளங்கியிருந்தவர். செய்யுள் செய்வதில் வல்லவர். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை. இவர் இயற்றிய சிறப்புப்பாயிரப் பாடல் ஒன்றை அடியிற் காண்க.

" சீர்சிறந் திடுநல்லை யூர்வளம் பெருகுநல்
தேவாங்கர் மரபில் வந்த
சிவசங்க ரேந்திரன் தவமகிமை நாளும்
திகழ்ந்திடத் தோன்று சீலன்
பேர்சிறந் திடுதிவ்ய பூஞரு சாமிவெண்
பிரசமலர் அனைய மேனி

பிறங்குகலை மாறெனனனை மீதுவென் பாமாலை
பெட்பினெடும் அணிதல் செய்தான்
கார்பிறந் திடுமுகில்கள் நான்குமே தமிழெனும்
கடலினிடை மொண்டு புவியில்
கல்வியெனு மழைபெய்த தென்னவே கவிவலார்
கண்டுகண் டுவகை கூர
பார்பிறந் திடுமமுத பாகமோ கண்டோ
பழங்கொலோ யாது பகர்வாம்
பக்தியொடு சிந்தமிசை வைத்தெவரும் இப்பனுவல்
பாடுவார் நாடு வாரே.''

## உருஅ. கனகசபாபதி வள்ளலார் (ஒற்றியூர்)

(19 - நூ.)

இவர் திருவொற்றியூரில் வாழ்ந்திருந்தவர் என்று ஊகிக்க வேண்டியிருக்கிறது. திருவொற்றியூர்த் தலபுராணச்சாரம் முழுவதையும் அடக்கி இவர் ''திருவொற்றியூர் மும்மணிக் கோவை'' என்னும் நூலைப் பாடியுள்ளார்.

'' கடல்நஞ்சம் உண்டமுதாய்க் கண்டத்திற் கொண்டு
கெடன்மதிகே டாகக் கெதிதந்—திடன்முடிமேல்
வைத்துவளர் மதியாம் வன்மைதரும் ஒற்றியப்ப
கொத்தடிமை யாய்எனை ஆட் கொள் ''

என்பது மும்மணிக் கோவையில் பதினோராவது பாட்டு.

## உருகூ. கனகசபை—பீ. எஸ்.

(20 - நூ.)

இவர் தென்பாதி என்னும் ஊரில் இருந்தவர். 'இரகுநாத சர்மா, வீரசுந்திரம்' முதலிய நவீனங்களை இவர் இயற்றியுள்ளார். கதையிலே செய்யுட் பகுதியும் உள்ளது. வீர சுந்திரத்தில் வந்துள்ள பாடல் ஒன்றன் பகுதியை அடியிற் காண்க.

'' திங்களைப் பழிக்குந் திருநுதல் வல்லி
மங்கை நல்லாய் நானுன் நினைவால்
வாடி வதங்கி வருந்தி இளைத்துக்
கூடி இன்புறக் கருதிய அளவில்
நித்திரை ஒழிந்தேன் நினைவுன்மேல் ஆகப்
புத்தியும் இழந்தேன் புன்னகை முகத்தோய்.''

## உகூ0. கனகவல்லியம்மாள்—கோ.

(20 - நூ.)

இவ்வம்மையார் சோழவள நாட்டில் தஞ்சை மாநகரில் இருந்தவர். இவ்வம்மையாருடைய கணவனார் பெயர் கோபால கிருட்டிண பிள்ளை. இவ்வம்மையாருக்குச் சீநிவாச பிள்ளை என்னும் பெயருடைய புதல்வரும் இருந்தார். இவ்வம்மையார் இலக்கண இலக்கியங் கற்றுச் செய்யுள் பாடுந் திறம்பெற்றுத் திகழ்ந்தார். "கற்புடைய மாதர் நீதிசார சங்கிரகம்" என்னும் நூலை இவ்வம்மையார் இயற்றியிருக்கிறார். நூலில் பாட்டு உரை நடை இரண்டும் உள்ளன. அம்மையாருடைய பாடல்கள் சில வற்றை அடியிற் காண்க.

" மற்றுமோர் தெய்வம் உண்டோ மதியிலா மனமே நீ கேள்
கற்புடை மங்கை மார்க்குக் கணவனல் லாதோன் றில்லை
அற்புடன் நம்மை வேண்டி அடிமைகொண் டாளும் அன்பன்
பொற்கழல் நாளும் ஏத்திப் போதமுற் றிருப்பாய் நெஞ்சே "

" கணவனே தெய்வம் என்று கருதிய கருத்தைச் சார்ந்து
அணமிகும் அமிர்தம் ஊறும் ஆக்கையும் இன்பம் எய்தும்
மணமுள மலர்கள் தூவி மன்னவன் அடியை வாழ்த்தில்
தணவிலாத் தலைவன் பாதம் தான்மிக அடைவாய் நெஞ்சே "

தஞ்சாவூர் வேதவல்லியம்மாள் பள்ளித் தலைமையாசிரியர் த. அ. கணபதிஐயர், சதாவதானம் சுப்பிரமணிய ஐயர் சிதம்பர ஐயர், புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார் மாணுக்கர் ஒழலூர் கவி விரராகவ சீனிவாச முதலியார் ஆகியோர் இந் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## உகூக. காசாமுகைதீன் இராவுத்தர்

(1887.)

இவர் பாண்டிவள நாட்டில் திருநெல்வேலிப் பேட்டை பரிமளக்காரர் தெருவில் இருந்த பக்கிரி முகைதீன் இராவுத்தர் எனபவருடைய குமாரர். இவருடைய பெயர் செய்து இப்ராகிம் ராவுத்தர் என்றும் வழங்கியது. இவர் "முகமது விளக்கம்" என்னும் கிறித்துமத சங்கார நூல் இயற்றியுள்ளார். நூலைப் பாராட்டி அட்டாவதானம் சரவணப் பெருமாட் கவிராயர்,

கல்விக் களஞ்சியப் புலவர், கொட்டாம்பட்டி கருப்பையாப் பாவலர், மதுரகவி மீனுட்சி சுந்தரதாசர், மீருவு ராவுத்தர் என் போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" திருவளர் மணியைத் தினநா யகனைச்
சிறந்தமெய்ஞ் ஞானமாம் பொருளை
மருவளர் இதய மலர்மிசை அன்பர்
வாழ்த்தநல் வரம்பொழி மழையை
அருள்வளர் சுடரை அகம்புற மின்றி
அணுவினும் அணுவதாய் நிறைந்து
கருவளர் கருவை யிடைவிடா தென்றும்
கருத்தினில் இருத்தல்நங் கருத்தே "

என்பது கடவுள் வணக்கப் பாட்டு.

## உசூஉ. காசிச்செட்டியார்—ம.

(1912)

கொங்குவள நாட்டில் கோயமுத்தூர் மாவட்டத்தில் பல்லடம் பிரிவு தேவராயன்பாளையத்தில் மருதமலைச் செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் புலமை பெற்று விளங்கினர். மருதாசலக் கடவுள் மீது "காங்கய மாலை" என்னும் நூலைப்பாடினர். நூலைஇலட்சுமநாயக்கன் பாளையம் இராமாநுசக் கவிராயர் என்பவர் ஆராய்ந்தளித்தார் மாலையின் இரண்டாவது பாட்டை அடியிற் காண்க:

" திருவருளாலும் குருவருளாலும் சிறியன்நான்
செப்பிய பாடல்
சிறுமொழியெனினும் செவிதனில் ஏற்று
உண்மையாய்த் தயவுசெய் தாட்கொள்
அரிதிருமருகா அடியனேன்சென்ம வினைதொலைத்
தறுத்தருள் புரிந்து
வரமருள் கிருபை மருதயங் கிரிவாழ்
சுவாமியே முருக காங்கயனே "

## உசூரு. காதிறுகனி—ம.

(20 - நூ.)

இவர் காரைக்கால் தர்காப் புலவர். இரங்கோன் சோலியாப் பள்ளி வாசல் தருமகர்த்தா. சோலிய முஸ்லீம் அசோசியேஷ

னுக்குக் காரியதரிசி. காரை மஸ்தான் காரண சரித்திரம், முஸ்லிம்கள் கவனிக்கத் தக்க வழி, சோலிய வரலாற்று மாலை முதலிய நூல்களை எழுதியுள்ளார்.

" பூவுல கெல்லாம் புடையிருந் தென்ன
மேவுபு நன்மணி மேடைகள் சூழ்இப்
பன்மணி சோதி பகலவன் போன்று
மின்னொளி கஙன்றி விரவிருள் போக்கும்
இலக்கண க்ஷேத்திரம் என்றெவ் வெவரும்
நலங்கிளர் நாப்பட நன்குரை பகர்ந்திடச்
சிரைப்பொருந்திய தேமலர்ச் சோலைசூழ் "

என்பது இவர் இயற்றிய ஆசிரியப்பா ஒன்றின் தொடக்கம்.

## உகூச. காமாட்சி பிள்ளை—உ. ப.

பாண்டிவள நாட்டில் பெரியகுளம் தாலுகா உத்தம பாளையத்தில் பழனியாண்டி பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். கருப்பண்ண பிள்ளை என்பவரிடங் கல்வி கற்றார். இவர் "விநோத பரமானந்தக் கீர்த்தனை" முதலிய இசைப்பாடல் நூல்களை இயற்றியுள்ளார். இசைப்பாடல் ஒன்றை அடியிற் காண்க.

" சங்கு முழங்கிடு மெங்கள் பரங்கிரி சாமிவேலா
நீயும் சந்ததம் எந்தனை வந்தருள் சுந்தர மேவுஞ்சிலா
துங்க சதங்கை இலங்குமலங்கிர்த சூரதீரா
நாளுந்தொண்டரும் அண்டரும் கொண்டு வணங்கிடு சீவாதார
அந்தியுரித்தவர் பெற்று வளர்தருளருமைச் சேயா
அந்த அச்சுதன் மெச்சிடும் அற்புத லட்சணமுள்ள தூயா "

என்பது ஒரு பாட்டின் ஒரு பகுதி.

## உகூரு. காரணைவிழுப்பரையர் (கல்வெட்டு)

(13 - நூ.)

மாறவர்மன் சுந்தரபாண்டியனுடைய அவைக்களப் புலவர் என்று பாண்டி நாட்டில் பெரிச்சி கோயில் என்ற ஊரில் உள்ள கல்வெட்டுக் கூறுகின்றது. பெரியான் ஆதிச்ச தேவன் என்ற புலவரும் இவரும் நட்பினர் என்றும் அச்சாசனம் கூறுகின்றது.

இவர் அப்பாண்டியனுக்கு நெருக்கமான நட்புடையவராக இருந்தாரென்றும், கண்டன் உதயஞ் செய்தான் காங்கேயன் என்னும் அப்பாண்டியனுடைய அதிகாரிக்கு நட்பினர் என்றும் இவர் பெயரால் "காரணை விழுப்பரையன் மடல்" என்று பெயருடைய ஒரு நூல் இருந்ததென்றும் அறியப்படுகின்றது. இவ்வூர் திண்டிவனம் பிரிவில் இருக்கலாம் என்று எண்ணுகின்றனர்.

## உசுசு காளத்தி ஐயர் (வேலை மாநகர்)

(1876)

இவர் வேலைமாநகர் என்னும் ஊரினர். சென்னபசவையர் என்பவருக்குப் பௌத்திரர். மலை மருந்தையர் என்பவருக்குப் புத்திரர். இவரைத் தில்லையம்பூர்ச் சந்திரசேகர கவிராச பண்டிதர்,

" அற்புதவேலூர் நற்பதி மேவிய
அணிமிகு குணமுடையோன்
அனகன் கனமிகும் அல்லமதேவர்
அடிதுதி யைங்கணைவேள்
பொற்புறு தற்பரன்பத்ம பதந்தனைப்
புந்தியில் வைந்திடுவோன்
புதுமதி நதிபுனை புண்ணியன் நல்லருள்
போதவடைந்திடுமா
சொற்பெறு பற்பல விற்பனர் கூறிய
தோமறு நாளுமரும்
சோதிமிகுந்திடு காளத்திப் பெயர் தூயன்"

என்று பாராட்டியுள்ளார். இவர் திருவிரிஞ்சை யந்தாதி என்னும் நூலைப் பாடியுள்ளார். நூலின் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

" கான்மலர்ச் சோலைப் புடைவிரிஞ் சைப்பதி காவலரை
நான்மறையுச்சி நடித்திடும்பாதரை நாதரையம்
மான்மழு வேந்திய மார்க்கேச ரைக்கைம் மலர்குவித்து
வான்மனில் வாழ்பவர் போற்றியெந்நாளும் வணங்குவரே "

## உசுஎ. காளமேகேசர்—வா.

(1897)

இவரைப் பற்றிய செய்தி விளக்கமாகவில்லை. முருகக் கடவுளிடத்துப் பேரன்பு கொண்டு வழிபாடு செய்தவர். "சடாட்

சரமாறல்'' என்னும் நூலைத் தாமே இயற்றியோ பழைய சுவடிகளைக்கொண்டோ ஆராய்ந்து இயந்திரங்கள் முதலியவைகளோடு வெளியிட்டிருக்கிறார். உச்சாடனத்தைப் பற்றிய பாடல் ஒன்றை அடியிற் காண்க:

'' பவசர ஹணவென் றுரைத்திடும் அடியார்
பவங்களை அகற்றிடும் முருகா
பராபரி ஐயுங் கிலியறி சவ்வும்
பாங்குறி றிங்கெனு மகாரம்
பவசர ஹணவென் றுரைக்கவே முத்தி
பலித்திடும் ஞானமும் புகழும்
பரையுடன் வாலை புவனையும் வாசி
பார்க்கவே யோகமும் ஆகும்
பவசர ஹணவென் றோதிட மயின்மேல்
பாங்குடன் ஏறிநீ வருவாய்
பலபிணி பில்லி கருறிட வேலால்
பற்றிடக் குத்திடு முருகா
பவசர ஹணவென் டங்குடிங் கென்றே
பறக்குமே பூதங்கள் அனைத்தும்
பாதமேக் காட்டி, கதியெனக் கருள்வாய்
பவசர ஹணவெ னுங்குகனே.''

இந்நூல் முழுவதும் மந்திர தந்திரங்கள் நிறைந்தது.

## உகூஅ. காளிந்திதாசர்—ப.
## (19 - நூ.)

கொங்குவள நாட்டில் கோயமுத்தூரில் பசுவைய செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் கல்வி கற்றுப் புலவராக விளங்கினார். இசைப்பாடல்களை இயற்றும் ஆற்றலும் இவருக்கு நன்கு அமைந்திருந்தது. ''சபாரஞ்சித கீதம்'' என்னும் இசைநூலை இவர் இயற்றியிருக்கிறார். சாமக்குளம் வேங்கட ரமண தாசர்மேட்டுப்பாளையம் வே. மு. எதிராச தாசர் என்போர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' ஆதி யேபரஞ் சோதி யேபுயர் நீதியெனுந்திரா
ரகுவீரா சுகுமாரா—ஐயனேஎனை
ஆதரித்தாள் மெய்யனே மெய்யனே—ஆதி ''

என்பது கண்ணியில் ஒன்று.

## உசுகூ. காளியப்ப செட்டியார்—சி.

(1883)

கொங்குவள நாட்டில் நோன்புக்கோடு என்னும் ஊரில் சின்னத்தம்பிச் செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் அந்நாட்டில் இருந்த சிறந்த புலவர்களிடத்தில் கல்வி கற்றுப் புலவரானார். சில பதிகங்கள் இயற்றிய தன்றிச் சிலவற்றை ஆராய்ந்து அச்சிற் பதிப்பித்தும் வெளியிட்டார். புலவர் என்னுஞ் சிறப்புப் பெயர் இவருக்கு அமைந்திருந்தது. ஒரு பதிகத்திற்கு இவர் இயற்றிய சாற்றுக் கவியை அடியிற் காண்க:

"நாக்கமுறா மெடுத்துரைப்பி னுறநினைப்பின்
மனக்கமுறா நரகநாட்டுந்
நீக்கமுறா முயிர்வருக்கம் நிருப்பமுறி
மலைப்பதிகம் நேசாருய்யற்
றாக்கமுறா நமிழ்பிரம புரிப்பழநி
யப்பமால்சொல்லத் தூய
கோக்கமுறா யச்சிவிட்டான்
விரப்பன்எனுங்கங்கா குலேசன்மன்னே."

## உஎ௦. காளியப்ப நாடார்—ச.

(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் சிவகாசியில் சங்கரலிங்க நாடார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் புலமைக் கல்வி கற்றுச் சிறப்புடன் விளங்கினர். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை.

"மருமலியஞ் செறுந்நலையில் களை தோட்டு
முழந்தியர்நம் வதனப் போதை
உருமதியென் றரக்காம்பற் பகன்மலரும்
சிவகாசி யூரிற் பாய்மாச்
சருமவுடை தரித்தபிரான் தனக்குழுங்காக்
குடிலைசொற்ற சாமிக் கன்பாய்
அருமகிழுற் றனந்தனுமெச் சிடப்பதிகம்
சுப்பயமால் அறைந்திட் டானல்"

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## உஎக. காளீசுவர ஐயர்—வே.

(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் திருக்கானப்பேர் என்னும் காளையார் கோவிலில் வேங்கட்டராம ஐயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். நன்கு கல்வி கற்று வழக்கறிஞராய் மதுரை மாவட்டம் நிலக்கோட்டையில் வாழ்ந்திருந்தார். இவர் "எதார்த்த போதினி" அல்லது தத்துவ ரகசியம் என்னும் நூலை எழுதியுள்ளார். உரைநடையாக அமைந்த இந்நூல் இரண்டு மூன்று பகுதிகளாக அமைந்தது.

## உஎஉ. கிதுருமுகமது மரைக்காயர்—இ. வு.

(20 - நூ.)

இவர் தஞ்சை மாவட்டத்தில் நாகையில் இரத்தினவாணிகஞ் செய்துகொண்டிருந்தவர். நாற்கவிகளையும் நன்கியற்றக் கூடிய தமிழறிவையும் இவர் பெற்றிருந்தபடியால் இவருக்கு நாற்கவி நாவலரென்னுஞ் சிறப்புப் பெயரும் உண்டாகியது. இவர் இராவ் பகதூர் பெ. மா. மதுரைப்பிள்ளை என்பவர் மீது "மதுரை முத்தகம்" என்னும் நூலை இயற்றியுள்ளார்.

" சீர்கொண்ட ரெங்கோ னெனும்பெரு நகரில்
பிறந்துவாழ் நனிசெல் வனே
தேசாதி தேசமெல் லாம்புகழ நல்லறம்
செய்கின்ற மிகுசீ லனே
ஏர்கொண்ட பற்பல விநோதவா கனம்வைத்
திருந்துதுரை மார்கள் மெச்ச
ஏறியுல விடுசுகுண பூடணவி வேகனே
எம்மனோர்க் கநுகூலனே
கார்கொண்ட கொடையினில் கன்னனே மார்க்கண்டன்
கருதிய தவப்பா லனே
கனமார்ந்த மதுரைப் பிரபல்ய விசுவாசனே
கருணா கரப்பி ரபுவே
பேர்கொண்ட நின்சீர்மை குறைவுறு துலகெலாம்
பெரிதோங்கி நின்ற வதனால்
பெட்புட னடைந்தவெற் காங்கரும நிறைவுறப்
பேரன்பு கூர்ந்தருள்வையே "

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## உஎங. கிருட்டிண அய்யங்கார்.—ப. கி. தி. (1913)

பாண்டி வளநாட்டில் திருமங்கலம் தாலுகாத் திரளிக் கிராமம் என்னும் ஊரில் இருந்தவர். இவருடைய பெயர் முகுந்ததாசன் எனவும் வழங்கியது. இவர் 'திருமாலிருஞ் சோலை மலைப்பதிகம்' பாடியுள்ளார். சிவில்லிபுத்தூர் ரெ. அப்புவையங்கார், மு. கோவிந்தசாமி ஐயர், திருமலை ஐயங்கார் என்போர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்கள்.

" நாலு புயந்திறை யேதிரு நாயக
நாபியில் வந்த தனிப்
பால கனுக்குய ரோதிம மாய்மறை
பாடிய காரணனே
கால னவன்வரு காலையில் வந்திடர்
காயுதி புரு கூதன்
சோலை தனைப் பரி காசம்உறுத்திடு
சோலை மலைப்பரனே "

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## உஎச. கிருட்டிண ஐயங்கார் (அட்டாவதானம்)

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் சேதுவள நாட்டில் இருந்தவர். முத்துராமலிங்க சேதுபதியின் அரண்மனைப் புலவர். "நாலுமந்திரிகதை" "பஞ்சதந்திரம்" "வீரகுமார நாடகம்", "விடமிக்கிரக சிந்தாமணி" என்னும் நூல்களை இவர் இயற்றியிருக்கிறுர்.

## உஎரு. கிருட்டிண ஐயர். பி. ஏ., எல். டி. (20 - நூ.)

இவர் சோழவள நாட்டில் தரங்கம்பாடியைச் சேர்ந்த பிறையாற்று நாடார் உயர்நிலைப்பள்ளியில் தலைமையாசிரியராக இருந்தார். செய்யுள் இயற்றுவதினும் வல்லவர். இவர் 'விநாயக திருவருட்பா' என்னும் நூலை இயற்றியுள்ளார். அந்நூல் நேரிசை வெண்பா முதலிய இருபத்தாறு பிரிவுகளையுடையதாக உள்ளது.

"இறைவனே உன்னைஎன்றுமே ஏத்தா
இழிபவ ருடனுமே இணங்கிக்
கறைமிடற் றிறைவன் கன்னைநாங் களிற்றைக்
கருத்தினுல் இருத்தியே போற்றி
உறையுமோர் புந்தி எனக்கிலை எனினும்
உன்றனி உற்றனன் அன்ருே
அறைதனில் உற்ருய் அடியனை ஆள்வாய்
ஐங்கர மானதெள் ளமுதே"

என்பது ஐங்கராட்டகம் என்னும் பிரிவில் ஒரு பாட்டு.

## உஎசா. கிருட்டிண ஐயர் (பேரூர்) (1910)

கொங்குவளநாட்டில் பேரூரில் இருந்தவர். இவர் சங்கராச்சாரியார் மீது 'தோத்திரத்திரட்டு' என்னும் நூலைப் பாடியிருக்கிருர். அந்நூல் கோயமுத்தூர்க் கல்லூரித் தமிழ்ப் பண்டிதர் வேங்கட்டரமண அய்யர் அவர்களால் பார்வையிடப் பட்டு வெளியாகியுள்ளது. பாடல் ஒன்றை அடியிற்காண்க:

"காலடியில் வாழ்கருணைக் கடவுள்தனைக் கண்டவர்க்குக்
காலனிடம் பயமில்லை கைலாசங் கண்டிடலாம்
வேலவனை ஈன்றவராம் வினைதீர்க்குந் தாண்டவராம்
ஆலமதைஉண்டவராம் ஆலால சுந்தரராம்
பிடியிடையாள் பார்வதியைப் பிரியாத பெருமான்செஞ்
சடைமுடியார் பாதந்தைச் சந்ததமுஞ் சிந்தைசெய்தே
கொடுமுடியில் நானிரங்கிக் கும்பிட்டேன் அப்பொழுதே
படமுடியாத் துயரெல்லாம் பறந்தோடச் செய்தாரே"

## உஎஎ. கிருட்டிண ஐயர்—அ.

இவர் சென்ற பத்தொன்பதாம் நூற்ருண்டின் இறுதியில் திரிசிரபுரத்தில் வாழ்ந்திருந்த ஒரு சிறந்த தமிழறிஞர். சண்முக விசயம் என்னும் பெயரோடு திங்கள் இதழ் ஒன்றைத் திரிசிர புரத்தில் இருந்தே நடத்திக்கொண்டிருந்தார். செய்யுள் பாடுவதினும் வல்லவராகிய இவர்,

"கருதரு ஞான மாய கருத்தெனும் விளக்கும் வானப்
பருதியின் கதிரும் மூந்துப் படிவம்போம் அளவை யாய
இருசுடர் அவையும் ஒன்ருய் இயற்றியோர் பரம மாகக்
குருவடி வாகி வந்த குமரனே போற்றி போற்றி"

கயிலையில் ஈசன்போற்றுங் கடவுளே கடவுட் டெய்வ
மயிலுடன் குறமான் றோயும் மாமறைக் கடலே மேருப்
புயம்விழி ஈரா றுன புங்கவா மதமா றுக்கும்
நயனுறு முகமா றுன நாதனே போற்றி போற்றி ''

இவை முதலிய பாடல்களை இவர் சண்முகவிசயத்தின் முகப்பில் இயற்றி வெளியிட்டிருக்கிறுர். இவரைப் பற்றிய பிறசெய்திகள் விளங்கவில்லை.

## உஎஅ. கிருட்டிண ஐயர்—ஈ.

தொண்டைவள நாட்டில் பெருந்துறையென்னும் ஊரில் ஈசுவர ஐயர் என்பவருக்கு மைந்தராகத் தோன்றிய இவர், இலக்கண இலக்கியங் கற்றுச்சிறந்த புலவராக விளங்கினுர்.இவர் இயற்றிய நூல்களைப்பற்றிய விவரந்தெரியவில்லை. தருமநாடகம் என்னும் நாலுக்கு இவர்,

'' சந்தனுவின் மரபில்வரு பாண்டவர்வை
குண்டமதிற் சாருங் காதை
செந்தமிழில் நாடகமாய்ப் படிமிசையில்
விளங்கவழூஉச் செறிவை நீக்கிச்
சொந்தமுறு கல்யாண சுப்ரமணி
யையனெனும் சுகுணன் கோவை
வந்தகரு ணிகர்தரு குமரனெழு
நாவெழுந்தில் வழங்கினுனே ''

என்னும் பாடலைச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்.

## உஎக. கிருட்டிணையர்—திருமானூர்

இவர் வேலூர் இந்து யூனியன் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக இருந்தார். மாணவர்கட்குப் போதிப்பதிலும் செய்யுள் இயற்றுவதிலும் வல்லவர். இவர் இயற்றிய நூல்கள் அகப்படவில்லை.

'' இத்தகைய பலவறங்கள் இயற்றுவிந்தோன்
இளம்பிறைச்சே கரத்தெம் மான்றன்
நத்தமைந்த செங்கரத்து நாரணற்கு
நாடளொரு நளின பாதத்

நத்துநிரைப் பவக்கடலைத் தாண்டுவிந்து
முத்தியெனுந் தடத்தில் சேர்க்கும்
உத்தமநற் பெருங்குலத்துக் காகரமா
கியவிதயம் உற்ற மேலோன் ''

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## உ௪௦. கிருட்டிணசாமி அய்யர்—ஏ.

(20 - நூ.)

இவர் திருநெல்வேலியில் வழக்கறிஞராக இருந்தவர். 'ஆரிய மத உபாக்கியானம்' என்னும் பெயரோடு இரண்டு மூன்று பகுதிகள் கொண்ட நூலை இவர் எழுதியுள்ளார். இந்நூல் புராணேதிகாசக் கதைகளைக் கொண்டு விளங்குகிறது. முதற் பகுதியில் 54 கதைகளும் இரண்டாவது பகுதியில் 54 கதைகளும் அடங்கியுள்ளன. இவருடைய நடை எல்லோருக்கும் எளிது. விளங்கும் தன்மையில் அமைந்துள்ளது.

## உ௪க. கிருட்டிணசாமி ஐயர்—சு.

(20 - நூ.)

இவர் ஊற்றுக்காடு என்னும் ஊரில் சுப்பராயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். ஆங்கிலமுந் தமிழும் நன்கு கற்ற இவர் தஞ்சைமாநகரில் அஞ்சல்நிலையத்தில் தொழில் புரிந்தார். 'கருணாநந்த சித்தர் சரித்திரம்' என்னும் நூலை இயற்றி அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார். நூல் உரைநடையாகவும் செய்யுளாகவும் உள்ளது. உரைநடை நன்றாக அமைந்துள்ளது. பாடல்களில் ஒன்றை அடியிற்காண்க.

'' எட்டிலக்கந் நறுபத்தோ ராயிரத்து
நானூற்றுத் தொண்ணூற் றென்றாக்
கிட்டுறுநாள் அச்சுருளி மலைவந்து
கிடைத்ததனிற் கேடொன் றில்லா
மட்டில்சித்தி பலபுரிந்து வகைப்படுநல்
தவயோகின் மன்னி வாழ்நாள்
முட்டின்முனைத் தவவளியான் மூன்றுவன்
சித்தர்தமை முன்ன னூற்றான்.''

## உ௯உ. கிருட்டிணசாமிக் கவுண்டர்—சி.
(20 - நூ.)

நாச்சிபாளையம் என்னும் ஊரில் சின்னத்தம்பிக் கவுண்டர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் 'மெய்ம்மொழி மாலை' என்னும் நூல் ஒன்று பாடியுள்ளார்.

"பொறையே துன்பக் கடல்கடக்கப்
புணையாய்நிற்கும் புரைநீர்ந்த
பொறையே பெரியோர் இனத்தவனுய்ப்
பொருந்தச் செய்யும் புலநெறிசெல்
பொறையே பகைவர் கொடுஞ்செயலைப்
போக்கிப் பெருமை புகுவிக்கும்
பொறையே இம்மை மறுமையினும்
பொருளும் புகழுந் தருமாமே"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## உ௯௫. கிருட்டிணசாமி நாயக்கர்—ஈ. வே.
(20 - நூ.)

கொங்குவளநாட்டில் ஈரோடு என்னும் பதியில் வேங்கட நாய்க்கர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் ஈரோடுகோட்டையில் எழுந்தருளிய அரங்கநாதர் மீது, "அரங்கநாதர் பதிகம்" என்னும் பதிகத்தைப் பாடியுள்ளார். பதிகத்தைப் பாராட்டி அரங்கராமானுசதாசர், நா. பெ. இராமச்சந்திர நாயுடு, திருச்செங்கோடு குமரமங்கலம் சி. மு. ப. ஆறுமுகம் பிள்ளை, ஈரோடு கூரத்தாழ்வார் இராமானுசதாசர் வி. இராமசாமி நாயுடு, கோபாலதாதாசார்ய சுவாமிகள் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"சீருற்ற ஆழ்வார்கள் மற்றுமுள மாபெரியர்
செம்மொழி யெல்லாங் கேட்டுநீ
தெவிட்டாத அமுதமெனப் பருகிவரும் அமரர்புகழ்
சீரங்க நின்செவிக்கும்
பாருற்ற தாய்தந்தை சொல்வதைப் போற்பாலர்
பகர்கின்ற மழலை மொழியைப்
பாங்குபெற ஆனந்தம் உற்றிடுந் தன்மையாம்
பதிகவடி யேன்பாடலைக்

கூருற்ற மேனியாய் நின்னுளங் கொண்டினிய
கருணைசெய வேண்டுவ துடன்
கருதிப் படித்தபேர் கேட்டபேர் நித்தமும்
கருத்தினில் உணர்ந்த பேரும்
நேருற்ற தியர்க் குரைத்தவரும் இந்நகரு
நிகரிலா ஞான முற்று
நித்தியமு னடிபோற்றி நிறைவான இன்பமும்
நீகிருபை செய்கு வாயே''

என்பது பதிகத்தின் இறுதிப் பாட்டு. இவர் செங்கமலவல்லித் தாயார் பதிகம் என்னும் நூலும் பாடியுள்ளார்.

## உ௪௪. கிருட்டிணசாமி நாயகர் (சாலக்கரை) (1910)

இவர் சாலக்கரை என்னும் ஊரில் வசித்துவந்தவர். துளசிதாசர் சரித்திரத்தை இவர் நாடகமாகப் பாடியுள்ளார்.

மமுதா தேவி வருகிற பாடல்

'' பலபல பணிகள் பூண்டு பரிமள மலருஞ் சூடி
உலகெலாம் அதிச யிக்க ஒளிதரும் ரதியா ளென்னக்
கலகலென் றசையத் தண்டை கணவனைக் காணவேண்டி
நலமுள மமுதாதேவி நாயகி வருகின் றாளே.

என்பது நாடகத்தில் ஒரு பாட்டு. 'தாடகைசம்மார நாடகம்' என்னும் நாடகமும் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது. மேலும் இவர் கிருட்டிணனுக்கும் அருச்சுனனுக்கும் நடந்த போரைக் " கயமுக நாடகம் " என்னும் பெயரோடு நாடக மாகவும் பாடியுள்ளார்.

'' நானவர் கையி னுலே தனக்கினி மரண மென்று
நானிலந் தன்னில் விழ்ந்து நடுங்கியே மெய்ம்ம றந்து
வானகம் பூமி யெல்லாம் வயத்தினில் வைத்தோன் பாதம்
ஞானமாய் நினைந்துகொண்டு வாடியே புலம்பு முனே ''

என்பது நாடகத்தில் ஒரு பாட்டு.

## உ௪௫. கிருட்டிண செட்டியார்—வே. (19 - நூ.)

இவர் கொங்குவளநாட்டில் பொருளாட்சி பிரிவு ஆணைமலை வேங்கட செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர்.

"காராளன் கார்காத்த நாடகம்" என்னும் நாடகம் இவரால் இயற்றப்பெற்றிருக்கிறது. ஆனைமலை இராமசாமிக் கவிராயர், சேட ஐயங்கார், முத்துவீரப் பிள்ளை, பொன்னுச்சாமிச் செட்டியார், ஊத்துக்குழி குப்பமுத்து உபாத்தியாயர் முதலியோர் இந்நாடகத்திற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"காதலுக் கிசைந்த வென்றன்
காந்திமா மதியே மங்காய்
பூதலந் தன்னில் மாரி
பொருந்தவே இல்லா தாலே
வானையுற் றலைந்து மாக்கள்
மடிவது நாம்முன் செய்த
நீதுகள் தானோ முன்னோர்
செய்திடும் வினைகள் தானோ?"

என்பது நாடகத்தில் ஒரு பாட்டு.

## உ அசுா. கிருட்டிண பிள்ளை (ஈழநாடு)

ஈழவளநாட்டில் நல்லூரில் சைவப்பிரகாச வித்தியாசாலையில் ஆசிரியராக இருந்தவர். புலமைத்திறம் அமையப் பெற்றவர். க. வைத்தியலிங்க பிள்ளை என்பவர் இயற்றிய ஒரு துறைக் கோவைக்கு இவர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

"பொன்னலங் காரப் பணியணை யானயன் புங்கவர்செம்
பொன்னலங் காரண நாதவென் றேதொழும் புண்ணியற்கே
பொன்னலங் காக்கும் வயித்திய லிங்க புரவலன்சொல்
பொன்னலங் கார மணிமாலை யீதென்று போற்றுதுமே"

என்பதுசிறப்புப் பாயிரப் பாடல்களில் ஒன்று.

## உ அஎ. கிருட்டிணப்ப செட்டியார் (குளத்தூர்) (1910)

இவர் குளத்தூர்—கோவில் என்னுமிடத்தில் வசித்திருந்தவர். "செல்வக்கந்தநாதர் தலபுராணம்" என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது. இவர் அதிகமாக இலக்கண இலக்கியப் பயிற்சியில்லாதிருந்தும் செய்யுள்பாடத் தொடங்கியமையின் வரகவி யாவர். இப்புராணத்திற்குச் சித்தாந்த சரபம்

அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார், சிதம்பரம் வடிவேற்பிள்ளை, நடராச ஆச்சாரியார் என்போர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" செட்டியார் மகிமைசொல்லச் செகந்தினில் ஒருவ ரில்லை
கெட்டியாம் உள்ளம் உண்டு செருவமுஞ் சற்று மில்லை
மட்டிலாப் பெருமை யுற்று மனுநீதி முறையும் உண்டு
வெட்டிய காமந் தன்னை விலக்கிய மூர்த்தி யாமே "

என்பது புராணத்தில் ஒரு பாட்டு.

## உஅஅ. கிருட்டிணமாச்சாரி—ரா.

(1900)

மதுரை மாநகரில் வாழ்ந்திருந்தவர். "அந்நி பெசண்டு அம்மையார் சரித்திரம்" என்னும் செய்யுள் நூலை இவர் இயற்றியுள்ளார். நூல் எழுபத்து நான்கு பாடல்களையுடையது. நூலின் இரண்டாவது பாடலை அடியிற் காண்க:

" பாரிற் பற்பல தேயந்துப் பயில்பொரு ளெல்லாம்
வாரிக் கொண்டுவந் திறக்கிமற் றுயிடை மலிந்த
சீரிற் செம்பொருள் கொள்ளுவான் கலம்பல தேனுண்
போரில் தூங்குறப் பொலிவது லண்டன்மா நகரம் "

பாடல்கள் யாவுஞ் சுவைமலிந்து கற்பாருக்குக் களிபேருவகை யூட்டுவனவாய்ச் சிறந்து விளங்குகின்றன.

## உஅகூ. கிருட்டிணப்ப நாயக்கர்—சாலை

(20 - நூ.)

இவர் சென்னை மாநகரில் இருந்தவர். பழையகால முறைப் படி நாடகங்கள் இயற்றினர். இவரால் இயற்றப்பெற்ற நாடகங்கள் 'நளாயினி நாடகம்' 'சங்கு சூடாமணி நாடகம்' முதலியன.

" புத்தியில் அதிகமான போற்றுமென் மகளே நீயும்
குற்றமில் லாமல் இந்தக் குவலயம் துதிக்க வாழ்வாய்
சித்தமொத் தவர்பாற் சென்று செய்பணி பிசகி டாமல்
நித்தமுங் கூடி வாழ நீயும்போய் வருவாய் அம்மா "

இது நாடகத்தில் ஒரு பாட்டு. இதில் எல்லாவகையான பாடல்களும் அமைந்துள்ளன.

" இளங்கதிர் மதிப்ரகாசம் எங்கெங்கும் இணையில்லாத
வளங்கிரி கைலைவாசன் மகிழ்ந்திடும் திவ்யபாலன்
உளங்கொளும் மகிழ்ச்சி பொங்கி ஓங்கிய சாலை மேவி
விளங்குசெங் கழனிவிக்ந விநாயகர் வருகின்றாரே "

என்பது சங்கு சூடாமணி நாடகத்தில் விநாயகர் வரும் பாட்டு.

## உகூ௦. கிருட்டிணப் பிள்ளை (விக்கிரவாண்டி)
(19 - நூ.)

இவர் நடுநாட்டில் விழுப்புரம் பிரிவு விக்கிரவாண்டி என்னும் ஊரில் இருந்தவர். நாடகநூல்கள் இயற்றக்கூடிய புலமை பெற்று விளங்கிய இவர் திண்டிவனம் மாதர்பூத முதலியார் புதல்வன் அரங்கசாமி முதலியார் என்பவருடைய விருப்பப்படி, சயிந்தவ நாடகாலங்காரம், கெங்கையம்மன் நாடகம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இவைகள் கோகுலாபுரம் அருணாசல முதலியார் என்பவராற் பார்வையிடப்பெற்று 1891 ஆம் ஆண்டில் வெளியாகி யுள்ளன.

" சீர்பரவும் உலகேத்துங் கைலை வாசன்
செஞ்சடையில் இருந்தாடுங் கங்கை யம்மன்
பேர்பரவு சரிதையதை உலகந் தன்னில்
பேசரிய நாடகமாய்ச் சொல்ல ஓங்கும்
பார்பரவும் இமயகிரி வேந்தன் ஈன்ற
பார்வதியாள் தந்தஅறு முகற்கு மூத்த
கார்பரவுந் திருவணிமால் மருக னான
கணபதியின் இருசரணங் காப்புத் தானே "

என்பது கங்கையம்மன் நாடகத்தில் காப்புப்பாடல். சயிந்தவ நாடகம் என்பது பாண்டவர்கள் காட்டு வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தபோது சயிந்தவன்வந்து துரோபதையைக் கவர்ந்து சென்ற செய்தியை நாடகமாக அமைத்துப் பாடியது.

" திருடருக்கோ உயிர்காக்கத் திரம் வேண்டும்
திரவியங்கள் உடையவர்க்கு வணக்கம் வேண்டும்
தருமகுணம் உடையவர்க்குச் சத்யம் வேண்டும்
தாசிகட்குப் பணம்பறிக்கப் பசப்பு வேண்டும்
சிறுகுழந்தை விளையாட மண்ணு வேண்டும்
தேசங்கள் திரிபவர்க்குப் பதனம் வேண்டும்
அரிவையென்றன் பகைமுடிக்க விமன் வேண்டும்
ஆவிமிகப் பதறுதையோ நானென் செய்வேன்"

என்பது, சயிந்தவன் துரோபதையைக் கவர்ந்து சென்றபோது துரோபதை சொல்லியதாக அமைந்தது.

## உகூக. கிருட்டிணம்மாள் (கல்லிடைக்குறிச்சி) (20 - நூ.)

இவ்வம்மையார் பாண்டிவள நாட்டில் திருநெல்வேலி மாவட்டம் கல்லிடைக் குறிச்சியில் வாழ்ந்திருந்தார். தக்க அறிஞர்கள் பால் வேதாந்த நூல்களை ஓதியுணர்ந்த இவ்வம்மையார் "தத்துவ சிந்தனம்" என்னும் நூலை இயற்றியுள்ளார். விநாயகர் வணக்கச் செய்யுளையும் சங்கராச்சாரியர் வணக்கச் செய்யுளையும் அடியிற் காண்க:

" நெல்பயி ரிடுநல் போலநிகழ்ந்திய அநுசந் தானம்
பல்பல கோடி காலம் பாரினில் பரவி நிற்க
கல்பனு தீத மான காணரும் குஞ்ச ரந்நாள்
அல்பமும் குறைக ளின்றி அகத்தினில் ஏற்றி னேனே "

" மாலயன் தேடிக் காணு மாசறு பரமன் தாளே
காலடி தனில்உ தித்துக் கலியுகந் துயிர்க ளுய்ய
மேலதாம் பரமாம் ஸத்தின் மேன்மையில் நலேவ னுன
சீலராய்ச் சிருங்கை சேர்ந்த சங்கர குருவே போற்றி "

## உகூஉ. கிருட்டிணனந்தர் (மதனப்பள்ளி)

இவர் தெலுங்கு நாட்டிலே உள்ள மதனப்பள்ளியில் அந்தணர் குலத்தில் தாசில்தார் ஒருவருக்கு 1896 ஆம் ஆண்டில் பிறந்தார். இவருடைய இளமைப் பெயர் கிருட்டிணமூர்த்தி என வழங்கியது. அகவை பதினான்குவரை அங்குப் படித்தபின் சென்னை மாநகரில் படிப்பதற்குத் தந்தையாரோடு வந்தார். அடையாறு திவ்யஞானசபைத் தோட்டத்தில் வசித்திருந்தார்.

அச்சமயம் ஒருநாள் யோகி லெட்பீட்டர் என்னும் பெயருடையவர் ஒருவர் இவரைத் தற்செயலாகப் பார்த்தார். இவருடைய உள்ளுடம்பு ஒளியுடன் நன்கு மலர்ந்திருந்தது. பிறகு இவர் மூலம் உலகத்துக்கெல்லாம் அரிய சிறப்பேற்படும் என்று அறிந்து இவரைப் போற்றத் தொடங்கினர். இதையறிந்த அன்னிபெசன்ட் அம்மையார் இவரைத் தம்முடைய ஆதரவில்

வைத்திருந்தார். இவரைத் தம்மிடஞ் சேர்க்கவேண்டும் என்று இவருடைய தந்தையார் வழக்குத் தொடர்ந்தார். வழக்குச் சீமை வரை சென்று அம்மையார் பக்கமே வெற்றியாயிற்று.

1910 ஆம் ஆண்டுமுதல் இவர் உலகத்தைப் பலமுறை வலம் வந்தார். ஐரோப்பா, அமெரிக்காக் கண்டங்களிலும், இந்தியாவிலும் பல நாடுகளையும் நகரங்களையும் நன்கு பார்த்தார். இவர் தம்முடைய தந்தையாரைவிட்டு அம்மையாரோடு தங்கியபின் இவருடைய தம்பியார் நித்தியாநந்தர் என்பவரும் இவரோடு கூடவே இருந்தார். 1911 ஆம் ஆண்டில் தாரகசங்கம் என்னும் பெயரோடு சபையொன்று இவருடைய தலைமையில் அமைக்கப் பட்டது. அதன்கிளைகள் உலகின் பல இடங்களிலும் இப்போதும் உள்ளன.

நூல்கள் வெளியிடல்

1911 ஆம் ஆண்டில் முனிவர் ஒருவர் தமக்கு அறிவுரையாகக் கூறிய சாதன சதுட்டய முறையைச், "சற்குருபாத சரணம்" என்னும் பெயரோடு நூலாக வெளியிட்டார். "ஆநந்த இராச்சியம்," "விசாரணை" "நித்திய நண்பன்" என்னும் பெயரோடு வேறு பல நூல்களும் இவரால் எழுதப்பட்டன.

தம் தம்பியாரின் உடல் நலத்தை முன்னிட்டு அவருடன் அமெரிக்கா நாட்டில் கலிபோர்னியா மாகாணத்தில் ஒகை என்னும் ஊரில் தனிமையாக வசித்திருந்தார். 1925 ஆம் ஆண்டில் இவருடைய தம்பியார் காலமானார்.

அவ்வாண்டில் அடையாற்றில் கூடிய அவைக்கூட்டத்தில் ஆறுயிரம் பேருக்குமேல் கூடியிருந்த அவையில் தாம் ஆசிரியராகப் பேருரை பொழிந்தார். ஆனந்த வாழ்வு என்னும் இவருடைய நூலில் செய்யுட்களும் உள்ளன. ஒரு பாடலை அடியிற் காண்க:

" அல்லெ்லன ஓடும் அருவி அருகே
ஒல்லென நிறைந்த ஊரொன் றிருந்தது
எனினும்,
ஆங்கே ஒழிந்தது உயிரே
என்னே அதன் துயரம்
நீண்ட சிலைகள் நிமிர்ஆலயம்பல

மீண்டன கடவுளர் மிண்டிய மனப்பால்
சாந்த வாக்கும் சந்தச் சிறப்பும்
வாய்ந்த குருக்கள் வயங்கினர் ஆர்வமாய்
சாத்திரம் பிதற்றுவர் நமைந்த சோலையில்
வாஸ்தவ தத்துவம் வாய்ந்தது இன்னென
சுமையின் பாரமும் துக்க பயமும்
சமயா சார சங்கட விதிகளும்
மற்றவர்க் கெனவே வகுந்த ஒழுக்கமும்
எளியர் உழைப்பில் எழுந்த செல்வரும்
கந்தையும் பட்டும் கழிந்தன சந்திடை
விந்தையின் ஒருவரை விசியே
போரில் யாவரும் பொருந்தினர் வாடி
ஊரே அவர்கள் உலகம் என்றனர்
நல்லதொரு நாளில் நாற்சந் தியிலே
வல்லவன் ஒருவன் அறைந்தனன் பறையொடு
ஏமாந்தர்காள்! ஏமாந்து போகிர்
ஓமும் போரும் ஒருங்கி உளது;
ஊன வாழ்க்கைக் கிதம் உன்னதம் இன்று''

இது ஒருபாட்டின் முற்பகுதியில் அமைந்தது. இவருடைய பிற்கால வாழ்க்கையைப் பற்றிய செய்திகள் தெரிந்தில.

## உகரு. குஞ்சிதபாத அடிகள் (தில்லை)

சோழவள நாட்டிலே தஞ்சை மாவட்டத்திலே திருத்தருப் பூண்டிக்கு அண்மையில் உள்ள வரம்பியம் என்னும் ஊரில் தொண்டைமண்டல முதன்மையார் குலத்தில் சீநிவாச முதலியாருக்கும் பருவதத்தண்ணிக்கும் புதல்வராகத் தோன்றியவர். இவருக்கு இடப்பெற்ற பிள்ளைப் பெயர் இராமாநுசம் என்பது. இவர் தெய்வபக்தி மிகுந்தவர். தாம் அணிந்திருந்த காதுக்கடுக்கனைக் கழற்றி அதனை இராமர் படத்தில் பதித்துப் பூசை செய்தவர். பதிப்பிக்கப்பெற்ற படம் இவருடைய விருப்பப்படி தஞ்சைமாநகரில் எழுதப்பெற்ற தென்பர். இவருக்கு அகவை பதினாறிலேயே திருமணம் நடைபெற்றது. ஆயினும் இல் வாழ்க்கையில் பற்றற்றவராய்ப் பத்தொன்பதாம் அகவையில் திருத்தில்லையை அடைந்து அப்பொழுது அங்கு சிறந்த மெய்ஞ் ஞானச் செல்வராக விளங்கியிருந்த பொன்னம்பல அடிகளாரிடம், வேதாந்த நூல்கள் பலவற்றையும் ஐயந்திரிபறக்கற்றுத்

தேறினர். பிறகு பொன்னம்பல அடிகள் இயற்றிய கைவல்ய நவநீதஉரை, பகவத்கிதை உரை முதலிய நூல்களுக்கு உறுதுணையாக அமைந்து நின்ருர். வேதாந்த முதிர்ச்சியின் பயனுய்த் தாமும் 'மோட்ச சோபானம்' என்னும் அரிய நூலை இயற்றினர். புகழ்ச்சியிற் சிறிதும் விருப்பம் அற்றவராய்த் தாமியற்றிய நூலை ஓர் அன்பரால் இயற்றப்பெற்றது என்று வெளியிட்டார். திருத்தில்லையிலேயே காலமான இவருடைய அடக்கவிடம் பொன்னம்பல அடிகளாரின் சமாதிக்குப் பக்கத்தில் அமைந்துள்ளது.

மோட்ச சோபாநநூல் தக்க மேற்கோள்களுடன் பல பிரிவுகளாக அமைந்து விளங்குகின்றது. ஆசிரியர் தம் குருவணக்கமாகப் பாடிய செய்யுள் ஒன்றை அடியிற் காண்க:

"கார்தருமென் குழன்மலையின் கன்னியிட
மருங்கொளிரக் கனக மன்றுள்
ஆர்தருநன் னடமியற்றும் அம்பலவன்
தன்னடியர் அகத்துள் துன்றும்
ஈர்இருளை இரிப்பதற்கா எடுத்தவடி(வு)
எனவுலகம் இசைப்ப ஒன்றும்
சீர்தருபொன் னம்பலவன் செம்மலர்த்தாள்
நம்மனத்தும் சிரத்தும் சேர்ப்பாம்."

## உகூச. குட்டி உபாத்தியாயர் (திருத்தான்தோணி)

இவர் திரிசிரபுரத்தைச் சேர்ந்த திருத்தான்தோணி என்னும் ஊரில் ஏறக்குறைய தொண்ணூறு ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தவர். பள்ளிக்கூடம் ஒன்று அமைத்து மாணவர் பலருக்குக் கல்வி கற்பித்ததோடு நாடகம் முதலிய நூல்கள் இயற்றுவதினும் ஈடுபட்டிருந்தார். இவரால் இயற்றப்பட்ட நாடகம் மதுரை வீரன் நாடகம் முதலியன. ஆயிரத்து எண்ணூற்று எழுபதாம் ஆண்டில் முதற் பதிப்பாக அறுநூறு காப்பிகள் அச்சியற்றப் பெற்றன.

"மங்கையிந்த விதம்புலம்பி மூர்ச்சை யாகி
மாநிலத்தின் மிசைவிழுந்த மயிலனுளைத்
தங்கையருந் தாதியருந் தோழி மாரும்
தாங்கியெடுத் துறவணைத்துத் தழுவி மாதர்

கொங்கலர்பன் னீர்தெளித்து விசிப் பின்னுங்
கோதையர்க்குந் தேறுதலை கூறும் போது
திங்களுத யம்போலச் சுதனைப் பார்த்துத்
தியங்கிமென் றில் மயங்கிவிழுந் தலறி னளே.''

இது நூலின் விருத்தப் பாடல்களில் ஒன்று.

## உகூரு. குணசீலப் புலவர் (திருச்செங்கோடு)

கொங்குவள நாட்டில் இந்நாளில் திருச்செங்கோடு என்று வழங்கும் திருக்கொடி மாடச் செங்குன்றூரில் சில நூற்றாண்டு கட்கு முன்பு வாழ்ந்திருந்தவர். நூல்களைக் கற்றுச் சிறந்த புலவராக இருந்ததோடு முருகக் கடவுளிடத்தில் பேரன் புடையவராகவுஞ் சிறந்து திகழ்ந்தார்.

இவர் காலத்தில் பாண்டிவள நாட்டில் திருக்குருகூரில் பிரதிவாதி பயங்கரப் புலவர் என்பவர் சிறந்த பேரறிஞராகத் திகழ்ந்திருந்தார். அவர் பல நாடுகளினுஞ் சுற்றி ஆங்காங் கிருந்த புலவர்களோடு சொற்போர் செய்து அவர்களுடைய நூல்களையும் பொருள்களையுந் தாங் கவர்ந்துகொண்டிருந்தார். திருச்செங்கோட்டிற்குத்தாம் வருகிற செய்தியைக் குணசீலப் புல வருக்கு முன்னதாக அறிவித்துத் தம்மோடு சொற்போர் செய் தற்கு உடன்பட வேண்டும் என்று தெரிவித்திருந்தார்.

பயங்கரப் புலவருடைய செய்தியை முன்னரே நன்குணர்ந் திருந்த குணசீலப் புலவர் மிகுந்த அச்சங்கொண்டார். தம்மை இத்தொல்லையிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று அறுமுகப் பரமனை வேண்டிக்கொண்டார். அறுமுகப் பரமன் குணசீலப் புலவருடைய கனவில் தோன்றி அவ்வாறே காப்பாற்றுவதாகக் கூறினர்.

பயங்கரப் புலவர் திருச்செங்கோட்டை நெருங்கினர். திருச்செங்கோடு நாகமலை (பாம்பு மலை) என்றுங் கூறப்பெறும். அதனை உளத்திற் கொண்ட பயங்கரப் புலவர்,

'' சமர முகத்திருச் செங்கோடு சர்ப்ப சயிலமென
அமரிற் படம்விரித் தாடாதநென்னை...........''

என்று இந்த அளவுக்குப் பாடினர். இதற்கு மேலே பாட்டு ஓடவில்லை. அறுமுகப் பரமன் மாடு மேய்ப்போனக ஆங்கு

வழியில் ஆக்களுடன் நின்றிருந்தார். பயங்கரப் புலவர் தமது பாட்டை முடிக்க முடியாமல் திணறிக்கொண்டு வந்தபோது அறுமுகப் பரமன் பயங்கரப் புலவருக்கு முன்னே போய்,

"......................அஃநாய்ந்நிலேயோ
நமரின் குறவள்ளி பங்க னெழுகரை நாட்டுயர்ந்த
குமரன் திருமருகன்மயில் வாகனங் கொந்துமென்றே"

என்று பாட்டை முடித்துப் பாடினார். பயங்கரப் புலவர் அஞ்சினார். "நீ யார்?" என்று உசாவினார். அதற்கு அறுமுகப் பரமன், "நான் குணசீலப் புலவருடைய மாணவன். எனக்குக் கல்வி நன்றாக வரவில்லையென்று கூறி என்னை அவர் நீக்கி விட்டார். நான் இவ்வாறு ஆனிரை மேய்க்குந் தொழிலில் இருக்கிறேன்" என்று கூறினார். நீக்கப்பட்ட இவனுடைய திறமையே இப்படியிருக்குமாயின் அக்குணசீலப் புலவருடைய திறமை எவ்வாறிருக்குமோ? வகையறியாமற் போய்ச் சிக்கிக் கொள்ளக் கூடாது" என்று அஞ்சி அகன்று போனார்.

இவ்வாறு முருகன் திருவருள் பெற்று விளங்கிய இப்புலவர் இயற்றிய நூல்கள் பாடல்கள் முதலியவைகளைப் பற்றிய செய்தி விளங்கவில்லை.

## உகூகூ. குணபதி சுவாமிகள்—அ.
## (1910)

சென்னை மாநகரில் அப்பாத்துரைப் பிள்ளை என்பவருக்கும் சக்கரபாணி அம்மாள் என்பவருக்கும் புதல்வராகத் தோன்றியவர். இவர் தோன்றிய குலம் துளுவ வேளாளர் குலம். கல்வி கற்றுத் துறவு பூண்டு விளங்கிய இவர் அம்பிகை பதிகப் பாமாலை, மணிகுண அமிர்தமாலை, திருவருள் ஞானப்பிரகாச மாலை, அருளப்பாத்துரை மணிமாலை, அருட்சக்ர பாணிச்வரி மாலை, சோதி சுப்ரமணிமாலை, உலகாத ஸ்காந்தமணிமாலை, செல்வரத்தினம்பிகைமாலை, கண்மணி குணவிச்வரிமாலை, சிவ ரத்னம்பிகைமாலை, செகக்குட்டி அம்பிகைமாலை, சிவபரி பூரணம் பிகைமாலை, ஹிதயனுயகச் சௌந்தரிமாலை, பாபப்பிரயோக மணி மாலை என்னும் நூல்களை இயற்றியுள்ளார்.

"உலகமீ தடித்துந் தாய்தந்தை வசந்தில்
உற்றபின் கல்வியிற் பயின்றுன்
அலகிலா அன்பர் அருட்செயல் நினைந்தங்(கு)
அவர்களைக் கண்டடிமலர்த்தாள்
திலகமாய் அணிந்துன் சீரடி பணிந்தேன்
செல்விநாதாந்தத்தின் மணியே
கலகயிங் கடையா தென்றனை யாள்வாய்
கௌரியே அம்பிகை அனையே"

என்பது அம்பிகை விருத்தப் பாமாலையில் ஒரு பாட்டு.

## உகூஎ. குணவேல் முதலியார்—பி. பெ.
(20 - நூ.)

இவர் சென்னை மாநகரில் வாழ்ந்திருந்தவர். தந்தையார் பெயர் பெரியப்பா முதலியார். குணவேல் முதலியார் ஆங்கிலம் தமிழ் ஆகியவைகளை நன்கு கற்றுப் புலமை பெற்றார் கோலார் தங்கவயல், நந்தி துர்க்கம் என்னும் இடங்களில் டிராப்ட்ஸ்மென் என்னும் அலுவலில் இருந்தார். மெய்யறிவும் இவரிடம் அமைந்திருந்தது. இவர், "குருத்தியான மஞ்சரி," "மானச தியான மஞ்சரி," "அருள் விளக்கமாலை" என்னும் நூல்களை இயற்றியுள்ளார்.

"எங்கும்நிறைந்த அம்மானே
என்னுட்சென்ற பெம்மானே
பங்கஞ்செய்தார் பலமாந்தர்
பாரோ மென்றார் பழிகாரர்
தங்க மென்றார் நவமாந்தர்
தவிந்து நின்று நரைமாக்கள்
அங்கம் பூண்ட அம்மானே
நின்னையடை யோமென்றார் அவனியிலே"

என்பது அருள் விளக்கமாலையில் ஒரு பாட்டு.

## உகூஅ. குந்தாணி சாமிநாதப் புலவர்

கொங்குவள நாட்டில் வெள்ளோடு என்னும் ஊரில் செங்குந்த குலத்தில் இவர் பத்தொன்பதாம் நூற்றாண்டிலே தோன்றினார். வழிவழிப் புலவர் மரபில் தோன்றிய இவர் தமிழ்ப்

புலமையடைந்து வாக்குப்பலிதம் உள்ளவராக விளங்கினர். இவருடைய மொழிகள் நன்கு பலித்தன. வெள்ளோடைச் சாத்தந்தை குலத்தினர் இவரைப் போற்றி ஆதரித்தனர். இவர் சென்னிமலையில் எழுந்தருளிய முருகக் கடவுள்மீது "பிள்ளைத் தமிழ்" நூல் ஒன்று இயற்றியுள்ளார். இந்நூலிற் சென்னிமலைத் தலச்சிறப்பு, பூந்துறை நாட்டுச் சிறப்பு, வெள்ளோடைச் சருவலிங்கேசுவரர் சிறப்பு முதலிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.

"புலவரை மகிழ்ந்துகாத் திடுவைநீ இவனுமோர்
புலவரை மகிழ்ந்து காப்பான்
பூதரஞ் சுற்றிநீ வருகுவாய் இவனுமோர்
பூதரஞ் சுற்றி வருவான்
இலகுமா காயமுயர் வாய்நீ இவன்பெருமை
இலகுமா காயம் உயர்வான்
இனிதான வெண்ணிறந் தருவைநீ இவனுமோ
இனியவெண் ணிறந்தருவனே
வலியிரு ளகற்றுமொளி யானீ யிவனலோர்
மலவிரு ளகற்று மொளியான்
வாராழி வையநிறை வாய்நீயும் இவனலோர்
வாராழி வையம் நிறைவான்
அலைவிலா திவனுக்கு நீயுமொப் பாகையால்
அம்புலி ஆட வாவே
அடலமரர் பரவுசிர கிரியில்வளர் வேலனுடன்
அம்புலி ஆட வாவே"

என்பது அம்புலிப் பருவத்தில் ஒரு பாட்டு. இப்பிள்ளைத் தமிழ் நூல் முழுவதும் அச்சாகவில்லை. புலவர் வே. ரா. தெய்வசிகாமணி என்பவர் பருவத்துக்கொரு பாட்டெடுத்துக் குறிப்புரையோடு வெளியிட்டுள்ளார். இவர் இயற்றிய பிற நூல்களைப் பற்றிய செய்தி தெரியவில்லை.

## உகூகூ. குப்புச்சாமி ஐயர்—தி.

(1912)

சோழவள நாட்டில் இராசமன்னர் குடியில் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி புரிந்திருந்தவர். ஆலங்காடு சிதம்பர செட்டியார் என்பவரிடம் கல்வி கற்றவர். இவர்

விநாயகர் கலி வெண்பா, விநாயகர் இரட்டை மணிமாலை, வாத ஊரடிகள் இரட்டை மணிமாலை முதலிய நூல்களை இயற்றி யுள்ளார். சுந்தரேச பாரதியார், சர்க்கரைப் புலவர் ஆகியோர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

“ காலங் கருதிக் கரும்பக டாளி கதித்தெழுந்து
சூலங் கரத்தினில் கொண்டுயிர் கொள்ளத் தொடங்குமுனம்
ஆலங்குடித்து விண்காத்தருள் வோன்றரும் ஆனைமுக
சீலங்கொள் நின்னகத் தொண்டர் குழாத்தெனைச் சேர்த்தருளே”

என்பது விநாயகர் இரட்டை மணிமாலையில் ஒரு பாட்டு.

## ௩௦௦. குப்புச்சாமி நாயுடு—த.
(19 - நூ.)

இவர் மதுரை மாநகரில் வாழ்ந்திருந்தவர். இலக்கண இலக்கியப் புலமையும் காலக் கணிதப் புலமையும் ஒருங்கு அமையப் பெற்றவர். “சாதக நுட்பம், சந்திரா பரணம், சாதக வெண்பா” என்னும் பெயர்களுடைய காலக்கணித நூலை ஆராய்ந்து வெளியிட்டிருக்கிறார்.

“ மன்னமரும் வாக்கோனை வண்புந்தி கூடினும்
விண்ணமரும் வாக்கு விரோதம்வரும்...எண்ணரிய
இடப மதியை இரும்புதனு மேபார்க்கில்
திடமுடைய சோரனென்றே செப்பு,”

என்பது சாதக வெண்பாவில் ஆறுமிடப் பலன் கூறும் பாட்டு.

திருப்போரூர்ச் சுப்பிரமணியர் வருகைப்பத்து, சடாமுனி நவரத்தினம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

“ பாகா மழலை மொழிக்குறப் பெண்
பாகாவருக கதிர் வடிவேல்
படையாய் வருக எனையினிமேல்
படையாய் வருக அடியவர்கள்
வாகா எனவே வன்னமயில்
வாகா வருக கூர்கொள்வடி
வாளாம் விழித்தெய் வானைமண
வாளா வருக மிகநாக
ரீகா வருக பாதபுண்ட
ரீகா வருக அமுதருள்சந்
நிதியே இறைஞ்சித் துதிசெய்தயா
நிதியே வருக தமிழ்க்கதிக

மோகாவருக வாது தகு
மோகா வருக வருகவே
முதல்வா சமர புரிவாழும்
முருகா வருக வருகவே ''

என்பது சுப்பிரமணியர் வருகைப் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௩0க. குப்புச்சாமிப் பிள்ளை (பாளையங்கோட்டை)
## (20 - நூ.)

இவர் திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள பாளையங் கோட்டையில் பிறந்தவர். இவர் ''பால போத கீதம்'' என்னும் சிறுவர்களின் பாடல்களடங்கிய நூலை இயற்றியிருக்கிறார். இவர் போதனா முறைப் பாடசாலையில் ஆசிரியராக இருந்தவர். ''தேகாப்பியாச விளக்கம்'' முதலிய வேறு நூல்களும் இயற்றி யுள்ளார். இவருடைய பாடல் ஒன்றை அடியிற் காண்க.

'' வந்தனம் தந்தோம் இந்த வேளையில்
வாழ்த்தினோம் உமைப் போற்றினோம்
வாழ்த்தினோம் உம்மைப் போற்றினோம்—நாங்கள்
வாழ்த்தினோம் உம்மைப் போற்றினோம்—இப்போ
சாற்றினோம் உமை ஏற்றினோம். (வந்த)

## ௩0உ. குப்புச்சாமிப் பிள்ளை—சி. எஸ்.
## (1910)

இவர் திருத்தில்லையில் இவ்விருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்தவர். சுப்பிரமணியர் விருத்தம், சுப்பிரமணியர் திருத்தாண்டகம் என்னும் நூல்களை இவர் பாடி யுள்ளார். மருத்துவத்திலும் காலக் கணிதத்தினும் வல்லவர். தாம் முருகப் பெருமான் திருவருளைப் பெற்றவரென்று சொல்லிக் கொண்டார். தாண்டகப் பாடல் ஒன்றை அடியிற் காண்க. இலக்கண இலக்கியப் பயிற்சியிற் றேர்ந்தவரல்லர்.

'' ஆறெழுத்தும் ஒருருவாய் அமர்ந்த தேவே
அகத்தியருக் குபதேசம் அன்பாய்ச் செய்து
கூறரிய பிரணவத்தின் குறிப்பை நீயும்
கூசாமல் அளித்திட்ட கோவே அன்றோ?

ஆருயிரே அறுமுகனே அப்பா என்றன்
ஆவியொடு பொருள் மூன்றும் நீயேயாகித்
தேருருந் தில்லை நகர்ச் சுப்ரமன்யா
சேவடிதந் தாளுவது எந்த நாளோ ''

## ௩௦௩. குப்புச்சாமி முதலியார்—கல்குளம்
(20 - நூ.)

கல்குளம் என்னும் ஊரினராகிய இவர் சென்னை மாநகரில் வாழ்ந்திருந்தார். பி.ஏ., வரையில் ஆங்கிலக் கல்வி கற்றவர். செந்தமிழ் நூல்கள் பலவற்றை அழகிய முறையில் திருந்திய பதிப்பாக வெளியிட்டார்! 'பாரத சாரம்' என்னும் உரைநடை நூலையும் இவர் இயற்றியிருக்கிறார். மற்றும் இவரால் இயற்றப் பெற்ற நூல்கள் 'சாதுமதி' முதலியன.

## ௩௦௪. குப்புச்சாமி முதலியார்—மா. வ. நல்.
(20 - நூ.)

இவர் மாமண்டூர் வடபாதி என்னும் ஊரில் தோன்றியவர் தொண்ணூடு பாடசாலையில் உபாத்தியாயராக இருந்த இவர், ''அநசூயை வெண்பா'' என்னும் நூலை இயற்றியுள்ளார். அந் நூல் நூற்றுக்கு மேற்பட்ட பாடல்களையுடையது. திரு. வி. கலியாண சுந்தர முதலியார் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

'' பொன்னுலகின் மாதர் புகழ்மிகவே யானாலும்
மன்னுலகின் மாதர்க்கு மாணுண்டாம்—எண்ணுங்கால்
எவ்வுலகில் உள்ளாரும் ஈடேறும் நோன்பெடுக்க
இவ்வுலகைச் சேர்வார் இசைந்து ''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௩௦௫. குமரகுருபர உபாத்தியாயர் (எட்டிகுடி)

இவர் எட்டிகுடி முருகக் கடவுள் மீது தோத்திர நூல் ஒன்று இயற்றியிருக்கிறார். அந்தத் தோத்திர நூலைத் தவிர வேறு நூல் இயற்றியிருப்பதாகத் தெரியவில்லை. வாழ்ந்திருந்த

இடம் காலம் முதலியனவும் விளங்கவில்லை. பள்ளிக்கூடம் ஒன்று அமைத்துக்கொண்டு ஆசிரியராகத் தொழில் புரிந்தவரென்பது பெயரினுல் பெறப்படுகிறது.

## ௩௦௬. குமரகுருபர ஐயர்—ச. (1889)

சோழவள நாட்டில் உடையார்குடி என்னும் ஊரில் வீரசைவ மரபில் சண்முக ஐயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமையடைந்து பாடசாலை யொன்றில் ஆசிரியராகப் பணி புரிந்தார். இவர் இயற்றிய நூல்கள் ஞான விநாயகர் பதிகம், மழுப்பொறுத்த விநாயகர் அட்டகம், மழுப்பொறுத்த விநாயகர் பதிகம், அனந்தேசுவரர் பஞ்சரத்தினம், முத்துக்குமாரசாமி நவரத்தினம், சௌந்தர நாயகி பதிகம், சுப்பிரமணியர் பஞ்சரத்தினம், காங்கிரஸ் கும்மி, அனுமான் ஒயிற்கும்மி முதலியன.

" பூவமர் நான்முகன் நாரணன் அறியாப்
புங்கவன் அருள் சுதனே
போதமறைமுடி மீதி லிலங்கொளி
புண்ணிய சற்சிதனே
பாவ மிகப்புரி நாகமுகத்தன்
படவமர் செய்தவனே
பண்ணவர் கோமலர் வனவள முறவே
பருகொடி யானவனே
தாவலில் பல்புக மாயடியவர் துயர்
தரியா தாள்பவனே
தயாவாகரனே கரிமாமுகனே
சந்தபஞ் சாக்கரமே
நாவமர் செய்தெனை யாண்டருள் செய்வாய்
நற்பதி மனுபுரி வாழ்
ஞானிய ரும்புகழ் வானவ ருந்தொழு
ஞானவி நாயகனே "

என்பது ஞான விநாயகர் பதிகத்தில் ஒரு பாட்டு. பிற பதிகப் பாடல்களும் இவ்வாறே அமைந்துள்ளன. முற்காலத்தில் தொடக்கப் பள்ளியாசிரியர்களிற் பெரும்பாலோர் செய்யுளியற்றக் கூடிய புலமையடைந்து திகழ்ந்தனர். ஊர்க்கணக்கர்களும் புலவர்களாக இருந்தனர்.

## ௩௦எ. குமரகுரு செட்டியார்—சிவ
(20 - நூ.)

தொண்டைவள நாட்டிலே சென்னை மாநகரிலே, சிந்தாதிரிப் பேட்டையில் வணிக வைசிய மூன்றுங்குடி வக்குவ மரபில் சாத்துடைய மகரிஷி கோத்திரத்தில் சிவவேல் செட்டியார் என்பவருக்கும் கன்னியம்மையார் என்பவருக்கும் புதல்வராகத் தோன்றியவர். இவர் மருத்துவம், காலக்கணிதம், தமிழ்ப் புலமை ஆகியவைகளிற் சிறந்து விளங்கியவர். சென்னை இந்து தியாலாசிகல் உயர்நிலைப்பள்ளி, முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளி ஆகியவைகளில் தமிழாசிரியராகப் பணி புரிந்தவர். இறுதியில் சென்னை இந்திய மருத்துவக் கல்லூரி நூலாராய்ச்சியாளராக இருந்தவர். "வல்லொற்று விளக்கம்" என்னும் நூல் ஒன்றை இவர் இயற்றியுள்ளார். இவர் தம்முடைய உடன் பிறந்தாராகிய முருகேச செட்டியார் என்பவர் இயற்றிய அன்புப் பிரியாள் புராணத்திற்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். 10-12-1959இல் இறைவன் திருவடி நீழலை எய்தினர்.

" அத்தகு நூல் நயமுணர்ந்தோன் இராமலிங்க
 சுவாமிகள்பால் அன்பு கூர்ந்தோன்
வித்தகமார் மௌனவவ தூதசுவா
 மிகள் மரபில் விளங்க வந்தோன்
நத்துபுகழ் நாவலர்சூழ் அவையின்கண்
 எப்பொருளும் நயக்கச் சொல்வோன்
சத்தியத்தில் அன்புபிரி யாளம்மை
 சரிதமொன்று கண்டான் மாதோ "

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ௩௦அ. குமரசாமிப் புலவர்—ஆசுகவி
(1910)

இவர் கொங்குவள நாட்டில் கோயமுத்தூர் மாவட்டம் பொள்ளாச்சிப் பிரிவு சந்தைய கவுண்டன் பாளையம் ஆயுள்வேத பண்டிதர் சுப்பிரமணியப் புலவர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். தம்முடைய தந்தையாரிடமே கல்வி கற்று விரைவாகச் செய்யுள் பாடும் திறமை அமைந்து விளங்கினர்

அதனல் இவருடைய பெயருக்கு முன்னல் "ஆசுகவி" என்னுஞ் சிறப்புச் சொல்லும் அமைந்துள்ளது. இவர் 'சூலக்கல் மாரியம் மன் கவசம்' 'மாரியம்மன் பஞ்சரத்தினம்' என்னும் நூல்களைப் பாடியுள்ளார்.

" புத்தியில் லாப்பிள்ளை என்னினும் நல்லமதி
போதித்து நீதி மார்க்கம்
புகன்றுகே ளானெனினும் ஈன்றதாய் வெறுத்திடப்
போகுமோ போற்ற வல்ல
பத்தியில் லாப்பெரும் பாவியான் என்மீது
பட்சம்இவ் வாறிருக்கப்
படாது நான் உனக்கடாத காரியம்
பண்ணினது என்ன சொல்வாய்
சத்தியில் லாத்தெய்வம் நீயென் றுரைக்கநாத்
தடுமாறு திடமே விடி
சஞ்சலம் சகியாமல் அஞ்சியழு தேன்அம்ம
சற்றுளம் இரங்கவில்லையோ
வத்தியில் லாவிளக் கொத்திரு தருளுதும்
வளமருவுசூல நகர்வாழ்
மாரியொத் துதவுமதி காரிமுத்தமிழ் வினவு
மாரிமுத் தென்ற உமையே "

## ௱௦௬. குமரப்ப செட்டியார்—மு.
(20 - நா.)

புதுக்கோட்டையைச் சேர்ந்த மேலைச்சிவபுரி என்னும் ஊரினர். தனவணிகமரபினர். சன்மார்க்க சபைக்குச் செயலாள ராக இருந்தவர். இவர் "அங்கயற் கண்ணம்மை பதிகம்" என்னும் பதிகத்தை இயற்றியுள்ளார்.

" தேனிற் சிறந்த செந்தமிழால்
திருப்பாட் டிசைக்கத் திருமுலைப்பால்
ஞானஞ் சிறந்த சம்பந்தர்
நாவிற் புகட்டும் நற்குயே
மானஞ் சிறந்த குலவணிகர்
வாழும் மேலைச் சிவபுரியில்
தானஞ் சிறக்க இனிதமர்ந்த
தாயே கயற்கண் தயாநிதியே "

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## ருகo. குமார கவிகள்—ச.

பாண்டிவள நாட்டில் திக்கெலாம் மிக்க புகழ்படைத்த திருநெல்வேலி மாவட்டத்தில், திருவைகுண்டம் என வழங்கும் கைலாசபுரத்தில் சண்முக சிகாமணிக் கவிராயர் என்பவருக்கும் சிவகாம சுந்தரியம்மையாருக்கும் புதல்வராகத் தோன்றியவர். குமரகுருபர அடிகட்கு இளவல். இவர் தம்முடைய தந்தையாரிடமே இலக்கண இலக்கியங்களைக் கற்றுப் புலமையடைந்து திகழ்ந்தார். குமரகுருபர அடிகள் இயற்றும் பாடல்களை இவர் எழுதும் பணியை மேற்கொண்டிருந்தார். இவர் இயற்றியதாக நூல்கள் வழங்குதலைக் கண்டிலம். குமரகுருபர அடிகள் மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழை அரங்கேற்றஞ் செய்தபோது பாடல்களைப் படித்தவர் இவரே.

## ருகக. குமாரசாமி உபாத்தியாயர்
(20 - நூ.)

தொண்டைவள நாட்டில் சென்ன சமுத்திரம் கலவை மாநகரம் என்னும் ஊரில் வீர சைவ சமயத்தில் இலட்சுமண ஐயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்லவர். பள்ளிக்கூடம் ஒன்று அமைத்துக்கொண்டு ஆசிரியராகத் தொழில் புரிந்திருந்தார். இரணியனுடைய கதையை இவர் "இரணிய விலாசம்" என்னும் பெயரோடு நாடகமாக இயற்றியுள்ளார். பனப்பாக்கம் அகத்திலிங்கக் கவிராயர், தொண்டமாநத்தம் நரசிம்ம செட்டியார் சிவப்பிரகாச சுவாமிகள், பல்லாவரம் தணிகாசல முதலியார், திருக்கச்சித் திருநகர் தேவராச முதலியார் என்போர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

> " அடிமீதில் அடியடித்தால் அம்மியும் நகருமென்று
> படிமீதிற் சொல்லுவார்கள் பரிஷ்கார மாகத்தானே
> துடியாமல் எதிர்த்துப் பேசுந் துன்மார்க்கப் பயலே யுன்னைச்
> சடியாமல் வாதைசெய்து நலைவனைத் துதிக்கச் செய்வேன்"

இது பிரகலாதனைப் பார்த்து ஆசிரியன் சொன்னது. இந்நாடகம் பழங்கால நாடகப் போக்கையொட்டி யமைந்துள்ளது.

## ருகஉ. குமாரசாமிக் கவிஞர்

இவர் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலியன விளங்கவில்லை. அழ. குழந்தைக் கவிராயர் என்பவர் காலமானபோது மிக வருந்திய இவர் பின்வரும் இரங்கற் பாடல்களைப் பாடியுள்ளார். நூற்றாண்டுகட்கு முற்பட்ட திவர் காலம்.

" சீரார் செயவருடம் சேரைப் பரிமாதம்
ஏரார்நால் தேதிவெள்ளி என்றநாள்—பேரார்
அமரபட்சம் சட்டி நிதியம் மிருகசீரப்
பேர்குழந்தைச் சாமி சொர்க்கங் காப்பு "

" பாதக் குறட்டின் அடி அழகும்
பண்பாய் உரைக்கும் மொழியழகும்
படிக்குஞ் சந்தப் பாவழகும்
பகுத்துப் பகரும் பொருளழகும்
நீத மாக ஞாயபதம்
நிலைக்க உரைக்குஞ் சொல்லழகும்
நிமல பூசை நியமமொடு
நிதமுஞ் செய்யுங் கையழகும்
வேத மொழியால் மூவர்களும்
விளங்க உரைத்த அடங்கன்முறை
விதியின் படியாய்ப் பகரழகும்
விளம்பல் என்னல் அழகாமோ ?
ஓதல் எவர்க்கும் ஓதுவித்தல்
உங்கள் தரம்போல் காண்பதென்றே
உயிருக் குயிரே உடல்துணையே
உயர்ந்த அரன்தாள் உற்றனையே "

## ருகரு. குமாரசாமிப் பிள்ளை—கு.

(20 - நூ.)

இவர் கொங்குவள நாட்டில் பவானி என வழங்கும் திருநணுச் சிவப்பதியைக் குறித்துப் "பவானிப் பதிற்றுப்பத்தந் தாதி" என்னும் நூலைப் பாடியுள்ளார். மேற்படி நூலுக்குப் பேரூர் ம. நா. இராமசாமி சிவாசாரிய சுவாமிகள், கோயமுத்தூர் சி. கே. சுப்பிரமணிய முதலியார், அ. கந்தசாமிப் பிள்ளை, திருச் செங்கோடு தி. அ. முத்துசாமிக் கோனர், அவற்பூந்துறை பழனி வேலு உபாத்தியாயர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

இவர் பவானி கழக உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக இருந்தவர். அந்தாதிப் பாடல் ஒன்றை அடியிற் காண்க.

"கடையேனை ஆள வருவானை வேத
கலையிற் கலந்த பரனை
விடையோனை வன்மை மிளிர்வோனை முக்கண்
மேலோனை அன்பர் மனவாழ்
வுடையோனை வெள்ளி உயரோங்க லென்றும்
உடையோனை வரிகொ ளுரியின்
உடையோனை நல்ல வதரிக்கண் மேவல்
உடையோனை நெஞ்சில் நினையே"

## ௩கச. குமாரசாமிப் பிள்ளை—சி. வி.

(20 - நூ.)

சோழவள நாட்டில் திருவையாற்றில் உயர்நிலைப் பள்ளி ஒன்றில் தலைமைத் தமிழாசிரியராகச் சிறந்து விளங்கியிருந்தவர். இவர் திருப்பூந்துருத்தியில் திருக்கோயில் கொண்டுள்ள நாராயண குருசாமிகளின் மீது "அந்தாதிக் கலித்துறை" என்னும் நூலைப் பாடியுள்ளார். இவரைப் பற்றிய பிற செய்திகள் புலனாகவில்லை. அந்தாதிக் கலித்துறைப் பாடல் ஒன்றை அடியிற் காண்க;

"பூவே மிதந்திடும் பொன்னே கொழித்திடும் பூந்துறைசேர்
காவே ரியின்பெரு வெள்ளந் தினைத்திடுங் கண்ணுதலார்
தேவே வளர்ந்திடும் ஆலயம் ஓங்கிடுந் தீம்புனனாட்
டேவே யனைய விழியணங் கேவளம் என்னவிதே"

இவர் சொற்பொழிவு செய்வதிலும் மாணவர்கட்குக் கல்வி போதிப்பதிலும் மிக வல்லவர்.

## ௩கரு. குமாரசுவாமிப் பிள்ளை—த.

(20 - நூ.)

இவர் சோழவள நாட்டில் ஆச்சாபுரம் என்னும் ஊரில் புலவர் தம்பையாபிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். உள்ளூர்த் திராவிட வேதபாடசாலையிற் கல்வி கற்றவர். இவர் நல்ல நாயகபுரம் சுந்தரமூர்த்தி ஐயர் என்பவருடைய விருப்பப்படி கடக்கை விநாயக நல்லூரில் எழுந்தருளிய கயிலாயநாதன் மீது 'நவமணிமாலை' என்னும் நூல்பாடியுள்ளார்.

" நாமா ரறியும் நகையின ரீசன் தருமருளால்
ஆமாறும் பத்துற மொன்ப தறிந்தோர்க் கருள்பெய்திடுமுன்
தேமா துறைசெயும் கோமே நகம்போல் திகழ்கொள்ளிடக்
காமாறு தென்பாற் கயிலாய நாதன் கழலிணையே "

என்பது கயிலாயநாதன் நவமணிமாலையில் ஒரு பாட்டு.

## ரு௧௬. குமாரப் பெருமாள்சாமி
(1911)

இவர் சந்திரகிரியாதிபதி மகாராசா பெத்தண்ணல மன்னர் என்பவருக்கு மாப்பிள்ளை என்று கூறப்படுகிறது. இவர் வாலையந்தாதி, நட்டாத்திமாலை, மாணிக்கமாலை, மனோன்மணிமாலை என்பவைகளை இயற்றியிருக்கிறார். சொக்கலிங்கப் பெத்தண்ணல மகாராசா, கடிகை அங்கமுத்துப்புலவர், பொ. சிவஞானம் பிள்ளை, இராமலிங்கக் கவிராயர் ஆகியோர் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" பொன்மேவு மாணிக்க கொங்கையும்
கங்கைப் புரிசடையும்
மின்மேவு சிற்றிடைப் பட்டாங்
குடையும் விளங்குமம்மே
கொன்மேவு வெற்கை மலையத்
துவசன் குமரியென
மன்மேவு நாயகி யேபூர
ணசல மாணிக்கமே "

என்பது மாணிக்கமாலையில் ஒரு பாட்டு.

## ரு௧௭. குமாரவேல் முதலியார்—தெ.
(19 - நூ.)

புதுவை மாநகரில் தெய்வசிகாமணி முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் இலக்கணத்தில் மிகவல்லவராக விளங்கினார். பலருக்கு இலக்கண நூல்களைப் போதித்தார். அதனால் இவருக்கு இயற்றமிழ்ப் போதகாசிரியர் என்னுஞ் சிறப்புப் பெயர் உண்டாகியது. இவர் மதுரை மாநகரில் எழுந்தருளிய சொக்கலிங்கப்பெருமான் மீது, "சொக்கலிங்கப்

பெருமான் மாலை'' என்னும் பெயருடன் மாலை ஒன்று பாடினார். மற்றும் மீனாட்சியம்மை பஞ்சரத்தினம், பட்டினத்துப் பிள்ளையார் தோத்திரம், தில்லைவெண்பாமாலை, சென்னைச் சொக்கலிங்கேசர் பதிகம், திருவொற்றியூர்த் திரிபுரசுந்தரிமாலை. வேதாந்தத் தத்துவக்கட்டளை என்னும் நூல்களையும் இவர் இயற்றினார். இவருடைய நூல்களைப் பாராட்டிப் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், கோ. இராசகோபால பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' திருந்துமு தறிஞர் செப்பிய கவியுஞ்
சிறியனேன் கவியுநின் றனக்காம்
பொருந்துதேன் மலரும் மணமில்பச் சிலையும்
புல்லுமே னியிற்புனை ந் திடலால்
மருந்துறை பதிவாழ் மருத்துவன் பிரம
வன்பழி மாற்றிய மருந்தே
வருந்திடா தன்பர் வாழ்தரு மதுரை
வளர்சொக்க லிங்கநா யகனே ''

என்பது சொக்கலிங்கப் பெருமான் மாலையில் ஒரு பாட்டு.

## ௫கஅ. குருகேசராமானுச ஏகாங்கிச் சுவாமிகள் (20 - நூ.)

இவர் புதுவை ஏ. வே. விலட்சணக்கவி இராமானுச நாவலரிடம் கல்விகற்றவர். திருப்பாணாழ்வார் திவ்யசரித்திரம் என்னும் பாண்பெருமாளந்தாதி பாடியுள்ளார். இவர் பாண்டிவள நாட்டில் தென்னம்பட்டி என்னும் சிற்றூரில் ஆதிதிராவிடக் குலத்தில் பிறந்தவர். தந்தையார் பெயர் பழனி; தாயார் பெயர் தேவக்காள். இவர் தோன்றிய காலம் 2—4—1885 (தாரண ஆண்டு பங்குனித் திங்கள் 22ஆம் நாள். இவர் வைணவ சமயத்தை மேற்கொண்டு ஒழுகினார். இருபதாம் அகவையில் துறவை மேற்கொண்டு பல விடங்கட்குஞ் சென்றார். அப்பொழுது தான் மேற்கூறிய நாவலரிடம் கல்வி கற்றுப் பெருமை பெற்றார். திடீரென்று கண்கள் இரண்டுந் தெரியாமற் போய் விட்டன. இது தெய்வ சோதனை என்று உணர்ந்தவராய் மேல் கோட்டை திருநாராயணபுரத்திற்குச் சென்று வேதபுட்கரணியில் நீராடி அவ்விடத்திலேயே உணவின்றி ஒரு கிழமையளவும்

இராமானுச நூற்றந்தாதியைப் பாராயணஞ்செய்து கொண்டிருந்தார். கண்கள் தெரியலாயின. இவருக்கு இடப்பெற்ற பிள்ளைப் பெயர் முருகேசன் என்பர்.

இவருடைய நூலைப்பாராட்டி திருமயிலை இராகவ இராமாநுசதாசர், மதுரை. அ. பார்த்தசாரதி ராமாநுசசாமி, திருசிரபுரம் வரகமாநகர் அ. சி. கூரத்தாழ்வார், பெங்களூர் மச்சபுர எம்பெருமானுர் சந்நிதி கௌரதா பிரசங்கி வி. மு. மூ. புட்பகிரி சுவாமிகள் வீ. த. இரத்தின ராமாநுசதாசர் ஆகியோர் சிறப்புப் பாயிரம்பாடி யுள்ளனர். பாண்பெருமாள் அந்தாதி 220 பாடல்களை யுடையதாக விளங்குகிறது.

" குவலய மாந்தர் பெண்டீர்
குழந்தைசுற் றத்தார் என்னும்
கவலையுட் பட்டா ராசைக்
கடலினின் றெழுந்து பொங்கும்
திவலைசேர் துரும்பாய்ச் சிக்கிச்
சிரழிந் துழன்ருர் கோடி
சிவனயன் தொழும்அ ரங்கன்
திருவடிசேர்வர் சீரோர் "

என்பது நூலில் ஒரு பாட்டு. மற்றும் இவர் திருவரங்கத்தம்மான் திருப்புகழ், ஆண்டாள் பதிகம், திருநாராயணபுரயாத்திரை வழிநடைச்சிந்து, வைணவ மங்கை ஞானக்கும்மி, வைணவக் குறவஞ்சி, நொண்டிச் சிந்து, இரகசியத்திரையசாரசங்கிரகம், மாறநேர் நம்பி வரலாறு முதலிய பிற நூல்களையும் பாடியுள்ளார். இவர் தாழ்ந்த குலத்தில் தோன்றியவராயினும் கல்வியறிவினுலும் திருமால் அன்பினுலும் சிறந்து உயர் குலத்தவராகவே மதிக்கப்பட்டார்.

## ரூகசூ. குருசாமி ஐயர் (திருத்தணி)

(19 - நூ.)

திருத்தணிகையில் பெரும் புலவராக விளங்கியிருந்த சரவணப்பெருமாள் ஐயரைப்பற்றிப் புலவர் உலகம் நன்கு உணரும். இவர் அவருக்குப் பெயரராகத் தோன்றி நூல் பல கற்றுப் புலவரானவர். சுவாமிமலை கனகசபை ஐயர் பாடிய பெண்ணை நதிப் புராணத்திற்கு இவர் :

"விண்ணில் நீடிய சோலைசூழ் சாமி வெற்புறையும்
கண்ணி னுண்மணி அனைய நங் கனக சபைப்பேர்
அண்ணல் அன்பினுல் அறைந்தனன் என்பதூ யிடையே
பெண்ணை மான்மியம் பெரியர்கள் களிப்பினைப் பெறவே"

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## ரு௨0. குருசாமிக் கோனூர்—இராம

"கந்தர் பந்தர் சித்தர் முத்தர்
பதினெண் மர்தம் அதிவிநசரிதம்
முற்றுந் தெரிந்து சற்றும் மயங்கா
அச்சிற் பதித்து மெச்சிட அளித்தோன்
ஆயுள் நூலெலாம் ஞாய முறையில்
நேரந் நேர்ந்து சேரப் பதித்துப்
பாருல கெனில் யாரும் உணரத்
தந்த பெரியான் முந்துவேள் அனையான்
கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை
உலகியல் அறிவோ டுயர்குண மேன்மை
கற்றுணர்ந் நடங்கல் முற்றும் பயனுக்
கண்டவன் கருணை கொண்ட காருண்யன்
திரிகட வுளராய் விரிந்தாங் கவரில்
திறலுடை யவராய்ப் பிறங்கு நாரணன்
பதமலர் மறவா விதரண பக்தன்
நற்குருசாமி நாவலர் ஏறே"

என்று அறிஞர்களாற் பாராட்டப் பெற்ற இவர் மதுரை மாநகரினர். புத்தகம் பலவற்றை அச்சிட்டு வெளிப்படுத்தியவர். சதுரகிரித்தலபுராண உரைநடை, சதுரகிரி சுந்தரமகாலிங்கக் கடவுள் பதிகம் முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். சித்தர்வரலாறு முதலிய பிறநூல்களும் இவரால் எழுதப்பெற்றிருப்பதாகத் தெரிகிறது. சுந்தரமகாலிங்கக் கடவுள் பதிகப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"பூமேவு பிரமனரி அறியாத சோதியே
புண்ணியர்கள் போற்ற அருளும்
புத்தமிழ்த வாரியே புனிதவுமை பாதியே
பொன்னம் பலத்தின் அரசே!
மாமேவு கணபதியை முருகனை நல் கெந்தையே
வான்கங்கை சூடும் இறையே
மானேந்து வாகனே ஏகனே யோகனே
மலரிதழி அந்தா ரனே

நாமேவு புகழுடைய வர்க்கருளு நாதனே
நானுமுனை ஏத்தி நின்றேன்
நாடுசுகம் உதவியருள் சடில்விளை யாடல்புரி
நல்லறிவ மான பொருளே
தூமேவு கூடலுறு சங்கத்து மேவியே
சொல்லாய்ந்த புலவ ரேறே
சூழ்பொழில் வளங்குலவு சதுரகிரி தன்னிலுறை
சுந்தர மகாலிங் கமே"

## ௩௨௧. குருசாமிதாசர்—வே.

(19 - நூ.)

சோழவள நாட்டில் திருத்தில்லைக்கு அண்மையில் உள்ள சிற்றூர் ஒன்றில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் வேங்கடாசலநாயகர். ஆங்கிலம் தமிழ் ஆகியவைகளைக் கற்று அரசாங்க அலுவலில் அமர்ந்திருந்த இவர் துருவதாசு சரித்திரம் என்னும் நூலை இயற்றியுள்ளார். இது துருவனுடைய வரலாற்றை நாடகமாக அமைக்கப் பெற்றதாகும்.

"அரிபதத்தைப் போற்றி அருந்தபசு செய்த
துருவன் சரிதமதைச் சொல்லத்—திருவார்
குருகூர் தனிலுதித்த கோமான்நம் ஆழ்வார்
கருணா கரன்பதமே காப்பு"

என்பது நூலின் காப்புப் பாடலாகும்.

## ௩௨௨. குருசாமிப் பிள்ளை—மு.

(20 - நூ.)

இவர் அதிவீரராமன் பட்டணத்தில் இருந்தவர். பின்னாளில் யாழ்ப்பாணஞ் சென்று அங்கு வதிந்திருந்தார் என்று தெரிகிறது. இவர் திருக்குறள் நூற்றுமுப்பத்து மூன்று அதிகாரங்கட்கும் முதல் நினைப்புப்பாடல் செய்திருக்கிறார். ஓர் அதிகாரத்திற்கு ஒரு பாட்டாக நூற்று முப்பத்துமூன்று பாடல்கள் உள்ளன. நூலின் பெயர், "திருக்குறள் முதல் நினைப்பு" என்பது. இந்த நூற்று முப்பத்து மூன்று பாடல்களையும் மனப்பாடஞ் செய்துவிடின் திருக்குறள் முழுவதையும் நினைவில் இருத்திக் கொள்ளலாம்.

சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவர், தி. கிருட்டிணபிள்ளை, சு. சரவணமுத்துப்பிள்ளை, அட்டாவதானம், ச. முத்துக்குமாரு, வ. குமாரசாமிப் புலவர் ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். முதலதிகாரத்தின் பாடலை அடியிற் காண்க :

"அகரம் விளங்குறக் கற்றநனுன்மல ரன்புசெறி
மகரம் கமழ்வுற வேண்டுநல்வேண்ட வயங்குமிருள்
சிகரம் பெறுபொறி யோர்தனக்குண்மை நிகழும்பொதுத்
நகரந் துறுமறங் கோளில் பிறவி தனிமுதலே."

## ருஉரு. குருசாமியடிகள் (சிவகுருநாதர்)

இவருடைய முழுப்பெயர் சிவகுருநாதரான குருசாமியடிகள் என்பது. இவர் திருவாரூரில் பொற்பாதகமல ஆச்சாரிய வழிமுறையில் தோன்றியவர். சைவசித்தாந்த நூல்களினும் பன்னிரு திருமுறைகளினும் மிக வல்லவர். சிகாழித்தாண்டவராயர் முதலியோர் இவரிடம் அருளுரைபெற்றதன்றிக் கல்வியுங் கற்றுச் சிறப்புற்றவர்கள். "பரவைநாய்ச்சியார் பிள்ளைத்தமிழ்" என்னும் நூலை இவர் இயற்றியிருப்பதன்றிச் சைவசித்தாந்தக் கருத்துக்களமைந்த தனிப்பாடல்களும் பல இயற்றியுள்ளார்.

## ருஉசு. குருசாமி ராயர்—வி.
(1911)

இவர் கூடலூரில் இருந்தவர். வன்னிய குலசத்திரிய மகா சங்கத்திற்குத் தலைவராக இருந்த இவர், "சங்கப் பதிகம்" என்னும் நூலைப் பாடியுள்ளார்.

"மோனநிலை பெற்றுநித் யானந்த பதமெய்த
முதலாத்ம ஞானம் வேண்டும்
முன்னதைப் பெறவேண்டும் அறிவந்த அறிவெய்த
முக்கியமாங் கல்வி வேண்டும்
ஆனவிக் கல்வியே மாந்தரின் கண்ணெனவும்
அஃதிலா தவர் முகத்தில்
அமைந்த இரு கண்களும் புண்களெனவும் போற்றும்
அறிஞ ரோதுவராதலால்

ஞானகு னியரான கல்வியாங் கண்ணிலா
நம்மவர்கள் குருடு நீங்க
நற்கல்வி கற்பித்து ஞானமுண் டாக்ககுல
நாயகரெ லாங்கூ டியே
மானம்வைந் தோர்சங்கம் நாட்டினர் அதனிலபி
மானம்வைந் தினிது பெறவே
வன்னியர்க ளேநல்ல கன்னியர்க ளேசங்க
வன்னியர்க ளாக வாரீர்''

என்பது சங்கப் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௩உ௫. குரு சுப்பிரமணிய ஐயர் (திருவரங்கம்) (1912)

சோழவள நாட்டில் திருவரங்கத்தில் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக இருந்தவர். இவரும் கிருட்டிணமாச்சாரியார் என்பவருஞ் சேர்ந்து ''காதம்பரிவசனம்'' என்னும் நூலை இயற்றியிருக்கிறார்கள்.

'' சீரார் கமலத் திருமா மகளுறையும்
ஏரார் மணிமார்பன் எம்பெருமான்—தாரார்
அரியபதந் தாழ்வார் அறியாமல் தூக்கில்
அரியபதம் உண்டோ அவர்க்கு ''

இஃது இவர் இயற்றிய பாடல்களில் ஒன்று.

## ௩உ௬. குருசுப்பிரமணிய குருக்கள் (திருவாடானை) (1909)

இவர் பாண்டிவள நாட்டில் திருவாடானை என்னுஞ் சிவப் பதியில் பண்டாரமரபில்தோன்றியவர். கல்வி கற்றுக் கவிராயரானர். ஆடானை நாதர் கோவிற் புலவராக இருந்த இவர் திருவாடானை ஆதிரெத்தினேசுவரர் மீது ஆசிரிய விருத்தம் என்னும் நூல் பாடி வெளியிட்டுள்ளார்.

'' மாருது செல்வங்கள் தீராது போகங்கள்
மகிழ்வென்று மென்று மிகவே
மனமொன்றி நிகழ்கின்ற காலங்க ளதுசென்று
வயதுங் கழிந்த உடனே

ஏருத வசனங்கள் ஆருத கோபங்கள்
இயல்பாக நோயுமுதிர
இடருண்டு மரணம்பின் வருமென்ற பயமுந்தும்
இழிவான சனனம் அறவே
நிருடுமெய்யவுன் பலியேறு கையனின்
திருநாமம் நெஞ்சில் நினைவோர்
நித்தராய்ப் பத்தராய் முத்திபெற் ருர்களந்
நிலையெனக் காக வருள்வாய்
ஆருட மதியாட நடமாடு பரமனே
அன்பாயி ஒருபா கனே
ஆதபற் குத்தருகு தேர்செலுத் தற்கருளும்
ஆதிரெத் னக்கடவுளே''

என்பது ஆசிரிய விருத்தத்தில் ஒரு பாட்டு.

## ௲உஎ. குருநாத சாத்திரி (கோவை) (1912)

கொங்குவள நாட்டில் கோயமுத்தூரில் இருந்த இவர் மருத மலைச் சிவசுப்பிரமணியர் மீது ''கீர்த்தனைத்தோத்திரப் பதிகம்'' என்னும் நூலைப் பாடியுள்ளார். அந்நாலில் இசைப் பாடல் முதலிய பலவகைப் பாடல்களும் கலந்துள்ளன. பஞ்சரத்தினம் என்னும் பகுதியில் உள்ள ஒரு பாடலை அடியிற் காண்க:

'' தாரணி புகழக் கனகவேல் ஏந்தித்
தண்ணொளி விசிடும் அமுதே
காரணரூபம் ஆனதோர் பொருளே
காதலில் தொண்டர்கள் பணியப்
பூரண ஞானம் ஈந்துநல் அடியார்
புரைதவிர்ந் தருள்தரு புலவா
நாரணன் மருகா எனஉனைத் தஞ்சம்
அடைந்தனன் மருதவெற் பிறையே ''

## ௲உஅ. குருநாத முதலியார்—ச.

தொண்டைவள நாட்டில் காஞ்சிமா நகரில் சபாபதி முதலி என்பவர்க்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் காமாட்சி ன் பஞ்சரத்தினம் முதலிய நூல்கள் பாடியுள்ளார். இவர் ச்சாமி முதலியார் என்பவருக்குப் பாடிய சீட்டுக் கவி ற அடியிற் காண்க:

"வலிவிஞுயர் மணியிலகு கணபணு டவிசிரண
மணிமகுட சேடன் நெளிய
மதிபருதி கதிசிதற திக்கிறைவ ருட்பதற
வடகனல் அவிந்து புகைய
வார்கடல் பசிரதி வறண்டிடவும் அட்டதிசை
மதவா ரணங்கள் கதற
வானமுக டிடியக்கிர வுஞ்சம்நீர்த் தூளிபட
வைவேல் விடுத்த முருகன்
சலசமலர் அடியிணைக் கடிமைசுர சங்கித
சாயுச்ய கனித நிபுணன்
தண்டமிழ் உணர்ந்தகுரு நாதன்நாற் கவிராச
சக்ரபதி விட்ட சநது
சகமெலாம் புகழ்பெற்றி லங்குசென் றம்பாகை
நன்னில்திரு அடியர் கோத்ரன்
சகன்மோக னுங்கனங் குவளையின் அலங்கலன்
சர்வசாம் பிராச்சிய நகுலன்
நிலைமைசெறி வாசகன் தலைமைபெறு தேசிகன்
நேயசற் பாத்ர ரசிகன்
நிக்கிரகா னுக்கிரகப் பாண்டியன் உதாரத்வ
நிட்கள மனப்பு ரவலன்
நிகிலசன ரட்சகன் நயகுணக் குமரவேல்
நிதிபரன் அளித்த புத்ரன்
நிகரில்சச் செல்வக்கு பேரன்அப் பாசாமி
நீதன்எதிர் கொண்டு காண்க
கலைவலவ ருக்குதவு தியாகிநீ ஆகையால்
கருதுமொழி ஒன்று கேண்மோ
கனபோச ராசன்நீ யாகவும் யானுமக்
காளிதா சனேயா கவும்
கருதிச் சிநேகம் பெரும்புவியில் வாழக்
கருத்தா யினேன் ஆகையால்
கனவதனி னியுமப் படியாக எண்ணியென்
கவிதைக் கிரங்கி யருளே."

## ௩௨௬. குலாம் காதர் நாவலர்—வா.

(20 - நூ.)

சோழவள நாட்டில் நாகூரில் தருகாப் புலவராக இருந்த இரங்கூனில் அந்நாளிற் பெருஞ் செல்வராகச் சிறந்து விள பெ. மா. மதுரைப் பிள்ளைமீது இவர் மதுரைக் கோவை எ நூல் பாடியுள்ளார். அக்கோவை ௪௨0 பாடல்களைக்

டது. தெய்வத்திறம் பேசல் என்னுந் துறையில் அமைந்துள்ள பாடலை அடியிற் காண்க.

"கண்டுஞ் சுவையும் கலந்தாங்கு தெய்வங் கலப்பவொன்றாய்
அண்டுங் குணத்தேம் பிரிப்பவர் யாவர் அருங்கொடையில்
விண்டுந் தருவும் அனையான் மதுரை வியன் சிலம்பில்
வண்டுங் கயலும் வெருவு கண்ணாய் நம்மை வையகத்தே"

## ௬௬௦. குழந்தைக் கவிராயர்—அ.

(18 - நா.)

இவருடைய தந்தையார் பெயர் அழகிய சிற்றம்பலக் கவிராசர். மான்விடு தூது பாடியக் குழந்தைக் கவிராயர் வேறு, ...வர்வேறு. மான்விடு தூது பாடிய குழந்தைக் கவிராயரின் ...தையார் பெயர் மங்கைபாகக் கவிராயர். இங்குக் குறிப்பிடப்... குழந்தைக் கவிராயர் குன்றக்குடியில் எழுந்தருளிய கடவுள்மீது நாள்தோறுஞ் செய்யுள் இயற்றும் பணியை ...ாண்டு ஏறக்குறைய ஐயாயிரம் பாடல்கள் வரை இயற்றி...ர். அக்கவிதைகள் 'தின கவிதை' என்னும் பெயருடை... இவைகளைச் சென்னை அரசினர் இரண்டு பகுதிகளாக ...ளிப்படுத்தியுள்ளனர். எல்லாம் சந்தப் பாடல்களாகவே ...மைந்துள்ளன. ஒரு பாடலை அடியிற் காண்க.

"மயிலேறிய முருகா!
அடியேன் முனம் வருவாய்—அமரேசா!
மணநிப மென் மலரே
புனைசீர்மிகு புயவா!—குகநாதா!
அயிலாலெதி ரிடுசூ
ருடனேயடர் புரிவாய்—பெலவோனே!
அமரோர்முத விமையோர்
நிதமாசைக ளுடனே—பணிவாரே
குயிலாகிய மொழியாள்
வனவேடுவர் கொடியாள்—நலமேசேர்
குறநாயகி தனையே
மயலாய் மரு வியவா!—எனையாளாய்!
ஒயிலா! சிகி மலையா!
இனிவேறிலை யருள்வாய்—கணநாதா!
உமையாளுட புதல்வா!
நிதியாவையு முதவாய்;—முருகோனே!"

## ௫௫௧. குழந்தைக் களத்தில் வென்றார்

ஏறக்குறைய என்பது ஆண்டுகட்கு முன்னர்ச் சோழவள நாட்டில் திரிசிரபுரத்தைச் சேர்ந்த சங்கரை என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். சிறந்த புலவராக விளங்கி யிருந்த இவர் பேரையூர் அப்பாசாமி ஐயர் என்பவர் கேட்டுக் கொண்டபடி 'சிவகிரி வெண்பா' என்னும் நூலை இயற்றியுள்ளார். நூலைப் பாராட்டிச் சென்னை புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், பாரிப்பாக்கம் முனியப்ப முதலியார், இராமநாதபுரம் சோடச அவதானம் வேலாயுதக் கவிராயர், சரவணப் பெருமாள் கவிராயர் என்போர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" கஞ்சங் கலைகவியும் கான்மா னதந்தடமும்
செஞ்சாந் தனஞ்சேர் சிவகிரியே—நெஞ்சாரும்
ஆரணனே போலும் அறுமா முகத்தனருள்
சீரணனேர் செஞ்சடையான் சேர்பு "

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௫௫௨. குழந்தை வேலப்ப கவுண்டர்—செ
(20 - நூ.)

இவர் ஈரோடு தாலுகா பெருந்துறை கிராமம் சென்னி யவலசில் இருந்த கனகபுரம் முன்னாள் மணியம் செல்லண்ண கவுண்டர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் " திருவாட்சி கதிரோபளப் பெருமாள் தோத்திர மஞ்சரி " என்னும் நூலைப் பாடியுள்ளார்.

நூலைப் பாராட்டி அட்டாவதானம் வெ. சேடாசலக் கவிராயர், ஈரோடு அப்பாவு முதலியார், பூந்துறை குமார வலசு முத்தண கவுண்டர், பூந்துறை அவிநாசி இலிங்கப் புலவர், வட முகம் வெள்ளோடு பொன்னைய புலவர், பெருந்துறை நகர் அரங்கதாசன் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். நூலின் பாடல்கள் இரண்டை அடியிற் காண்க:

" முத்திதருந் திருவாட்சி முரகரிஉன் பதமலரைப்
பத்தியுடன் துதித்தால் பாவமெல்லாம் பாய்ந்தோடும்
நித்தியனே நீயருள்வாய் நெடியோனே நிர்மலனே
நத்திவலம் வந்தடியை நான்போற்றி செய்தனனே "

" பத்தர்தொழும் பரம்பொருளே பானுகுலந் தேயுதித்த
உத்தமனே உனதடியை உறுதியாய்த் தொழுவோர்க்குச்
சித்திக்குஞ் செயல்களெல்லாம் விநாயகனும் சேயனுக்கும்
சத்துவந்தந் தாண்டருள்வாய் சாமிதிரு வாட்டியனே "

## ௩௩௩. குழந்தைவேலு ஆச்சாரியார்—மு.
(20 - நூ.)

இவர் தொண்டைவள நாட்டில் நரசிங்கபுரம் என்னும் ஊரில் ஏறக்குறைய நூறுண்டுகட்கு முன் முனிசாமி ஆசாரி என்பவருக்கும் தாயம்மை என்பவருக்கும் புதல்வராகத் தோன்றினார். இலக்கண இலக்கியங்களைக் கோ. வடிவேலுச் செட்டியாரிடம் கற்றறிந்தார். செய்யுள் பாடுவதில் திறம் அமைந்த இவர், "தேவயானையம்மை பதிகம், வள்ளியம்மை பதிகம், வேல் பதிகம், மயில் பதிகம், கோழிக்கொடிப் பதிகம், முருகக்கடவுள் இசைப்பாடல்கள், முருகர் பஞ்சகம் சாது வடிவேற் சற்குரு ஸ்தவம், திருத்தணிகை முருகர் போற்றித் திருப்பதிகம், செல்வ விநாயகர் துதி, முருகர் தோத்திர மஞ்சரி" முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

" திருவார் கமலச் செழுந்தேனே !
திவ்விய வொளியே தெருளமுதே !
மருவார் கொன்றை அணிநாதன்
மைந்தா! தணிகைத் தலமுறையும்
குருவே! அன்பர் அகத்தொளியே!
குமரா! குகனே! வடிவேலா!
வருவாய் முருகா மயிலேறி
வளமார் தணிகைப் பெருமானே "

என்பது தணிகையைப் பற்றிய பாடல்களில் ஒன்று. இவருடைய வரலாற்றுக் குறிப்புக்கள்:

" உம்பர் போற்றும் செம்படி வச்சிவம்
இம்பரி னிடங்கொ ளியல்தொண்டை நாட்டில்
நற்றவம் புரிந்தது நரசிங்க புரமென
உற்றவப் பதியினில் உறையும் உண்மையன்
மாயிருஞ் சாலி வாகன மதனில்
ஆயிரத் தெண்ணூற் றொருங் கலியில்
நாலா யிரத்துடன் நண்ணுதொள் ளாயிர

மேலா மென்பதின் மிக்குவைந் தாகக்
கூறுஞ் சுபானு குலவுங் கன்னி
விறும் இந்துநாள் விளங்குபூ ராடத்(து)
இச்சுக மதனில் இனியநல் ஓரையில்
விச்சுவப் பிராமண வியன்குலம் தழைக்க
முனிசாமி வள்ளல் முன்னுமில் லறந்துணை
இனியநா யம்மை இடத்தினில் உதித்தோன்
இரத்தின குருவின் இணையடித் துணையால்
பரத்தின் உணர்வொடு பகர்கோ ளபுரம்
மன்னிவே தாந்த மாப்பயிர் விளைத்திங்
கென்னையுஞ் சீரார் தன்னடிக் காக்கிச்
செடிவே ரறுத்த செம்மல் எங்கோன்
வடிவேற் குரிசில் வார்கழற் கன்பன்
இலக்கிய இலக்கணம் இயல்வே தாந்தம்
துலக்கமா உணர்ந்த தோமில் அழகன்''

என்னும் கந்தசாமி முதலியாருடைய சிறப்புப்பாயிரப் பகுதியாற் பெறப்படுகின்றன.

## ௩௩௪. குழந்தைவேலுப் பிள்ளை (திருச்சி) (1906)

இவர் திரிசிரபுரம் வரகனேரியில் பள்ளிக்கூடம் ஒன்று அமைத்துக்கொண்டு ஆசிரியராகப் பணி புரிந்திருந்தார். இவருடைய புதல்வர் சோமசுந்தரம் பிள்ளை என்பவரும் சிறந்த புலமை நலம் அமையப்பெற்றவர். குழந்தைவேலுப் பிள்ளை ''திருப்பழநிப்பதிற்றுப் பத்தந்தாதி'' என்னும் நூலை இயற்றியுள்ளார். இவ்வந்தாதியை இவருடைய புதல்வரும் உடனிருந்து பாடினர். ஆகவே அந்தாதி இருவராலும் இயற்றப்பெற்றதாக வெளியிடப்பட்டுள்ளது. இவ்வந்தாதியைப் பாராட்டி, ஆ. கா. பிச்சையிபுருகிம் புலவர், தி. ம. பொன்னுச்சாமிப் பிள்ளை, நாராயண பிள்ளை, இராசண்ண நாயக்கர் என்போர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

'' திருவார் கருணை மதிமுகமும்
தேனார் கமல மலர்ப்பதமும்
மருவார் கடப்ப மலர்ப்புயமும்
வயங்க உளத்திற் குடிவருவாய்

கருவார் குழியிற் சனித்துழலும்
கடையேற் குன்னை அலதுளவோ
தருவார் இறைவன் மருகாளன்
தாதா பழநி மலைக்கரசே''

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு.

## ௬௬௫. குழந்தை வேலையர் (புனவாசல்)

சோழவள நாட்டில் புனவாசல் என்னுமிடத்தில் வாழ்ந்திருந்த இவர் சிறந்த புலமைநலம் அமையப்பெற்றவர். இவர் காலத்தில் சிறந்தபல புலவர்கள் விளங்கியிருந்தனர். இவரியற்றிய நூல்களைப் பற்றிய விவரங் கிடைக்கவில்லை. திருவையாற்றுப் பதிற்றுப் பத்தந்தாதி என்னும் நூலுக்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். அப்பாயிரம் மிக நீளமானது. ஒரு பகுதியை அடியிற் காண்க.

"..........................................................................
மடிபரந் திறுமாந் தவிர்சுணங் கரும்பிய
மோட்டிளங் கொங்கைக் கோட்டுறு தரள
வடத்துயல் வரலைந் தடத்திழி யருவி
என்றுமைந் நில இருஞ்சிறை மயிலினம்
கலிப்பொடு கண்டுகார் காலமென் றகவும்
பைந்தமிழ்ப் பொதியப் பருப்பதந் தினிது
தக்கணந் தரணி சமஞ்செய வருளுநன்
றெக்கிரி யுந்தற் கிணையற நிவந்தாங்
குருத்தெழு விந்தந் தருக்கினை யடக்கி
மைம்முகி புதல்வர் செய்முர ணகற்றிக்
கொங்கிடை வதிந்த குறுமுனி பாங்கார்
குண்டிகைப் புனல்தரக் கோநகர் மகவான்"

## ௬௬௬. குற்றாலலிங்கம் பிள்ளை—சி. (1884)

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலிக் கண்மையில் உள்ள பாளையங்கோட்டையில் சிவப்பிரகாசம் பிள்ளை யென்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் "செந்திலந்தாதி" என்னும் அந்தாதி பாடியுள்ளார். கட்டளைக் கலித்துறையால் அமைந்த அவ்வந்தாதி நூறு பாடல்களையுடையது. பாளையங்கோட்டை

கணபதியப்ப பிள்ளை, சங்கரமூர்த்திக் குருக்கள், க. மு. ஆழ்வாரப்ப பிள்ளை, மு. சுப்பராய பிள்ளை, சுப்பிரமணிய பிள்ளை, தூத்துக்குடி சாமிநாதப் பிள்ளை, யாழ்ப்பாணம் முருகேச பிள்ளை என்போர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்கள்.

'' என்று மடியவர் போற்றி சயசய போற்றியென
மன்றுள் நடஞ்செய் சிவபெருமானுள் மகிழ்வந்து
குன்றினை வேல்கொண் டெறிந்தசெந் தூரிற்குமரனையே
நின்று மிருந்து நடந்தும் பணிந்திடு நீமனமே''

என்பது அந்தாதியில் அறுபத்து மூன்றாவது பாட்டு.

## ருருஎ. கேசவ ஐயங்கார்—ரா.

(20 - நூ.)

இவர் சென்னை மாநகரில் திருவல்லிக்கேணியில் வாழ்ந்திருந்தவர். எம்.ஏ., பி.எல்., வரை கல்வி கற்று நீதி மன்றத்தில் வழக்கறிஞராகப் பணி புரிந்தார். ''திருவல்லிக்கேணித் தமிழ்ச் சங்கம்'' என்னும் பெயரோடு சங்கம் ஒன்றை நடத்தியதோடு வகுளமாலை என்னும் திங்கள் இதழ் ஒன்றையும் நடத்தினர். வகுளமாலை முதலிய நூல்களையும் இவர் இயற்றியுள்ளார்.

'' மாசறு குலேசன் பொன்னூர் மலரடி நிலையென் றோதும்
தேசெறி ராசர் செந்நாத் தேங்கிய இருக்கி னுச்சித்
தேசிகர் அருள்பு னைந்த சுந்தர ராசர் சேயாம்
கேசவன் ஊதும் ஈதோர் செந்தமிழ்ச் சங்க நாதம்''

என்பது மாலையில் ஒரு பாட்டு.

## ருருஅ. கேசவ சுப்பராயச் செட்டியார்—பொ. மு.

இவர் அட்டமாநகர் என்னும் ஊரிற் பிறந்தவர். கண்ண பிரான் பக்தசன சபை என்னும் அவையில் நல்லுரைச் சொற்பொழிவுகள் பல நடத்தியவர். ஆங்கிலத்தையுந் தமிழையும் நன்கு கற்றுணர்ந்தவர். புகைவண்டி அலுவலாளர் அலுவலகத்தில் எழுத்தாளராகப் பணி புரிந்திருந்தவர். இவரிடம் பலபேர் கல்வி கற்றனர். மதுரை மும்மணி மாலை என்னும் நூலுக்கு இவர் பாடிய சிறப்புப்பாயிரப் பாடல் ஒன்றை அடியிற் காண்க. சில சிறு பதிகங்களை இவர் இயற்றியுள்ளார்.

" சீர்மருவு சுற்றைவிற் கான்மணி கொழித்திடும்
திரைகட லுடுத்த மகளின்
செழுமணி முகந்திலங் குந்திலக மானுமஞ்
சென்னைவேப் பேரி வாசன்
திவ்யகுண மார்க்கண்டன் மகவென வுதித்துதெய்
வப்புலமை வள்ளு வரின்
தேற்றமுறு தந்தையென் றேற்றுன்கோ லென்றுவந்
திருமொழிக் குரிய மாண்பன்
கார்மருவு மேகமுங் கன்னனென னு மன்னனும்
கற்பகத் தருவு நாணக்
கருணைசெய் தனுதினம் பாவாண ருக்கீந்து
கைம்மலர் சிவந்த வள்ளல்
கனகமணி வங்கதுவி பாஷியே சண்டுமாம்
கதித்தபுகழ் மதுரை மாறன்
கருதரிய நன்குலம் விளங்கவொரு மணியெனக்
காசினியில் வருதன்மையைத்
தார்மருவு மணிமாட மிதுமே கந்தவழ்
தருபுதுவை நகர்வா சனும்
தம்புசா மிக்குமுண னுரினிது செய்தநல்
தவத்தினில் உதித்த நிபுணன்
தமிழ்முனியை மலையினுயர் சேடனைப் பிலத்தில்வே
தாவைவா னேட்டி புவியில்
தன்னிகரி லாத்தமிழ்ப் பெருவளங் காட்டிபுகழ்
தரும்பரிசு தனிபெற் றவன்
பார்மருவு செயின்ட்மேரி காலேசு எனும்பெரும்
பள்ளியில் தமிழ்ப்பு லமையைப்
பரிவுட னடத்துமெஞ் செய்யப்ப னும்தமிழ்ப்
பாவலர் சிகாமணியதைப்
பண்புடன் உணர்ந்தந்த மதுரைமா றன்மீது
பன்னுமும் மணிமாலை யாம்
பாவலங் கற்சூட்டி மேவலரை யோட்டிபுகழ்
பாரில்நிலை நாட்டினனரோ."

## ௩௩௯. கையனார்

சங்ககாலப் புலவர்களில் ஒருவர். இவர் யாப்பிலக்கண நூல் ஒன்று செய்தார். நூலின் பெயரைக் கூட அறிய முடியாத வாறு நூல் மறைந்தொழிந்தது. இவரைப் பற்றிப் பிற ஆசிரியர்கள் தம்முடைய நூலுரைகளிற் குறிப்பிட்டுள்ளனர்.

## ௩௪0. கையேட்டுத் தம்பான்

(19—நா)

இவருடைய இயற்பெயர் தம்பான். கொங்குவள நாட்டில் இருந்தவர். அந்நாளில் மடவளாகம் என்னும் ஊரில் இருந்த இலட்சுமண பாரதியார் என்பவரிடங் கல்வி கற்ற இவர் மேற்படி பாரதியாரிடமே கையேடெழுதிக்கொண்டு அவரோடு சுற்றிக் கொண்டிருந்தார் கம்பர் வீட்டுக் கட்டுத் தறியுங் கவிபாடும் என்பர். அவ்வாறாக ஒரு சிறந்த புலவரிடங் கையேட்டுக்காரராக அமர்ந்திருந்த இவர் செய்யுள் பாடுந் திறமும் பெற்றிருந்தார் என்று கூறவும் வேண்டுமோ? இவருந் தம்முடைய ஆசிரியரைப் போல் அடிக்கடி தனிநிலைச் செய்யுட்கள் பாடினார். ஆசிரியரும் மாணவரும் கூனம்பட்டி என்னும் ஊரில் ஒரு மடத்தில் தங்கியிருந்தனர். முதலில் உண்டுவிட்டு வந்து அமர்ந்திருந்த பாரதியார் பிறகு உண்டுவிட்டு வந்த மாணவரைப் பார்த்துப் "புசித்தாயா?" என்று உசாவினர். இவருக்கு உணவிட்டவர்கள் இவருடைய அறிவு நலத்தை அறிந்து கொள்ளாமல் மட்டமான உணவினைப் பெயருக்காகப் போட்டு அனுப்பியிருந்தனர். உள்ளுக்குள்ளேயே குமுறிக்கொண்டு வந்த இவர் தம்முடைய ஆசிரியர் "புசித்தாயா?" என்று கேட்டதும் தாம் சாப்பிட்ட உணவின் சிறப்பைச் சொல்லத் தொடங்கி;

"மொட்டைச்சோ ளச்சோற்றின் மொத்தையிட்டுக் கத்தரிக்காய்த்
தட்டைச்சாற் றைத்தூக்கித் தானிட்டார்—பட்டமுறும்
மாணிக்க வாசர் மடாலயத்தார் ஐயாஉள்
நாணிக் கடிந்துவந்தேன் நான்"

என்னுஞ் செய்யுளைப் பாடினர். பாரதியாருடன் இருந்த மடத்தின் அதிகாரிகள் பாட்டைக் கேட்டு அஞ்சினர். வசைபாடினும் பாடுவாரே என்று துணுக்குற்றனர். இவரைப் பார்த்துத், "தங்கள் பெருமையை அறியாமற் செய்துவிட்டார்கள்; இங்கே வாருங்கள்" என்று கூறி மீண்டும் அழைத்துக் கொண்டுபோய் உயர்ந்த உணவினை இவர்உவக்குமாறு இட்டு அனுப்பினர்கள். மீண்டும் ஆசிரியர் இவரைப் பார்த்து, "இப்பொழுது எப்படி?" என்று உசாவினர். அப்போது :

" துவையல் வறுவல் துவட்டல் கறியும்
அவியல் குழம்பிரசம் அப்பம்—அவல்வடகம்
பேணிவடை பாயசநெய் பேணி அமுதளிக்கும்
மாணிக்க வாசர் மடம் "

என்று பாடினர். இவ்வாறு பாடிய பிறகு எல்லோரும் மன நிறைவு கொண்டனர். இவரைப் பற்றிய பிற செய்திகள் ஒன்றும் புலனாக வில்லை. ஆசிரியரைப் பற்றிய செய்தியையே நன்கு அறிய முடியாமல் இருக்கும்போது மாணவரைப் பற்றி எவ்வாறு விளக்கமாக அறிந்து கொள்ள முடியும் ?

## ௩௪௧. கைலாசநாதக் கவிராயர்

இவரைப் பற்றிய செய்தியொன்றுந் தெரியவில்லை. இவர் வடகரைப் பெரியசாமித் துரையவர்கள் பேரில் பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார். தாலப் பருவப் பாடல் ஒன்றை அடியிற் காண்க.

" பருவத் தலையாம் ருதுகாலம்
பணைத்தே எழுந்த பயோதரப் பெண்
பாவை தலைவன் தனைச் சேர்ந்த
பன்பார் கருவாப் பயந்தருள
வரையில் உயர்ந்த மாணிக்க
மலையாஞ் செவிலி இடந்தங்கி
வளர்ந்து தவழ்ந்து நடைகள்பெற்று
மலரும் மணியும் வளைமுத்தும்
அரிதிற் கலைபொன் மணிமுதலா
அணிந்து மருகந் தோழியுடன்
அளவ ளாவிப் பண்ணை விளை
யாடுங் கருப்பா நதிக்கன்னித்
தருமத் துறைவா செம்புலிப்பான்
டியனே தாலோ தாலேலோ
சதுரா பெரிய சாமிதநு
விதுரா தாலோ தாலேலோ "

## ௩௪௨. கொங்கணர்

இவருடைய பெயர் கொங்கணச் சித்தர் எனவும் வழங்கும். இவர் கொங்கு நாட்டில் ஒரு சிற்றரசனாகச் சிறந்து விளங்கியிருந்தார். சிவப்பதிகளைப் போற்றி வழிபடற் பொருட்டுப்

புறப்பட்டுத் தென்கரை நாட்டில் இறை வழிபாடு செய்து கொண்டிருந்தார். ஒருநாள் ஒரு புன்னைமர நிழலிலே சிவலிங்கப் பெருமானைப் போற்றி வழிபட்டார். இறைவன் ஆசிரியவடிவாகத் தோன்றி எண்வகைச் சித்திகளையும் சிவயோக முறைகளையுந் தெளிவாக உரைத்தருளினர். அது முதல் இவருக்கு மெய்யறிவும் வியத்தகு ஆற்றல் புரியும் பண்பும் உண்டாயின. பிறகு இவர் அரசாட்சியை நாடி நாட்டிற்குச் செல்லாமல் ஊதியூர் மலையில் தங்கித் தவம் புரிந்துகொண்டிருந்தார். இவர் சென்று வசித்த பிற மலைகளும் கொங்கணச் சித்தர்மலை, கொங்கணகிரி என்னும் பெயர்களைப் பெற்றன. மூலிகைகளின் சாற்றைக் கொண்டு செம்பு, ஈயம் முதலியவைகளைத் தங்கமாகச் செய்து விரும்பியவர்கட்கு வழங்கினர். தமது தலைக்குமேல் மரக்கிளையில் தங்கியிருந்து எச்சமிட்ட கொக்கை விழித்துப் பார்த்து அஃது எரிந்து ஒழியும்படி செய்தார். திருவள்ளுவர் மனைக்குப் பிச்சைக்குச் சென்றபோது "கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா" என்று வாசுகியம்மையாரால் கேட்கப்பட்டு அங்கு தமது பெருமை யிழந்தார்.

இவர், கொங்கணர் கடைக் காண்டம், கொங்கணர் பஞ்சபட்சி, கொங்கணர் வாலைக்கும்மி, முதலிய நூல்களை இயற்றியிருக்கிறர்.

"கட்டாத காளையைக் கட்டவே னுமாசை
வெட்டவே னும்வாசி யொட்ட வேணும்
எட்டாத கொம்பை வளைக்கவே னுங்காயம்
என்றைக் கிருக்குமோ வாலைப்பெண்ணே"

என்பது வாலைக் கும்மியில் ஒரு பாட்டு. இவர் கொங்கு நாட்டில் ஊதியூர் மலையில் வசித்துச் சித்துக்கள் செய்து கொண்டிருந்தார் என்பதை,

"தோற்றிய செம்பு தராவியம் பித்தளை சூழ்பச்சிலைச்
சாற்றுட னுக ரசங்கந் தகமிட்டுத் தந்திரமாய்த்
தேற்றுந் தவம்பெற்ற கொங்கணச் சித்தர்முன் செம்பொன் செய்து
மாற்றுரை கண்டது பொன்னூதி யூர்கொங்கு மண்டலமே"

என்னுங் கொங்கு மண்டல சதகமும் கூறுகிறது. இவருடைய வரலாறு வேறு வகையாக வழங்குதலையுங் காணலாம்.

புறப்பட்டுத் தென்கரை நாட்டில் இறை வழிபாடு செய்து கொண்டிருந்தார். ஒருநாள் ஒரு புன்னைமர நிழலிலே சிவலிங்கப் பெருமானைப் போற்றி வழிபட்டார். இறைவன் ஆசிரியவடிவாகத் தோன்றி எண்வகைச் சித்திகளையும் சிவயோக முறைகளையுந் தெளிவாக உரைத்தருளினர். அது முதல் இவருக்கு மெய்யறிவும் வியத்தகு ஆற்றல் புரியும் பண்பும் உண்டாயின. பிறகு இவர் அரசாட்சியை நாடி நாட்டிற்குச் செல்லாமல் ஊதியூர் மலையில் தங்கித் தவம் புரிந்துகொண்டிருந்தார். இவர் சென்று வசித்த பிற மலைகளும் கொங்கணச் சித்தர்மலை, கொங்கணகிரி என்னும் பெயர்களைப் பெற்றன. மூலிகைகளின் சாற்றைக் கொண்டு செம்பு, ஈயம் முதலியவைகளைத் தங்கமாகச் செய்து விரும்பியவர்கட்கு வழங்கினர். தமது தலைக்குமேல் மரக்கிளையில் தங்கியிருந்து எச்சமிட்ட கொக்கை விழித்துப் பார்த்து அஃது எரிந்து ஒழியும்படி செய்தார். திருவள்ளுவர் மனைக்குப் பிச்சைக்குச் சென்றபோது "கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா" என்று வாசுகியம்மையாரால் கேட்கப்பட்டு அங்கு தமது பெருமை யிழந்தார்.

இவர், கொங்கணர் கடைக் காண்டம், கொங்கணர் பஞ்சபட்சி, கொங்கணர் வாலைக்கும்மி, முதலிய நூல்களை இயற்றியிருக்கிறர்.

> "கட்டாத காளையைக் கட்டவே ணுமாசை
> வெட்டவே ணும்வாசி யொட்ட வேணும்
> எட்டாத கொம்பை வளைக்கவே ணுங்காயம்
> என்றைக் கிருக்குமோ வாலைப்பெண்ணே"

என்பது வாலைக் கும்மியில் ஒரு பாட்டு. இவர் கொங்கு நாட்டில் ஊதியூர் மலையில் வசித்துச் சித்துக்கள் செய்து கொண்டிருந்தார் என்பதை,

> "தோற்றிய செம்பு நராவியம் பித்தளை சூழ்பச்சிலைச்
> சாற்றுட னுகு ரசங்கந் தகமிட்டுத் தந்திரமாய்த்
> தேற்றுந் தவம்பெற்ற கொங்கணச் சித்தர்முன் செம்பொன் செய்து
> மாற்றுரை கண்டது பொன்னூதி யூர்கொங்கு மண்டலமே"

என்னுங் கொங்கு மண்டல சதகமும் கூறுகிறது. இவருடைய வரலாறு வேறு வகையாக வழங்குதலையுங் காணலாம்.

## ௬௪௩. கொந்தலாகான் புலவர்

(19 - நூ.)

முகமதிய சமயத்தவராகிய இவர் வேதாளையூர் என்னும் ஊரைச் சேர்ந்தவர். இவரைப் பற்றிய பிற செய்திகள் விளங்க வில்லை. இவர் உகூஎ பாடல்களடங்கிய "பலுலூன சுகாபி மாலை" என்னும் நூலைப் பாடியிருக்கிருர்.

" காந்தமலர் போன்ற மேனியைப்பார்
கககன மதியைநேர் வதனத்தைப்பார்
கூந்தல் முடித்தநற் கோலத்தைப்பார்
கொஞ்சுங் கிளிச்சொன்டின் இதழினைப்பார்
ஏந்துங் குங்குமக் கொங்கையைப்பார்
இடையின் கலையைப்பார் இருபுயம்பார்
வேந்தர் மயங்கிடுந் துடியிடைபார்
விரும்புந் தனம்போன்ற துகிலினைப்பார் "

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௬௪௪. கோட்டைநாயகர்—ப.

(1912)

தொண்டைவள நாட்டில் காஞ்சிமா நகரில் வெள்ளைக்குளத் தெருவில் இருந்த பனையப்ப நாயகர் என்பவர்க்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் 'காமாட்சியம்மை அகவல்" என்னும் சிறிய அகவற்பா நூலையாக்கியுள்ளார். வெண்பாப் புலி வேலுச்சாமிப் பிள்ளை, ம. திருவேங்கட முதலியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். நூலின் காப்புச் செய்யுளை அடியிற் காண்க:

" திருக்காமக் கோட்டந் திருந்திழையைப் பாடிக்
கருக்காமக் கோட்டங் கழிப்பான்—இருக்காமக்
கோட்டத்தில் வாழ்வான் குறித்துக் கொடுத்தவொரு
கோட்டத்தன் அன்புகொடுக்கும்"

## ௬௪௫. கோதைநாயகியம்மாள்—வை. மு.

(20 - நூ.)

இவ்வம்மையார் சென்னை திருவல்லிக்கேணியில் வாழ்ந்திருந்தவர். புனை கதைகள் வரைவதில் புகழ் பெற்று விளங்கிய இவ்

வம்மையார் ஏறக்குறைய நூற்றிருபது புதினங்கள் எழுதி யுள்ளார். ஜகன்மோகினி என்னும் பெயரோடு திங்கள் வெளி யீடொன்றும் வெளியிட்டார். இவ்வெளி யீட்டில் அம்மையார் எழுதிய புதினங்களே பெரும்பாலும் வெளியாயின. சாந்தி யின் சிகரம், வைதேகி, நிர்மல நீரோடை, மலர்ந்த இதழ், வானக்குயில், மதுரகீதம், அநாதைப்பெண், கருணாலயம், வாத்சல்யம், அமுதமொழி தெய்விக ஒளி, மாதாஞ்சலி, புனித பவனம், குணக்குன்று, சிவநாடி, கலா நிலயம், சிலாசாசனம், அமைதியின் அஸ்திவாரம், பவித்திரப்பதுமை, ஓவியப் பரிசு, நம்பிக்கைப்பாலம், சுதந்திரப்பறவை, மகிழ்ச்சி உதயம், கோபால ரத்தினம், இருபா மந்திரி, புதுமைக் கோவில், வீர வசந்தா, அபராதி, வத்சுகுமார், பிரார்த்தனை, பிரதிக்ஞை, பெண்தர்மம், உண்மைச் சித்திரம், தபால் விநோதம், ஆண்டவனின் அருள், இந்திர மோகனா, பட்சமாலிகா, பிரேமாச்ரமம், நியாய மழை, அருணோதயம், மனச்சாட்சி, குலதனம், கருணை உள்ளம், சந்திரகலா மாலை, தென்னாட்டுக் கல்யாணமுறைகள், உளுத்த இதயம், கானகலா. சௌபாக்யவதி, பிரபஞ்ச லீலை, வெற்றிப் பரிசு, ரோசாமலர், தைரியலட்சுமி என்பன அம்மையாரின் புதினங்களிற் சில. இவ்வம்மையார் 1960ஆம் ஆண்டில் காலஞ் சென்றார்.

## ௲சசு. கோபால ஐயங்கார்—பி. ஏ. வ.

(20 - நூ.)

திருவனந்தபுரத்தினர். பி ஏ, வரையில் ஆங்கிலங் கற்ற இவர் ஆங்கில நூல்களைத் தமிழில் மொழி பெயர்க்குந் திறம் பெற்றிருந்தார். செகப்பிரியர் ஆங்கில மொழியில் எழுதிய 'சிம்பலைன்' என்னும் நாடகத்தை இவர் தமிழில் 'இமார்சுனை' என்னும் பெயரோடு மொழி பெயர்த்துள்ளார்.

## ௲சஎ. கோபால கிருட்டிண பிள்ளை—சொ.

(20 - நூ.)

சோழவள நாட்டில் நாகபட்டினத்தில் தோன்றிய இவர், நாகை, சொ, தண்டபாணிப் பிள்ளையின் உடன்பிறந்தவர். மறை

மலை யடிகளிடமும் வேறு சிலரிடமும் இலக்கண இலக்கியக் கல்வியை நன்குகற்ற இவர் இளம் பருவத்திலேயே சிறந்த அறிஞரானர். புதுக் கதைகளைக் கற்பித்தெழுதும் ஆற்றல் இவருக்கு நன்கு அமைந்தது. பல புதிய கதைநூல்களை எழுதி வெளியிட்ட இவர் மறைமலையடிகளாலும் நன்கு பாராட்டப்பெற்றார். சிறந்த புலமைத்திறம் அமைந்த இவர் 6—7—1915 இல் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

## ரூசவ. கோபாலசாமிப் பிள்ளை—சு.

இவருடைய தந்தையார் பெயர் சுப்பராய தேசிகர். இத் தேசிகர் பராசத்தியை வழிபடு தெய்வமாகக் கொண்டவர். இவர் தேவியின் அருளாற்றலால் பல புதுமைகளைச் செய்தார். காது கேளாத பிறவி ஊமையன் ஒருவனைப் பேசச் செய்தார். கோபாலசாமிப் பிள்ளை ஆங்கிலத்தையுந் தமிழையும் நன்கு கற்றார். தமிழிலே செய்யுள் பாடும் புலமையடைந்து திகழ்ந்தார். தஞ்சாவூர் மாவட்டம் வடபிர்கா சத்திரந் தாசில்தாராக அலுவல் பார்த்தார். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை. இவர் இயற்றிய பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"பொன்பேறும் புவிப்பேறும் புகழ்ப்பேறும்
பொருந்துபெரும் பேருக் கொண்ட
மன்னன்துரை ராய்பகதூர் மதுரைவள்ளல்
நெடுங்காலம் வாழ்வி னேங்க
இன்னிசையால் வெண்பாவால் எழிலந்நா:
நிந்தொடையால் பெருக்க மாகப்
பன்னுதமிழ்ப் பாமாலை சூட்டினன்
கோபாலப் பாவ லோனே."

## ரூசகூ. கோபாலப் பிள்ளை—மு.

(20 - நூ.)

இவர் பூவை முத்தையாசாமிப் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றி ஆங்கிலந் தமிழ் ஆகியவைகளை நன்கு கற்றுணர்ந்தார். சென்னையில் உள்ள பெரிய அஞ்சல் நிலையத்தில் எழுத்தராகப் பணி புரிந்திருந்த இவர் அந்நாளில் சிறந்த கொடையாளியாக விளங்கியிருந்த பெ. மா. மதுரைப் பிள்ளை

என்பவர் மீது மதுரை யந்தாதி என்னும் நூலைப் பாடியுள்ளார்: இவ்வந்தாதி முப்பது பாடல்களைக் கொண்டது. பல புலவர்கள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"போற்றுங் குழல்வாரிப் பூமுடியாள் கண்துயிலாள்
மாற்றுங் குழன்மொழிவாய் பேசாளால்—ஏற்றுக்கோ
மாடப்பொன் வேப்பேரி மான்மதுரை அம்மானைக்
கூடப்போ காக்குறையென் கோ."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௫௫௦. கோபாலையர்—ரா.

### (20 - நூ.)

"மலைமகள் கேள்வன் மகிழ்ந்தினி துறைவதும்
அலைமகள் தவனை அன்பொடு பெறுவதும்
ஆகிய கமலையின் ஐங்குரோ சத்துள்
தெனுது திசைக்கண் தெரிவரும் பெருமைக்
கனிவலஞ் செல்லாப் புளிவல மதனில்
கவுண்டினிய ரென்னும் கலைசால் அறிஞர்தம்
கோத்திரந் தனில்வரு கோதிலாக் குரிசில்
பன்னூ லாகும் நன்னூல் பயின்றோன்
ஒழுக்கம் முதலாம் விழுப்பம துடையோன்
காபாலன் மகிழ்வுறுங் குரிசில்கோ பாலன்."

என்று பொன்னையா பண்டாரம் என்பவரால் பாராட்டப்பெற்ற இவர், தஞ்சை மாவட்டத்தில் உள்ள புளிவலம் என்னும் ஊரில் தோன்றியவர். தமிழ்மொழியையும் வடமொழியையும் நன்குகற்ற இவர் வடமொழி நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்கும் ஆற்றல் பெற்றிருந்தார். வடமொழி நூல்கள் தமிழ் நூல்கள் முதலிய வைகளைக் கற்று மனையடி சாஸ்திரம் என்னும் நூலை எழுதி முடித்தார். அந்நூலில் வீடுகட்டுவதற்கான விதிமுறைகள் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. நூலைப் பாராட்டித் திருவாரூர் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக இருந்த பொன்னையாப் பண்டாரம், நாகை சதாசிவம்பிள்ளை, சுவாமிநாத தேசிகர் என்போர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். சகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகள், உ. வே. சாமிநாதையர், ரா. இராகவ ஐயங்கார், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், அ. மு. பொ. சுப்பராய

செட்டியார் ஆகியோர் சிறப்புரை வழங்கியுள்ளனர். நூல் தெளிவான நடையில் இரண்டு பகுதிகளாக எழுதி வெளியிடப்பட்டுள்ளது.

## ௯௫௧. கோவிந்தசாமி ஐயர்—மு.

(20 - நூ.)

மதுரை மாநகரில் இருந்தவர். மதுரைக் கல்லூரித் தமிழாசிரியர் சுப்பராம ஐயர் என்பவரிடங் கல்வி கற்றுப் புலவராகிய இவர் மதுரை செயின்ட் மேரிஸ் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகவும், திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனப் புலவராகவும் விளங்கியிருந்தார். திருவாத வூரடிகள் என்னும் மாணிக்க வாசகர் வரலாற்றை இவர் இருநூற்றறுபத்தேழு வெண்பாக்களாகப் பாடியுள்ளார்.

“ அற்றைஇர விற்கடிகை ஆறிரண் டாமளவில்
உற்றபரி மாவனைத்தும் ஓரியுருப்—பெற்றெழுந்து
திக்கெலாஞ் சென்றடர்ந்து சேர்ந்து நகரெங்கும்
மிக்கொலிசெய் தோடினவால் மேல்.

பரிகள் நரிகளாய்ப் பாய்ந்து நகரில்
விரியு மிடமெல்லாம் மிக்குக்—கரியுடனே
முன்னமையும் வாசிகளை முற்றுங் கடித்தவற்றைச்
சின்ன பின்ன மாக்கினவே சென்று ”

என்பது பரிகள் நரிகளான பகுதி. நூலைப் பாராட்டி மு. ரா.அருணசலக் கவிராயர், மு. ரா. சுப்பிரமணியக் கவிராயர், மு. ரா. கந்தசாமிக் கவிராயர், அ. இராமநாதச் செட்டியார், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## ௯௫௨. கோவிந்தசாமி பண்டிதர்

(1911)

சோழவள நாட்டில் இராசமன்னர் கோயிலில் இருந்தவர். இலக்கணப் புலமை நிரம்பப் பெற்றவர். “சுப்பிரமணியக் கடவுள் பதங்கள், கந்தசாமி ஆசிரிய விருத்தம்” முதலிய நூல்கள் இயற்றியுள்ளார்.

" கலிக்கொடுமை அடியேனை அணுகாது காத்தருள்
கந்தனே சிவகு மரனே
கல்விபெறு நக்கிரன் அருணகிரி கும்பமுனி
கண்டுதொழ நின்ற முதலே
ஒலிக்குயின் றவழ்வரைக் கரசனே குன்றவரின்
உயர்பூசை கொள்வ ரதனே
ஒப்பற்ற அம்பலக் கூத்தனோர் கவிபாட
ஒள்ளியர் முனந்தென் றிசை
அலிக்கொடுமை காணுமல் ஆயிரந்தோள் தலைகள்
அமையவே செய்கு முகனே
அயிலெடுத் தன்றுகுன் றெறிவிர னேகொடிய
அவுணர்முடி பொடிசெய்து மேல்
புலிக்கொடி உயர்த்தசெங் குந்தமுடை யோரவை
பொருந்துமங் கலமு ழங்கும்
பொருள்வைத்த நகரில்வளர் அருள்சுப்ர மண்யனே
புவனமணி சுகுன மணியே "

என்பது கந்தசாமி ஆசிரிய விருத்தத்தில் ஒரு பாட்டு.

## ௩௫௩. கோவிந்தசாமிப் பிள்ளை—கு.

(20 - நூ.)

இவர் திரிசிரபுரத்தினர். நன்கு கல்வி கற்றுச் சிறப்புற்றிருந்த இவர் யோகீந்திர ஓம்பிரகாச சுவாமிகள் என்னும் பெரியார்பால் திட்சை பெற்றவர். இவருடைய திட்சாநாமம் சாங்குசித்தப் பிரகாசம் என்பது. இவர், குருதோத்திர பஞ்சரத்தினம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

" நானெனும் பொருளினைக் காணுமல் இச்சனனம்
நழுவுமென அலறும் எற்கு
நான்மறையின் அந்தத்தில் ஒளிர்குப்த வித்தையை
நயனமதில் இலக வைத்தாய்
ஊனென்றும் உடலென்றும் உயிரென்றும் உளறுமென்
உளமதம் விட்டு பேட்சை
உத்தமப் போதமாம் ஏழாந் தலப்பொருள்
உண்மைநாம் என்றபோது
வானென்று சொல்லவோ வாயுமிலை வகையுமிலை
மாயமாய்ப் போன தென்னே
மலரசல உயர்பீட கீர்த்திப்ர தாபகுரு
மகிமையெல் லாமுனக் கே

தேனெனுஞ் சொருபநிலை ஊட்டிவாழ் விக்கவே
திருஉருக் கொண்ட எந்தாய்
தேசிகா ஓம்பிர காசமென் பெயர்பூண்ட
தெவிட்டாத அமிர்த ரசமே"

என்பது பஞ்சரத்தினத்தில் ஒரு பாட்டு.

## ௩௫௪. கோவிந்தசாமிப் பிள்ளை—சு. கு.

(20 - நூ.)

இவர் சென்னை மாநகரினர். சிறந்த புலமை பெற்றவர். "எட்டிகுடி சிவசுப்ரமணியர் தோத்திர மஞ்சரி" முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். தோத்திர மஞ்சரிக்குத் தரங்கம்பாடி வி. இருளப்பிள்ளை, மு. தண்டாயுதபாணிக் காடவராயர், செம்பொனார் கோவில் முத்துவேலாயுத முதலியார், கும்பகோணம், விகடகேசரி கதிர்வேல் பிள்ளை முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்கள். நூலின் பாடல் ஒன்றை அடியிற்காண்க:

"மிடியறப் புகழொடு விளங்கிவரு செல்வனே
மேலான சோதி வடிவே
வித்தைமிக வாய்ந்திட்ட வள்ளலே வருகவே
மெய்ஞ்ஞானம் மேவு குருவே
வடிவுமிகு செம்மையுறு திருமேனி வாய்[illegible]ிட்ட
வள்ளிதெய் வானை பங்கா
வல்லசுரர் நெஞ்சம் பதைத்திடச் [illegible] நுமே
மாசெயம் பெற்ற பரனே
படிமிசை உன்றனைச் சதமென்று நம்பினேன்
பரமகுரு வான வரதா
பன்னிரு கரத்தனே எந்நலமும் நின்கருணை
பதியவிளை யாடுஞ் சீலா
திடமென வருங்கால னுக்கஞ்சி வேண்டினேன்
சித்தம்வைத் தாளும் வேலா
செகம்புகழு மெட்டிகுடி வாழ்கின்ற தங்கவொளி
சிவசுப்பிர மண்ய தேவே."

## ௩௫௫. கோவிந்தசாமிப் பிள்ளை—கு.

"திங்களெனப் பிரபைவளர் பெருந்துறைவாழ்
ஆத்மநா தன்சீர்க் காதை
மங்களஞ்சேர் கலிவெண்பா வாலியற்றி
உலகமெங்கும் மணக்கச் செய்தான்

கங்கையணி குலதிலகன் குழந்தைவேல்
ஈன்றதிருக் கருணைப் பாலன்
பங்கயநா மகள்வளர்கோ விந்தசா
மிப்பெயர்கொள் பாவல் லோனே"

என்று அறிஞர்களாற் பாராட்டப் பெற்ற இவர் புதுக்கோட்டை நாட்டில் கூழிபிறை என்னும் ஊரில் குழந்தைவேற் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர். தம்முடைய சிறிய தகப்பனராகிய அண்ணுசாமிப் பிள்ளை என்பவரிடந் தமிழ் கற்றுத் தேறினர். திருப்பெருந் துறையை அடைந்து அங்கு வாழ்ந்திருந்த இவர் "திருப்பெருந்துறைக் கலி வெண்பா" என்னும் நூலை இயற்றியுள்ளார். யாழ்ப்பாணம் தும்பை நகர், சி. சதாசிவ ஐயர், யாழ்ப்பாணம் புலோலி அ. வேன்மயில் வாகனப் புலவர் மாணவர் அ. சோமசுந்தர உபாத்தியாயர், முறையூர் பழனியப்ப செட்டியார், திருப்புத்தூர் அப்துல் காதிறுப் புலவர், தென்காசி இராமசாமிக் கவிராயர் ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"சித்திதரும் ஞானச் செழுஞ்சுடராய் முன்னின்று
முத்திதரும் வேழ முகவாநீ—எத்திசையும்
போற்றும் பெருந்துறையான் பொன்னடிக்கென் சொன்மாலை
சாற்றுதற்கு முன்னமிழுந் தா"

என்பது நூலின் காப்புப் பாட்டு.

## ௩௫௬. கோவிந்தசாமி முதலியார்—சி. (1882)

சென்னை சிந்தாதிரிப்பேட்டையில் வாழ்ந்திருந்தவர். இவர், 'தசாவதாரத் திருவிளையாடல்' என்னுஞ் சிறுநூலை இயற்றியுள்ளார். மேற்படி நூலில் கொம்மிகள், சிந்துகள், தனி இசைப் பாடல்கள் முதலியவைகள் அடங்கியுள்ளன.

வாமனவதாரம்

"மாபலிச் சக்கர வர்த்தியா மரக்கன்
மாண்புடன் பூமியை ஆளுகையில்
சிபதியப் பூபதியைச் சோபமுடன் தாபமதால்
சேவடியாற் கேட்டான் மூவடிமண்"

என்பது வாமனவதாரச் சிந்து.

" அக்கர இலக்கணம் தெரிகிலா ஏழையேன்
ஆயினும் அன்புமீ தூரச்
சக்கரம் புனைந்தோன் தன்னருளால்இத்
தமியனேன் விளம்பினன் இதனை
மிக்கவே யுணர்ந்தோர் மிகுபிழை யிருப்பின்
மேதினி வயினவை யகற்றி
ஒக்கவே ஆள்வீர் உபிதமாய் உலகில்
ஓங்குநர் முறையது வாமால்"

இது நூலின் அவையடக்கப் பாட்டு.

## ௬௫௭. கோவிந்தசாமி ராசா—ப. சி.
(20 - நூ.)

இவர் அநந்தபுரம் மாவட்டக் கலெக்டரின் அலுவலகத்தில் எழுத்தராகப் பணிபுரிந்திருந்தவர். ஆங்கிலத்திலும் தமிழிலும் வல்லவர். புனைந்துரைக் கதைகள், உரைநடை நூல்கள் முதலிய எழுதுவதில் வல்லவர். இவர் மரகதவல்லி, சுப்பம்மாள், இராம லிங்கம், கனகம்மாள், சிங்காரம் முதலிய புனைந்துரைக் கதைகளை யெழுதியுள்ளார். பாரதம், இராமாயணம் ஆகியவைகளிலுள்ள சீதை, சகுந்தலை, உருக்குமணி, தமயந்தி, சாவித்திரி ஆகியவர் களின் வரலாற்றை எழுதிப் 'பஞ்சரத்தினம்' என்று பெயரிட்டு வெளியிட்டுள்ளார்.

## ௬௫௮. கோவிந்தசாமி ராவ்
(19 - நூ.)

இவர் சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் இருந்தவர். சதாவதானம் சுப்பிரமணிய அய்யருடைய மாணவர்களில் ஒருவர். இவர் தம்மை அவருடைய கடை மாணுக்கர் என்று குறிப்பிட்டுக்கொள்ளுகிறுர். நாடகக்குழு ஒன்றை அமைத்துத் தலைவராக இருந்து பல நாடகங்களை நடத்திய இவர் சாவித்திரி நாடகம் முதலிய நாடகநூல்களை இயற்றியிருக்கிறுர். நூலில் பாடல்கள் இல்லை, உரைநடையாகவே அமைந்திருக்கிறது. இவர் தெலுங்கு ஆங்கிலம் முதலிய பிறமொழிகளையும் அறிவார் இவரியற்றிய நாடகங்கள் அவ்வளவு சிறந்தனவல்ல.

"அம்பிகையின் சுதனென்ன அகிலமெலாம்
புகழ்செலுந்த அருமை யான
தும்பிமுகங் கொண்டந்தத் துதிக்கையாம்
புழைக்கையால் துயரந் தன்னல்
வெம்புமுக மேலருளை வியொழுக
விட்டதனை விளங்கச் செய்யும்
எம்பிரான் கழலிணைகள் எப்போதும்
என்னுள்ளத் திருந்து காக்க"

என்னுஞ் செய்யுளைச் சாவித்திரி நாடகத் தொடக்கத்தில் இயற்றி யிருக்கிருர். இவருடைய நாடகம் 1886 ஆம் ஆண்டில் அச்சாகி யுள்ளது.

## ௫௫௧. கோவிந்த செட்டியார்
(19 - நூ.)

இவர் புதுச்சேரியில் வாழ்ந்திருந்தவராகிய சோமசுந்தரச் செட்டியார் என்பவரிடங் கல்வி கற்ருர். இவருடைய ஊர் அக்கம்மாள் பேட்டை. இவர் இசைப் பாடல்கள் பாடுவதிலும் வல்லவர். இவருடைய நூல்களில் நடேசர் கீர்த்தனம் என்ப தொன்று அறியப்படுகிறது. கீர்த்தனப் பாடல்களில் ஒன்றை அடியிற் காண்க:

இராகம்: சங்கராபரணம் தாளம்: ரூபகம்

பல்லவி

சம்போசந்திர சேகரா சர்வசிவ தயாபரா

அனுபல்லவி

அம்போருகன்மால் போற்றிடும் பாதனே
அம்பலந்திலாடும் அரியப் பிரக்கியா தனே—(சம்போ)

சரணங்கள்

பவக்கோடையால் மிகவும் வெம்பினேன்
பாதமேகெதி யென்றுன்னை நம்பினேன்
அவப்பொழுதினுல் காலந்தைப் போக்கினேன்
அனியாயமாயில் வகிலந்தில் தாக்கினேன் (சம்போ)
துன்பவெங் கலியைப் போக்கியே
தூயநின்னருளினைத் தாக்கியே
இன்பமுமுன் அருட்கண் நோக்கியே
ஏழையென் பவப் பிணியை நீக்கியே (சம்போ)

திங்களுங் கங்கையுஞ் சூடிய நாதனே
தில்லைச் சிதம்பரந்தி லாடும் பாதனே
பங்கயன் மால்பாதங் காணொணு நீதனே
பாலன்கோவிந் தனுக்கருளும் பிரக்யாதனே. (சம்போ)

## ௩சுo. கோவிந்தப் பிள்ளை—கோ.
(1910)

சோழவள நாட்டில் தென்கரை ஆலத்தூர் என்னும் ஊரில் கோதண்டராம பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினார். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றபடியால் புலவர் என்று எல்லோராலும் நன்கு மதிக்கப்பெற்றார். "திருக் கருகாவூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி" "கரும்பனை நாயகி பதிகம்" என்னும் நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

" வண்டமிழ் நாவுக் கரசரைச் சூலை
வருத்தமுன் விடுத்தவர் தமைப்பின்
வரவழைத் தருஞ்செந் தமிழ்ச்சுவை செவியால்
மடுத்தநின் தனிமனைக் கிழவன்
தெண்டிரை பொருது மூவர்க்கருங் கடலும்
செறிந்திடும் எழுபவக் கடலும்
தின்னிதிற் கடக்க அருட்புணை யளித்துத்
திகழ்தருங் கரையினுய்த் ததனுல்
தண்டமிழ் உனக்குச் சாற்றிய அளியேன்
சாற்றுதற் கரும்பிணிக் கடலும்
சகிப்பதற் கரிய வறுமைவெங் கடலும்
தாண்டுதற் கருள்பிறி தளிப்பாய்
கண்டவர் நகைக்கும் கவியிது வேனும்
கருதுவ தருதியன் றோநீ
கருதருங் கருகா புரிவளர் தருமுக்
கன்னியே கரும்பனை யவளே "

என்பது கரும்பனை நாயகி பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௩சுக. கோவிந்தப் பிள்ளை—கி. மு. மே. சி.
(20 - நூ.)

இவர் அன்னதானப்பட்டி என்னும் ஊரினர். இவ்வன்ன தானப்பட்டி சேலம் மாவட்டத்தில் செவ்வாய்ப்பேட்டையில்

உள்ளது. கரியபெருமாள் மலை யெனவழங்கும் கந்தமலையில் திருக்கோயில் கொண்டுள்ள கரியபெருமாள் மீது இவர் பதிகம் ஒன்று பாடியுள்ளார்.

" செந்திருவை முன்னமொரு கந்தருவ மின்பாடித்
திவ்யமலர் மாலை பெற்றுச்
செய்யதுர் வாசருக் கியவதை இந்திரற்
கவர்தரச் செருக்கி னேற்றுந்
தந்திகர மியவது நாளடி துவைத்ததால்
தாங்காத சினமு ளவே
தாபதர் கோபத்தில் அந்தரப் பொருளெலாம்
தாழ்கபா லாழி யென்னக்
கந்துமப் பொருளைசுரர் முந்துற்ற நிலைபெறக்
கனிந்துனைத் துதிக்க விந்தாய்
கருவாழி யாழுமெனை யுங்காப்ப துன்கடன்
கரிமுகன் கந்த வேளும்
கந்தர்ப்பர் அந்தரர் வந்துவந் தனைசெயும்
கந்தமலை வளர்கடவுளே
கமலமின் மார்பினுறை விமலனென வேதமுரை
கரியகதிர் மணிவண் ணனே "

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௩௬௨. கோவிந்தராச ஐயங்கார்
## (1912)

இவர் திருவரத்துறைப்பதிகம் பாடியுள்ளார்.

" தாய்தந்தை குருக்களின் தக்கதோர் புத்தியைத்
தவறுது கேட்க வேண்டும்
தானமுங் கல்வியபி மானமும் மரபினோர்
தந்ததொழில் செய்ய வேண்டும்
வாய்தனைக் கட்டியே வாதியரை நோக்கியே
வகையாகப் பேச வேண்டும்
வந்தவன் தீக்குணன் நற்குணன் ஆயினும்
வயிறுபசி தீர்க்க வேண்டும்
சேய்தனக் கூட்டியே சேதாவின் நற்பாலைச்
சிறிது நாங் கொள்ள வேண்டும்
சேர்ந்தவன் தீக்குணன் ஆயிடின் இடித்துமே
செகத்தினில் திருத்த வேண்டும்

வாய்கையிற் சிக்கிடா தெப்படியும் நற்கதி
வரும்வழியைத் தேட வேண்டும்
வரந்திலுயர் நெல்வாயில் அரத்துறையில் ஈசனே
வானவர்க் கருள் நேசனே ''

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு. இவருடைய பிற நூல்களைப் பற்றிய செய்தி புலனாகவில்லை.

## ௩௬௩. கோவிந்தராச தாசு—பூ. அ.
(20 - நூ.)

சென்னை மாநகரில் இருந்தவர். திருவள்ளுவர் மூதறக்கழகம் என்னும் கழகத்திற்குத் தலைவராக இருந்தார். இவர் திருக்குறளில் நூறு செய்யுட்களைத் திரட்டி உரை எழுதிவெளியிட்டுள்ளார். அந்நூல் 'திருக்குறள் நூறு' என்னும் பெயருடையது. திருக்குறளை நாட்டிற் பரப்ப இவர் மிக முயன்றார்.

## ௩௬௪. கோவிந்தன் செட்டியார்—மு.
(20 - நூ.)

மதுரை மாநகரில் சிம்மக்கல் என்னுமிடத்தில் வசித்திருந்த முத்துச் செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் செந்தமிழ்ப் புலமையும் பெற்றுச் செய்யுள் இயற்றும் ஆற்றலும் அமைந்து விளங்கினர். "சோமசுந்தரக் கடவுள் கீர்த்தனை" "சோமசுந்தரக் கடவுள் போற்றிமாலை" என்னும் நூல்களை இவர் பாடியுள்ளார். முதுகுளத்தூர் ஆறுமுகம்பிள்ளையால் இந்நூல்கள் பார்வையிடப் பட்டு வெளிவந்துள்ளன. பூ ஆறுமுகம்பிள்ளை, சின்னச்சாமிக் கவிராசர், சடகோபதாசர், பழநியப்ப செட்டியார், த. குப்புச்சாமி நாயுடு ஆகியோர் இந்நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' ஆதிநீ சொக்க நாதா அநாதியொன் றாகி மேலோர்
நீதிநீ அறிந்த சோதி நிஎநடிக் கன்ப ராகி
வாதிநீ உலகில் யார்க்கும் வைத்தவர் யாகம் பார்க்க
மேதினி தனிலே வானோர் மிகமகிழ் சொக்கே போற்றி ''

என்பது சோமசுந்தரக் கடவுள் போற்றி மாலையில் ஒரு பாட்டு. பாடல்கள் அத்துணைச் சிறந்தவைகளல்ல.

## ௬௬௫. சக்கராசுவாசுதேவய்ய பந்துலுகாரு

(20 - நூ.)

இவர் ஆந்திர நாட்டு அந்தணர். ஆந்திரராயினும் தமிழ் மொழியினிடத்தில் ஆர்வங்கொண்டு, வி. கோ. சூரியநாராயண சாத்திரியாரிடம் பயின்றார். உரைநடையை அழகாக எழுதவும் பாடலை இனிய முறையில் இயற்றவும் இவர் வல்லவராக இருந்தார். "பள்ளியறைப் பிரசங்கங்கள்" என்னும் நூலை ஆங்கிலத்தில் இருந்து தமிழில் மொழி பெயர்த்தார். ஆசிரியராகிய சாத்திரியார் காலமான பிறகு தமிழார்வங் குன்றிப் புகைவண்டி அலுவலகம் ஒன்றில் வேலைபார்த்துக் கொண்டிருந்தார்.

## ௬௬௬. சங்கரக்குமாரு பிள்ளை (சில்லாங்குளம்)

(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் சில்லாங்குளம் என்னும் சிற்றூரினராகிய இவர் சைவசமய நூல்களையுந் தமிழ்நூல்களையும் நன்கு கற்றுணர்ந்தவர். சைவசமயச் சொற்பொழிவுகள் செய்தவர். பாவியற்றுவதிலும் வல்லவராகிய இவர், பசுவந்தனை என்னுஞ் சிவப்பதியில் எழுந்தருளிய கயிலாசநாதப் பெருமான் மீது 'பசுந்தைப்பாமாலை' என்னும் நூலைப் பாடியுள்ளார். நூலைப் பாராட்டிச் சீநிவாச நாயக்கர், செகவீரபாண்டிய கவிராச பண்டிதர், தெற்குவண்டானம் நல்ல குற்றாலம் பிள்ளை, பொய்கைநகர் திருமலையாண்டிக் கவிராயர், நாகநகர் கோபாலசாமி நாயக்கர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" நாரணன் பிரமன் நாடுதற் கரிய
நாதனே செம்பொன்மால் விடைமேல்
வாரணி முலையா ளந்தியோ டெழுந்து
வந்துநின் அருள்புரிந் திடுவாய்
ஆரண மறையோர் மாதவர் தேவர்
அரியசெங் கமலைவெண் கமலை
ஏரண வென்றும் இயைந்துறை பசுந்தை
ஈசனே கயிலைநா யகனே "

என்பது மாலையில் மூதற்பாட்டு.

## ருகூஎ. சங்கரக்குமாருப் புலவர்—த.
(1913)

பாண்டிவள நாட்டில் கழுகுமலையில் தலைக்காப் புலவர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். தந்தையாரிடமும், அட்டாவதானம் இராமசாமியா பிள்ளை என்பவரிடமும் இலக்கண இலக்கியங்கற்றுச் சிறந்த புலவராக விளங்கியிருந்தார். இவர் செய்த பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"திரிபுவனந் தாங்காங்கு தேடினுங்கிட்
டாதுசிவ காசி யின்மா
திரிபுவன மலிநகரந் தாதிருகச்
செவ்வேள்மேல் திகழ்தல் செய்தான்
திரிபுவன யமகமதில் தேர்ச்சியுறும்
கழுகுமலைச் சினிமாலைந்
திரிபுவனச் சிரினருள் நம்மாழ்வார்
கவிராச சிங்கந் தானே."

இவருடைய தந்தையாராகிய தலைக்காப் புலவரைப் பற்றிய செய்தியொன்றுந் தெரியவில்லை.

## ருகூஅ. சங்கரதாசர்—தா.
(1912)

பாண்டிவள நாட்டில் திருமந்திர நகர் என்னும் தூத்துக்குடியில் வாழ்ந்திருந்தவர். இவர், "செல்வ விநாயகர் பதிகம், தண்டபாணி சந்தப்பத்து, இராமச்சந்திரமூர்த்தி பதிகம், முருகன் திருப்புகழ் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

"வேதைபடும்உ யிர்கண்டால் இரக்கங் கொண்டு
வேண்டும் உபகாரமெல்லாம் விரும்பிச் செய்தல்
ஓதையுறு கடல்புடைசூழ் உலகில் தோன்றும்
உத்தமரின் செய்கையென உரைக்கும் வேதம்
பேதையென தரியதுயர் நேரிற்கண்டும்
பேசாமல் நீயிருந்தால் பிழைநிற் கன்றோ
சீதைமணம் முடிப்பதற்குச் சிலையை வாங்கும்
சீராமச் சந்திர னெனுந் திறலு ளானே"

என்பது இராமச்சந்திர மூர்த்தி பதிகத்தில் ஒரு பாட்டு. நாடகாசிரியராகிய சங்கரதாசர் இவரே போலும்.

## ௩௬௬. சங்கரநாராயண சாத்திரி (தண்டலம்)

(20 - நூ.)

தொண்டைவள நாட்டில் தண்டலம் என்னும் ஊரில் கவுணியர் குலத்தில் இராமகிருட்டிண சாத்திரியார் என்பவருக்கு இவர் புதல்வராகத் தோன்றினர். பி. ஏ., பி. எல். வரை கல்வி கற்று உயர் நீதி மன்றத்தில் வழக்கறிஞராகத் தொழில்புரிந்தார். வட மொழியிலும் வல்லவர். இவர், 'போச சரித்திரம் 'என்னும் நாடகத்தை இயற்றியுள்ளார். அந்நாடகம் நானூறு பக்கங்களை யுடையது. இடையிடையே பாடல்களையும் இயற்றிச் சேர்த் திருக்கிறார். பாடல்களிரண்டை அடியிற் காண்க.

புண்ணியவான் இவ்வுலகில் அறத்தை நாடிப்
பொருள்தேடிச் சத்திரத்தைப் பொருந்த வைத்தே
எண்ணிறந்த நாடுகளை அதனுக் காக்கி
ஏழைகளுக் கன்னமிட அதனைக் கொண்டு
விண்ணவரும் விஞ்சையரும் புகழ்ந்து போற்ற
விருந்திட்டு வானதனில் விருப்பத் தோடு
கண்ணியமாய் அதனைப்பன் னுளுங் காக்கக்
கருதிக்கார் யஸ்தர்களை அமைக்கு மாறே.

பண்ணவனிவ் வுலகென்னும் சத்தி ரத்தைப்
பாங்குடனே செய்வித்துக் கருணை யாலே
மண்ணிலுள்ளோர் எல்லோரும் தாம்பி ழைக்க
மருவியொரு வருக்கொருவர் நேய மாக
நண்ணியவோர் தருமத்தைப் பாது காக்க
நரபதியை நியமித்த முறையை அந்தோ
என்னுத அரசர்களின் இயற்கை தன்னை
என்சொல்வேன் தண்டனைநான் யாதி வர்க்கோ.

## ௩௬௭. சங்கரநாராயண சாத்திரி (எட்டையபுரம்)

இவர் 19ஆம் நூற்றாண்டில் எட்டையபுரம் பெருநிலக்கிழா ருடைய அவைக்களத்தில் அவைக்களப்புலவராக விளங்கியிருந் வர். தென்மொழியினும் வடமொழியினும் வல்லவர். வட மொழியில் இருந்த குவலயாநந்தத்தை இவர் தமிழில் மொழி பெயர்த்தார். முகவூர் மீனாட்சி சுந்தரக் கவிராயர் அதனைச் செய்யுளாக இயற்றினர். செய்யுள் மொழிபெயர்ப்பு உரை நடை இரண்டும் அச்சாகி வெளிவந்துள்ளன.

"இந்துவிடத் தைச்சிவன்போ லேகுணங்குற்றத் தினைஞா
னந்தெளிவா னேன்கிரகணம் புரிந்து—முந்தினதைச்
சேகரங்கொண் டேவிளங்கச் செய்துகடை யுற்றதையம்
மாகளத்து ளேயடக்கு வான்"

என்பது குவலயாநந்தப் பாடல்களில் ஒன்று.

## ௩௭௧ சங்கரபாரதி கோசாமியார்—வி. எஸ். (1910)

திருநெல்வேலி மாவட்டத்தில் இறும் மந்திரத் தோப்புக் கிராமம் என்னும் ஊரில் இருந்த இவர் மந்திரத் தோப்பு என்று பெயர் பெற்ற சிவசிந்தை நகர் விசுவநாதர் பேரில் "சிவசிந்தை மாலை" "சிவசிந்தை விசாலாட்சியம்மன் தோத்திரம்" "சிவ சிந்தை கந்தர் கவசம்" முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

"வெறிகொண்ட மெய்ம்மட வார்மைய லிற்றினம் விழ்தலுற்று
வெறிகொண்ட வென்றனக் கேயருளீந் திடு மேநினியே
வெறிகொண்ட வாசுகி யாபரணத்தை மிகவணிந்து
வெறிகொண்ட சோலைச் சிவசிந்தை வாழ்விசு வேசுரனே"

என்பது சிவசிந்தை மாலையில் ஒருபாட்டு.

## ௩௭௨. சங்கரமூர்த்திக் கோனார்—அ. (19 - நூ.)

இவர் பாண்டிவள நாட்டில் அசுவங்குத்தி என்னும் ஊரில் ஆயர் குலத்தில் அரசக்கோனார் என்பவருக்கு அருந்தவப்புதல்வ ராகத் தோன்றினர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலமை பெற்றார். பாகவதநூல் நன்கு கற்றவர்கட்கே விளங்கும் பெற்றியுடையதாய் இருப்பதைக்கண்ட இவர் அதனை அம்மானையாக எல்லோரும் எளிதிற் பொருளறியுமாறு பாடினர்; அந்நூல் "பாகவத அம்மானை" என்னும் பெயரொடு விளங்கு கின்றது.

"கோவர்த் தனகிரியைக் கோபாலன் ஓர்கரத்தால்
தாவிப் பிடுங்கித் தனிக்குடைய தாய்ப்பிடித்தான்
அந்தக் குடைநிழலில் ஆனினமும் அண்டர்களும்
வந்து பிழைக்க மணிவண்ணன் காத்தனனே.

ஏழுநாள் மட்டும்விடா தேமுமுகி லும்பொழிய
ஏழுலகு மெய்க்கவெங்கோன் ஏழுவய திற்காத்தான்
மகவானைப் போற்கறுப்பாய் வந்தமுகி லோரேழும்
மிகவாரிப் பெய்தவன்றன் வேகமென நீங்கியதே''

என்பது கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாய்ப் பிடித்ததைக் கூறுவது.

## ௬எ௩. சங்கரலிங்க நாடார்—ச. சு.

சென்னைமாநகரில் இருந்த இவர் இசைப்புலமை, தமிழ்ப் புலமை முதலியவைகளிற் சிறந்து விளங்கினர். ''தோத்திர மாலை'' என்னும் நூல் ஒன்றை இவர் பாடினர். அம்மாலைப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

''முருகாவென் றெண்ணிமனம் உருகாத நாளில்லை
முன்னின்று தெண்ட னிட்டு
முறையோ வெனத்தினமென் குறையோதித் தமிழ்மாலை
மொழியாத நாளு மில்லை
வருவாய் நினைத்தவரம் தருவாய் எனக்கருதி
வழிபார்த்துக் கண்கள் பூத்து
வாடாத நாளில்லை தேடாத நாளில்லை
வள்ளலுன் மனத றியுமே
ஒருகோடி பிழைசெய் திருந்தாலும் மன்னிக்க
உனையன்றித் தெய்வம் உண்டோ
உலகபரி பாலனக் குமரன்நீ அல்லவோ
உன்அன்பன் நானும் அலவோ
மருவார் கடப்பமலர் வாகனே தருணமிது
மனத்துயர் அகற்ற வருவாய்
மணமார்ந்த சென்னை நகர்க் குமரகோட் டத்துள்வளர்
மயில்வா கனக்க டவுளே.''

## ௬எச. சங்கரலிங்க வன்னியர் (தீவனூர்)
(20 - நூ.)

இவர் திவனூர் என்னும் ஊரில் இருந்தவர். இவர் வன்னியர் பிரதாப மாலை மூலமும் உரையும் என்னும் நூலை இயற்றியுள்ளார். இந்நூல் வன்னியர்களின் சிறப்பைக் கூறுகின்றது. நூலில் இவர் செய்துள்ள வித்தியாகுரு வணக்கப் பாடலை அடியிற் காண்க.

"குருவே அருட்கொழுந் தேதவக் குன்றேநற் கோகுலத்தின்
கருவே பலகலைத் தேன்நந்த தேவே கனந்தருமென்
திருவே அடுந்நாரைந் தேவாக்குமன்பே செழுந்தமிழின்
தருவேநா ராயணச் சற்குரு வேதுணை சந்ததமே"

## ௩எரு. சங்கராநந்த அடிகள்—கோ.
(20 - நூ.)

" விந்த கன்கொற்ற வாளிறை யடிமுடி விமலன்
சித்தி யாம்நெல்லை யம்பிகை யருட்பெறு செல்வன்
முத்தி ராமலிங் கேந்திரன் வழிவரு முனிவன்
மெத்து கோவிலூர்ச் சங்கரா னந்தமே வலனே."

என்று அறிஞர்களாற் பாராட்டப்பெற்ற இவர் கோவிலூர் மடத்தில் அறிவு நூல்களைக் கற்றுணர்ந்தார். பாடல் இயற்றும் வன்மை, நூலுக்கு உரை இயற்றும் வன்மை, மாணவர்க்குக் கல்வி போதிக்கும் வன்மை முதலியன இவரிடம் நன்கு அமைந் திருந்தன. பேளூர்ச் சாந்தலிங்க அடிகள் இயற்றிய வைராக்கிய சதகத் தோத்திரப் பகுதிக்கு இவர் உரையெழுதியிருப்பதோடு, பஞ்சகம், ஆசாரிய சட்கம், நீதிபோதம் என்னுஞ் செய்யுள் நூல் களையும் இயற்றியுள்ளார். இவருடைய நூலுரையைப் பாராட்டிக் காசிவாசி சிவானந்த சுவாமிகள், சுகவனம் சிவப்பிர காசம் பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"எப்பொருள் களுமாய் ஏகமாய் எங்கும்
இலங்கிடும் உருவமாய் மேலோர்
செப்பிடும் பொருளாய்ச் சகமெலாம் படைத்தும்
செய்கையோர் சிறிதுமே யில்லா
அப்பனே ஐயா அரும்பெரும் பொருளே
அடியனை ஆண்டதோர் கோவே
தப்பிலா உன்றன் தண்ணடி பணியும்
தமியனைத் தாங்குவாய் தேவே"

என்பது குருபஞ்சகத்தில் ஒரு பாட்டு.

## ௩எசு. சடகோபாச்சாரியார்—எம். சி.
(20 - நூ.)

திருச்சிராப்பள்ளி சோசப் கல்லூரியில் வடமொழி ஆசிரி யராக இருந்தவர். தமிழ் மொழியினும் வல்லவர். "நாகானந்தம்

என்னும் பெயரோடு வடமொழி நூல் ஒன்றைத் தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார்.

## ௩௭௭. சடாட்சரக் கவிராயர்—வீ. வே.

(1913)

இவர் துறையூரில் இருந்தவர். திருவளர் நல்லூர் அ. பீ. காதர்கான் என்பவர் மீது இவர் "கிள்ளை விடுதூது" என்னும் நூல் ஒன்று இயற்றியிருக்கிறார்.

"நாதலர்சோலைத் திருந் நன்டின்வளர் காதர்கான்
மீதில்யான் கிள்ளை விடுதூது—ஓதுதற்கு
பஞ்ச தருக்கரத்தான் பாதமலர் அன்பினொடு
நெஞ்சகமே வைத்து நிகழ்த்துவேன்—மஞ்சுலவும்
சோலைசெறி செந்தினகர்ச் சுந்தரியாள் தந்ததிருப்
பாலன் முருகன் பதங்காப்பு—நாலமிசை
சிர்த்திதரு பிருமைதின் சிமான் தவத்துதித்த
பார்த்திபர்களாமிரண்டு பாலர்களில்—நேர்த்தியுள்ள
சித்தசனை வெல்லுந் திறலுடைய காதர்கான்
பத்தி நிலையறிந்த பாவையிவள்—வித்தகமாய்."

என்பது கிள்ளைவிடு தூதின் தொடக்கம்.

## ௩௭அ சண்முகக் கவிராயர்—(ஆ)

(1919)

பாண்டிவள நாட்டில் ஆலங்குளம் என்னும் ஊரில் இருந்தவர். இவரைப் பற்றிய செய்தியொன்றும் தெரியவில்லை. நூல்கள் சிலவற்றிற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். கழுகுமலைச் சண்முக மாலை என்னும் நூலுக்குப் பாடிய பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"எழுத்திநொடு சொற்பொருள்யாப் பலங்காரம்
இலக்கியங்கள் எவையும் ஆய்ந்தோர்
வழுத்துபுகழ் சாலேந்தல் வளமையர்தம்
குலத்துவெள்ளை ஆசான்தொண்டன்
பழுத்திடுமுத் தயக்கவிஞன் பாடியசண்
முகமாலை பார்த்தே அச்சில்
விழுத்தகநன் களித்தனனிம் மேதினியின்
மீதினிது விளங்க மாதோ."

## ௩எகூ. சண்முகக் கவிராசர் (தரங்கம்பாடி) (1880)

தரங்கம்பாடியில் இருந்தவர். சேலம் அன்னதானப் பட்டிக் கோபாலசாமி முதலியார் என்பவரும் மாணிக்கம்மாள் என்னும் பெண்மணியும் கேட்டுக்கொண்டதற்கிணங்கிச் "சேடகிரி வாசர் பதிகம்'' என்னும் நூலை இவர் இயற்றினர்.

''திங்களெழில் வதனமுஞ் செங்கமல நயனமும்
நேங்குமுத நிகர நரமும்
திகழ்பத்ம ராகமும் திசைமுகனெ டுலகமும்
சேர்ந்தபந் தனஉ தரமும்
பொங்கெழிலி னுகமும் பூங்கமல மார்பமும்
பொன்னும் பரந்தா மமும்
பூந்துளவி னேசமும் பொலியுமணி கேசமும்
புனை நுதற் பிரகா சமும்
மங்குல்வா கனனமரர் முனிவர்தொழ மூவடிமண்
வாங்கிவின் ேனாங்கு பதமும்
வலயகங் கணகடக கிண்கிணிப் புயமுமொரு
வயிரமுடி யொளியும் எழில்சேர்
சங்குசக் கரகதா கட்ககோ தண்டமொடு
தரிசிக்க என்முன் வருவாய்
தாசரதி வைகுந்த வாசபதி தாசர்துதி
தரிசேட கிரிவா சனே''

என்பது அப்பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௩அ௦. சண்முகசிகாமணிக் கவிராயர் (திருவைகுண்டம்)

பாண்டிவள நாட்டில் திருவைகுண்டத்தில் வாழ்ந்திருந்தவர். இவருடைய மனைவியார் பெயர் சிவகாம சுந்தரி. குமரகுருபர அடிகளுக்கும் குமார கவிகளுக்கும் இவர்கள் பெற்றோர்கள். குமரகுருபர அடிகள் முருகன் திருவருளால் எல்லாக் கலைகலையும் ஓதாதுணர்ந்தார். இளையவராகிய குமாரகவிகளுக்கு இவரே ஆசிரியராக இலக்கண இலக்கியங்களைப் போதித்தார். கவிராயர் என்னுஞ் சிறப்புப்பெயரோடு விளங்கியிருந்த இவர் நூல்கள் இயற்றியதாகத் தெரியவில்லை.

## ௲அக. சண்முகஞ் செட்டியார்—பி. எம்.

இவர் மதுரைமாநகரினர். ஆங்கிலமுந் தமிழும் நன்கு கற்றவர். மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் தேவஸ்தான கமிட்டி மெம்பர்களில் ஒருவர்; மதுரை இராமநாதபுரம் மாவட்டக் கழக உறுப்பினர். இவர் திருப்பரங் குன்றத்தில் எழுந்தருளிய முருகப் பெருமான்மீது "திருப்பரங்கிரிப் பதிற்றுப்பத்தந்தாதி" என்னும் நூலை இயற்றியுள்ளார். மதுரைக் கல்லூரித்தலைமைத் தமிழாசிரியர் சுப்பராமையர், மதுரைத் திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதின வித்துவான் மு. கோவிந்தசாமி ஐயர், ம. கோபாலகிருட்டிண ஐயர், பெரையூர் சோடசாவதானம் மீனாட்சி சுந்தரக் கவிராயர், சண்முகஞ் செட்டியார், பசுமலை நா. ரா. சுப்பிரமணிய சர்மா ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் அளித்துள்ளனர்.

"புண்ணியனே பரங்குன்றம் பொலியவரு
கண்ணியனே புனிதவேள்வி
பண்ணியழி யேன்சிறிதும் பாழுமனக்
குரங்கதுதான் பற்ற விண்டே
எண்ணறுநி வினையிழைத்தேன்என்செய்வேன்
எளியேனிங் கெவ்வா றுய்வேன்
தண்ணளியே சுரந்தடியேன் மடநெஞ்சின்
துகளகலத் தடுத்தாட் கொள்வாய்"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௲அஉ. சண்முகப் பிள்ளை—ஐ

தஞ்சை மாவட்டத்தில் குடவாயில் என்னும் ஊரினராகிய இவர் சி. தியாகராசச் செட்டியாரிடங் கல்விகற்றுத் தமிழ்ப் புலமை பெற்றார். திருக்குடந்தையில் உள்ளூர் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்திருந்தார். கம்பராமாயணச் சொற்பொழிவு செய்வதில் வல்லவராகிய இவர், ஆஞ்சநேயர் தோத்திரப் பதிகம் என்னும் நூலைப் பாடியுள்ளார்.

" நீர்கொண்ட சார்கொண்ட கொண்டலர விந்தமலர்
நிகர்கொண்ட மேனி கொண்ட
நித்யவுயர் சத்வகுண சத்வபர வத்துவெனும்
நெடியமால் அருள்நெறியினால்

சீர்கொண்ட சண்டவிகல் அரியினது சேயெனத்
திகழரியின் வருமன்னவே
செம்பொனுல கம்புவிய ராதியர்க் காதார
நிடநிலைய மான பொருளே
ஏர்கொண்ட வைம்பெரும் பூதமொன் றுமுருவி
யைந்துதிறல் கொண்ட முதலே
இகலுமஞ் ஞானவிருள் ஒழியவெங் கெங்குமொளி
இலகவெழு கின்ற சுடரே
ஆர்கொண்ட நின்மகிமை புகல்வதற் கியாவர்தாம்
அடியவர் இடத்தில் அன்பாய்
ஆஞ்சமய முன்னின்று சாஞ்சலிய நீத்தருளும்
ஆஞ்சனே யக்கட வுளே''

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௩அ௩. சண்முக முதலியார்—பவழை (1890)

இவர் பவழை சோமசுந்தர முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். சுயம்பிரகாச அடிகள் என்னும் பெரியவரை ஆசிரியராகக்கொண்டு அறிவுநூல்களையும் இலக்கண இலக்கிய நூல்களையுங் கற்றுத் தேறினர். திருத்தணிகை முருகக் கடவுள் மீது வெண்பாவந்தாதி என்னும் நூலை இயற்றியிருக்கிறார். சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார் திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளை ஆகியோர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' நானென்ப தற்றவர்கள் நாள்தோறும் போற்றுநினை
யானென் றறிவேன் இறைவனே—வான்றோய்
திருத்தணிகை வாழ்கின்ற தேவ உனை யன்றி
ஒருத்தரையும் வேண்டேன் உணர்''

என்பது நூலின் எட்டாவது பாடல்.

## ௩அ௪ சண்முக முனிவர் (சிதம்பரம்)

இவர் சிதம்பரத்தில் வசித்திருந்தவர். தருமபுர ஆதீனத் திருக்கூட்ட அடியவர்களில் ஒருவர். சிறந்த தமிழ்ப் புலமை படைத்தவர். தருமபுர ஆதீனத்தில் சிவஞான தேசிகரிடம் அருள் பெற்றவர். சிதம்பரத்தில் செந்தமிழ்ச் சங்கம் என்னும்

பெயரோடு சங்கம் ஒன்றை ஏற்படுத்தி நடத்திய இவர் குமர குருபர அடிகள் மீது "பரபோக சுகவாரி பதிகப்பாமாலை" என்னும் நூலைப் பாடியுள்ளார். நூலுக்குத் தருமபுர ஆதீனம் சொக்கலிங்க சுவாமிகள் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். நூலின் முதற்பாட்டை அடியிற் காண்க.

"சீர்மிகுங் கைலாய புரியினில் தோன்றியே
செந்நின்மா வரையி வர்ந்து
திகழுமறு முகவள்ளல் ஆணையால் வெண்ணை நகர்
சேருமெய் கண்ட தேவன்
தார்மிகுஞ் சந்தான கரைமேவு தருமைநகர்
சார்மாசி லாமணி யெனும்
சற்குருக் கடலினில் ஞானவமு துண்டுசிவ
நாள்வெளியில் சஞ்சரித்துக்
கார்மிகுங் காசியெனும் நாட்டினில் பெய்தருட்
கான்சாலி விளைவித் திடும்
கருணைமிகு மேகமே அத்துவித சித்தாந்தக்
காட்சியை அளித்தா ளுவாய்
பார்மிகும் பரசமய இருளழித் தெழுசைவ
பானுவே பனசை நகரின்
பதியாகு குமரகுரு பரஞான சிங்கமே
பரபோக சுகவா ரியே"

## ௩௫. சண்முகதாச பிள்ளை—ச.
(20 - நா.)

பாண்டிவள நாட்டில் கோபால சமுத்திரம் என்னும் ஊரில் இருந்தவர். தமிழ்நூல்களைத் தக்க அறிஞர்கள்பால் ஓதியுணர்ந்த இவர், திருவேங்கட நாதன் கோவில் பெருமாள் பதிகம், மயேந்திரகிரி நம்பி பதிகம் முதலியன இயற்றியுள்ளார். பெருமாள் பதிகம் ஒன்றை அடியிற் காண்க:

"வேதா கமங்களும் உனைக்கருணை யோனென
விளம்புமொழி யொன்றிருந்து
மேதினி முழுக்கத் தழைக்கச் செயுஞ்சித்தன்
மிளிரச் செயாமை யறமோ
பாதார விந்தத்தி னுலொரு சிராவணம்
பாவையா கிடவில்லை யோ
பவியேன் இன்னுமொரு தாய்வயிற் றுதியாத
படியருள் செய்ய வேண்டும்

கோதாய சோனேமழை யால்வருந் தாதபடி
கோவர்த் தனக்கி ரியையோர்
குடையாவெடுத்துப் பிடித்துமுன் னுளெழில்
கோகுலம் எலாம்பு ரந்த
நாதா பிருந்தையைத் திருமவுலி யிற்புனேயும்
நம்பனே நாமோ தரா
நான்குமறை ஒங்குதிரு வேங்கடப் பதிக்கோவில்
நாராயணக்கடவு ளே''

## ௫அ௬. சண்முகதாசர் (மாயூரம்) (1910)

இவர் சோழவள நாட்டில் கௌரி மாயூரத்தில் இருந்தவர். இவருடைய பெயர் சிங்காரவேலுப் பிள்ளை எனவும் வழங்கியது. இவர் திரிசிரபுரம் இயற்றமிழ்ப் போதகாசிரியர் வெ. நாராயண சாமிப் பிள்ளை என்பவரிடம் இலக்கண இலக்கியங் கற்றுர். "ஞானதட்சணு மூர்த்தி தோத்திரப் பதிகம்'' என்னும் பதிகத்தை இவர் பாடியுள்ளார்.

'' சனகாதி நால்வர்கொள அறமாதி பொருளெலாம்
தந்தருள வந்த குருவே
சங்கரகுரு வேயுலகமங்களகுரு வேமேத
தட்சணு மூர்த்த குருவே
தனிஞான மறைதேட நின்றகுரு வேசச்சி
தாநந்த மான குருவே
சாசுவத மானசுக மோனநிலை காட்டவே
தருநிழல் அமர்ந்த குருவே
மனமாதி கரணங்கள் நுழையாத நிலையிலொளி
வடிவாய் நிறைந்த குருவே
மந்த்ரகுரு வேகலைகள் தந்தகுரு வேயென்
மனநிற் சிறைந்த குருவே
வனச மலர்ச் சரணமதில் அனுதினமு நினைவுதர
வந்தருளு மோன குருவே
வள்ளவாய் மலரோங்கு வெள்ளிமலை விடைதாங்கு
வள்ளல்சிவ ஞான குருவே ''

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு. அரிகேசவ நல்லூர், முத்துச் சுப்பையர், சீநிவாசசர்மா, இராமநாத ஐயர் சங்கர நயினர் கோயில் முத்தையாபிள்ளை, நெடுமருதூர் இராமலிங்க உடை

யார், மாயூரம் சீநிவாசலு நாயுடு என்போர் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## ருஅஎ. சண்முகநாயகர்—பு.

(1911)

இவர் புதுச்சேரியில் புருடோத்தம நாயகர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர், சென்னைமா நகரில் இருந்த புருடோத்தம செட்டியார் என்பவரிடங் கல்வி கற்றவர். இவர் 'மாரியம்மன் பதிகம்' என்னும் நூல் ஒன்று இயற்றியுள்ளார். இம் மாரியம்மை திருவதிந்திர புரத்திற் கடுத்த குணமங் கலம் என்னும் ஊரில் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியவள். நூலின் இரண்டாவது பாட்டை அடியிற் காண்க:

*" ஆதிமறை தேடவறி யாதசுக வாரியாய்*
*அமரர்தொழும் அதிகா ரியாய்*
*ஐம்பூத கருவிகர ணுதியிரு வினைகளால்*
*அறியப்படாத பொருளாய்ச்*
*சாதிமுறை எண்பத்து நான்குநா ருயிரம்*
*தழைத்தருள் உயிர்க்கன் னையாய்ச்*
*சர்வநிட் களநித்ய தத்வபரா சக்தியாய்த்*
*தற்போத சிற்சத் தியாய்*
*பாதிமதி சடையணிந் தருள்பரம ரொடுநடம்*
*பயிலுகா ரணிபூ ரணி*
*பார்வதி மகேஸ்வரி அகோரிநிரியம்பகி*
*பைரவி எனக்காத் திடாய்*
*சீதரன் தங்கைய பிராமிவலு நேமியே*
*செழியகுண மங்கல மதில்*
*திகழுமென் னம்மையக மகிழ்நடம் புரியம்மை*
*சீமாரியம்மை யுமையே."*

## ருஅஅ. சண்முகபுராணிகர் (திருக்கழுக்குன்றம்)

(20 - நூ.)

தொண்டைவள நாட்டில் திருக்கழுக்குன்றத்தில் இருந்தவர். மாணவர் பலருக்குப்பாடஞ் சொல்லுதலோடு புராணச்சொற் பொழிவையும், இவர் மிகுதியாகச் செய்துகொண்டிருந்த படியால், இவருடைய பெயர் சண்முக புராணிகர் என்று வழங்கியது.

இவர் சித்தி விநாயகர் பஞ்சரத்தினம், குருநாதன் பஞ்சரத்தினத் திருப்புகழ், குருநாதன் ஸ்தோத்திரம், குருநாதன் கும்மி, குருநாதன் சோபனம், இடும்பன் ஸ்தோத்திரம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். குருநாதன் ஸ்தோத்திரத்தில் ஒரு பாட்டு :

" ஆலால முண்டசிவ னுநிவைகுண் டமால்
அம்புயக் கடவு ளன்ன
அமரரும் இந்திராதி ஞானமுனி வேணிமுனி
அகிலமான் பூதேவர்கள்
மாலாகி நின்னடிப் பரவிடா ரிஸ்லேகான்
மந்திரப் புலமை மிக்கோர்
மனமாகி நின்றுநீ பேருருவை தந்தருள்
மானிலம் மகிமை கொண்டாய்
நாலாறு சுருதிகள் முறைமையால் தேடரிய
நாதனே வேத முடிவே
நானென் றகந்தையொழி புனிதரிட மெய்ஞ்ஞான
நடமயில் வீர மஞ்ஞை
கோலமார் மென்சோலை மணியெயில் கோயிலின்
கருணை வடி வேல்கரத்தாய்
கொடியனுந் தேரருள் வாரிவா சணிநகர்
குமர குரு ஞானபரனே "

## ௫அ௯. சண்முகப் பத்தர் (திருவையாறு)

இவர் தஞ்சை மாவட்டத்தில் திருவையாற்றில் இருந்தவர். இவர் ஷை திருவையாற்றில் எழுந்தருளியிருந்த சுடுகாட்டுச் சுவாமிகள் என்னும் சதாநந்த சாமிமேல், "சதாநந்த சுவாமிகள் பதிகம்" என்னும் நூலைப் பாடியுள்ளார். மேற்படி நூலுக்கு ரா. சாமிநாத பிள்ளை சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

" திருவளர் மாலும் விரிஞ்சனும் அரியும்
சிந்தையில் கருதிடுந் தூய
அருமறைப் பொருளை மயலற விரைவாய்
அன்புடன் நல்கியே பொல்லா
இருள்நிறை மனத்தின் விருத்திகள் ஒழித்துன்
இணையடி நன்னிலே சேர்ப்பாய்
மருமலர்ச் சோலை சூழும்ஐ யாற்றில்
வாழ்சதா நந்தசற் குருவே"

என்பது பதிகத்தின் முதற் பாட்டு.

## ருகூ0. சண்முக முதலியார்—க.
(1914)

இவர் கஞ்சிபுரம் என்னும் ஊரில் இருந்தவர். இலக்கியக் கல்வியை நன்குகற்ற இவர் திருச்செங்னெற்குணம் என்னும் ஊரில் திருக்கோயில் கொண்டுள்ள சுப்பிரமணியக் கடவுள்மீது "சிவசுப்பிரமணியர் பதிகம்" என்னும் பதிகத்தைப் பாடியுள்ளார்.

" வாடாத பெருந்தவத்தோர் உளத்தில் தோன்றும்
வளரொளியே ஒளிக்கொளியாய் வயங்கும் நின்தாள்
சூடாத சென்னியர்பால் ஒருக்கா லேனும்
தோன்றாத சுடர்விளக்கே தொழுது நின்னைக்
கூடாத புல்லியரைக் கூடி நாளும்
குறைவுற்று மிகவலைந்த கொடிய நாயேன்
தேடாத திரவியமாய் எனக்கு வாய்த்த
திருச்சென்னெற் குணமுறையுந் தேவ தேவே "

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## ருகூக. சண்முகாச் சாரியார்—வே.

இவர் தொண்டை மண்டலத்தில் திருமுருகன் திருப்பதியாகிய திருப்போரூரில் இருந்தவர். தேர்வேலை செய்யுந் தொழிலுடையவர். அறிவு நூல், இலக்கிய நூல் முதலியவைகளையுங் கற்றுச் சிறந்த அறிவாளியாகத் திகழ்ந்தார். இவருடைய தந்தையார் பெயர் வேலாயுதாச்சாரியார். இவர் சிறந்த தமிழ்ப் புலவர். இதனால் இவருடைய பெயர் தண்டமிழ் வேலாயுதாச் சாரியார் என்றே வழங்கியது. இவர் அறிவுநூல்களை ஓதியுணர்ந்தது சென்னை சிந்தாத்திரிப் பேட்டையில் இருந்த சுப்பராய அடிகள் என்னும் பெரியாரிடத்திலாகும். இவர் "தன்மய சமாதிநிலை" என்னும் செய்யுள் நூல் நூற்றெட்டுச் செய்யுள் கொண்டதைப் பாடியுள்ளார்.

" கருமத்தை நல்வழிச் செய்கசெய் தாலுமே
கவனமுன் னல்ச மாதி
கன்னியை விதியினால் வேட்கவேட் டாலுமே
கவனமுன் னல்ச மாதி

பெரியவ ரைப்பணிக பணிந்தாலும் அவர்மொழி
பிரமமறி தல்ச மாதி
பெற்றதாய் தந்தையைப் போற்றுக போற்றினும்
போதநிலை உறல்ச மாதி
குருசேவை நன்றதாய்ச் செய்கசெய் தாலுமே
குரு நூல் உணல்ச மாதி
கோதற்ற நூலாய்க ஆயினும் தெளிபொருள்
கொண்டறிதலேச மாதி
திரிமூர்த்தி யவரையே நோக்கநோக் குனுமே
செம்பொருள் உணல்ச மாதி
தெரிதக்க யாவையும் தேர்கதேர்ந் தாலுமே
திரிபுரு மைச மாதி
தருமத்தை அடைவாகச் செய்கசெய் தாலுமே
தற்பதம் உணல்ச மாதி
சன்மய சுயஞ்சோதி சின்மய சுகானுபவ
நன்மய சமாதி நிலையே ''

என்பது நூலில் ஒரு பாட்டு. மற்றும் இவர், ''சின்மயச் சிங்கி'' ''சொரூப சுந்தரம்'' ''அமுதாபிராமி,' ''சற்குரு தோத்திரம்'' ''அறிவு விளக்கம்'' ''உணர்வின்ப உந்தியார்'' ''புதைபொருள் அஞ்சனம்'' ''சதோதய சாரதை'' ''அருங்கேள்வி'' ''அத்துவிதாநந்த விளக்கம்'' என்னும் நூல்களையும் வெளியிட்டார் என்று தெரிகிறது.

## ௩௯௨. சண்முகாநந்த அடிகள்—(வேளாளர்காணி)

இவர் சோழவள நாட்டில் இந்நாளிலே வேளாங்கண்ணி எனவழங்கும் வேளாளர் காணியிலே சைவவேளாளர் குடியிலே பிறந்தவர். கல்வி அறிவு ஒழுக்கம் முதலியவைகளிற் சிறந்தவராய் இல்லறத்தை நல்லறமாகக் கொண்டு ஒழுகினர். பிறகு இல்லறத்திலே வெறுப்புத் தோன்ற இல்லறத்தைத் துறந்து பாண்டிவள நாட்டிலே உள்ள சுருளிமலைக்குச் சென்றார். அங்கிருந்த சிவப்பிரகாச அடிகள் என்னும் பெரியார்பால் அருளுரை பெற்றார். மெய்யறிவு நூல்களைப் பயின்று மெய்யுணர்வையும் நன்கு பெற்றார். காலக் கணிதம், மருத்துவம், ஆரூடம் முதலியவைகளினும் வல்லவர். சோழவள நாட்டிலே சாம்பவனோடை என்னும் ஊரில் திருமடம் ஒன்று அமைத்துக் கொண்டு அம்மடத்தில் பலநாள் தங்கியிருந்தார். இலக்கியப்

பயிற்சியிலும் வல்லவராகிய இவர் "திருக்காட்டுக் கோயில் தோத்திரப் பாமாலை" என்னும் நூலை இயற்றியுள்ளார்.

"என்னை யின்ற பரம்பொருளே எனையாட் கொள்ளும் எம்மானே
முன்னை முளைத்த முழுமுதலே முதல்வாவேத முடியோனே
வன்ன இமய மலைமகளை வாமந் துடைய வரக்குன்றே
துன்னுந் திருக்காட் டுக்கோயில் துரியா என்னை ஆள்வாயே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ருகரு சதாசிவம் பிள்ளை—கு. க.

(20 - நூ.)

"...............
என்னுயிர்த் தோழன் இயற்றமிழ்ப் புலவன்
துன்னிய மேகச் சொற்பொழி வாளன்
விம்மிய நலத்தின் அம்மனூர்க் குரிசில்
நிலவின் கதிரென நிலவிய புகழினன்
குலவிய ஒழுக்கம் குடிப்பிறப் பொன்றிய
புலவர் மரபினில் பொள்ளா மணியாய்
சதாசிவ பக்தியில் சார்ந்த
சதாசிவன் என்னுஞ் சற்குணன்......"

என்று அறிஞர்களாற் பாராட்டப் பெற்ற இவர் தஞ்சை மாவட்டத்தில் அம்மனூர் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தார். "தமிழ்ப் பூங்கொத்து இரண்டு பாகம்" "உண்மை நீதித் துண்டுகள்" முதலிய நூல்களை இவர் எழுதியுள்ளார்.

"கல்வியே வாழ்வின் கனியெனக் காட்டி
நல்வினை நடாத்திய நற்றவந் தந்தாய்
அன்னு மலையெனும் புண்ணியப் புலவ
செந்தமிழ் முதியோர் சிந்தனைத் தொகுப்பின்
நீதிக ளறுபான் நிலைஇய கோவைநின்
பாதபங் கயத்தில் பதித்தனன் அதனை
உரிமையிற் கொள்கநின் உதவியிஃ தெனவே."

என்பது நூலின் உரிமையுரைப் பாடல்.

## ருகச. சதாநந்த அடிகள் (நன்னிலம்)

சோழவள நாட்டில் நன்னிலம் என்னும் ஊரில் இருந்தவர். வேதாந்த நூல்களையும் இலக்கண இலக்கியங்களையும்

நன்குணர்ந்து புலமைநலந் திகழப்பெற்றவர். கைவல்ய நவநீதம் என்னும் வேதாந்த மெய்யறிவு நூலை இயற்றிய தாண்டவராய அடிகள் என்னும் பெரியாருடைய வரலாற்றை இவர் செய்யுள் வடிவமாக இயற்றியுள்ளார். வேறு நூல் இயற்றியிருப்பதாகத் தெரியவில்லை. மேற்படி தாண்டவராய அடிகளின் வரலாறு தஞ்சை பாலையஞான தேசிகர் படத்தலைவர் தவத்திரு. மகா. கோவிந்தசாமி அடிகள் அவர்களால் மிகுமுயற்சியின் மீது கண்டு பிடித்து வெளியிடப் பெற்றுள்ளது.

"கங்கைநீர் முதலாய்த் துறைந்துமாட் சியதாய்க்
கவினுறுங் கடல்புடை சூழ்ந்த
துங்கமாம் புவியில் மதுவனம் என்னும்
துகளிலா நன்னில நகரில்
தங்கவந் துதித்த தாண்டவ ராயத்
தவத்தவன் சரிதமின் றுரைக்கப்
புங்கவன் முதல்வன் கணபதி மலர்த்தாள்
போற்றியஞ் சலிபுரிந் திடுவாம்"

என்பது தாண்டவராய அடிகளின் வரலாற்றுக் காப்புச் செய்யுள்.

## ௩கூ௫. சதாநந்தம் அம்மாள்—ஞா. ப.

இவ்வம்மையார் திருநெல்வேலியில் தோன்றியவர். எழுத்து வன்மை நன்கு அமையப்பெற்ற இவர் சுதாநிதி என்னும் திங்களிதழ் ஒன்றைச் சேலத்தில் இருந்து வெளியிட்டார். சுந்தரகாந்தம், சாரதா, திலகவதனி நான்கு பாகங்கள். முதலிய நவீனங்களையும் எழுதி வெளிப்படுத்தியுள்ளார்.

## ௩கூசு. சந்தனம் பிள்ளை—ஆ.

இவர் மதுரை மாநகரில் சிறந்த தமிழ்ப் புலவராக விளங்கியிருந்தவர். மனுமயன் செய்த நூலின் வழியே, மனையடி சாஸ்திரம் அல்லது சிற்ப நூற் பொக்கிஷம் என்னும் நூலை இயற்றியுள்ளார். அந்நூல் 259 பாடல்களையுடையது. வீடு கட்டுதற்குரிய இலக்கணங்கள் முழுவதையுங் கூறுவது. இஃவரும் பாடல் வீடு கட்டுவதற்கு உதவாதமரங்களைப் பற்றிக் கூறுகிறது.

" அத்தியும் ஆறும் இச்சி அரசுடன் இலவு நாலும்
நந்திய புரசு குச்சம் நவின்றிடும் இலந்தை பிலி
வித்தகம் மகிழுங் கூறும் விளாவுடன் இவைக ளெல்லாம்
சித்திஇல்லஞ் சாலே கட்டச் செல்வமுங் குன்றுந் தானே."

கூடலிங்கம் பிள்ளை என்பவர் இவருடைய புதல்வர். இவருஞ் சிறந்த அறிஞர். மதுரையில் புத்தகக் கடையொன்று வைத்துப் புத்தக வாணிகஞ் செய்து கொண்டிருந்ததோடு நூல்களியற்றும் பணியும் புரிந்தார். இவரால் இயற்றப்பட்ட நூல்கள் அறுபத்தொருவருடப் பஞ்சாங்கம் சோதிடப் பேரகராதி, மங்கம்மாள், மதுரைக்கரசி முதலியன.

## ரு௬எ. சந்திரசேகரக் குருக்கள்— சோ.

(19 - நூ.)

ஈழவள நாட்டினர். இவருடைய தந்தையார் பெயர் சோம சுந்தரக் குருக்கள். சோமசுந்தரக் குருக்கள் சித்தாந்த பண்டிதர். சந்திரசேகரக் குருக்கள் தம்முடைய தந்தையாரிடத்தில் சித்தாந்த நூல்களைப் பயின்றதோடு பீதாம்பரப் புலவரிடம் தமிழும், சங்கர பண்டிதரிடத்தில் வடமொழியுங் கற்றுக்கொண்டார். நீர்வேலி வாய்க்கால் தரவை பிள்ளையார் கோயிலுக்குத் தலைவராக இருந்தார். தம்முடைய ஆசிரியர் இயற்றிய மறைசைக் கலம்பகத்திற்கு ஆறு பாடல்களாற் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். ஒரு பாடலை அடியிற் காண்க:

" பீதாம்பரப்பெயரில் பேருலகு
புகழ்திருவின் பிரிய னோடு
பீதாம்பரப்பெயரில் பெருந்தமிழோ
டுவரியுண்ட பெருமான் நாணப்
பீதாம்பரத்திலங்கிப் பெருந்தமிழோ
டிங்கிலிசுப் பெருநீர் உண்ட
பீதாம்பரப்புலவன் பெய்யுமறை
எனத்தானம் பிறங்குங்கையான்."

## ரு௬அ. சந்திரசேகர நாயகர்—ந.

திருத்தில்லைக்கு அண்மையில் உள்ள கலியமலை என்னும் ஊரினர். இவர் திருவேங்கடமும் மணிக்கோவை என்னும் நூல்

பாடியுள்ளார். புவனகிரி அழகிய மணவாள ராமானுச ஏகாங்கிச் சுவாமிகள் முதலியோர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" அஞ்சுந் திறலன் தசமுகன் மாய்கை அழிந்துகவே
மிஞ்சும் பகழியைக் கோத்தவ னெங்கோன் மிலைந்ததுமாய்
விஞ்சும் பொழிற்றிரு வேங்கட னிற்க விதம்பலவாய்
அஞ்சும் பகழிவந் தென்செயுங் காமநிற் காற்றுவனே"

என்பது கோவையில் ஒரு பாட்டு.

## ருகூகூ. சந்திரசேகர படையாட்சி—ந.

## (1910)

இவர் சோழவள நாட்டில் கலியமலை என்னும் ஊரில் நல்ல தம்பிப் படையாட்சி என்பவருக்குப் புதல்வராகத் தோன்றி ஐவநல்லூர் பி. சீநிவாசய்யர் என்பவருக்கு மாணவராகிக் கல்வி கற்று அறிவு நலம்பெற்றுத் திகழ்ந்தார். கலியமலை மாரியம்மை பேரில் "மாரியம்மன் தோத்திரம்" என்னும் நூலைப் பாடியுள்ளார். இவருடைய ஆசிரியராகிய சீநிவாச ஐயர், பாலசுப்பிரமணிய ஐயர் என்போர் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" அருமறை முதற்பல் லாகம நாலும்
அரவினில் நடித்தவான் முகிலும்
விரிமடல் அலரின் ஆசனத் துறையும்
வியனுறு நான்முகத் தேவும்
தெருளுறக் காணுந் தேவனுக் கியைந்த
தெரிவையே ஞானியர் போற்றும்
மருளுறு மனத்தர் வாழ்தரு கலிய
மலையமர் மாரியாம் உமையே"

என்பது மாரியம்மை தோத்திரத்தில் ஒரு பாட்டு.

## சOO. சபாபதிச் செட்டியார்—சி.

## (1916)

சோழவள நாட்டில் பூவாளூரில் சிவசிதம்பரச் செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். உறையூர் சித்தாந்த சைவப் பிரசாரகர் தே. பெரியசாமிப் பிள்ளையிடங் கல்வி கற்றவர்.

பூவாளூர் சைவசித்தாந்த சங்கத்தில் பணி செய்திருந்தவர். இவர் புள்ளிருக்கு வேளூர் முத்துக்குமாரசாமி பதிகம் பாடியுள்ளார்.

" பூமேவு பூரணசந் திரோதயமாப்
பொலிந்திலகும் ஆறுமுகமும்
பொற்பங் கயம்பன் னிரண்டலர்ந் தெனவருள்
பொதிந்தொழுகு நயனங்களும்
தூமேவு சொற்களால் தோத்திரிப் போர்வினை
தொலைக்கமொழி அமுத வாக்கும்
தோய்தமிழ்ப் பாழு வகைக்கெளி திரங்குகுழை
தூங்குமி ராறு செவியும்
மாமேவு வன்கடம் பார்மாலை புரளுமலை
மானுமுந் நாற்றோள் களும்
வயங்கவெள் ளனமயில் மிதின்முச் சத்தியுடன்
மனமகிழ வந்தருளு வைகொல்
மூமேவு மாடமலி புள்ளிருக் கும்வேளூர்
மோனமெய்ஞ் ஞான வடிவே
முத்தரிட மார்தையல் புத்ரனென வந்தருள்
முத்துக்குமார குருவே "

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு. தருமபுரம் சொக்கலிங்க சுவாமிகள், பூவை கலியாணசுந்தர யதிந்திரர், தே. பெரியசாமிப் பிள்ளை முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## சoக. சபாபதி முதலியார்—கோ.

மகாபாரதத்தை இசைப் பாடலாகப் பாடிய முத்து மக் கவிராயர் என்பவருடைய தமையனார் புதல்வராகிய இவர், இராம நாதபுரம் பொன்னுச்சாமித் தேவர் அவர்கள் கட்டளைப்படி தனிப்பாடல்களைத் திரட்டி அச்சிற் பதிப்பித்ததைக் குறித்துப் பாடிய பாடலின் ஒரு பகுதியை அடியிற் காண்க. பாடல் சிதை வுடையது.

" தலைமைபெறு சைவராஞ் சிவஞான தேவர்
தகுராம நாத புரநல்
சமத்தானம் அதனுக்கு உயர்பரம சிவனடி
தனக்குமா னேசர் வழுதி
தானென்ன முத்தமிழ்ப் பைங்கூழ் தழைத்திடச்
சந்ததம் பொன்மாரி பெய்
தகைமையத னுற்பொன்னுச் சாமிதே வப்பெயர்கொள்
தனுமாரர் புகன்ற அளவில்

கலைகளுறை தில்லையம் பூர்ச் சந்திர சேகர
கவிராச பண்டிதரும் வின்
காஞ்சிமா நகர்மேவும் உபிதகன வித்துவான்
கச்சபா லயரும் அவர்தம்
கருத்தின் படிக்குச்செய் திருவோ மெனவக்
கனங்கங் கனங் கட்டியே
கனேகட லிடைப்பல விடங்களிற் சிதறிவெகு
காலமுன் விழ்ந்திருந்த
................................................''

## சா௦உ. சமாதானம் தானியேல் பிள்ளை—ஞா. (1876)

தஞ்சைமா நகரில் தோன்றியவர். செவலைப் பொறைச் சின்னச்சாமிக் கவிராசபண்டிதர் என்னும் அறிஞரிடம் கல்வி கற்றுப் புலமை பெற்ற இவர் பெரியமெட்டுச் சர்ச்மிஷன் பாடசாலையில் தலைமையாசிரியராக அமர்ந்திருந்திருந்தார். தம்முடைய ஆசிரியர் இயற்றிய கடவுள் மாலை என்னும் நூலுக்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். நூல்கள் சிலவும் எழுதியுள்ளார்.

'' சாற்றருங் கலைவலோன் தரும குணத்தவன்
பரனடி யவருமைப் பரியிதய ந்திகழ்
வரமிகு புனிதன் சென்னை மாபதி
வதியும் பூமான் நல்ல தம்பிவேள்
புதல்வன் ஓங்கும் புன்னியன் குரிசில்
பொன்னுச் சாமிப் பிள்ளை போத
நன்னய முயற்சிகள் நலமுடன் உஞற்றிச்
சாலி வாகன சகாப்தம் பன்னேழ்
நாற்றுந் தொண்ணூற் றெட்டி னேர்தமிழ்
யுவாப்தங் கும்பமா மதியினில்
அவைமுனம் புகழுடன் அரங்கேற் றினனே''

இது சிறப்புப்பாயிரத்தின் இறுதிப்பகுதி.

## சா௦௩. சயிலானிபக்கீர்லெப்பை ஆலிம்சாகிபு

திருநெல்வேலி மாவட்டத்தில் பொட்டல் புத்தூரையடுத்த கிருட்டிணபுரம் என்னும் இரவண சமுத்திரத்தில் வசித்திருந்

தவர். இவர் இயாசெய்திமாலை, இறசூல்முனசாத்துமாலை, முகியிதின் அந்தாதிமாலை, இறிபாயிமாலை, நாகைமணிமாலை முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

" தஞ்சைமா நகர்க்கு வேந்தன்
 தனக்குறும் பிணியால் வாடிக்
கஞ்சமென் பதத்தில் தாழ்ந்து
 கருத்துடன் புகழ்ந்து கேட்ப
இன்சொல்லால் முஅவ்வி தந்தி
 ரண்டினை யோதி யோதித்
துஞ்சறந் துன்பம் போக்கும்
 துய்யசீர் கவ்தென் பிரே "

என்பது நாகைமணி மாலையில் ஒரு பாட்டு.

## சஂசு. சரவணக் கவிராசர்
## (19 - நூ.)

இவர் வாழ்ந்திருந்த இடம் விளங்கவில்லை. ஏறக்குறைய எண்பதாண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தவர் 'அருணேசர் மாலை' என்னும் நூலுக்கு இவர்,

" தெக்கண திசையில் பொதியமா முனிவன்
 செனித்தபின் னுள்கழிந் ததன்பின்
சிதேகமா நாடிக் கொண்டநல் லாறு
 முகனெனுஞ் செட்டிசெய் தவத்தால்
தக்கபுத் திரனும் மதுரைமுத் தெனும்பேர்
 தங்கிய கற்பகந் தன்னைத்
தன்மக னுகக் கருதிச்செந் தமிழ்க்குத்
 தரணியில் இவனலால் வேறு
மிக்கநல் வித்வ சனரிலை யென்ன
 விட்டபின் குணகடல் குமரி
வேங்கடம் குடகம் என்னும்நால் திசையும்
 வென்றதன் னுவகைமேல் பொங்கி
அக்கினிமலையென் னப்பன்மேல் வெண்பா
 மாலையொன் ருக்கியே அணிந்தான்
அவன்பிதா பிதாவாம் அவன்குரு குருவாம்
 யாவரிப் புகழ்பெறு வாரே "

என்னும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்.

## சு௦ரு. சரவணப் பிள்ளை

(19 நூ.)

திருக்குருகூர் ஞான சித்தர் காலத்தில் வாழ்ந்திருந்த ஒரு புலவர். ஞானசித்தருடைய தொண்டர்கள் சிலர் ஞானசித்தருடைய பாடல்களைத் தேவாரம் என்னும் பெயரோடு வெளியிட்டனர். இவ்வாறு வெளியிட்டதற்கும் ஞானசித்தருக்கும் யாதுந் தொடர்பின்று. ஆயினும் சரவணப் பிள்ளையாகிய இவர் ஞான சித்தருடைய நோக்கப்படி தான், அப்பாடல்கள் தேவாரம் என்னும் பெயரோடு வெளியிட்டிருக்கக்கூடும் என்று எண்ணியவராய் ஞானசித்தரைப் பலவாறு இகழ்ந்து பேசிக்கொண்டு திரிந்தார். இத்தீவினையினால் இவருக்குக் கடுமையான சுரநோய் உண்டாகியது. அந்நோயினால் இவர் மிகுந்த தொல்லைக்கு உள்ளானார். சிலர் ஞானசித்தருடைய பெருமையை இவருக்குக்கூறி அவரைப் பணிந்து போற்றினால் காய்ச்சல் நோய் நீங்கிவிடும் என்று கழறினர். இவரும் அவ்வாறே போற்றி வழிபட்டார். காய்ச்சல் நோய் விரைவில் ஒழிந்தது. அதனால் மிகுந்த களிப் படைந்த இவர்,

> " பூவின்மிசைப் பரனருளால் அணிமாதி சித்தி
> பொருந்திவினை யாடிமெய்ச் சித்தர்புகழ் வளர்க்கும்
> நாவில்சித்த சபைக்கதிபன் பொருணைநதி ஒழுகும்
> தமிழ்நாட்டுக் குருகைநகர் தழைக்கஅவ தரித்தோன்
> தேவர்பொய்யா மொழிப்படியுண் டாகவே துறந்தோன்
> தீப்பிணியாம் இருட்படலம் சிதையவரு மருந்தாம்
> மேவுமொளி பரப்புறுமார்த்தாண்டனென அடர்ந்த
> வெப்பநோய் அப்பாலே கப்புக்லாய் நின்றேன் "

என்பது முதலிய பாடல்களால் பரவிப் புகழ்ந்து சித்தருடைய அடியவரானார். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை.

## சு௦சு. சரவணப் பிள்ளை (பழமத்தூர்)

இவருடைய ஊர் பழமத்தூர். காஞ்சிபுரத்தில் இருந்த ஆ. வி. சுப்பராயபிள்ளை என்பவரிடம் இவர் கல்வி கற்றார். திருத்தில்லைக் கற்பக விநாயகர் பஞ்சரத்தினம், தண்டாயுதபாணி

பஞ்சரத்தினம் முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். தண்டாயுதபாணி - பஞ்சரத்தினப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

" கண்ணூர் நுதற்கடவுள் அருளென்ன வருகந்த
காங்கேய குமரே சனே
காருண்ய சாகரா உமைமுலைப் பாலுண்டு
கவிமழை பொழிந்த முகிலே
எண்ணூர்கள் சிங்கமே நின்புகழை அடியேன்
இசைத்திடுதல் வசமா குமோ ?
என்றனக் குற்றதுணை நீயலா தாருளர்நின்
இதயமீ தறியா ததோ
பண்ணூர் மொழிச்சியர்கள் கண்ணூர்வலைத்தலைப்
பரதவித் திடல்நீ தியோ ?
பன்னவரும் மன்னவரும் விண்ணவரும் நன்னவரு
பதமலரை என்னை வருவாய்
தண்ணூர் மதிச்சடா தரனையிரு முனிவர்பணி
தருதில்லை யம்பதியில் வாழ்
தண்டார் அரக்கனுடல் திண்டாட அயிலைவிடு
தண்டாயு தக்கடவுளே "

## சஎ. சரவணப் பிள்ளை (சேலம்)
### (20 - நூ.)

சேலங் கல்லூரியில் தமிழாசிரியராதத் தொழில் புரிந்தவர். பாண்டிவளநாட்டில் பள்ளத்தூரில் திருக்கோவில் கொண்டுள்ள சொக்கலிங்கேசர் மீதும் மீனாட்சியம்மை மீதும் "சொக்கலிங்கேசர் பதிகம், மீனாட்சியம்மை பதிகம்" என்னும் பதிகங்களை இவர் இயற்றியுள்ளார். வேறுசில இடங்களிலும் தமிழாசிரியராகப் பணி புரிந்திருந்தார்.

" பூதல வாழ்வை நிலையென நாடிப்
பூவையர் மையலால் வாடிப்
பொருளினைக் கோடி அளவையில் தேடிப்
புண்ணிய நெறியிழைத் தோடித்
தீதுறும் உலோபச் சிறுமையே மூடித்
தேகமே உயிரென வாடித்
திரிபுமிச் சிறியேன் நின்னருள் வாழ்வைச்
சேர்ந்தினி திருக்குமா றருள்வாய்

காதலோ டடைந்தார்க் குற்றநற் றுணையே
காமவா ரிதிக்கொரு புணையே
கன்னுதற் பரமர்க் கினித்திடுங் கரும்பே
கருதுநெஞ் சகமலர்ச் சுரும்பே
சீதளத் தென்றற் கினியநல் வாசம்
சேர்க்குநந் தனவனஞ் சூழும்
திருவளர் பள்ளத் தூரமர்ந் தருளும்
தேவிமீ னுட்சிநா யகியே ''

என்பது மீனுட்சியம்மை பதிகத்தில் ஒரு பாட்டு.

## சஂ௪. சரவணம் பிள்ளை (உழலூர்)

(20 - நூ.)

இவர் உழலூர் ஆறுமுகம் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். குருநாத அடிகள் என்னும் பெரியாரைக் குருவாகக்கொண்டு அறிவுரைபெற்ற இவர், 'தன்னிலைவிளக்கம்' என்னும் நூலை இயற்றியிருக்கிறுர்.

'' மின்னெளி யாய்அண்ட பிண்ட சராசரம் விண்ணும்மண்ணும்
தன்னெளி யான சடாட்சரி சாம்ப சதாசிவமென்
துன்னெளி யீசுவரன் ருத்திரன்மாலயன் ஓதரிதா
மன்னெளி ஐவர்க்கு மாதாவும் தையலும் ஆனவளே ''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## சஂ௫. சரவணவிரத முனிவர் (சென்னிமலை)

இவர் கொங்குவள நாட்டில் சென்னிமலையில் மறையவர் குலத்தில் தோன்றி மறைமுதலியவைகளை ஓதி யுணர்ந்து சிறந்த தவவொழுக்கமுடையவராகத் திகழ்ந்திருந்தார். சென்னிமலையின் சிறப்பினைக் கூறுவதாகிய சென்னிமலைப் புராணத்தை இவர் வெளிப்படுத்த வேண்டும் என்று எண்ணினுர். அப்புராணம் எங்கிருக்கிறதென்று அறியாமற் கலங்கினுர். ஒரு நாள் கனவில் அப்புராணம் காஞ்சியில் இருப்பதாக அறிந்து அங்குச் சென்று மிக முயன்று அப்புராணத்தைப் பெற்றுர். பிறகு அதனை இனிய செந்தமிழ்ப் பாக்களாகப் பாடி முடித்தார். 'சென்னிமலைப் புராணம்' என்னும் பெயருடைய அப்புராணம் பின்னுளில் அச்சாகியது.

" ஆங்கமர்ந் தாதி திருமுக மலர்ந்த
நாதனு ரடிமல ரினிலட்
டாங்கமன் படவே பணிந்துநின் றேத்த
வாடிடு மயில்குயில் கிளிகள்
ஓங்கிய தொனியும் ஓதிம மலரின்
நறைசெவி மூக்கினிற் புக்க
காங்கெய துவசங் கண்டது கண்ணு
களிப்புற வளங்கிரி யடர்ந்தான் "

என்பது நூலில் ஒரு பாட்டு.

## சசం. சரவணோற்பவ ஓதுவார் (திருவாவடுதுறை)
(19 - நூ.)

சோழவள நாட்டில் திருவாவடு துறையில் இருந்தவர். தேவாரப்பாடல் முதலியவைகளை இசையுடன் பாடுந் திறம் பெற்றிருந்ததன்றிச் செய்யுள் பாடும் புலமையும் பெற்றிருந்தார். மாதுருபூதம் பிள்ளை என்பவர் இயற்றிய சிற்சுகவாரிதிச் சதகம் என்னும் நூலுக்கு இவர்,

" அண்டபகி ரண்டமுமாய் அப்பாலாய்ப்
பரவெளியி தானந் தக்கூத்
தெண்டிசையும் கண்டுதொழ எடுத்தொருதாள்
நின்றாடும் எங்கோன் மீதில்
தண்டரள வியற்கடற்சொன் மதுப்பொழிமா
துருபூதந் தனமா மேரு
கண்டெனச்சொல் பரமசுக வாரிதியின்
முடியிருக்குங் கடவுள் தானே "

என்பது முதலிய பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

## சசக. சருக்கை சுந்தராச்சாரியார்
(20 - நூ.)

வி. கோ. சூரியநாராயண சாத்திரியாரிடம் தமிழ் கற்றுச் சிறப்படைந்த மாணவர்களில் இவரும் ஒருவர். இவர் சென்னைத் தொழில் இலாகா உதவிக் கமிஷனராக வேலைபார்த்தார். ஆராய்ச்சி முறையில் இலக்கியத்தைப் பயின்றவர். ஞான போதினி என்னும் இதழில் இவர், "இராமர் வாலியைக் கொன்-

றது நியாயமா?'' என்னும் ஆரய்ச்சிக் கட்டுரையை எழுதினர். "தற்பயிற்சி வாழ்க்கைப்பயன்'' முதலிய கட்டுரைகளை ஆங்கிலத்தில் இருந்து தமிழில் மொழி பெயர்த்தார். "உலோபிமகன்'' "இவ்விரவும் விடியுமா?'' முதலிய செந்தமிழ்க் கதைகளையும் எழுதியுள்ளார். இவருடைய நூல்களை இவருடைய ஆசிரியரே அச்சிட்டு வெளியிட்டார்.

## சகஉ. சருக்கை வரதாச்சாரியார்
(20 - நா.)

வி. கோ. சூரியநாராயண சாத்திரியாருடைய மாணவர்களில் ஒருவர். மனேதத்துவ நூற்கருத்துக்களை நன்கு விளக்கியெழுதும் இயல்புடையவர். பொழுது போக்கு முதலிய கட்டுரைகளை ஞானபோதினி இதழில் எழுதினர். "சோதிமாலை'' என்னும் நாடகநூல் ஒன்றை இவர் இயற்றினர். பிற்காலத்தில் இவர் மாவட்ட நீதி மன்றத்தலைவர் வேலையை மேற்கொண்டு சென்றுவிட்ட படியால் இவருடைய தமிழ்த்தொண்டு ஒருவாறு முடிவு பெற்றுவிட்டது.

## சகஙு. சர்க்கரை இராமசாமிப் புலவர்—சே.
(20 - நா.)

இவர் இராமநாதபுரம் சமத்தானப் புலவராக விளங்கியிருந்த சர்க்கரைப் புலவரின் வழிமுறையில் தோன்றியவர். இவருடைய தந்தையார் பெயர் கோடகுடிச் சேதுப்புலவர். இவர் ஆலங்காடு சிதம்பரஞ் செட்டியாரிடம் தமிழ் பயின்றுர். மன்னுர்குடி பின்ட்லே கல்லூரி, அண்ணுமலைப் பல்கலைக்கழகம் முதலிய இடங்களில் ஆசிரியராக இருந்தார். இவர் தம்முடைய வழி முறையினராகிய சாந்துப் புலவர் இயற்றிய மயூரகிரிக் கோவைக்கு அரும்பத உரையெழுதி வெளியிட்டிருக்கிறுர்.

"ஐங்கரனை ஆறுதலை ஆனவனை ஆறிரண்டு
செங்கரனை அன்பில் நியானிந்நா—துங்கருணை
காட்டியெமை யாளாலங் காட்டுச் சிதம்பரமால்
நாட்டுணையைச் சென்னிமுடித் தாம்"

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று. இவருடைய முன்னோர்களாகிய சர்க்கரைப் புலவர்களின் வரலாற்றைத் தமிழ்ப் புலவர் வரிசையிற் காண்க. பலநூல்களில் இவருடைய சிறப்புப்பாயிரம் காணப்பெறுகிறது. இவர் வழிமுறைப் புலவர் வரிசையைச் சேர்ந்தவர். நல்ல புலமைநலம் உடையவர்.

## சகச. சர்க்கரையப்ப பிள்ளை (மதுரை)
## (1889.)

இவர் பாண்டிவள நாட்டில் மதுரைமா நகரில் வாழ்ந்திருந்தவர். ஊர்காவல் நிலையத்தில் ஊர் காவல் (போலிஸ்) வேலை பார்த்துக்கொண்டிருந்த இவர், இலக்கண இலக்கிய நூல்கள் கற்றுப் புலமைத்திறம் அமையப்பெற்றவராகவும் இலங்கினர். இவர் மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரப் பெருமானுடைய திருவிளையாடல்களைத் "திருவிளையாட்டு வண்ணம்" என்னும் பெயரோடு வண்ணப்பாட்டாக இயற்றியுள்ளார். நூலைப் புகழ்ந்து சுந்தரலிங்கப் பிள்ளை, சு. சபாபதி முதலியார், பெரியண்ண பிள்ளை என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். வண்ணத்தின் தொங்கல் தாழிசையை அடியிற்காண்க:

"அருள்செய்சிவ சுந்தரரும் உளமகிழ்வு கொண்டுமலை
யத்துவசன் மங்கையொடு கூடியே
இனிமதுரை வந்துமொரு மலைகடல் வறண்டுகெட
அனல்சிதறு வெங்கணையை ஏவினன் (௧)

இருவரை விளம்பிநிச மிதுவெனவழிந்துகொல்
இலையெனவும் வந்தவர்க ளோதவே
இறைவன துளங்குளிர இருபதம் வணங்கிஅரன்
இணையிலருள் தந்திடவு மேகினன் (௨)

தருமனுல கம்புகுந தழல்பொருவும் வெங்கணையை
தமிழ்நக ரனங்கைகளி னேவவே
தனமொ டெதிர்கண்டனதி சயமென நினைந்துமிகு
தயிரியம் இழந்தவனு மோடினன் (௩)

அருமறையி னந்தனைரை மதுரைநக ரின்குரிசில்
அருள்பெறவு மந்திரிய ராகவே
அகமகிழ்வு கொண்டமுனி ரிஷிகள்சிவ சுந்தரரை
அர்ச்சனைகள் புரிந்தனர்கள் வாழியே." (௪)

## சகரு. சவரிமுத்து உபாத்தியாயர்—அ. (1910)

இவர் இலுப்பூரிலே அந்தோணிமுத்து என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். நூல்கள் பலவற்றைக் கற்று அறிவு நிரம்பி ஆசிரியத்தொழிலை மேற்கொண்டிருந்தார். அதனல் இவருடைய பெயர் சவரிமுத்து உபாத்தியாயர் என வழங்கியது. இசைப் பாடல்களை நன்கு பாடத்தக்க திறமடைந்த இவர் "திருக்குடும்பத் தோத்திரப் பிரபந்தம், நல்வழிக் கீர்த்தனை, வியாகுலமாதா பதிகம்" என்னும் நூல்களைப் பாடியுள்ளார். நூலின் முதற்பாட்டை அடியிற் காண்க:

"சீருலவும் ஆதியும் அநாதியும் பரனுமாய்த்
திருஞான சற்குருவு மாய்ச்
செய்யமுற் சுடருமாய் உருவமற் றவனுமாய்த்
தேடரிய நித்துவமுமாய்ப்
பேருலவு வேதவே தாந்தபோ தகனுமாய்ப்
பெட்புநிறை அற்புதனுமாய்ப்
பெருந்துகளனைத் தையும் தீர்ப்பவனு மாயெங்கும்
பிரபல மனோகரனு மாய்
நேருலவு ஆறுலக் கணனுமாய் யாவையும்
நிமிடத் தமைத்த வனுமாய்
நெறியோடு பல்லுயிர்க் கமுதளிப்பவ னுமாய்
நிற்கும்ஆ னந்த பொருளே
பாருலவு திருக்குடும் பத்தையாராதனை
பண்ணுதமிழ் பாடு தற்குப்
பட்சம்வைத் தெதுவேனை வந்துதவ நின்பதம்
பணிந்துமன் றுடி னேனே."

## சகசு. சவுடப்ப செட்டியார்—தொ. ச.

பாண்டிவள நாட்டில் அருப்புக்கோட்டையில் தேவாங்கு குலத்தில் தோன்றியவர். "சௌடாம்பிகை தோத்திரப்பாமாலை" முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

"ஆணுமாய்ப் பெண்ணாய் அலியுமாய் மற்றும்
அனந்தமாம் உயிர்த்தொகை யாகிச்
சேணுமாய்ப் புவியாய் உலகெலாம் ஆகித்
திசைகளுங் கடல்களும் ஆகிக்

காணுமின் றனவும் காண்பரி தெனவும்
கலந்துல கனைத்தினும் நிறைந்த
மாணுறும் பொருளே உன்னையே வணங்கும்
மைந்தனைக் காப்பதுன் கடனே ''

என்பது சௌடாம்பிகை தோத்திரப்பாமாலையில் ஒரு பாட்டு.

## சகள. சவுடப்ப செட்டியார்—சீ.
(1914)

கொச்சி நாட்டில் வல்லங்கியா நகரில் சீதாராம செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் 'சூடாம்பிகை மஞ்சரி' என்னும் நூல் பாடியுள்ளார்.

'' சிங்கார மங்கையே கங்கா தரன்பங்கில்
சேரும்நத் தின்ற முத்தே !
சின்மயா னந்தமே ! என்மீது வர்மமோ ?
சிவானந்த நாத ஒளியே !
தங்கமா மயிலில்வரு முருகனுக் கன்றுநீ
சரவணப் பொய்கை சார்ந்து
தனத்தில்வரும் அமுதமொரு கலத்திலேற் றவருக்குத்
தயவுடன் கொடுத்த நீயும்
எங்கள் நா யகியாகி எங்குந் துலங்கிடும்
ஈஸ்வரி எனது சொல்லை
ஏற்காம லுந்துயரை நீக்காம லும்நீ
இருப்பதும் அழகு தானோ ?
பொங்கியே வருகின்ற கங்கைசூழ் வல்லங்கி
புரியினிற் குலாவு மயிலே
பொங்கர வணிந்தசிவ சங்கரிசா முண்டியே
பூவையே பூவின் ஒளியே ''

என்பது நூலில் ஒருபாட்டு. வல்லங்கி அப்புக்குட்டி செட்டியார், செ. கிருட்டிணன் செட்டியார், தி. ஒன்னகிரி செட்டியார் என்போர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## சகஅ. சவுந்தரநாயக பிள்ளை—க. பே.
(19 - நூ.)

'' கலைமகள் விரும்புங் கலைமகன் இவனெனப்
பலகலை வித்தையும் பயிற்றிட வல்லோன்
தனகுனக் குன்று தனிப்பெருங்கலைக்கடல்

கனமிக வெய்தும் கபிரியேல் மகிபற்
குவந்தகான் முனையென உதித்தோன்
சவுந்தர நாயகந் தமிழ்ப்புல வோனே ''

என்று பாராட்டப்பெற்ற இவர் யாழ்ப்பாணம் வண்ணார் பண்ணையில் கபிரியேல் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். தக்க அறிஞர்களிடங் கல்வியை நன்கு கற்றுப் புலவராக விளங்கிய இவர், கோயமுத்தூர் மாவட்டத்தில் உள்ள சேலூர் நார்மல் பள்ளியிலும் சென்னை நார்மல் பள்ளியிலும் போதனை முறை ஆசிரியராகத் தொழில் புரிந்தவர். இவர் ''மெய்ஞ்ஞானச் செய்யுள்'' என்னும் நூலை இயற்றியுள்ளார். இந்நூல் மூவரும் ஒருவன், நீதிமொழி, வேதவிசேடப் பதிகம், ஏசுநாயகமாலை என நான்கு பிரிவாக அமைந்து விளங்குகிறது. மெய்ஞ்ஞானச் செய்யுளைத் தவிர வேறு நூல்கள் செய்திருப்பதாகவுந் தெரிகிறது.

'' இப்புவி மேவி முப்பதான் டதனில்
இருநல வூர்தனக் கேகி
அப்பனும் பரம ஐயனே! நின்ன
தன்புறு குருத்தொழில் தொடங்க
ஒப்பரு நானம் அவ்வயி னடைந்தோய்
ஓங்குமெம் மனமது மாறத்
துப்புறு ஞான நானமே தாராய்
தூயனே ஏசு நா யகனே''

என்பது ஏசுநாயக மாலையில் ஒரு பாட்டு.

## சகக. சாகுல் அமீதுப் புலவர்

திருநெல்வேலியைச் சேர்ந்த மேலைப்பாளையம் என்னும் ஊரில் மீருன் சாகிபு புலவர் என்பவருக்கு மகனுகத் தோன்றியவர். இவருடைய பாட்டனராகிய செய்யிது முகியித்தீன் கவிராசர் என்பவர் வாக்குப் பலிதமுள்ள சிறந்த புலவர். அவர் இறசூல்லா பேரில் முனசாத்து, இறகுமான் பேரில் பதிகம், முகியித்தீன் ஆண்டவர் பிள்ளைத் தமிழ், முகியித்தீன் ஆண்டவர் திருப்புகழ், நபிநாயகம் மாணிக்கமாலை முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். இவர் முனசாத்து இசைப் பாடல்கள், சலலாத்துப் பதிகம் முதலியன பாடியுள்ளார்.

'' ஆதிறகு மானவன் தன்னொளிவி லேதெளிவ
தாகப் பிரிந்த நபியே
ஆசைமயில் வேடமாய் நேசவிசு வாசமூாய்
அருள்பெற் றுவந்த நபியே

சோதிநபி யாதந் தொடுந்துவரு நபிமார்கள்
தொல்வழியில் வந்த நபியே
சொல்லரிய அண்டந் தனங்கொண்ட குபிரரைத்
துரத்தியே வென்ற நபியே
நீதிமுறை தவருத வேதநெறி நினினை
நிறுத்தியர சாளு நபியே
நிச்சயந் நாளுமன நிச்சைவைந் தோதுநரின்
நேர்மைகண் டருளு நபியே
மாநிர மகத்தில எட்டுசோ கந்தையே
வாதவித் தளிந்த நபியே
மாரு மணங்கமழும் மேனிநபி யேதூய
வாகுமகு மூது நபியே''

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## சஉ0. சாமிதாச பிள்ளை—அ.
## (1891)

இவர் சோழவள நாட்டில் நாகையில் இருந்த கிறித்துவராகிய அய்யாப்பிள்ளை என்பவருக்கு அருமைப் புதல்வராய்த் தோன்றினர். தமிழ் ஆங்கிலம் முதலியவைகளை நன்கு கற்றுத் தேறினர். இவர் தம்முடைய தந்தையாராகிய அய்யாப் பிள்ளையின் வரலாற்றை ''அய்யாப் பிள்ளையின் மெய்யான சரிதம்'' என்னும் பெயரோடு உரைநடையில் எழுதியுள்ளார். இசைப் பாடல் தனிப்பாடல் முதலியவைகளும் இயற்றி யுள்ளார்.

'' அய்யா பிள்ளைசரிதம் அன்பாகங் களிக்க
மெய்யுரிமை பூண்ட மகனுவேன்—வையகத்தில்
எல்லார்க்குஞ் சொல்ல எனையாண்ட கத்தனருள்
வல்லான் வழங்கும் வரம்''

என்பது இவர் எழுதிய வரலாற்று நூலின் தொடக்கத்தில் பாடிய பாட்டு.

## சஉக. சாமிநாதக் கவிராயர் (கல்லிடைக்குறிச்சி)

பாண்டிவள நாட்டில் கல்லிடை நகரில் வாழ்ந்திருந்தவர். நாமதீப நிகண்டு இயற்றிய சிவசுப்பிரமணியக் கவிராசருக்கு இவர் தந்தையார். இவர் 'பொதிகை நிகண்டு' என்னும் நிகண்டு

நூல் ஒன்றை இயற்றியுள்ளார். இந்நூல் இரண்டு பகுதியாக உள்ளது. மரப்பெயர்த் தொகுதியின் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

" மருக்கொழுந்து நமனகமாம் இருவாட்சி யனங்க
மயிலையுமாம் குல்லைகஞ்சாம் பங்கிகஞ்சாவாகும்
பருத்தியின்பேர் காற்பாசம் பன்னலும்பஞ் சியுமாம்
பகன்றிகிலு கிலுப்பையின்பேர் குன்றி குஞ்சமாகும்
மிருக்கரிகந் தரிவங்கம் வழுநிலையின் பேரா
மிநற்குவழு துணையுமாம் காரவல்லி கூரம்
விரைத்தபா கலின்பேர்கக் கரிப்போவா லுந்தி
வெள்ளரிப்பே ருருவாரம் வெள்ளை நாளிகமே"

## சஉஉ. சாமிநாதக் கவிராயர் (கூறைநாடு)

(20 - நூ.)

இவர் சோழவள நாட்டில் மாயூரத்தை யடுத்த கூறை நாட்டில் கம்பராமாயணச் சொற்பொழிவாளராக விளங்கியிருந் தவர். பரங்கிப்பேட்டை என இந்நாளில் வழங்கும் முத்துக் கிருட்டிணபுரியில் எழுந்தருளிய அங்காளியம்மன் மீது இவர் பதிகம் ஒன்று பாடியுள்ளார்.

" மாமருவு தேமலர்க் கூந்தலும் வில்லென
வளைந்தநுத லும்புரு வமும்
வந்தனை புரிந்தவர்கள் வெந்துயர் ஒழிந்திட
மகிழ்ந்தருள் வழங்கு விழியும்
பூமருவு வள்ளையங் காதணி குதம்பையும்
பொட்டும்வா கனிசுட் டியும்
புனையுமூக் குத்தியும் பவளவா யுங்களை
பொலிந்திலகு மதிவ தனமும்
காமருவு கிள்ளையமர் செங்கையுங் கொங்கையும்
கட்டுமொட் டியான உடையும்
கமலநிகர் நூபுரச் சேவடியும் ஏழையேன்
கண்கான வந்தருள் செய்குவாய்
ஆமருவு காமரு சுவேதநதி வடபாலில்
அவனிபுகழ் கிருட்ண புரிவாழ்
அங்கிரிவ பங்கியக ளங்கிமா தங்கியெனை
ஆளும்அங் காளி உமையே"

என்பது நூலின் முதற் பாட்டு.

## சஉ௩. சாமிநாத சாத்திரியார்—என்.

(20 - நூ.)

இவர் வடமொழியிலுந் தென்மொழியிலும் வல்லவர். கூடலூர் சென்னை முதலிய இடங்களில் ஆசிரியராகத் தொழில் செய்தவர். வேதவியாசரால் செய்யப்பட்ட காந்தபுராணத்தில் சநத்குமார சங்கிதையில் உள்ள சேதுமான்மியத்தை இவர் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார்.

"விக்கினங்களாகிற மலைகளைப் பிளக்க வல்லவராயும் விக்கினங்களுக்கெல்லாம் நாயகராயுமிருக்கிற யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளானவர் சகல பாபங்களி னின்றும் நம்மை விடுவித்து எப்பொழுதும் எவ்விடத்திலும் காத்து இரட்சித் தருள்வாராக"

என்பது இவருடைய உரைநடை நூலின் தொடக்கம்.

## சஉச. சாமிநாத தாசர்.—வே.

(20 - நூ.)

இவர் தொண்டைவள நாட்டில் ஆற்காடு தாலுகா செய்ய நகர் என்னும் ஊரில் வேங்கடாசல முதலியார் என்பவருக்குப் புதல்வராகத்தோன்றினர். இசைப் பயிற்சி இலக்கண இலக்கியப் பயிற்சி ஆகியவைகளில் வல்லவராகிய இவர் சிவசுப்பிரமணியக் கடவுள் மீது இசைப்பாடல்கள் பல இயற்றினர். அவை "சாமிநாத தாசர் பாடல் திரட்டு" என்னும் பெயரோடு அச்சாகி வெளிவந்துள்ளன.

" மதியுங்குளிர் நதியும்புனை வளர்செஞ்சடை முடியும்
முதிருங்கனன் மழுவும்முறை முக்கூரிலை வேலும்
அதிரும்படி நடனம்புரி அப்பாஉமை நேசா
நிதிமங்கையு லவுங்கிழ்முருங் கையில்வாழ் பெருமானே"

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## சஉ௫. சாமிநாத தேசிக சுவாமிகள்

இவர் தாயுமான சுவாமிகள் வழிமுறையில் தோன்றியவர். கும்பகோணம் தாலுகா ஆலங்குடி என்னும் ஊரிலிருந்தவர்.

இவர், ஞானசோபனம், மௌனர்வாக்கு மூலம், ஒளிக்கண்ணி, சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞானபாதம், நித்தியானந்த மெய்ம்மொழிப் பிரகாசக் கட்டளை, திரிபதார்த்த தீபம், வேதாந்த பஞ்சீகரண மகாவாக்கியம், ஆலயவஞ்சகர் இழிவு, சோடசவெண்பா, வேதாந்தப் பிராது, தேவாரப் பாடலுள்ள தல புராண வசனம்'' முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார்.

## சஉசு. சாமிநாத தேசிகர்—திரு. சி.

சோழவள நாட்டிலே பிறக்க வீடுபேறளிக்கும் பெரும் பதியாகிய திருவாரூரிலே சிதம்பரதேசிகர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் உலகப் பிரகாச தேசிகர் என்பவரிடங் கல்வி கற்றார். இவர் தமிழை நன்கு கற்றவர் என்பது இவருடைய வாக்கால் பெறப்படுகின்றது. இவர் திருவாடானைப் புராணம் என்னும் புராணத்தைப் பாடியுள்ளார். திருவாடானை என்பது பாண்டிவள நாட்டில் காளையார் கோயிலுக்குக் கிழக்கே இருபத்தொருகல் தொலைவில் உள்ள ஒரு தேவாரம் பெற்ற சிவப்பதி. புராணம் ஐந்நூற்றைம்பத்தேழு பாடல்களைக் கொண்டு விளங்குகின்றது.

'' வண்டுபான் மிழற்ற முகைமுறுக் கவிழ்ந்து
மதுமழை பிலிற்றவே விரிந்த
புண்டரீ கத்தில் அரசுவீற் றிருந்த
புராதன சதுமறைப் புனிதன்
அண்டகோ டிகளைப் படைத்திடுங் காலை
ஆதபன் தனைஅரு களைந்து
விண்டலஞ் சேருங் கிரகவேந் தெனவே
மேம்படு நாமமுந் தரித்தே ''

என்பது சூரிய பூசைச் சருக்கத்தில் ஒரு பாட்டு.

## சஉஎ. சாமிநாத தேசிகேந்திர சிவயோகி

இவர் திருத்தில்லையில் வாழ்ந்திருந்தவர். பகவத்கீதையை உரைநடையில் எழுதிப் பகவத்கீதா நவநீதம் என்னும் பெயரோடு வெளிப்படுத்தியிருக்கிறார். இவர் இவ்விருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் இருந்தவரே.

## சஉஅ. சாமிநாத பிள்ளை—அ.

(19 - நா)

இவர் சிதம்பரம் எனவழங்கும் திருத்தில்லைப்பதியில் வாழ்ந் திருந்தார். பண்ணுருட்டி, தக. சுப்பராய செட்டியார் என்பவர் இயற்றிய ஆதிபுரத் தலபுராணம் என்னும் நூலை இவர் உரை நடையாக எழுதியுள்ளார்.

"பத்தி சிரத்தையில் நித்தமும் விரைந்து முத்தி தலத்தினில் மெய்த்தவம் புரிந்த உத்தம சீலர்களான ஏ தபோதனர்காள்! பிறந்து இருந்து இறந்து பலியேற்று உண்டுழைத்துழலும் பசுத் துவமுடைய பல்வகைத் தேவர்கள் வசிக்கும் வேறு நாடுகளில் எட்டுணையுமிட்டமிராது பரத்துவமுடைய எம்பரம கருணாநிதி யாகிய பரமேசுரன் அன்பர்கட் கருள்செய்வான் வேண்டித் திருவுருக்கொண்டெழுந் தருளியிருக்குந் திவ்யஸ்தலங்களில் திரிகாலத்தும் திரிகரண சுத்தியோடு மன்புமீறக் கேட்டலால் மிகமகிழ்ந்து கூறுகின்றோம், கேட்பீர்களாக:—"

என்பது இவருடைய உரைநடை.

## சஉகூ. சாமிநாத பிள்ளை (திருக்குடந்தை)

(1895)

சோழவள நாட்டில் திருக்குடந்தை நாச்சியார் கோவில் முதலிய இடங்களில் வசித்திருந்தவர். திருக்குடந்தை வாணு துறை இராமமடத்தில் எழுந்தருளிய அனுமார் மீது இவர், "அனுமந்தன் பதிகம்" என்னும் பதிகத்தைப் பாடியுள்ளார். பதிகப் பாடல் ஒன்றை அடியிற்காண்க:

"கடலதனை ஆடையெனவேயுடைகொள் மாநிலம்
கருநியான் வந்த நாளாய்க்
கன்மநோய் அகலாத இருவினைக் கட்டுண்டு
காமவெறி மீறி அல்குல்
படவரவு விடமேறி கொடுந்நனத் தேள்கொட்ட
பலவாய்க்கள் போதைகொண்டு
படுந்துயர மந்தோ கொடுந்துன்பம் உடனுனது
பாதத்தில் வந்தடைந்தேன்

"இடமேவு வடமேரு கிரிமானு புயவிர
கிற்சுகா னந்ததேவே
தெசரதாத் மசந்வயா அசுரர்குல காலவென்
சிந்தைநோய் தீரஅருள்வாய்
மடைமையில் லாதிலகு வாணபுரி ராமமடம்
வாயில்தனி லேசிறந்த
மந்தமா ருதமைந்த சிந்தைவந் தருள்தந்த
மைந்தனும் அனுமந்தனே."

## சஙூ௦. சாமிநாத முதலியார்—எஸ்.

(20 - நூ.)

இவர் கூந்தலூர் என்னும் ஊரில் இருந்தவர். "கருணாகர குமரகுருபரர் தோத்திரம்" என்னும் சிறுநூலை இயற்றியுள்ளார். அந்நூலைத் திருக்குருச் சேரிவாழ் காட்டுச்சேரி தாணுவேல் பிள்ளை என்பவர் பார்வையிட்டுச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

" அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
மஞ்சுறழ் சோலை மலிநகர்க் கூந்தல்
தெய்வகுஞ் சரியனை திகழ்வன மாதுடன்
செய்வினை அகற்றிச் செறிந்திடுங் குமர
கோலக் குருபரன் குழகன் றன்மேல்
ஏலவும் உயிரெழுத் தெதிரெழுந் தறவே
இருமையும் இன்பம் ஈந்திடுஞ் செய்யுள்
அருமையாய்ப் பாடென ஐயன்சன் னதமாய்ப்
பகர்ந்த முறைப்படி பாடலுற் றனன்
நகர்தனில் உறையும் நால்வாய் ஐங்கரன்
நறைகமழ் மலரடி நனிவி ருப்பொடு
இறைஞ்சினேன் இதற்கிட ரெய்திடா வணமே"

என்பது நூலின் காப்புச் செய்யுள்.

## சஙூக. சாமிநாத முதலியார்—சி. வா.

(1913)

தஞ்சை மாவட்டத்தில் திருநாகேச்சுவரத்தில் தோன்றியவர். புதுவை த. செய்யப்ப முதலியார் என்பவரிடங் கல்வி கற்றவர். இவர் "திருநாகேச்சுரப் பதிற்றுப்பத்தந்தாதி" என்னும் நூலைப் பாடியுள்ளார்.

" மணியார் கயிலைக் கன்னுதலார்
மன்னுந் திருநா கையினனுகித்
துனியா மடங்கொன் றறிவருளும்
துணைத்தாள் மலரான் மலரகத்துக்
கனியா யனிவித் தொருநாகை
ஆதி முதலே சோதியெனப்
பணியா நிற்கத் தம்பதமே
பணிந்நா நரித்த தெவ்வாறே "

என்பது அந்தாதியின் முதற்பாட்டு.

## சருஉ. சாமிநாத முதலியார்—அ.

" பன்னுபுகழ்த் திருமயிலைக் கபாலிதிரு
வுளமகிழப் பாவலோர்கள்
துன்னுபெருங் களிசிறப்பப் பதிற்றுப்பத்
தந்தாதி சொற்றன் நாளும்
மின்னுபுகழ் நனிபடைத்த அண்ணுத்தை
மகிபாலன் விரும்பும் மைந்தன்
மன்னுசிவ நேசசிந்தா மணியென்னும்
ஒருசாமி வள்ளல் மாதோ "

என்று திரிசிரபுரம் பெரும்புலவர் மீனுட்சிசுந்தரம் பிள்ளை யவர்களாற் பாராட்டப்பெற்ற இவர், கடப்பாக்கம் என்னும் ஊரில் அண்ணுத்தை முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர். சிறந்த புலமைநலம் அமையப்பெற்றுத் திகழ்ந்த இவர், "திருமயிலைப் பதிற்றுப்பத் தந்தாதி" என்னும் நூலை இயற்றியுள்ளார். அந்நூலைப் பாராட்டிப் பெரும் புலவர் மீனுட்சிசுந்தரம் பிள்ளை, திரிசிரபுரம் சுந்தரம் பிள்ளை, சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார், தியாகராயச் செட்டியார், வீரபத்திரபிள்ளை, காஞ்சிபுரம் கச்சபாலையர் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" கதிக்கு நாயகன் கருமுகில் வண்ணனங் கமல
விதிக்கு நாயகன் விண்ணுயர் சோலைசூழ்மயிலைப்
பதிக்கு நாயகன் அன்பர்நம் படிறிலா மனத்துள்
உதிக்கு நாயகன் நெஞ்சமே கபாலியென் றுணரே "

என்பது அந்தாதியின் நாற்பத்து மூன்றுவது பாட்டு. இவர் இவ்விருபதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் இருந்தவர்.

## சஙங. சாம்பசிவம்—டி.
(1926)

இவர் சென்னை திருவொற்றியூரில் உள்ள இராமலிங்க சமாசத்தார் வெளியிட்ட ஆத்மானுபவம், சுவாமி இராமலிங்கம், அருட்பிரகாசம், அருளாநந்தம், சிதாகாசம், அருட்சோதி முதலிய நூல்களை எழுதியிருக்கிறார். ஆத்மானுபவம் என்னும் நூலில் சற்குரு இலக்கணம், கடவுள், சிதம்பர ரகசியம், மனோலயம் முதலிய பொருள்களைப்பற்றி எழுதியிருக்கிறார். இவர் திருவருட் பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகளிடத்தில் நிறைந்த அன்புடையவர். சமரச சன்மார்க்கத்தில் மிகவும் பற்றுடையவர். இவர் பரம்பொருள் வணக்கமாகப் பாடிய செய்யுள் ஒன்றை அடியிற் காண்க:

ஐம்பத்தாறு சீர்விருத்தம்

“ ஒருமுதலில் உணர்வுகலை உபயசிவ உளமகிழ
ஓங்குநிலை உண்மை யொளியே
உருவநிலை அருவநிலை ஓதுநிலை ஞானநிலை
உண்மையோ டுற்ற குருவே
உதயசுடர் உதயமகிழ் ஒருகலையே பலகலையாய்
உண்மைநிறை வான குருவே
ஓதுமதின் உணர்வுகொடு உலகுதனில் ஒளியாகி
உயர்வுநிலை உற்ற தேவே
ஒப்புயர்வி லாதநெடு உண்மைநிறை வானசிவ
ஓதுதற் கரிய பொருளே
உலகுதனில் ஒளியாகி வெளியாகி உண்மைசால்
உரிமைநிறை வான போது
உயர்நிலையுஞ் சிவநிலையும் ஒன்றான ஒன்றதாம்
உதயகிரி ஓங்கு சுடரே
உத்தமர்தம் உளநின்ற உருவதனில் அருவாகி
ஒப்பரிய பெரிய பொருளாய்ப்,
பருவமதில் பரனாகிப் பகர்குணமும் தானாகிப்
பக்குவ விசேட மாகிப்
பகர்கின்ற மெய்ஞ்ஞான பதிபசுவே பாசமெனப்
பார்க்கும்இடம் எங்கும் நிறைவாய்
பண்ணிலே முத்திருக் கும்பக்கு வத்தினில்
பார்க்கின்ற ஒன்றின் உருவே
பாராதகைப் பார்த்துப் பண்பாய் உகந்தவொரு
பற்றற்று வந்த குருவே

பாரதனில் நின்றசிவ யோகமுரு வாகவே
பகர்கின்ற உயர்வா சகம்
பண்பினொடு பாடாமல் பாடியே மெய்ஞ்ஞான
பக்குவ மதிற் கானவே
பல்லோருஞ் சில்லோரும் பாடுபடு ந் தெய்வமே
பார்த்தவிட மெங்கும் உருவாய்ப்
பத்தியே சிவமாகிச் சாந்தமே வடிவாகிப்
பார்க்கின்ற பெரிய பொருளாய்க்,
கருவறை நீக்கியே கானசிவ மயமாகக்
காண்கின்ற பெரிய வெளியே
கற்பனையெ லாம்நீக்கிக் காட்டுமருள் உருவான
காரணம் உவந்த சோதி
காதல்சிவ பசுவாகிக் காரணமெலாந் தாண்டிக்
கடவுளாய் நின்ற உருவே
காதல்சிவ யோகிகட் கருவான உருவமே
காட்சியே யொளிரு மதனில்
காணாத காட்சியைக் கண்டுற்ற வானந்த
கதிர்போல் விளங்கு மதியே
காட்டுமறி ஊட்டுங்க லக்கமது தீர்க்கவரும்
கற்பனை கடந்த சோதி
காணுமது வாகியே தானுமதுவாகநீ
காற்றற்று நின்ற விடமே
கானலாம் அருட்சோதி கானலாஞ் சிவசோதி
கரணங்கள் ஒய்ந்த யர்ந்து,
அருகுண மறந்தநிலை யானபடி நின்றநிலை
ஆநந்த மான நிலையே
அதிபகவ னென்றுரைத் தன்பர்சிவ வாக்கினில்
அருமையாய்த் தோய்ந்த அறிவே
அலகில்சுடர் சோதியாய் அன்பாயுகந்தவர்க்
கறிவாக அறிவி னூடே
ஐயமற நிற்கின்ற அண்ணலே எனையுகந்
தாருமறி யாம லிங்கே
ஆண்டதே நின்கருணை ஆனதால் இதுவேம்பி
ஆரவா ரித்து நின்றேன்
அருமையாய்த் தோன்றியே தோன்றாமல் ஒன்றிலே
ஆனபடியான தாகி
ஆண்டாண்டு தோறுமே ஆருயிர்க் குயிராகி
அங்கிங்கு மெங்கு முளதாய்
அண்ணலே சிவயோகி யாய்வந்த அன்பனே
அருட்சோதி தேவ தேவே.''

## சஙச. சாரநாயகியம்மாள்—எஸ்.

(20 - நூ.)

இவ்வம்மையார் எம். எஸ். தம்பு நாயுடு என்பவருடைய மனைவியாராவர். இவர் புனைந்துரை கதைகள் எழுதுவதில் வல்லவராய் ஞானக்கொழுந்து, அபரஞ்சி, சம்பத்குமார், இராச மன்னர், நித்தியகலியாணி, சகுந்தலை, சகதாம்பாள், திலகவதி, இராமலிங்கம், செல்லம்மாள், சண்முகவடிவு, சிவபாக்கியம். மன்மதவிசயம் முதலிய கதைகளை எழுதியுள்ளார். இவருடைய கதைகளைச் சுதேசமித்திரன் முதலிய பத்திரிகைகள் பாராட்டி எழுதியுள்ளன. "ஆண்பாலர், பெண்பாலர் ஆகிய இருபாலினரும் படித்து இன்புறக் கூடியதாகவும் ஆழ்ந்த கருத்துக்கள் அடங்கிய தாகவும் இருக்கிறது. கதையின் நடை அழகாக இருக்கிறது. வர்ணனைகள் சந்தர்ப்பத்திற் கேற்றவைகளாகவும் பொருத்த மானவைகளாகவும் இருக்கின்றன" என்று சுதேசமித்திரன் பாராட்டியுள்ளது. இவ்வம்மையார் "மனோரஞ்சனி" என்னும் புதின இதழ் ஒன்றையுஞ் சிலகாலம் நடத்திப் புகழ் பெற்றார். புனைந்துரைக்கதைக ளெல்லாம் புற்றீசல்களைப்போல் தோன்றி விரைந்தழியுந் தன்மையுடையன. அதற்கேற்பவே இவ்வம்மை யாருடைய கதைகளும் பெரும்பாலும் மறைந்தொழிந்தன.

## சஙரு. சான் அந்தோணிப் பிள்ளை

(20 - நூ.)

பெங்களூர் தண்டில் வாழ்ந்திருந்தவர். கிறித்துவசமயத் தினர். பெங்களூர் தண்டு மிறைக்கவி கோளரியும் மதுரகவிப் புலவரும், அறிஞருமாகிய அருமைசிரோமணி என்பவர் இவருக்கு மருகராவார். நன்கு கல்வி கற்ற இவர் சிறந்த செய்யுட்களைப் பாடுந் திறமடைந்து திகழ்ந்தார்.

"சிங்கனைக் கைத்தாங்கிச் செங்கிரிசூழ் சேத்திரச்
சிங்கதிசை ஆசனத்தாள் சீர்காந்தள்—சங்கைத்தாள்
ஈரைந் தசைத்தார் இணைந்தகலை ஆசிரியன்
சீரையெங் கெங்கதைச் செய் "

என்பது இவருடைய சிரோட்டக வெண்பாக்களில் ஒன்றாகும்.

## ௨௬௬. சிங்காரவடிவேலன் செட்டியார்—ப.
(20 - நூ.)

புதுக்கோட்டையைச் சார்ந்த மேலைச் சிவபுரியில் இருந்த வ. பழ. சா. பழநியப்ப செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் சொக்கநாதர் பேரில், "நவமணிச் சிலேடை வெண்பா" என்னும் நூலை இயற்றியுள்ளார்.

" மைநிர் மறையவரும் மள்ளர் பெருங் குழுவும்
செய்கடனை நோக்குஞ் சிவபுரியே—மெய்யினுறு
மீனாட்சி பெற்றார் வியன்சேர் மதுரைநகர்
தானாட்சி பெற்றார் தலம்"

என்பது சிலேடைப் பாடல்களில் ஒன்று.

## ௨௬௭. சிங்காரவேலு முதலியார்—கு.
(19 - நூ.)

இவர் சென்னை வேதாகமோக்த சைவசித்தாந்த சபை அடிய வர்களில் ஒருவர். நெல்லூர் மாவட்டம் சிங்கராயன் கொண்டா என்னும் ஊரில் தாலுகா ஓவர்சியராக அலுவல் பார்த்தவர். இவர் ஆளுடைய பிள்ளையார் தோத்திரமஞ்சரி என்னும் நூலைப் பாடியுள்ளார்.

" சென்டனைய முலைமடவார் நிறையுஞ் செந்நெல்
சேர்வயலும் செங்கமலத் தடமும் நீங்கா
வண்டனை பூங் காவனமும் விளங்கும் காழி
வந்தவனை வாழ்வனைத்தும் வழங்கு வானை
அண்டமுகட் டினு மடங்கா நோங்கும் கீர்த்தி
ஆலவாய் மேவியமன் ஒழித்து நீல
கண்டர் திருநீறளிக்கும் கருணை யானைக்
கருதாத நாளெல்லாம் விருதா நாளே"

என்பது தோத்திர மஞ்சரியில் ஒருபாட்டு.

## ௨௬௮. சிங்காரவேல் தேசிகர்– கா. சே.

"..............................அணிகிளர் கச்சி
மாநகர்ச் செல்வன் தோமில் அறிவினன்
கரியுரி லோர்த்த திரியம் பகத்தன்
அறிவின் மேலை ஞமெனு மறைப்பொருள்

தெளிவுற உணர்த்தும் அளியுறுங் கைலைப்
பரம்பரை யதனிற் பண்புறத் தோன்றி
முச்சகம் வியக்க முழுதொருங்குணர்ந்த
சேனு பதியெனும் தேசிகன் இயற்றிய
ஆனந் தவப்பல னுகவந் துதித்தோன்
சான்றவர் புகழும் ஆன்ற நற்குணன்
பெருமுனி அகத்தியன் குறுகநூல் கற்றேன்
பூமியும் விரும்பும் ஏமுறு பொறுமையன்''

என்று அறிஞர்களாற் பாராட்டப்பெற்ற இவர் காஞ்சிமாநகரில் சேனுபதிதேசிகர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். "குமரகோட்டப் பஞ்சரத்தினம், திருத்தணிகாசலமாலை, திருத்தணிகை வெண்பாமாலை என்னும் நூல்களை இவர் இயற்றியுள்ளார். காஞ்சிபுரம் சபாபதி முதலியார், புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், ஆறைமாநகர் திருவேங்கடப்பிள்ளை, திரிசிரபுரம் மதுரைநாயகம் பிள்ளை ஆகியோர் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

'' சீர்பூத்த தினகரரோர் பன்னிருவ ருந்தம
செழுங்கதிர் திரிந்த ழுங்கத்
திகழுநவ மணிகுயின் றொளிகா லுமோலிமலி
திரிபறு சிரத்தி னமைவும்
ஏர்பூத் தெழுங்கமல மலர்பொருவ இலகிவளர்
இணையறு முகத்தி னெழிலும்
ஏதமறு கருணைபொழி விழியொடிரு செவியுமொளிர்
இசைவரத முடன பயமும்
நீர்பூத்த கண்டிகையொ டக்கவட முடனிகழ
நினதடிமை மகிழ வருவாய்
நிறைகோல மறைமூல ஒளிசால நிகழ்வேல
நீலவிழி மாது பால
கூர்பூத்த வேல்விடுத் தவுணரைக் கொன்றமரர்
கொண்டாட நின்ற குமர
குறவர்விட் டுக்குமரி வதுவை வேட்டுத் தழுவு
குமரகோட் டக்குரவனே''

என்பது பஞ்சரத்தினத்தில் ஒரு பாட்டு. வேறு சில தோத்திரப் பதிகங்களையும் இவர் இயற்றியுள்ளார். பாடல்கள் இனிமையும் எளிமையும் அமைந்து திகழுகின்றன. முருகக்கடவுள் மீது மிகுந்த அன்புடையவர். வழிபடுகடவுளும் இவருக்கு முருகக்கடவுளே.

## சஙக. சிதம்பரக்கவிராசர்—கே.

இவர் அடைக்கலாபுரம் என்னும் ஊரினர். இவருடைய பெயருக்கு முன்னால் முருககருணாகர வித்துவரத்தினம் என்னுஞ் சிறப்புப்பெயர் ஒன்றுங்காணப்பெறுகிறது. இவர் சித்திரகவிகளை இயற்றுவதிலும் வல்லவர் என்பது "தண்டமிழாற் சூரியலிங் கப்பெருமான் தன்காதை, கண்டார் புகழக் கழறினன்—கண் டனைய தித்திக்குஞ் சொல்லுடையான் செந்தமிழ்ப்பாப் பாடி மகிழ், சித்திரக விச்சிதம்ப ரம்''என்னும் சாற்றுக்கவியாற் பெறப் படுகிறது. இச்சாற்றுக் கவியை இயற்றியவர் சங்கரன் கோவில் மீ. கதிர்வேலுப்பிள்ளை என்பவராவார். சிதம்பரக்கவிராசர் சூரியலிங்கப் பெருமான் சரித்திரம் என்னும் இசைப்பாடல் நூலை இயற்றியுள்ளார். முதலாவது பாடலை அடியிற் காண்க:

ஓர் திருநெல்லூர்வளர் என்ற மெட்டு

சூரியதேவாசுரசங்கீதா—இளஞ்
சோமனுக்கு மூத்தசிவபோதா—செக
சோதிவதனகலைவிநோதா—சக்தித்
தொண்டரென்றுளங்கனிந்து தெண்டமிங்கு தந்தோங்குரு
நாதா—அருள்—தாதா
கானரசக்கீர்த்தனங்கள் பாடி—மனக்
காதலின் கடாட்சமதைத் தேடி—இரு
காலினைக்கை யாலேசிரஞ் சூடி—வித்வக்
கட்டிலடங்கிடச்சொல்வர்ன மெட்டலங்கிர் தத்துணைகொண்
டாடி—வந்தோ—மோடி
ஞானகருணாகரசந்தோடம்—தெய்வ
நாயகனே நானிலப்ர காசம்—எங்கள்
ஞாபகத்திலேப்ரசித்த நேசம்—வைத்து
நம்புசிட னின்பமேது லங்குஸ்லோக நண்பினுப
தேசம்—செய்வி—சேடம்.

மற்றைப் பாடல்களும் இவ்வாறே சிறந்து விளங்குகின்றன.

## சசo. சிதம்பரக் கவிராசர் (ஆனைமலை)

(19 - நூ.)

கொங்குவள நாட்டிலே ஆனைமலை என்னும் ஊரிலே இவர் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் புகழ்பெற்ற புலவ

ராக விளங்கியிருந்தார். சிவராத்திரி நாடகம் இயற்றிய வேலாயுதக் கவிராசர் முதலிய பலருக்கு இவர் ஆசிரியராக இருந்து கல்வி கற்பித்தார். இவர் காலத்தில் கொங்குவள நாட்டில், மை. க. நஞ்சப்பபிள்ளை, மாம்பழக் கவிச்சிங்க நாவலர், இரத்தினகிரி நாவலர், உ. திருமூர்த்திக் கவிராச ஞானபண்டிதர், பொள்ளாச்சி குப்புச்சாமி ஐயர், வேட்டைக்காரன்புதூர் செல்லக்குமார செட்டியார், சாரிபாளையப்பட்டு அகத்தூர் உபாத்தியாயர் முதலிய பலர் சிறந்த புலவர்களாக விளங்கியிருந்தார்கள். தம்முடைய மாணவராகிய வேலாயுதக் கவிராசர் இயற்றிய சிவராத்திரி நாடகம் என்னும் நூலுக்கு இவர்,

" வயலும்வளங் களுஞ்சிறந்த பான்டிவே
லாயுதப்பா வாணன் வாக்கால்
இயலுமிசை களும்பொருந்தச் சிவராத்ரி
நாடகமா இசைத்தான் யாரும்
முயலும்வழி தேடுமன மூடாடும்
வாய்பாடு முறைகொண் டாடும்
செயலுமினி தெனப்புகழும் தேசமெல்லாம்
சென்றுநின்று திகழுந் தானே "

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்.

## சசக. சிதம்பர சுவாமிகள் (அரியநாச்சி)
(20 - நூ.)

இவர் அரியநாச்சி என்னும் ஊரினர். காஞ்சி காமகோடி பீடாதிபதி கும்பகோணம் சகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகளை ஆசிரியராகக் கொண்டவர்; தட்சணாமூர்த்தியை வழிபடு கடவுளாகக் கொண்டவர். இவர் மேற்படி சங்கராச்சாரிய சுவாமிகள் மீது 'சங்கரசற்குரு மணிமாலை' என்னும் நூலைப் பாடியுள்ளார்.

" ஞானியைப்போல் வெளிக்காட்டி நான்செய்த பகட்டெல்லாம்
தானறியா துலகென்று சதுராகத் தனித்திருந்தேன்
மோனநிலை உணராத மூடமனம் தெளியவருள்
தானமளித் தாட்கொள்வாய் சங்கரனே சற்குருவே"

என்பது நூலில் ஒரு பாட்டு. சங்கரசற்குரு மணிமாலையைத் தவிர இவருடைய பிறநூல்கள் பார்வைக்கு அகப்படவில்லை.

## ௪௪௨. சிதம்பர பிள்ளை (காழி)
## (1910)

சோழவள நாட்டில் காழிப்பதியில் தமிழாசிரியராக விளங்கியிருந்தவர். இவர் கஞ்சனூரில் எழுந்தருளிய கற்பகாம்பிகை மீது பதிகம் ஒன்று பாடியுள்ளார். அப்பதிகம் "கற்பகாம்பிகை பதிகம்" என்னும் பெயரையுடையது. இதற்குப் பொன்னோதுவார் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"பூமருவு கற்பகப் பொங்கரிறை நான்மறைப்
புத்தேள் அமுற்கடவுளும்
போற்றி நாள்தோறும் துதியருட் செல்வம்
புரிந்தாண்ட பூதஇறைவி
மாமருவு கொன்றைபுனை செஞ்சடைக் கங்கைவெண்
மதிசூடி வாமம்மருவும்
மன்னுமெழில் துன்னுசிவ சங்கரி மனோன்மணி
வாலையபி ராமிவல்லி
தேமருவு மெய்யன்பர் உள்ளந் தழுந்துமெய்த்
தேவிபரை வேதரூபி
சித்தாந்த நித்தமகிழ் பத்தா எனக்கொண்ட
செல்விபர் வதபுத்ரி
காமருவு பாற்கடலின் நாப்பணொரு பாப்பணைக்
கண்துயில் வோன்சோதரி
கஞ்சனூர் மஞ்சுதவழ் விஞ்சுவொளி கோவில்வளர்
கற்பகாம் பிகைவல்லியே"

என்பது பதிகத்தின் முதற்பாட்டு.

## ௪௪௩. சிதம்பர முதலியார்—அ.

இவர் சென்னைக் கல்விச் சங்கத்து, "மதரசா-ஈ: ஆசம்" என்னும் பாடசாலையில் தமிழாசிரியராக இருந்தவர். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை. இவருடைய பாடல்கள் சிதைந்து வழங்குகின்றன. ஒரு பாடலின் ஒரு பகுதியை அடியிற்காண்க.

"சொல்லையம் பூரண மதியிலற் புதத்நாய்ந் துண்மை
தொடர்பொருள் தேர்திருக் கடவுட் பலகை சங்கத்
தொலைவில் புகழ்க்கவிஞர் முதல் தமிழ் மேதக்க
சுருதி மொழித் தலைவர்பண்டு தொகுத்துச் சேர்த்த,"
... ... ... ... ... ... ...

## சசச. சிதம்பர ஐயர்—என்.
(20 - நூ.)

தஞ்சை மாவட்டத்தில் திருவையாற்றில் வாழ்ந்தவர். அங்கு, "திருவையாறு சோதிட தந்திர சபை" என்னும் பெயருடன் அவை ஒன்றை ஏற்படுத்தியவர். 'பிருகத் சம்மிதை, பிருகத் சாதகம், சினேந்திரமாலே, முதலிய அரிய நூல்களே ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர். ஆங்கிலத்திலும் தமிழிலும் வல்லவராகிய இவர் "நம்மவர் நூற்றெட்டு" என்னும் நூலே இயற்றியுள்ளார். அந்நூலேப் பாராட்டி வையை இராமசாமி ஐயர், திருநயம் வைத்தியநாத பாரதியார், திருநயம் முத்து பாரதியார் ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். நம்மவர், நூற்றெட்டு என்னும் நூல் இலௌகிகர், நடுவர் வைதிகர் ஆகியோர்களுடைய செயல்களேக் கூறுகின்றது.

"வெள்ளி எழுமுன்னே விழித்தே எழுந்துமே
பள்ளந் தெருவிற்குப் பக்கத்தில்—தள்ளுண்டு
போவாரே புன்செயுழப் போடா! ஏ பூனேவிழி
ஏவாரா என்பர் இரைந்து"

என்பது பயிரிடுவோர் தன்மை கூறும் பாட்டு.

## சசரு. சிதாநந்தசாகரம்—ஆறுமுக சுவாமிகள்
(1912)

தொண்டைவள நாட்டில் காஞ்சிமா நகரில் இருந்த ஙிச்சல இராமாநந்த சுவாமிகளின் மாணவர்களில் ஒருவர். இவர் "கார ணேச்சுரன் தோத்திரப்பா" என்னும் நூலே இயற்றியுள்ளார்.

"அன்புடையான் அருள்புரிவான் அமரர் கோமான்
ஆரூரின் உட்புகுவான் அங்க மெல்லாம்
என்புடையான் இளமதியும் ரவியுஞ் சூடி
எழில்விடைமேல் உறைந்தெழுவான் எங்க ளெண்ணம்
முன்புறுவான் மொழிகுழல்வான்முனிவர்க் கெல்லாம்
மோனநிலே உணர்விப்பான் முனேந்த வர்க்கு
இன்புறுவான் இருவினேயும் நீருய்ச்செய்வான்
இவன்கார ணிச்சுரனென் றெண்ணத்தானே."

என்பது நூலில் ஒரு பாட்டு.

## சசசு. சியார்ச் சேர்வை வேதநாயகம்*

இவர் 1869 ஆம் ஆண்டில் பிறந்தார். இந்துவாகப் பிறந்த இவர் வேதாந்த நூல் சித்தாந்த நூல் முதலியவைகளைக் கற்றுத் தேறினர். இலக்கண இலக்கியங்களையுங் கற்றுச் செய்யுள் பாடத்தக்க புலமையடைந்தார். கிறித்துவசமய ஆராய்ச்சி செய்து அச்சமயத்திற் சேர்ந்து பாதிரியாகத் தொண்டாற்றினர். கிறித்துவசமயக் கோட்பாடுகளையும் பிறவற்றையும் குறள் வெண்பா யாப்பிற் பாடவேண்டும் என்னும் அவாமேலிட்டினல் 'இருமைநெறிக் குறள்'' முதலிய நூல்களை இயற்றினர். 1932 ஆம் ஆண்டில் இவ்வுலகவாழ்வைத் துறந்தார். இருமை நெறிக் குறள் முதலதிகாரம் கடவுளியல் குறள் ஒன்றை அடியிற் காண்க:

" அம்பூவா ஞஞ்சார் சராசரமு மாக்கியனை
நம்பித் தொழுதெழுதல் நன்று "

## சசஎ. சிவகுருநாதக் கவிராயர்

இவரைப் பற்றிய செய்திகள் புலனாகவில்லை. செம்புலிப் பெரிய சுவாமித்துரை அவர்கள் பேரில் வருக்கக் கோவை என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார்.

முறுவற் குறிப்புணர்தல்

" உன்னுசை தீர விருநான் கநனி லொருமணத்துக்
கின்னுட் பவளந் திருப்பா விகையி விலங்குமுளை
தன்னுன் முளைத்தது போனகை பூத்தநித் தையல்தன்பால்
பொன்னுர் புயனெம் பெரிய சுவாமி பொருப்பினெஞ்சே"

இது வருக்கக் கோவையில் ஒரு பாடல்.

## சசஅ. சிவகுருநாத பிள்ளை—ஆ.
(1910)

பாண்டிவள நாட்டில் சிவகாசியில் ஆதிமூலம் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் சேற்றூர் நாட்டுப் புலவராகச் சிறந்து விளங்கிய மு. ரா. அருணாசலக் கவிராயரிடங்

கல்வி கற்றூர். இவர் இராசபாளையம் சங்கரமூர்த்திக் கவிராயரின் மகனுகிய அருணுசலக் கவிராயருடைய மகளின் மகனுவர். இவர் சிவகாசி "விசுவேசுரர் அருட்பதிகம்" பாடியுள்ளார்.

"அங்குயக் கிரியூ டனிநலார் இதைய
ஆழிவாய் அலேதுரும் பானேன்
இங்குநான் உய்வான் எளியனேன் றனக்கும்
ஈசனே அருளுமா றருள்வாய்
சங்கவென் குழையும் பன்னகக் கச்சும்
சாந்தணி கொங்கையுந் திகழப்
பொங்குமா நிதியாய் உறைசிவ காசிப்
புனிதனே அமலநா யகனே"

என்பது விசுவேசுரன் அருட்பதிகத்தில் ஒரு பாட்டு.

## சசகூ. சிவகுருநாத முதலியார்—ஐ. நெ. (1876)

இவர் சென்னை மாநகரில் வாழ்ந்திருந்தவர். இலக்கண இலக்கியங்களில் வல்லவர். இவர் காலத்தில் சென்னை மாநகரில் சொர்க்கபுரம் இராமலிங்கத் தம்பிரான் முதலியோர் சிறந்து விளங்கி யிருந்தனர். கொங்குவள நாட்டு ஆனைமலை வேலாயுதக் கவிராசர் இயற்றிய சிவராத்திரி நாடகம் என்னும் நூலுக்கு,

" சிரா ரகண்டபரி பூரணச் சச்சிதா
னந்தநித் தியசின் மயத்
திவ்யப்ரண வாகார சோமேசு ரத்தாணு
சிவஞான பரர்விற்பனர்
சிலமுறு மன்னவர்கள் அந்தணர்கள் உறைவிமலே
திகழானை மலைநகரினில்
தேவமுதி மிகுசைவ குலகுப்ப யாண்டிமால்
செம்மலான் பொற்கடுக்கைத்
தாராரு பரசிவத் தியானபுண் ணியமே
தழைத்துரு வமைந்தன்னவித்
தாரணியில் வேலாயு தக்கவிஞன் எனவந்த
தனுசனற் புதகுணுளன்
தற்பரானந்ததே சோமயக் கடவுளின்
தாளிணைக் கன்புபூண்டு
தந்தியுரி போர்த்தசிவ சங்கரன் றிசிமகிமை
தனையோர்நா டகமியற்ற

நேராரு நீள்பலா வாழைசெந் நெற்கமுகு
நினைத்ததுறு பஞ்சதருவும்
நிறைந்தினிய வளமோங்கு நிமலமாருற்றுநகர்
நெடிதாண்டு தருமமியும்
நிபுணனுஞ் சிவசுப்ர மண்யதிரு மூர்த்திசா
மித்துரைக் குரிசில்அருளே
நேருமா னிடர்உணர்ந் தவ்விரதம் இயல்புடன்
நின்றனுட் டித்தென்றுமே
ஏராரும் என்டோளன் அடிமனதில் நீங்காமல்
இகஇன்பம் யாவும்அனுபி
இருவினை யகன்றிறைக் கருணைமே லாகிநின்
றெழுபவப் புணரியேபி
எம்மான் உருப்பெறும் சாயுச்சிய பதவியில்
இருந்துமிக வாழவுன்னி
எழுதா வெழுத்தில் பதித் தருட் செல்வமுடன்
இசையுற்று வாழ்ந்தனன்அரோ "

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப் பாயிரமாகப் பாடியுள்ளார்.

## சஞ௦. சிவசங்கரமூர்த்திப் பிள்ளை—அ.
(20 - நூ.)

இவர் பறங்கிப்பேட்டை என்னும் ஊரில் அப்பாச்சாமிப் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். செந்தமிழ்ப் புலமைபெற்றுத் திகழ்ந்த இவர் "பழநிப்பாமாலை" என்னும் நூலைப் பாடியிருக்கிறார். அந்நூலில், திருவாவினன்குடிப்பத்து' சண்முகமாலை, மாமணிமாலை, சரவணப்பத்து, சிவசண்முக நாமாவலி முதலியன அடங்கியுள்ளன. பூவை கலியாணசுந்தர முதலியார், அ. இலட்சுமணப் பிள்ளை, கு. வீராச்சாமிப் பிள்ளை, தரங்கம்பாடி வெளிப்பாளையம் இருளப்பிள்ளை, ஆ. நாராயண சாமிப் பிள்ளை, தவத்துக்காம்பேட்டை வி. துரைசாமிப் பிள்ளை மனோன்மணியம்மாள் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். திருவூசற்பத்து என்னும் பகுதியில் ஒரு பாட்டை அடியிற் காண்க:

" பூவலஞ்செய் கரிமுகத்தான் பொற்ருள் போற்றி
புலவர்பணி சண்முகன்ருள் போற்றி போற்றி
நாவலவன் சம்பந்தன் நற்ருள் போற்றி
நாவரசுபாதபலம் நாளும் போற்றி

தேவர்தொழும் ஆரூரன் திருத்தாள் போற்றித்
திருவாசகப்பெருமான் செந்தாள் போற்றி
மாவலவன் அருணகிரி மலர்த்தாள் போற்றி
வாழ்வருளுஞ் சிவனடியார் மரைத்தாள் போற்றி''

## ௬௫௧. சிவசண்முகம் பிள்ளை—ஏகை

(20 - நூ.)

அருளாநந்த அடிகள் என்னும் பெரியாருடைய மாணவ ராகிய இவர் இயலிசை நாடகம் மூன்றினும் வல்லவராகையால் 'முத்தமிழ்க்கவி' என வழங்கப் பெற்றார். சென்னை மாநகரில் வசித்திருந்த இவர் தனவைசிய நகரத்தார்களின் விருப்பப்படி. தண்டபாணிக் கடவுள் பஞ்சரத்தினம், மதுரை மாணிக்கமாலை, மதுரைப் பிரதாபமாலை, மதுரைக் கீர்த்திவளம், மதுரைக்கவிதா மஞ்சரி முதலிய நூல்களைப் பாடியிருக்கிறார்.

'' கார்மருவுதென்பரங் குன்றிலுறை தெய்வமே
கனியுதிர் பொழிற்றெய்வமே
கந்தகிரித் தெய்வமே செந்திலுறை தெய்வமே
கதிர்காம மிளிர்தெய்வமே
சீர்மருவு தணிகைவாழ் தெய்வமே பழநிவாழ்
தெய்வமே சமராபுரித்
தெய்வமே யெனதுகுலதெய்வமே கண்கண்ட
தெய்வமே பரதெய்வமே
நீர்மருவு புவியினித் தமியனேற் கினியதுணை
நினையலாற் பிறிதுமுளதோ
நிகழுமென துள்ளக்கு றிப்பறிந் தவ்வண்ணம்
நிறைவேற்றி அருளையனே
தேர்மருவு தேவையம் பதிநகர வைசியர்கள்
சிந்தனைசெய் சென்னை நகர்வாழ்
தெரிவரிய மறைமூல பரமனரு ளியபால
திரமுலவு கதிர்வேலனே ''

என்பது பஞ்சரத்தினத்தில் ஒரு பாட்டு.

## ௬௫௨. சிவசாமி சேர்வைகாரர்—ப.

இராமநாதபுரத்தினர். திருக்கோயில் அலுவலகத்தில் அலுவல் பார்த்திருந்தவர். தமிழறிவும் நிரம்பப்பெற்றிருந்த

இவர் சேதுபதி நான்மணிமாலை முதலிய நூல்கள் இயற்றி யுள்ளார்.

" அழகமர் திரைபல அடுக்கிய புணரி
நீனிற வாடை நான்மருங் கசைத்த
நிலமின் றனது நலமிகு குளத்துத்
தேங்கொளி பரப்பிப் பாங்குடன் பொலியும்
திந்திலச் சுட்டி யொத்தநன் முகவை
முயன்ற தவத்தின் முழுப்பயன் என்னப்
பொதியச் சிகரம் வதியுங் குறுமுனி
அரும்பெறற் றமிழணங் கன்புடன் படர்தரும்
கொழுகொம் பென்ன வழுவறு செஞ்சொல்
புணர்த்திட் டுரைக்கும் உணர்ச்சி மிக்கோர்
சேமவைப் பென்னக் காமம் முதலிய
முக்குறும் பெறிந்த மூதறி வாளர்
நற்றுணை என்னப் பற்றொடு புகழும்
செங்கோற் செல்வ சிராச ராச
பன்மொழி யறியாச் சின்மொழி யுடையேன்
ஆயினும் ஆசையென் வாய்வழி நில்லா
தின்னது தொடுத்தேன் மன்னவர் மன்ன
குற்றமுங் குணமாக் கொண்டேன்
சொற்றமிழ் மாலையுஞ் சூடுக துய்த்தே "

என்பது சேதுபதி நான்மணி மாலையில் ஒரு பாட்டு.

## சடுரு. சிவசிதம்பர பாகவதர் (புவனகிரி)
(19 - நூ.)

இவர் திருத்தில்லைக்கு அண்மையில் உள்ள புவனகிரியில் வாழ்ந்திருந்தவர். பல இலக்கண இலக்கிய நூல்களை நன்கு பயின்ற இவர் புராண இதிகாச வரலாறுகளைக் கேட்பவர் களிக்குமாறு அபிநயங்களோடு நடித்துக்காட்டிச் சொற்பொழிவு செய்வதில் வல்லவராக இருந்தார். இசைப்பாடல்கள் பல இயற்றிய இவர் ஞானசாரம் என்னும் நூலுக்குப் பின்வரும் பாடலைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார்:

" திருவளர் தில்லைக் குடதிசை யதனில்
திகழும்வெண் ணதியினுத் தரபால்
தருவளர் பெருமாத் தூரில்வாழ் செங்குந்
தமரபில் தோன்றும்நா கப்பன்

விரைவிலஞ் ஞானம் நீக்கியே மந்த
விராகர்க்கும் பொருளறி விக்கும்
சுருதியாம் இநூனை வகுத்துரைத் தனன்னத்
துவிநசிந் தாமணி என்றே"

## சுருச. சிவசிதம்பரப் பிள்ளை—அ.

(1903)

அருணாசலப் பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர், 'அருட்பிரகாச அகவல்' முதலிய நூல்களைப் பாடியுள்ளார். இந்நூல் முத்துவிசயரகுநாத மகாராசா பாஸ்கர சேதுபதி பூபாலர் மேல் இயற்றப்பட்டது.

"பத்தி நீடிய அருட்பிர காசமஃ
தொத்த பேரக வற்குறை யோதவிங்
கத்தியின் முக னடியிணை யைத்தினம்
சிந்தத் திற்றெழு தேத்திச்சிந் திப்பமே"

என்பது நூலின் காப்புப் பாட்டு. இவருடைய ஊர் சதுரங்க பட்டினமென்றும் சென்னை மாநகரில் வாழ்ந்திருந்தார் என்றுந் தெரிகிறது.

## சுருரு. சிவசுப்பிரமணிய அய்யர்—ம. வெ.

(20 - நூ.)

கொங்கு நாட்டில் குன்னூர் செய்ன்ட் அன்டனி செகண்டரி பள்ளியில் ஆசிரியராக விருந்தார். நிறைந்த தமிழ்ப் புலமை யுடையவர். இவர் 'சங்கற்ப வெறுமை' என்னும் நூலை இயற்றி யுள்ளார்.

"இன்பமே பெறினும் துன்பமே யுறினும்
என்றன தாயுளைப் பெருக்கென்
றன்புடன் துதிப்பான் றொடியளவேனும்
மற்றைய தன்னிலை யுணரான்
துன்புநீட் டிப்பென் றெண்ணிலன் உலகில்
நோய்ந்துள ஆயுள் நீட் டத்தை
என்புக ஞதுநாம் காலனும் அன்னுன்
இன்புறு வாயில்தாள் இடுவான்.'

என்பது நூலில் ஒரு பாட்டு.

## சுருசு. சிவசுப்பிரமணியச் செட்டியார்—சு. ஸ்வ. மீ.
(20 - நூ.)

சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் அறந்தாங்கிப் பிரிவில் உள்ள பூவைமாநகர் என்னும் ஊரில் வைசிய குலத்தில் மீனாட்சி சுந்தரஞ் செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். இவருடைய பதினெட்டாவது அகவையில் முருகக் கடவுள் இவருடைய கனவில் தோன்றித் தமது ஆறெழுத் தருமறையை இவருக்குத் திருவாய் மலர்ந்தருளினார். அதனால் இவர் சிறந்த செந்தமிழ்ப் புலவராகிப் பல நூல்களை இயற்றினார்.

க. பூவைமாநகர்க் குமரன் பிள்ளைத் தமிழ்
உ. ஏகாதசிப் புராணம்
ந. கந்தோபாக்கியானம்
ச. புரூரவ அம்மானை
ரு. வைசிய புராணம்
சு. செயநகர மாலை
எ. செவ்வேளந்தாதி
அ. முருகன் வண்ணப்புகழ்
கூ. முருகர் தலமாலை
க0. ஆநந்த நடராசர் பதிகம்
கக. அகிலாண்டேசுவரி பதிகம்
கஉ. நவக்கிரக வாழ்த்து
கந. நமதுவிகம்
கச. திரிபங்கி
கரு. சத்தபங்கி
கசு. நவபங்கி முதலியன. பூவை மாநகர்க் குமரன் பிள்ளைத் தமிழ்ப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

“ நீடாழி உலகத்தில் ஈடாரும் இல்லாது
நிலவுநக் கீரகவியும்
நிறைவுற்றசந்தத் திருப்புகழ் உறுப்புகள்
நிகழ்த்தருணை கிரியிறையுமெய்
கோடாத வகையுற்ற சைவநெறி நிலையிட்ட
குமரகுரு பரஅடிகளும்
கூறுமல கெவற்றுமுள கோடானு கோடியென்
கூடுற்ற பருணிதருமுன்

"பாடாத பாவகையெ லாங்கண்டு கடலெனப்
பண்சொற் றெடுத்த ணிந்த
பாமாலை யைத்துணரின் மாமாலை யிற்கருஞ
படியுற் றுகந்த வர்க்கு
வாடாத கருணைமழை விடாது பெய்திடு
மகாவளப் புயல்வரு கவே
வாகுமிகு சேவைதிகழ் வாகுநகு பூவைநகர்
வாழ்குமர வேள்வரு கவே''

இவர் இக்காலத்தவரே.

## ௪௫௭. சிவசுப்பிரமணிய தேசிகர் (வேதசிரேணி)
(1906)

இவர் விருத்தாசலம் குமாரதேவர் ஆதீன பரம்பரையைச் சேர்ந்த வேதசிரேணி என்னும் வேளைச்சேரி சிதம்பர சுவாமிகளின் திருவடித் தொண்டராக விளங்கியிருந்தவர். இராயபுரம் பதிற்றுப் பத்தந்தாதி என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது.

"மன்னு மாமறைமாலயன் உணர்வரு
மாசறு சுயஞ்சோதி
பொன்னு லோகமும் பரவிய ராயமா
புரத்தில் அங்கயற் கண்ணி
என்னு மாதொடு சோமசுந்தரனென
இருந்தருள்பெருங் காட்சி
உன்னு மாதவர் உவாக்கடல் புரைதரும்
உவகையுற் றிருப்பாரே''

என்பது அந்தாதியில் ஒரு பாட்டு.

## ௪௫௮. சிவஞான தேசிகர்—சோ.
(19 - நூ.)

இவர் திருப்புடைமருதூர் திருக்கைலாச பரம்பரை வள்ளல் ஆதினம் சோமசுந்தர வள்ளல் என்பவருடைய இளைய புதல்வராவார். சைவ சிராத்தவிதி முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். அந்நூலில் சிராத்த முறைகள் விரிவாகவும் தெளிவாகவும் எழுதப்பட்டுள்ளன.

## சருகூ. சிவஞான தேசிகர் (அவிநாசி)

கொங்குவள நாட்டில் கோயமுத்தூர் மாவட்டம் அவிநாசி என்னும் சிவப்பதியில் பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற் பகுதியில் வாழ்ந்திருந்த இவர் செந்தமிழில் சிறிய திறம் அமையப் பெற்றவர். கூத்தப் பெருமானுக்குத் திருப்பணி செய்யும் வேலையை மேற்கொண்டிருந்தார். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை. பிறருடைய நூல்களுக்குச் சிறப்புப்பாயிரப் பாடல்கள் வழங்கியுள்ளார். இவருடைய புலமைத் திறத்தைப் பின்வருஞ் சிறப்புப் பாயிரப் பாடலைக் கொண்டு உணர்க:

" திகழ்கிரண சந்திரா தித்தர்முறை பிசகினும்
திரைகடலின் நீர்சுவறினும்
தினையளவு நீதிதவருச்சுந் தரபுரிச்
செம்மல்சுந் தரபாண்டியன்
செய்தமா தவவர பலத்தினில் கடவுளது
திருவருளி னுல்உதித்த
செல்விவித் துவதிட மனேரஞ் சிதத்தினது
திவ்விய சரித்திரத்தைச்
சகலசெக சிருட்டிப்ர தாபபஞ் சப்ரம
சந்ததியின் மேன்மைபெற்ற
சந்தனம கிபதி சுவிகார புத்ரனதி
சம்பத்கு பேரயோகன்
சந்ததமும் வித்வசன சங்கநிறை தென்பழநி
தன்னின்மெய்ஞ் ஞானவடிவாய்த்
தழைத்தசண் முகதண்ட பாணிசெஞ் சரணமலர்
தன்னைமற வாதநேமன்
மகிமைபெறு செந்தமிழி னுல்முத் தையன்சொன்ன
மதுரரச நாடகத்தை
மங்களமி கும்பெரம் பூரில்வளர் பாஞ்சால
வனிதைமடல் எழுதுநேசன்
வாய்சால நாட்டிக பொன்னம் பலக்குரிசில்
மகிழ்வரோ தயகுமாரன்
வானர்கவி யிருளினை மறுத்துமென் மேனிதி
வழங்குகர் ணுவதாரன்
சுகநளின வசனதிட சாமர்த்திய ஆறுமுக
துரையன்பு கூர்ந்துதிவ்ய
சுந்தரவி நோதாதி புரியினுறை ரத்னவேல்
தோன்றலால் உண்டுசெய்த

தூய்மையுள சென்னைவா ணிவிலாச மென்னுநல்
ருந்திரந் நிற்பநித்துந்
தொல்லுலக மீதுசற் கீர்த்திமென் மேலும்
துலங்கிடப் பெற்றனன் அரோ.''

## சஃ௦. சிவப்பிரகாச தேசிக அடிகள் (சென்னை)

இவர் சென்னை மாநகரில் சேத்துப்பட்டு என்னுமிடத்தில் செயவிநாயக சிவப்பிரகாச அச்சுக்கூடம் என்னும் பெயரோடு அச்சுக்கூடம் ஒன்று அமைத்துக்கொண்டு நூல்கள் அச்சிடும் தொழிலில் இருந்தார். இவர் பல நூல்களைக் கற்றுணர்ந்தவ ராதலின் தாமே செய்யுளியற்றத் தக்க அறிவாற்றலும் அமைந் தவராக இருந்தார். ''தெய்விகலிங்க தெரிசனார்த்தமாலை'' என்னும் நூல் ஒன்றை இவர் இயற்றியுள்ளார்.

'' மணிநில வானந்த வோம்பிரணவ
வள்ளல் மாணடியின்
அணிநில வானந்த நிழலிற்
சமாதிகொள் அன்பின்மிக்கோன்
திணிநில வானந்த நிறைதிரு
முருகேச தேசிகன்சீர்ப்
பணிநில வானந்த விநாயகன்
கருணைநேர் பகருதுமே''

என்பது விநாயகர் காப்பு.

## சஃக. சிவப்பிரகாசர் (சிதம்பரம்)

இவர் திருத்[illegible]லையில் வாழ்ந்திருந்தவர். ''மூப்பந்தொட்டி யுலா'' என்னும் நூல் ஒன்றை இவர் இயற்றியுள்ளார். அந்நூலுக்கு இவர் ஆசிரியர் என்பது நூலுக்குட் கூறியுள்ள சில செய்திகளாற் பெறப்படுகின்றன.

'' சீர்பூத்த தண்பிறையும் நிம்புனன்மந் தாகினியும்
தார்பூத்த செஞ்சடையில் தாங்கினோன்—ஏர்பூத்துத்
தோன்றுமதி வெம்பருதி சொற்றிகழுஞ் செய்யவன்னி
மூன்றுகோ வான முகத்தினோன்—சான்றிகழும்
சுந்தரஞ்சொல் வட்டக் குமடமருப் பென்பிதழி
வந்திலங்கு கின்ற வரைமார்பன்''

என்பன உலாவிற் சில கண்ணிகள்:

## ௪௬௨. சிவராச சுவாமிகள் (சென்னை)

(20 - நூ.)

“ பந்தம தறுக்க எண்ணிப் பலகலைப் பொருளுந் தேர்ந்து
சுந்தர வேடம் நீக்கித் துறவற நெறிமேற் கொண்டு
சந்ததம் சிவன் முந்நந் தனிநிலை மன்னி நின்று
சிந்தனை யற்ற தூய சிவராச முனிவன் என்பான்”

என்று அறிஞர்களாற் பாராட்டப் பெற்ற இவர் திருத்துருத்தி இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகள் ஆதீனம் ஈசூர் சச்சிதாநந்த சுவாமிகள் வழிமுறையில் அருளுரை பெற்றவர். இலக்கண இலக்கியங்களைக் கற்றுப் புலமை பெற்றவர். இவர் ‘அம்மை யப்பர் புகழ் மாலை’ என்னும் நூலை இயற்றியுள்ளார். இதில் இருபத்தேழு பதிகங்கள் அடங்கியுள்ளன. இந்நூலுக்குப் பண்டித சித. நாராயண சுவாமிகள், ஞானனந்த மணவாள மாமுனிகள், சாமிகுப்புசாமி, அருளாநந்தர், த. கோவிந்தசாமிப் பிள்ளை, இ. சிதம்பரசாமிப் பாண்டியர், சுவாமி அருணகிரிநாதர் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

“ ஒப்பிலா துயர்சி வத்தின்
ஒளி நுதற் கண்ணில் தோன்றித்
துப்புசிர் நிறைவுற் றேங்கும்
சுப்பிரமணியன் என்னும்
செப்புபல் பெயர்க ளேற்றுத்
தேசொளி பூத்து வாழும்
அப்பனே ஞான மூர்த்தி
அடியனேன் இருள்தீர்த் தாளே

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௪௬௩. சிவராமச் செட்டியார்—நா.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் சோழவள நாட்டில் திருத்தில்லையம்பதியில் சிறந்து விளங்கிய செந்தமிழ்ப் புலவர். தமிழ் நூல்களை மாணவர்கட்குப் போதித்தலையே இவர் தம்முடைய முதன்மையான கடமையாகக் கொண்டிருந் தார். கருவூர் “ஆநிலைவெண்பா” இயற்றிய கானடு காத்தான் இராமசாமிச் செட்டியார் முதலியோர் இவரிடங் கல்வி கற்றவர்

களே. இவர் செய்த தனி நூல்களைப் பற்றியவிவரந் தெரிய வில்லை. நூல்கட்குப் பாடியுள்ள சிறப்புப்பாயிரங்கள் அகப்படு கின்றன.

"செந்தா மரையுறை செய்யவள் தலைவனும்
நந்தார் சுவேதபத் மாசனி நாதனும்
தனித்தனி பரமெனத் தாமறி விழந்து
கனிப்பிலா ஏனமுங் காமரும் அன்னமும்
என இரு உருக்கொண் டிருநிலங் கிடந்தும்
கனவினந் திரிதரு ககனம் பறந்து
அடிமுடி தேடி அயர்ந்து மாழ்குறப்
படிதனில் வன்னிப் பருப்பத மானோன்
அன்புறும் அடியவர் அகநினை வடிவொடு
இன்புற அவர்நலி விரிந்திட அகன்றோன்"

என்பது இவருடைய சிறப்புப்பாயிரத்தின் ஒருபகுதி.

## ௪௯௪. சிவராம பிள்ளை—மு.

இவருடைய தந்தையார் பெயர் முத்துமணி. இவர் திரு வாஞ்சியத்தில் எழுந்தருளிய மங்களநாயகியம்மை மீது பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார். அப்பிள்ளைத் தமிழ் மங்கள நாயகியம்மை பிள்ளைத் தமிழ் என்னும் பெயரையுடையது.

"பூமேவு கற்பகக் காமேவு சதமகன்
புலவர்குழு இருடி கணமும்
புண்டரி கந்தவன் கொண்டல்வண் ணத்தவன்
விண்டமலர் கொண்டு பணியச்
சேமேவி அருளவரு தெய்வநா யகர்மருந்
தீசரைச் சேர்ந்து மகிழும்
சிங்கமீ தேறிவரும் மங்கையர்க் கரசியே
தென்னவன் வளர்த்த செல்வி
நாமேவு புகழ்செல்வ வேளாளர் குலதிலகன்
முத்துமணி யீன்ற ரத்தினம்
நாவலர்கள் கற்பகம் சிவராம சுந்தரன்
நன்மனம் அமர்ந்த ருளுவாய்
பூமாது நாமாது புகழ்பாடி யாட்டுமொளிர்
பொன்னூச லாடி யருளே
புங்கவர் தினந்தொழும் மங்களவிநோதினி
பொன்னூசல் ஆடி யருளே"

என்பது ஊசற் பருவத்தில் ஒருபாட்டு.

## சகூரு. சிவராமலிங்க சுந்தர முதலியார்—ஐ. நெ. (1889)

இவர் ஐயம்பேட்டை என்னும் ஊரில் நெல்லையப்ப முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர். இவர் தம் பெயரால் 'சிவராமலிங்க சுந்தரம்' என்னும் ஓர் உரைநடை நூலை எழுதியுள்ளார். அந்நூலில் மந்திரமுறைகளும் மருத்துவ முறைகளும் அடங்கியிருக்கின்றன. இவருக்குக் கவிராசபண்டிதர் என்று சிறப்புப்பெயரும் இருந்ததாகத் தெரிகிறது. ஆயினும் நூலில் பாடல்கள்காணப்படவில்லை மறை மருத்துவமுறையால் நோய் தீர்க்கும் முறை ஒன்றை அடியிற்காண்க :

பாட்டு

"உணர்த்துமுந லெவையவையை
உளந்திலினிதெனத் துணிந்து
மணர்த்துமுல குளந்தவர்கள்
அகந்ததனை மறுப்பாம்'

"வாந்திபேதியைப் போக்கடிக்கும் விடுசிகாமந்திர செபம்"

"' ஓம் ஹராம் ஹரீம் ஹரூம், ராம விஷ்ணு சத்தியே நமோ பகவதி விஷ்ணு சத்தி எஹே ஈ ஏஹும் ஹர ஹர ஹந ஹந பச பச மதமத உச்சாதியோ உச்சாதையா தூரே குடு குடு சுவாஹா குறு குறு சுவாஹா விடுசிகேயி மோந்தம் கெச்சா ஜீவஜீ வசந்திர மண்டலங்க தோசி சுவா ஹ' ஸ்நாநனஞ்செய்து ஆசமநஞ்செய்து வாமகரத்தில் விபூதியை வைத்து இந்த மந்திரத்தை அதிலெழுதி கOஅ தரம் செபித்து ரோகஸ்தனுக்குத் தடவ ரோகம் நீங்கும்."

## சகூசு. சிவராம முதலியார்—கு.

பாண்டிவள நாட்டில் திக்கெலாம் புகழும் திருநெல்வேலியில் தியாகராச முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் தமிழ்நூல்களைத் தக்க அறிஞர்களிடம் கற்றுப் புலமை பெற்றார். அம்பலவாணன் கவிராசர் என்பவரையும், புதூர் வள்ளிநாயகம் பிள்ளை என்பவரையுங் கூட்டாகச் சேர்த்துக்கொண்டு, முத்தமிழாகர அச்சுக்கூடம் என்னும் பெயரோடு அச்சகம் ஒன்றை அமைத்து அரிய நூல்களை அழகியமுறையில்

வெளியிடும் பணியை மேற்கொண்டிருந்தார். அக்காலத்தில் இவருடைய அச்சகத்தில் பல நூல்கள் அழகிய முறையில் பதிப்பிக்கப்பட்டு வெளியாயின. அழகிய சொக்கநாத பிள்ளை பாடிய காதற் பிரபந்தத்திற்கு இவர் சிறப்புப்பாயிரம் பாடினர். சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

"புகழ்பெருகு திருபன்முத்து சாமி மன்மேல்
புலவர்சிகா மணியெனஇப் புவியில் நாளும்
திகழுமழ கியசொக்க நாதன் மிக்க
செந்தமிழாற் காதல்தனைச் செப்பி னுைல்
சகமதனில் அதுபரவும் வண்ண நெல்லைத்
தளவாய்சண் முகக்குமர சாமிவள்ளல்
இகழ்தவிலா அச்சுப்புத் தகம தாய்ச்செய்
திசைபெற்ருன் இவன்போலிங் கெவர்பெற் ருரே"

என்பதாகும்.

## ௬௬௭. சிவராமலிங்கம் பிள்ளை (வலியமேல் எழுத்து)

நாஞ்சில் நாட்டில் வலியமேல் எழுத்து என்னும் ஊரில் இருந்தவர். இவர் "சிகண்டேச்சுர மாலை, உயிர் வருக்கமாலை, சிகண்டேச்சுரப் பதிகம்" முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

"நாய்பிறர் எச்சில் நாடுவ போல
நாரியர் சுகந்தனையே நண்ணும்
பேயனேன் மருந்தில் தணிந்திடாப் பித்தன்
பிணியுடல் நிலையெனக் கருதித்
தீயபுன் தொழில்கள் புரிந்திடுங் கொடியேன்
செவ்விய தவஞ்சிறி திலாதேன்
ஆயினும் என்னைக் கைவிடல் முறையோ
ஐயனே சிகண்டேச் சுரனே"

என்பது சிகண்டேச்சுர மாலையில் ஒரு பாட்டு. ஒரு நாள் ஓர் அறிஞர் இவரைப் பார்க்க வந்தார். அவர் சிறந்த சைவப் பற்றுடையவர். வைணவ சமயத்தில் மிகுந்த வெறுப்புடையவர். அவர் இவரோடு உரையாடிக் கொண்டிருந்தபோது இவரைப் பார்த்து, நீங்கள் சிவத்திற்கும் லிங்கத்திற்கும் நடுவில் இராமனைச் செருகியிருக்கிறீர்கள் அந்த இராமன் நன்ருக நசுக்குண்டு அழிந்தொழியுமாறு நசுக்கிவிடுங்கள்" என்று கூறினர். இதனைக்

கேட்டு உடனிருந்த அன்பர்கள் விழுந்து விழுந்து நகைத்தனர். இவரும் நெடும்போது நகைத்தார்.

## ௪௬௮. சிவலிங்க உபாத்தியாயர்—ச.
(1886)

சோழவள நாட்டில் மாயூரத்தில் விசுவப்பிரம வமிசத்தில் சபாபதி உபாத்தியாயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர்.

> " சீரடி புனைந்த சென்னியன் பொன்னிரும்
> ஊர்வளஞ் சிறந்த கவுரிமா யூரத்
> தினிதமர்ந் திடுவோன் இயற்சபா பதிப்பேர்
> புனிதன் தவத்தால் புவியில்வந் துதித்து
> நற்றமிழ்க் கலைகள் நாடோறும் பயின்று
> முற்ற உணர்ந்த முதறி வாளன்
> அங்கண்மா ஞாலத் தகமகிழ்ந்
> தெங்கணும் புகழ்சிவ லிங்கதே சிகனே "

என்று புலவர்களால் புகழ்ந்து பாராட்டப் பெற்றவர். இவர் மதுரைக் கடவுளின் திருவிளையாடற் செய்திகளை அமைத்துத் திருவிளையாடலந்தாதி என்னும் நூலைப் பாடியுள்ளார். சுந்தரலிங்கம் பிள்ளை, திரிசிரபுரம் தியாகராசச் செட்டியார், கிருட்டிணய்யர், மூக்கனுசாரியார் என்போர் இந்நாலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

> " வெள்ளிப் பொதுவின் மதுரா புரிதனின் மெய்யன்பெனும்
> புள்ளிப் பொதுளு மடியருட் பாம்பு புலிமுனியும்
> அள்ளிப் பொதுப்பலன் கட்பொறிகொண்டிட ஆடினன்மால்
> எள்ளிப் பொதுவர் குலத்தானயன் றெழுமென்குணனே "

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௪௬௯. சிவலிங்கம் பிள்ளை—தா.
(19 - நூ.)

சோழவள நாட்டில் தஞ்சைமாவட்டத்தில் இராமாநுசபுரம் என்னும் ஊரில் தாண்டவராய பிள்ளை என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினார் இவர். வேலைய தேசிகர் என்பவரிடங் கல்வி

கற்றுச் சிறந்த புலவராய்த்திகழ்ந்த இவர் தம் ஆசிரியராகிய வேலைய தேசிகரால் இயற்றப்பெற்ற திருவைகாவூர்ப் புராணத்தைக் கூட்டியுந் திருத்தியும் அச்சிட்டு வெளிப்படுத்தினர். "திரு ஆவூர்த் திரிபந்தாதி" என்னும் அந்தாதி நூல் ஒன்றும் இவரால் இயற்றப்பெற்றது. இவருடைய வரலாற்றுச் செய்திகள், "பின்னர் அவர்கள் மாணுக்கரிலொருவராய் இலக்கிய விலக்கண வேதாந்த நூல்களில் மிகத் தேர்ச்சியுள்ளவராய், ஞானகுருவாய் கார்காத்த வேளாளகுல திலகராய் விளங்கிய இராமாநுசபுரம் தாண்டவராய தேசிகனுக்குத் தவமணியாகுஞ் சிவலிங்கம் பிள்ளை யென்பவர்" என்பதாலும்,

"வான்றேய் பொழிலின் வண்டடை யூற்றும்
தேன்றுளிப் பெருக்கார் செந்நெல் வயல்சூழ்
இராமா நுசபுரம் எனும்பெரும் பதியின்
அராமே வுஞ்சடை அன்னலுக் கன்பனய்
முத்தமிழ் உணர்ந்து முதுக்குறை வாகித்
தத்துவ முழுதுணர் தாண்டவ ராயன்
தவத்தவ தரித்துத் தமிழி னேங்கும்
சிவப்பிர காச னெனுநந் தேசிகன்
ஆகுஞ் சிவலிங்க அறிவனை அடைந்து"

என்பதாலும் ஓரளவு பெறப்படுகின்றன.

"அணிதரங்கமாப் பரவையை ஆடையாய் அணிந்தோர்
பணிமு டித்தலை கிடந்திடும் பார்மகள் தனக்குக்
கணிவி ளங்குசோ ணுடுகண் ணுகுமக் கண்ணின்
மணியெ னத்திகழ்ந் துறுவது திருவைகா நகரம்"

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## சஎ௦. சிவவேல் செட்டியார்

(20 - நூ.)

சென்னைமாநகரில் சிந்தாதிரிப் பேட்டையில் இருந்தவர். வணிக வைசிய மூன்றுங்குடி வக்குவமரபில் சாத்துடைய மகரிஷி கோத்திரத்தில் தோன்றியவர். மருத்துவம், காலக்கணிதம், தமிழ்ப் புலமை, வேதாந்த நூற்பயிற்சி ஆகியவைகளிற் சிறந்து விளங்கியவர். இவருடைய மக்களாகிய குமரகுரு செட்டியார், மூருகேச செட்டியார் என்பவர்களும் சிறந்த தமிழ்ப் புலவர்களாக

விளங்கி யிருந்தனர். இவர் "திவனூர் விநாயகரகவல்" என்னும் விநாயகர் அகவல் இயற்றியுள்ளார்.

"பூவுறை வாவிப் பொழில்வளம் புடைசூழ்
திவனூர் தன்னிற் சிறப்புற விளங்கும்
தொந்தி வயிறும் துளைக்கர வளனும்
தந்தி முகமும் சாமர கன்னமும்
மோதகக் கரமுமு டிகவா சுனமும்
மாது வல்லபை மருவிய பாகமும்"

என்பது அவ்விநாயகர் அகவலின் தொடக்கம்.

## சஎக. சிவனணைந்த பெருமாள் நாடார்—பி.

(1914)

பாண்டிவள நாட்டில் கிழக்கரைத் தட்டாங்தோப்புத் தெருவில் இருந்தவர். கல்வியை நன்கு கற்ற இவர் காஞ்சிரங்குடி என்னும் ஊரில் பள்ளிக்கூடம் ஒன்றுவைத்துக் கொண்டிருந்தார். அதனுல் இவரை எல்லோரும் காஞ்சிரங்குடி உபாத்தியாயர் என்று அழைத்தனர். செய்யுள் பாடுந் திறம்பெற்றிருந்த இவர் "கைலாசபதி மாலை" "சிவபக்தி மாலை" என்னும் நூல்களைப் பாடியுள்ளார். இம்மாலைகள் முப்பது முப்பது பாடல்களால் அமைந்தவை.

"வறுமை யெனும்பாசம் வந்தெனையே விட்டாமல்
பெருமானே யுன்றன் பெரிய திருவடியைச்
சிறுவனுக்கே யீந்தாற் செல்வம்மிக உண்டாகும்
கருணைப்பிர வாகமே கயிலாச வாழ்பதியே"

என்பது மாலையின் நான்காவது பாடல்.

## சஎஉ. சிவாநந்த சரசுவதி (அரிமழம்)

(20 - நூ.)

இவர் அரிமழம் என்னும் ஊரில் இருந்தவர். கோடக நல்லூர்ச் சுந்தர சுவாமிகள் வழிமுறை மாணவர். இவர் செகத் குருதுதி, ஞானசிவவாதக் கட்டளை உரை, அகோரர் அந்தாதி, பிரமகீதை, சங்கரவிசயம் முதலிய நூல்களை வடமொழியில் இருந்து தமிழில் மொழி பெயர்த்திருப்பதோடு 'சிவகுரு சதகம்' என்னும் நூலையும் பாடியுள்ளார்.

"குருஉரு ஆகி ஆண்டருள் செய்த
குணக்குன்றே குறிகுணங் கடந்த
அருவனே அடியார் அகத்தினில் ஊறும்
ஆநந்த வடிவனே உனது
திருவடிமலர்க்கே அனுதினந் தொண்டு
செய்திடா தவத்தினில் உழலும்
தெருளிலா நாயேன் சீரியர் கூட்டம்
சேர்ந்திடச் செய்வதுன் பரமே"

என்பது சிவகுரு சதகத்தில் ஒரு பாட்டு.

## சஎங. சிவானுபூதிச் செல்வர்

இவரைப் பற்றிய செய்தியொன்றும் புலனாகவில்லை. இவருடைய இடுகுறிப்பெயருந் தெரியவில்லை. இவர் பேராநந்த சித்தியார் என்னும் நூலை இயற்றியுள்ளார். 'மாயைக் கழற்றி என்னுந் தலைப்பில் உள்ள பாடல் ஒன்றை அடியிற் காண்க:

" பிண்டங் கடந்தான் பதங்கடந்தான்
பெருமை கடந்தான் பெரிதேயாம்
அண்டங் கடந்தான் தத்துவங்கள்
அனைத்துங் கடந்தான் அளப்பரிய
குண்டங் கடந்தான் குணங்கடந்தான்
கூந்தன் தனக்காட் பட்டொளிரும்
கண்டங் கடந்தான் இவனென்றே
கைவிட் டொழிந்தாய் மாமாயாய்"

## சஎச. சிற்றம்பலக் கவிராயர் (திருச்செங்கோடு) (1897)

கொங்குவள நாட்டில் திருச்செங்கோட்டில் இருந்தவர். வீர சைவ மரபினர். இவருடைய பெயர் சிற்றம்பல பண்டாரத்தையா எனவும் வழங்கியது. இவர் இளமையிலேயே நற்குண நற்செய் கைகள் அமையப் பெற்றவராய் விளங்கினர். கல்வி கற்பதில் மிகுந்த ஆர்வம் இருந்தபடியால் தக்காரிடத்தே தமிழ்க் கல்வியை நன்கு கற்றுப்புலமை நிரம்பப் பெற்றார்.

இவர் மற்றொரு தமிழ்ப் புலவரைக் கண்டால் வெறுப்புக் கொண்டு குறைகூறமாட்டார். வருபவர்களை அகமும் முகமும்

மலர்ந்து வரவேற்றுப் போற்றுவார். அவர்கள் நன்கொடைகளை நாடிவந்தவர்களாயின் தக்க செல்வர்களிடத்தே அழைத்துக் கொண்டுபோய் நன்கொடை வழங்கச் செய்வார். நன்கொடை தகுதிக்குத் தக்கதாக இல்லாவிடின் இடித்துரைத்து மேலும் வழங்கச் செய்வார்.

இவர் திருச்செங்கோட்டுப் புராணத்துக்கு உரையெழுதி யிருப்பதுடன், திருச்செங்கோட்டு மாலை, பாகம் பிரியா அம்மன் ஊஞ்சல் முதலிய பல சிறுநூல்களையும் எழுதியுள்ளார். உரை யெழுதத் தொடங்கிய காலத்தைக் கீழ் வருஞ் செய்யுள் விளக்கு கிறது:

" ஏர்விளம்பி வருடமதில் சிரவணத்திங்
களிற்பதினன் கினிய தேதி
சீர்விளம்பி மதிக்கிழமை அமரபக்கம்
பதின்மூன்றாந் திதிநாட் பூசம்
தேர்விளங்கு திருவீதி நாககிரி
மான்மியத்தைத் தெளிந்து தேர்ந்து
சூர்விளங்கு புலனமைசிற் றம்பலவன்
உரையெழுதத் தொடங்கி னானே."

## ௬௭௫. சின்னணக் கவுண்டர் (குறிச்சி) (1896)

" மாமேவு மாம்பிரமா நதிவளஞ்சூழ்
குறிச்சிநகர் வாசன் வாணி
நாமேவு காசியுடை யாற்கிளையோன்
சின்னணனென் னுமன்".

என்று கூறப்பெற்ற இவர் தாராபுரம் தாலூகா குறிச்சிக் கிராமம் கம்பளியம்பட்டி பூலாந் தோட்டம் என்னுமிடத்தில் இருந்தவர். மகாவித்துவான் என்று பாராட்டப் பெற்றவர். இவர், 'உண்ணு முலையம்மன் சதகம்' என்னும் நூலைப் பாடியுள்ளார். நூலைப் பாராட்டிக் காங்கயம் சேடாசல நாயுடு, கொடுமுடி சந்தனம் பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" சகலமும் நமக்குளே அல்லாது கோவிலில்
நாதனென்றும் இல்லை யென்பார்
சமுசார மாய்கையது வினை தொல்லையாம்
சந்நியாசம் நல்ல தென்பார்

பகரரிய வேநாக மம்புரா ணங்களைப்
பழுதுமுன் சொன்ன தென்பார்
பரிவாக ஈரேழு புவனந்தி லும்புண்ய
பாவமே நில்லை யென்பார்
மகிமையுள பனிரண்டு சமயமும் சமயத்துள்
மந்திரமும் இல்லை யென்பார்
வாயிலிப் படியுரைப் பார்கள்சில பேர்தங்கள்
மனதில்மெய்ஞ் ஞானம் அறியார்
நகைமையுடன் உலகைப் பழித்திகழும் அறிவிலாச்
சண்டாளர் மெத்த அம்மா
தருமேவும் அருணகிரி ஈசர்பால் உறையுலகு
தாயுண் முலையம்மையே''

என்பது சதகத்தில் அஞ்ஞானிகளைப் பற்றிய பாட்டு. சதகம் அறிவுநலந் திகழ்தற்குரிய பல செய்திகளை விரிவாகக் கூறுகிறது. பெரும்பாலும் சதக நூல் வழியையே இச் சதகமும் பின்பற்றியுள்ளது.

## சஎகூ. சின்னக்கனி நாடர்—தூ. ச.
(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் சிவகாசியில் வசித்திருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் சங்கண நாடார் என்பர். இவர் இலக்கண இலக்கியங் கற்றுப் புலவராக விளங்கியிருந்ததோடு மாணவர் பலருக்குக் கல்வி போதித்துக்கொண்டிருந்தார். சுப்பைய நாடார் முதலியோர் இவருடைய மாணவர்கள். இவர் மேற்படி சுப்பைய நாடார் இயற்றிய பதிகத்திற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

'' முனந்தரங்கப் பயவுநதி முளைத்தெழுபார்க்
கவியுடன்பா முதல்வி யாளும்
அனந்தரங்கட் டுறவுசெயும் சிவகாசிப் பதிமுருகன்
அறுகான் மொய்க்கும்
வனந்தரங்கந் தரகரத்தில் அணிந்துவைத்த
சௌரிதிரு மருமான் மிக்கச்
சினந்தரங்க வரஞ்செயும்வேல் விடுத்த வுணர்
குலமனைத்துஞ் சிதையக் கோறும் ''

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று. இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரம் ஒன்றுந் தெரியவில்லை.

## சஎஎ. சின்னச்சாமி ஐயங்கார் (முகிலார்)

(1871)

இவருடைய பெயர் முகிலார் சின்னச்சாமி ஐயங்கார் என்று வழங்கியதோடு ஆசூரி வேங்கட சேஷாத்ராசாரியர் என்றும் வழங்கியது. இவர் 'திவ்யதேசப்ரபாவ சிந்தாமணி' என்னும் 'நூற்றெட்டுத் திருப்பதிக் கீர்த்தனை' நூல் பாடியுள்ளார். நூல் முழுவதும் இசைப் பாடலாக அமைந்து விளங்குகின்றது. திருவெள்ளியங்குடி கோலவில்லி ராமன் விடயம் என்னும் தலைப்பில் வரும் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

" மகிதனிலே மகிமைநிறை வெள்ளி வாழும்
மாநகரில் உத்பலமாம் விமானந் தன்னில்
தகைமைநிறை மரகதமா வல்லி யோடு
சக்கிரதீர்த் தந்தருகில் தனையோப் பில்லா
அகமகிழும் இலக்குமணன் சத் துருக்க னோடு
அணிபரதன் அனுமனணி மழைக்கோ ளேத்தப்
புகழரவின் மிசைவளரும் சீரா மநின்
பொன்னடிக்கென் னுலணியும் புகழ்சேர்ப் பாயே."

'இவர் வேதசமாச கண்டனம்' என்னும் உரை நடை நூல் ஒன்றும் எழுதியுள்ளார். இவர் சென்னை மாநகரில் வாழ்ந்திருந்தார்.

## சஎஅ. சின்னத்தம்பிப் பிள்ளை—தி. கி.

(20 - நூ.)

இவர் ஆங்கில மொழியிலுந் தமிழ் மொழியிலும் வல்லவர். ஆங்கில மொழியில் இருந்த கதைகள் பலவற்றை இவர் தமிழில் மொழிபெயர்த்துத் 'துர்க்கிகள் கதை' என்னும் பெயரோடு வெளியிட்டிருக்கிறார்.

## சஎகூ. சின்னவீரப்ப செட்டியார்—மு.

(20 - நூ.)

தொண்டைவள நாட்டில் சென்னை மாநகருக்கண்மையில் உள்ள அகரம் என்னும் ஊரில் முத்துமாரிச் செட்டியார் என்பவ

ருக்குப் புதல்வராகத் தோன்றியவர். சிவபுரம் என்னும் ஊரில் எழுந்தருளியிருந்த பரமாநந்த சுவாமிகள் என்னும் பெரியா ருக்கு மாணவராகி அருளுரை பெற்றவர். இவர் பழநியாண்டவர் பேரில் கண்ணிகள், காப்பு, கீர்த்தனங்கள் முதலியன பாடி யுள்ளார். திருமயிலை சண்முகம் பிள்ளை நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். காப்பு வெண்பாவை அடியிற் காண்க:

"தேன்பொழியும் தென்பழநித் தேசிகனை யான்பாட
மான்தரித்த கையான் மதலையென—வான்புகழும்
பூதிபுனை நன்முனிவர் போற்றிசெயும் காமவல்லி
பாதிரிவி நாயகன்றுள் பற்று."

## சஅ௦. சின்னிய கவுண்டர் (இருகூர்மசரா)

இவர் கொங்குவள நாட்டில் இருகூர்மசரா அத்தப்ப கவுண் டன் புதூரில் இருந்தவர். விக்கினேசுவரமாலை அம்மன் பதிகம், ஆறுமுகமாலை முதலிய நூல்களை இயற்றியுள்ளார். நூல்களின் முன்னுள்ள இரண்டு பாடல்களை அடியிற் காண்க:

"பூத லத்தில் புலமைக் கவிகளைக்
காதலித்துக் கவிசொல எண்ணிநன்
கீத லத்தில் இயம்பின புன்கவி
காத லிப்பது கற்றவர்க் காண்மையே"

"பெருமைதங்கிய கோயமுத் தூர்சில்லா
பிரிவு ஆனது பல்லடம் தாலுகா
அருமைதங்கிய இருகூர் கிராமத்தில்
அருள்சிறந்தது அத்தப்ப னூர்வளர்
திருவு லாவிய காராள வமிசம்
சின்னத்தம்பி உரைத்த கவியிது
பருவ மாகவே ஓதி வைத்தகுரு
பண்புணர்ந்து பலந்தெளி வானதே"

## சஅக. சின்னைய உபாத்தியார் (பொய்கைப்பாக்கம்)

தொண்டைவள நாட்டில் பொய்கைப்பாக்கம் என்னும் ஊரில் இருந்தவர். மயிலாசலத்தில் எழுந்தருளிய முருகப் பெருமான்மீது இவர் அந்தாதி ஒன்று பாடியுள்ளார். அவ்வந்தாதி "மயிலாசலத்தந்தாதி" என்னும் பெயருடையது. இவருடைய

புதல்வராகிய பச்சையப்ப உபாத்தியாயரும் பெயரராகிய சபாபதி உபாத்தியாயரும் புலவர்களாக விளங்கினர். இவர்களிரு வரும் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"சேர்தந்த வாரிசப் பொன்னுந் தளவும் நிகழுமுத்து
நேர்தந்த வாணியும் வாழ்மயிலாசல நேயக்கந்த
னார்கந்த வாதி சயம்பெறு வள்ளிநெய் வானைபதி
யோர்தந்த வானைக் கிளையோரென் புந்தியி னுள்ளவரே"

என்பது நூலின் முதற் பாட்டு.

## சஅஉ. சின்னைய செட்டியார்—மு.

(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் மகிபாலன்பட்டி என்னும் ஊரில் தனவணிக மரபில் தோன்றிய இவர் நூல்கள் பலவற்றை நுணுகி யாராய்ந்து சிறந்த அறிவாளியாகத் திகழ்ந்தார். இவர் அவ்வக்காலங்களில் நிகழ்த்திய சொற்பெருக்குகளையும் எழுதிய கட்டுரைகளையும் ஒன்ருய்த்தொகுத்து "வியாசங்களும் உபந்நியா சங்களும்" என்னும் பெயரோடு பெரிய நூலாக வெளியிட்டுள் ளார். அதனில் கடவுளும் அன்பும், இங்கிலீஷ் அரசாட்சியும் இந்தியாவும், கல்வியறிவில்லாத பெண்களும் குடும்ப வாழ்க்கை யும், வீண் அழுகை, உலோபியின் சரித்திரம், கண்ணுள்ள குருடர்கள், நமக்கு நல்ல துணை எது? முதலிய முப்பத்தாறு அரியகட்டுரைகள் அடங்கியுள்ளன. இந்நூலைப் பாராட்டி, சுப்பிரமணிய ஐயர், ப. நாராயண ஐயர், தேவகோட்டை அருணா சலஞ் செட்டியார், கானடு காத்தன் அண்ணாமலைச் செட்டியார், பெத்தாச்சி செட்டியார் முதலியோர் சிறப்புரை வழங்கியுள் ளார்கள்.

## சஅங. சின்னைய பண்டிதர்

(19 - நூ.)

இலக்கண இலக்கியங்கற்றுப் புலமை பெற்றிருந்ததோடு மருத்துவத் துறையிலும் தேர்ச்சிபெற்றிருந்தார். நந்தனார் சரித்திர விலாசம் என்னும் நாடகத்தை இவர் இயற்றியிருக்

கிறார். கடவுள்மாலை என்னும் நூலுக்கு இவர் பாடிய சாற்றுக் கவியை அடியிற்காண்க.

" பூசிக்கும் வாகடமுந் தமிழும் ஓர்ந்து
புலவன்சின் னசுவாமி புகன்ற செஞ்சொல்
வாசிக்கும் வாயினிக்கும் கேட்கும் காதும்
வனமகிழ்ச்சிப் புளகாங்க முறவும் யாரும்
ஆசிக்கும் முக்கனியோ கண்டோ தேனோ
அருமமிழ்த மோதிவ்ய பலபற் சந்தப்
பாசிக்கும் கடவுண்மா லைதி ரிஇயப்
பாவான ருவகைபூப் பனவக் காலே "

## ௪௭௪. சின்னையா முதலியார்—கி.
## (1910)

தொண்டைவள நாட்டில் பனைப்பாக்கம் என்னும் ஊரில் செங்குந்தர் குலத்தில் கிருட்டிணப்ப முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். மொ. நாராயண முதலியார் என்பவரிடங் கல்வி கற்றார். "வணிகவஞ்சி விலாசம்" என்னும் நாடகம் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது. நூலைப்பாராட்டி வித்துவான் சிவப்பிரகாசையர், பாலூர் வேலுத் தேசிகர், எல்லப்ப முதலியோர் என்போர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். பின்வருங் காப்புச் செய்யுள் வணிகவஞ்சி விலாசம் எதுபற்றிப் பாடப்பட்டதென்பதை விளக்குகிறது:

" மருவளர் கடுக்கைசூடி மான்மியம் இயம்பா நிற்கும்
திருவிளை யாடல் தன்னில் செப்பிய வன்னி கூவம்
பொருவறும் இலிங்கம் மூன்றும் புகரற வரவ ழைத்த
பெருகதை விலாசஞ் செய்யப்பேழ்கய முகவன் காப்பே"

### குணசிலி தாலாட்டல்

கண்ணேயென் கண்மணியே கற்பகமே கற்கண்டே
பண்ணே பசுங்கிளியே பைந்தொடியே கண்வளராய் (கண்)
நந்தா மணிவிளக்கே நாயகமே நறுந்தேனே
சிந்தா குலந்தீர்த்த செந்திருவே கண்வளராய் (கண்)
ஆரா அமுதேஎன் அறிவுள்ள செந்தேனே
தீராத பெண்கலியைத் தீர்த்தவளே கண்வளராய் (கண்)
தாரார் தனபதிக்குந் தாலைச் சிவனருளால்
பேராக வந்துதித்த பெண்ணரசே கண்வளராய் (கண்)

இவர் 'ஆலடி விநாயகர் பதிகம்' என்னும் நூலும் பாடியுள்ளார்

## சஅ௫. சீதாராமையர்—டீ. எஸ்.

(20 - நூ.)

இவர் திருவனந்த புரத்தில் புத்தன் மடத்தில் இருந்தவர். "சுபத்திரா பரிணய நாடகம்" முதலிய நாடகங்களை இவர் இயற்றியுள்ளார்.

> " சுந்தரதன் மேனிச் சுபத்திரைகல் யாணத்தைச்
> செந்தமிழில் நாடகமாய்ச் செப்புதற்குச்—சிந்துமத
> வாரணனே வெற்பிலுறை வாரணனே விக்கிநநி
> வாரணனே நீதுணையாய் வா "

என்பது விநாயக வணக்கப்பாடல்.

## சஅ௬. சீநிவாச அய்யங்கார்—து. சு.

(20 - நூ.)

இராமநாதபுரம் மாவட்டம் சிவகெங்கைத் தாலுகா நாட்டரசங் கோட்டையில் வாழ்ந்திருந்த திருப்புல்லாணி சுந்தரராச அய்யங்கார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் புலமைக் கல்வி கற்றுச் சிறந்த அறிஞராய் விளங்கினர். இவர் எதிர்க் கோட்டையில் எழுந்தருளிய கோபாலகிருட்டிணன் மீது பதிகம் கும்மி முதலிய நூல்கள் பாடியுள்ளார். சித்தாந்தசரபம் அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார் இந்நூலைப் பரிசோதித்துச் சிறப்புப்பாயிரம் வழங்கியுள்ளார்.

> " எந்நாளும் என்றனிடம் இருந்துமே குறைகள்தமை
> எப்பொழுதும் அகற்ற வேண்டும்
> இந்நிலந் தன்னிலே வேசிமார் பலராசை
> எண்ணிடா திருக்க வேண்டும்
> முன்னாளில் செய்திட்ட கர்மமது போக்கியே
> முன்வந்து காக்க வேண்டும்
> மூடர்கள் சிநேகமது வேண்டா திருக்கவும்
> முழுதுமே அருள வேண்டும்
> சின்னாளில் உன்திரு ஆலயம் செழித்திடச்
> சீருடன் திருத்த வேண்டும்
> சிறப்புடன் வேதியர்கள் மறையுடன் நீதிநூல்
> சீர்மையுடன் ஓங்க வேண்டும்

பன்னுளும் பதிகங்கள் பாடியே பாகவதர்
பரவெதிர்க் கோட்டை நகர்வாழ்
பண்புமிகு கோதைமார் பணிந்திடப்பெற்றவா
பரமகோ பால கிருட்ண ''

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௪௮எ. சீநிவாச ஐயங்கார் (பாலகவி)

## (1870)

சோழவள நாட்டில் திருவரங்கம் பெரியகோயில் உபய வேதாந்த கோமடத்தில் இருந்தவர். இவருக்குப் 'பாலகவி' என்றும் பெயர் வழங்கியது. இவர் கோயிலந்தாதி என்னும் நூலைப் பாடியுள்ளார்.

'' தானவரங்க மழியப் புடைத்துத் தமரிலரி
தான வரங்கம் பெருமையடையத் தருவரினி
தானவரங்கம் துயில்வோர் திருவடி தஞ்சமென்றால்
தானவரங்க ணெடுத்தருள் செய்வர் தனிமனனே ''

என்பது நூலில் இருபதாவது பாட்டு. நூலைப் பாராட்டி மதுரை அரங்கநாதபாரதி, புரசை சபாபதி முதலியார், கோ. இராசகோபால பிள்ளை, திரிசிரபுரம் இலக்கணம் ஆறுமுகம் பிள்ளை, உறையூர் முத்துவிர உபாத்தியாயர், திரிசிரபுரம் சோமசுந்தர முதலியார், மதுரைநாயக முதலியார், திரிசிரபுரம் சாமிநாத பத்தர், உறையூர் விசயரங்க பிள்ளை முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௪௮௮. சீநிவாச ஐயங்கார்—கு. ரா.

## (20 - நூ.)

பி. ஏ. வரையில் ஆங்கிலக்கல்வி கற்றவர். இவர் ''மிருச்சகடிகை, வித்யாரண்ய நகரம், நன்றியறியா மகன், ஓர் உழவன் மகள், நரபலியீடு'' முதலிய நூல்களையும் இயற்றியுள்ளார். வி. கோ. சூரியநாராயண சாத்திரியாரிடம் தமிழ் கற்ற சிறந்த மாணவர்களில் இவரும் ஒருவர். இவர் இராமாநுச ஆசாரியார் என்பவரோடு சேர்ந்து '' அபிநவ பத்திரிகை '' என்னும் பெயரோடு பத்திரிகை யொன்றையும் நடத்தினர்.

மிருச்சகடிகையை இவர் இயற்றும் பொழுது இவருக்குத் துணை புரிந்தவர். டி. ஏ. சீநிவாச ஐயங்கார் என்பவராவர்.

## சஅகூ. சீநிவாச ஐயங்கார்—எம். ஆர். (20 - நூ.)

இவர் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் ஆங்கிலத் தமிழ்ப் புலவராக இருந்தவர். பாண்டித்துரைத் தேவருடைய கட்டளையின்படி இவர் சுமதி சதகம் என்னும் நூலைத் தெலுங்கில் இருந்து தமிழில் மொழிபெயர்த்துப் பாடியுள்ளார்.

" வெந்திறல்மிக் கோனேனும் மென்மனையை அன்னவடன்
தந்தைமனையிற் பலநாள் தங்கவிடல்—சந்தைக்
கடையில்விலை கூறியந்தக் காரிகையை விற்று
விடலென்று நன் மதியே விள் "

என்பது சதகத்தின் இருபத்தைந்தாவது பாடல்.

## சகூ0. சீநிவாச ஐயர்—பி.

" ... ... ... ... ... ... ... ...
காவிரி புரக்குங் காவிரி நாட்டின்
தெய்வந் தங்கிய திறல்விளங்கு மூதூர்
ஐவநல் லூரெனும் அரும்பதி தனக்கே
தொல்குடிச் சுட்டிய தொடர்வினைப் பற்றலர்
முற்றிய அறத்தின் முறைமை யாளர்
காமங் கடுஞ்சினங் கடிந்திடு காட்சியர்
தொன்மறை வழிவரு துகடீர் செல்வர்
சேஷாத் திரியெனுஞ் சீர்மிக வாய்ந்த
பிச்சு வையரும் பீடுறு வடமீன்
கற்பிற் சான்ற கவின்கொள் அம்மையாம்
சீதா லக்குமியும் செய்திடுந் தவத்தின்
பயனாய் வந்த பழிதீர் செல்வன் "

என்று பாராட்டப்பெற்ற இவர் ஐவநல்லூர் என்னும் ஊரில் பிச்சுவைய ரென்பவருக்கும் சீதாலக்குமி என்பவருக்கும் புதல்வராகத் தோன்றினர். தமிழ்க் கல்வியை நன்கு கற்க வேண்டுமென்று விரும்பிய இவர் தக்க அறிஞர்களிடத்தே கற்றுப் புலமை பெற்றார். சிதம்பரத்தைச் சார்ந்த விருதாங்க நல்லூர் என்னும் ஊரில் கல்விச்சாலை யொன்றில் தலைமையாசிரியராக

அமர்ந்து தமிழ்ப்பணி புரிந்தார். 'திருக்கூடலையாற்றூர் மும் மணிக்கோவை' என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றிருக் கிறது. திருத்தில்லை, தில்லைநாயக முதலியார், பெருந் தோட்டம் தெ. சி. துரைசாமிப் பிள்ளை, சிதம்பரம் ஞா. சண்முகத்தம்பிரான் கு. வேங்கடாசலம் பிள்ளை, கலியமலை ந. சந்திரசேகர நாயகர், ந. சுப்பராயப் பிள்ளை ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

" ஆனந்த வெள்ளத் தழுந்தவென் றுமல் அநுதினமும்
மானந்த நோக்கின் மகளிர்தம் இன்பம் மகிழ்ந்துநின்றேன்
நானந்த மில்லாத் தமிழ்முனி பூசை தனக்களிந்த
தேனந்து கூடலை ஆற்றூர் உறைதரு தேசினனே "

என்பது நூலில் ஒரு பாட்டு. இவர் இவ்விருபதாம் நூற்றாண் டினரே.

## சகூக. சீநிவாச ஐயர் (யசுர்வேதி)

இவர் வாழ்ந்திருந்த காலம் இடம் முதலியன விளங்கவில்லை. இவர் 'திருவதிட்டகுடி சிவத்தல புராணம்'' என்னும் நூலை இயற்றியுள்ளார்.

" ஆலகன் னியர்க ளாட அரம்பையர் சிந்தம் பாடக்
கோலமங் கையரா லாத்தி கொண்டுமங் களங்கள் பாட
வேலையின் முழக்க மென்ன வேதியர் முழக்கு ஞான
சீலர்தம் முழக்குந் தேவர் செய்முழக் கெங்குங் கொள்ள "

என்பது அருந்ததி திருமணச்சருக்கத்தில் ஒரு பாட்டு.

## சகூஉ. சீநிவாசக சுவாமி (அருப்புக்கோட்டை)

இவர் பாண்டிவள நாட்டில் அருப்புக்கோட்டையில் இருந்தவர். பொட்டுலுப்பட்டி என்னும் ஊரில் திருக்கோயில் கொண்டுள்ள பாம்பாலம்மன் மீது இவர் பதிகம் ஒன்று பாடியுள்ளார். அப்பதிகம் "பாம்பாலம்மன் பதிகம்" என்னும் பெயரையுடையது. பதிகப்பாடல் ஒன்றை அடியிற் காண்க:

" பேதைநான் இதுவரையும் நீதியது கற்றிலேன்
பேசுவது பொய்யே அலால்
பிறிதொன்றும் அறிகிலேன் வெறியாடல் கற்றுளேன்
பின்விளைவ தறியேன் காம

வேதையிற் கட்டுண்டு மாதர்தமை ஆதாரம்
என்னமனம் உன்னி உன்னி
வேண்டுவ புரிந்துடலை ஆண்டதைக் காத்துளேன்
வேசையரின் உறவு கொண்டேன்
பாதையிற் சென்றிடேன் நியவரின் நேசமே
பன்னாளுங் கொண்ட பாவி
பத்தியுட னாலயம் சுற்றிடேன் நாவினால்
பாடிடேன் சமய மாறின்
ஓதையது கேட்டிலேன் மாயா விநோதரி
ஓங்காரி நாலு வேதம்
ஓங்குபரி பூரணி நாகமணி யம்மையே
யோகவா நந்த வாழ்வே.''

## சகூரு. சீனிவாச சண்முகம் பிள்ளை

சென்னை மாநகரில் வாழ்ந்திருந்தவர். கோ. இராசகோபால பிள்ளை என்பவரிடம் கல்வி கற்றவர். "ஏகாதசி விரத மான்மியக் கொம்மிப் பாட்டு'' என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார்.

'' என்னி யயனால கந்தை யடைந்தவற்
கிதெல்லாங் கூற அவனறிந்து
பென்னங் கொருத்தியை உண்டாக்கி யேசெய்த
பேதைமை கூறி அடியுங்கடி—மன
வேதனை கூறி அடியுங்கடி ''

என்பது கொம்மிப் பாட்டில் பதினாருவது கண்ணி.

## சகூச. சீனிவாச சர்மா—மு. ரா.
## (1907)

சோழவள நாட்டில் கௌரி மாயூரத்தில் இருந்த புலவர். மாயூரத்தில் திருக்கோயில் கொண்டுள்ள அபயாம்பிகை அம்மன் மீது 'அபயாம்பிகை பதிகம்,' 'அபயாம்பிகை மாலை,' சங்கராச் சாரியார் மீது 'சற்குரு மணிமாலை' முதலியன இயற்றியிருக் கிறார். அபாயம்பிகை பதிகத்தில் ஒரு பாடலை அடியிற் காண்க.

'' பெருந்தவஞ் செய்தெனைப் பெற்றதாய் தந்தையர்
பேணியே வளர்த்தெடுக்கப்
பேதைமைக் குழவியாய்த் தருணனாய் உலகநடை
பேசவாய் கற்ற பின்னர்

திருந்தியறி நியமாதி விரதங்கள் சிவபூசை
செபதவஞ் செய்தும் அறியேன்
தீர்த்தா டனங்களும் என்ஞான்கு தருமமும்
சீருடன் இயற்றி அறியேன்
பொருந்தவென் மனையறம் புரிந்திலேன் புன்மைசெய்
பொறிபுலன் வென்றும் அறியேன்
புதுமணி பூண்டுனது பூங்கோயில் வலம்வந்து
போற்றியறி யேனு யினேன்
அருந்தியிடர் உழல்கின்ற பிணமாகி இவையறிந்
தஞ்சியுன தருகு வந்தேன்
அயனாதி அமரர்தொழ மயிலாடு துறைவாழும்
அபயாம் பிகைத் தேவியே ''

## சகூ௫. சீனிவாச சாத்திரிகள் (திருத்தில்லை) (1892)

இவர் திருத்தில்லையில் இருந்தவர். 'சதாசார தீபிகை' என்னும் உரைநடை நூலை இவர் இயற்றி வெளியிட்டுள்ளார். ஒவ்வொருவரும் நாள்தோறும் மேற்கொண்டொழுகற் பாலன வாகிய சீரிய நெறிமுறைகள் இந்நூலில் விளக்கமாக எழுதப் பட்டுள்ளன. சிதம்பர மான்மியம், சிதம்பர இரகசியம், மும் மணிக் கோவை, குயிற்பண், விபூதி மான்மியம், ஆன்மாவும் சரீர மும், மறு பிறப்பு, அட்டாங்கயோகம், மாதர் நீதி, சிவசங்கர தீட்சிதர் கீர்த்தனை முதலிய பிற நூல்களையும் இவர் அச்சிற் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். "தானே தோய்த்த வஸ்திரத் தைத் தரித்தே தன் கிரியைகளை நடத்தல் வேண்டும். வண்ணான் தோய்த்ததும் தோய்க்காத புதியதும் கர்ம காலங்களில் தரிக்கக் கூடாது. முற்கூறிய குற்றமற்ற வஸ்திரங்களே எல்லாக் கர்மங் களிலும் உரியதெனக் கொள்ளற் பாலது. கச்சையிடாதவன், நாலைக் கச்சமாகத் தரிப்பவன், குறுக்கே கச்சமிடுபவன், மேல்மூத்துக் கட்டுபவன் அரைஞாணிற் கச்சமிட்டவன், உத்தரிய மில்லாதவன் இவர்கள் வஸ்திர மில்லாதவர்களுக் கொப்பாவராத லால் வைதிக கருமங்களிலேனும் மற்றெக் கருமங்களிலேனும் அநதிகாரிகளேயாவர். மேலும் அழுக்குடை பூண்டவன், ஈரவுடை தரித்தவன், எரிந்தவுடை பூண்டவன், உடையில்லாதவன் இவர் களும் நக்கினர் (உடையில்லாதவர்க் கொப்பானவர்) எனப்படு

... வஸ்திரந்தரிக்கும் வேளையில் உத்தரியத்தைத் தலையிற் சுற்றிக்கொள்ளுதல் வேண்டும்.'' இது ''சதாசார தீபிகை''யில் ஒரு பகுதி. நூல் முழுவதும் இவ்வாறே ஒழுகலாறுகளை உரைத்துக்கொண்டு செல்லுகிறது.

## சசுசு. சீனிவாச தாதாசாரியர்—கோ.

### (19 - நூ.)

இவர் சேலத்தில் ஐயாவையங்கார் என்பவருக்கு அருமைப் புதல்வராகத் தோன்றி ஆங்கிலந் தமிழ் ஆகியவைகளை நன்கு கற்றுத் தேறினர். ரெவினியூ சர்வே அலுவலகத்தில் தலைமைக் கணக்கராகப் பணி புரிந்தார். செய்யுட்கள் பல செய்த இவர் நூலியற்றிய செய்தி தெரியவில்லை. 'துருவதாசு சரித்திரம்' என்னும் நூலுக்கு இரண்டு செய்யுட்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று:

'' அண்டர்மா முனிவர்க் கெட்டா அருமையாம் பதவிபெற்ற
பண்டிதன் துருவன் சீர்த்திப் பனுவலாம் அமுதை நல்லோர்
உண்டிரு வினோத விர்க்க உதவினன் தமிழாற் பாரில்
கொண்டல்வன் னன்குள் போற்றுங் குருசாத குமனன்மாதோ ''

என்பதாம்.

## சசுஎ. சீனிவாச நாயக்கர்—வே.

### (1913)

'' உத்தமக் கவிஞர்கள் உளங்களிந் துவப்பத்
தானம் பலவும் தகுவன வழங்கி
வான்மணி குயிற்றிய மணித்தவி சிருந்து
அரங்கேற் றினனால் அணிதிகழ் மாடம்
திரம்பெறு வீதித் திருநா கையினில்
வாழ்தரு கம்மவார் மரபினில் உதித்த
தாழ்விலா வேங்கட சாமிவேள் இயற்றும்
தவத்தினில் போந்த தனையனும் தனதன்
உவந்துபொன் னிரவலர்க் குதவுசீர் வள்ளல்
அந்தனைப் போன்றெனை ஆதரித் துலகில்
வித்தக னெனப்பேர் விளங்கிட விதித்த
சீரான் மன்னிய சீநி வாசப்
பேரால் உயர்ந்த பெரும்புக ழோனே ''

என்று புகழ்ந்து பாராட்டப்பெற்ற இவர் எட்டையபுரம் நாட்டுப் பசுவந்தனையைச் சேர்ந்த நாகம்பட்டி என்னும் ஊரில் வேங்கடசாமி நாய்க்கர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர். கருப்பையாப் பாவலர் என்பவரிடம் தமிழ் கற்றுப் புலமையடைந்த இவர் "கண்ணபிரான் அற்புதத் தோத்திரப்பா" என்னும் புகழ்நூலைப் பாடியுள்ளார். வேங்கடசாமி நாய்க்கர், நல்ல குற்றாலம் பிள்ளை, மு. காசிவிசுவநாத பிள்ளை, சாந்தலிங்க சுவாமிகள் மரபு அருணாநந்த சுவாமிகள், நாகப்ப நாய்க்கர், குமாரபுரம் சொக்கலிங்கத் தேவர், நாகம்பட்டி குருசாமிப் பிள்ளை, வெங்கிட்டி ரெட்டியார், கருப்பையாப் பாவலர், கருப்ப சுவாமி செட்டியார், செம்பூர் வி. ஆறுமுகஞ் சேர்வை ஆகியோர் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

"ஓங்கியநன் மலையினிடை உதித்துத் தென்னன்
 உயர்புகழிற் கிடந்துசங்கத் திருப்பிருந்து
தீங்கரிய வைகைநதி அதில்த வழ்ந்து
 செந்தியில் பலர் அறிய நாப்பண் நின்று
தாங்கரிய கலைபயில்வோர் சிந்தை தன்னில்
 சந்ததமும் புந்திமகிழ் வொடுந டந்து
பாங்குபெறு நெடும்புவியில் வாசஞ் செய்யும்
 பாரதிநன் பதமலரைப் பணிதல் செய்வாம்"

என்பது காப்புப் பாடல்களில் ஒன்று. இப்பாட்டுப் 'பொருப்பிலே பிறந்து தென்னன்' என்னும் பாட்டை அடியொற்றி நிற்றல் காண்க.

## ௪௬௮. சீனிவாச ராகவாச்சாரியார்—தூ.

(19 - நூ.)

"..............................................................
தூப்புலெனுங் குடிப்பிறந்தான் துய்யதிரி
 சூத்திரமார் துகடீர்மார்பன்
சேப்புலசே டாத்திரியாம் வரமறையோ
 னருள்புதல்வன் தேசுமிக்கோன்
பாப்பொலிவிஸ் வாமித்ர கோத்திரத்தோன்
 பண்புமிக்கோன்"

என்று பாராட்டப்பெற்ற இவர் "பிருகந் நாரதிய புராணம்" என்னும் உரைநடை நூலை எழுதியுள்ளார். வ. கணபதிப்

பிள்ளை, திருப்பாதிரிப் புலியூர் சிவசிதம்பர முதலியார், பறங்கிப் பேட்டை இலட்சுமணப் பிள்ளை, மேட்டுப்பாளையம் சீனிவாச வரதாச்சாரியார், தஞ்சை சுப்பராயலு நாயுடு, கூடலூர் தெய்வ சிகாமணி முதலியார், களக்காட்டூர் வரதாச்சாரியார், க. வ. திரு வேங்கட நாயுடு ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௪௯௯. சீனிவாச்சாசாரியர் (கோழியாலம்)

### (20 - நூ.)

இவருடைய முன்னோர்கள் சோழவள நாட்டில் திருவரங்கத்தில் வசித்திருந்தார்கள். பிறகு மருத்தாம்பாடி, கோழியாலம் என்னும் ஊர்களில் குடியேறினார்கள். இவர் அரங்க ராமாநுச மகா தேசிகன் என்று புகழ் பெற்றிருந்த கேதாண்டிப்பட்டி சுவாமிகளிடத்தில் கல்வி கற்றுச் சிறப்படைந்தார்.

பிறகு தம்முடைய ஆசிரியர் மீது 'அரங்க ராமாநுச நூற்றந்தாதி' என்னும் நூலை இயற்றினார். இந்நூலின் நயத்தைக்கண்ட ஆசிரியர் 'ஆழ்வார் ஆசார்யர்'களின் வரலாற்றை இவ்வாறு பாடல்களில் இயற்றி வெளியிடுவது நலமென்று கூறினார். இவரும் அவ்வாறே ஆழ்வார்களின் வரலாற்றைச் செய்யுள் வடிவாக இயற்றி வெளியிட முடிவு செய்தார்.

பிறகு பல கல்லூரிகளில் தமிழாசிரியராகத் தொழில் புரியத் தொடங்கினார். மைசூர்ப் பல்கலைக் கழகத்தில் பத்து ஆண்டுகள் வரை ஆசிரியராக இருந்தார். அப்பொழுது அந்நாட்டு அரசியினுடைய வேண்டுகோளுக்கிணங்கி "மைசூர் அரசு" என்னும் பெயருடன் செய்யுள் வடிவான நூல் ஒன்றை இயற்றினார். அந்நூலில் மைசூர் அரசர்களின் வரலாறு கூறப்பட்டிருப்பதோடு அந்த அரச வழிமுறை பழங்காலத்திய யது குலத்தைச் சேர்ந்ததென்றும் எடுத்து நிலை நிறுத்தப்பட்டுள்ளது.

தம்முடைய ஆசிரியரின் கட்டளையை நிறைவேற்றுமல் வேறு வேலைகளில் ஈடுபட்டுவிட்டதைப்பற்றி ஆசிரியர் உள்ளம் வருந்தினார். பிறகு ஆழ்வார்களின் வரலாற்றைத் "திவ்யசூரி சரிதம்" என்னும் பெயரோடு பாடத் தொடங்கினார். இடையே கன்

ணேய் ஏற்பட்டது. தாம் தொடங்கிய வேலையை ஒருவாறு நிறைவேற்றி விட்டு மன அமைதியோடு திருமாலைப் போற்றிக் கொண்டிருந்தார். பிறகு 1917 ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வை நீத்துப் பரமபதத்தை அடைந்தார்.

இவரால் இயற்றப்பெற்ற திவ்யசூரி சரிதத்தில் திருமழிசையாழ்வார் வைபவம், நம்மாழ்வார் வைபவம், குலசேகராழ்வார் வைபவம், விட்டுணு சித்தர் வைபவம், தொண்டரடிப் பொடியாழ்வார் வைபவம், ஆண்டாள் வைபவம், உறையூர் நாய்ச்சியார் வைபவம், திருப்பாணாழ்வார் வைபவம், திருமங்கையாழ்வார் வைபவம், நாதமுனிகள் வைபவம், ஆளவந்தார் வைபவம், எம்பெருமானார் வைபவம், வேதாந்த தேசிகர் வைபவம் முதலியன அடங்கப் பெற்றுள்ளன. ஆண்டாள் வைபவப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

" திருவைத்த மார்பினியென் றெவரும் போற்றும்
திகழும்இந்தத் திருநாமம் தரித்த தேவர்
மருவுற்ற மணிக்குழையாய்க் குருகூ ரன்டை
மன்னுமிந்தத் திருப்பதிகள் மகிழ்ந்து பாராய்
பெருகுற்ற குறுங்குடியில் பிறங்கு நம்பி
பெருமானார் நின்டதிரு மேனி வாய்ந்த
உருவுற்ற உம்பர்பிரான் அயனுர் அந்த
உத்தமனை எழுபதின்பர் அருச்சித் துள்ளார் "

## ௫௦௦. சீனிவாசாச்சாரியார்—தொ.

(20 - நூ.)

இவர் திருவரங்கத்தில் வழக்கறிஞராகத் தொழில் புரிந்து கொண்டிருந்தவர். இவருடைய பெயருக்கு முன்னால் தொட்டியம் வீரவல்லி என்னுஞ் சொற்களும் காணப்பெறுகின்றன. வழக்கறிஞராக இருந்த இவர் நல்ல தமிழ்ப்புலமையும் அமையப் பெற்றிருந்தார். இவர் தம்முடைய தகப்பனாரின் நோக்கப்படி "சிரங்க நாயகிமாலை" என்னும் நூலைப் பாடியுள்ளார்.

" கூடாத வழியொழுகல் உயிர் கொல்லல்
ஊன்தின்னல் குணமறுங்கள்ளை யுண்ணல்
தேடாத பொருளினில் பேராசை பேணலோடு
செப்பருந் தீமை யொன்றும்

நாடாது நல்வழியில் நான் நடந்தால் அலது
நற்கதி நமிக்கு மதனுல்
ஆடாத மனமளித் தவைகளனு காதருள்
அரங்கநாயகியென்னேயே ''

என்பது சிரங்க நாயகிமாலையில் ஒரு பாட்டு.

## ௫0௧. சீநிவாசாச்சாரியார்—கே. கே, எம்.ஏ., எம்.எல்.

இவர் தஞ்சை மாவட்டத்தினர். ''நாத லோசனம், குண பூடணம், மாலதி, இன்பலதா'' என்னும் நாடகங்களை இயற்றி யுள்ளார். எம், ஏ. எம். எல். வரை கல்விகற்றவர்: நாடகங் களின் இடையிடையே பாடல்கள் போன்ற சிலவற்றையும் எழுதியுள்ளார். இரண்டை அடியிற் காண்க.

''இறையே கேளிர் இம்மெய்ப் புலையர்
மறைபொரு ளறியார் மாண்பொன் றறியார்
நன்மொழி யாகுந் தென்மொழி யொன்றே
இன்மொழி யுலகில் வன்மொழியாவது
வடமொழியாமது வடுமொழி இன்னுங்
கெடுமொழியதுவே கேளிர் எனவே''

''அறஞ்செய இரும்பு
அரிவையெனில் கரும்பு—மற்
றனைத்துமே துரும்பு
அறிந்திலேயேல் திரும்பு.''

## ௫0௨. சுதரிசனம் கிருட்டிணமாச்சாரியார் (1924)

இவர் சென்னை திருவல்லிக்கேணியில் வாழ்ந்திருந்தவர். தமிழிற் சிறந்த புலமை பெற்றிருந்த இவர், சென்னை இராச தானிக் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராக அமர்ந்திருந்தார். அரிச்சந்திரன் சரிதை முதலிய நூல்களை இவர் எழுதியுள்ளார்.

''சீர்திகழல் லிக்கேணி சேர்பார்த்த சாரதிமால்
ஏர்திகழும் பொன்னுடனே என்னெஞ்சில்—பார்புகழும்
வாய்மையரிச் சந்திரன்தன் வன்சரிதை செப்புதற்குத்
தூய்மைமிகத் துன்னிடுக வே''

என்பது அரிச்சந்திரன் கதையின் காப்புப்பாடல்.

## ௫௦௩. சுந்தர ஆசாரி—கி

(20 - நூ.)

சென்னை சிந்தாதிரிப்பேட்டையில் கிருட்டிணப்ப ஆசாரி என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் அப்பூதியடிகள் நாயனார் வரலாற்றை, "அப்பூதியடிகள் நாயனார் சரித்திரக் கீர்த்தனை" என்னும் பெயரோடு இசைப்பாடலாக இயற்றி யுள்ளார்.

"மறைமுதற் றேவர் போற்ற மாசிலா அன்ப ரெல்லாம்
கறைமிடற் றவனே யென்று கசிந்துளம் உருக வென்றும்
குறையிலாப் புலியூர் தன்னில் கான்மாறி யாடிநின்ற
இறைவனே சரிதை தன்னை இடரிலா தளித்துக் காப்பாய்"

என்பது கடவுள் வணக்கப் பாட்டு. இவர் ஆரணி மேடிகை சென்ன கேசவலு நாயுடுவிடம் கல்வி கற்றார். இவருடைய நூலைப் பாராட்டி, அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், சி. பச்சையப்ப நாயகர், ஆறுமுக ஆசாரி, மாணிக்க நாயகர், மருதம் வ. கந்தசாமிச் செட்டியார், கோ. சண்முகாச் சாரியார் முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

## ௫௦௪. சுந்தரத்தம்மையார் (திருவாமாத்தூர்)

(20 - நூ.)

இவ்வம்மையார் திருப்புகழ்ச் சுவாமிகளெனவும் முருகதாச சுவாமிகளெனவும் தண்டபாணிச் சுவாமிகளெனவும் பெயர் பெற்று விளங்கிய பெரியாருக்கு வாழ்க்கைத்துணைவியாக அமைந்தவர். செய்யுள் இயற்றும் திறம்பெற்றுத்திகழ்ந்த இவ் வம்மையார் அழகியநாதர் இரட்டையாசிரியமாலை, அபிராமமாலை, முத்தாம்பிகைமாலை, முத்தாம்பிகைபதிகம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். அழகியநாதர் இரட்டையாசிரியமாலைப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

"செம்பவள மனையவுன் திருவுருவி னழகும்வெண்
திங்களொளிர் சடையி னழகும்
செங்கரும் புச்சிலை வளைத்தமத னைப்பொடித்
திட்டசெங் கண்ணி னழகும்

அம்பனைய விழிமங்கை தன்னகக் குழந்தையொடும்
அருகினில் இருக்கும் அழகும்
ஆத்தியொடு கொன்றையும் பச்சறுகு வில்வமுதல்
அணிகின்ற சடையின் அழகும்
கம்பமத கரியுரித் தணிகின்ற அழகும்வெங்
கட்செவி புனைந்த அழகும்
கண்டுதொழு துருகாத பாவியே னுக்குனது
கருணையொரு சிறிது புரிவாய்
கும்பமுனி முதலோர்கள் வந்துபணி செய்திடும்
கோமாதை யூரி லென்றும்
கொஞ்சுபைங் கிளியினது செஞ்சொலும் புனைகின்ற
கோலா கலத்தெய் வமே''

## ௫௦௫. சுந்தரபாலகுமரசாமி (கல்போது)

(20 - நா.)

பாண்டிவளநாட்டில் வாடிமிட்டா சமீன் கல் போது என்னும் ஊரில் இருந்தவர். அறிஞர் பலரை யடைந்து தமிழ் மொழியை நன்கு கற்றுப் புலமை பெற்றார். பெருநிலக் கிழாருடைய செயலாளராக அலுவல்புரிந்துகொண்டிருந்தா ரென்று தெரிகிறது. பூதரவிலாசம் என்னும் நூலுக்கு இவர் இயற்றிய சிறப்புப் பாயிரப் பாடல் ஒன்றை அடியிற் காண்க:

'' திருமருவு மருதுரை யாண்ட வேந்தன்
செகமகிழு மகராச ராச யோகன்
திண்டிறல்சேர் நாகயகா மயன்றன் பேரில்
சிறந்தவளப் பேரைநகர் வாழ்ந்தோன் கும்பற்
பொருவுதமி ழவதானி பொன்னுங் கூடப்
புலவர்பிரான் பூதரவி லாசமொன்று
புகன்றநற்பின் நாணிக்கண் புதைத்த லோடு
புனைவன்டோச் சிமருங்கும் புகன்று வைத்தான்
அருமையொடு பெருமைமிக மேன்மே லோங்கும்
அவற்றைப்பாட் டுடைத்தலைவன் அன்புப்பேரன்
ஆசியகட் டாரிக்கா மயவேள் நீதி
அவைக்களத்தில் இந்நூலா சிரியன் பேரன்
கருணையுள வவதானி ராம லிங்கக்
கவிஞனரங் கேற்றல்தனைக் காதாற்கேட்டுக்
கலைமுனிவன் இவற்குநிகர் கான்பான் எண்ணிக்
கருகியுள மலைவாய்ச்சங் கமுமுற் றுனே. ''

## ௫௦௬. சுந்தரப் பிள்ளை—வே.
(20 - நூ.)

தொண்டை நாட்டில் திருவிரிஞ்சிபுரத்தில் கருணிக குலத்தில் தோன்றியவர். தந்தையாருடைய பெயர் வேலாயுத பிள்ளை. இவர் சிறந்த அறிஞர்; பள்ளிக்கூடம் ஒன்று வைத்து மாணவர்கட்குக் கல்வி கற்பிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். மகனாகிய சுந்தரப்பிள்ளை வல்லண்டராமம் என்னும் ஊரில் எழுந்தருளிய பொற்கோடீசுவரி மீது பதிகம் ஒன்று பாடியுள்ளார்.

"சீரணிந் தோங்கி வளபதி மேவிடுந் திவ்விய
தேசோன்ம யாநந்தியே
தேவியே பராபரி சிற்பரிமகேஸ்வரி
தேனேசௌ பாக்கிய மணியே
பேரணிந் தோங்கிய விஸ்வச் சொருபியே
பேரின்ப சுகவாரியே
பேசவரி தாகிய குங்கும நிரஞ்சன
பேதமல் லாந்தி பமே
நீரணிந் தோன் அயன் நாரணன் மகிழ்ந்திடும்
நீநிறை யதிகாரியே
நேமத்தி னிடைமூழ்கி சேமந்தி லாடிடும்
நேர்மைநிறை சிங்காரியே
பூரணி வாரணி காரணி நின்பதம்
போற்றவருள் புரியன்னையே
புகழ்கொண்ட வல்லண்ட ராமமதில் வாழ்கின்ற
பொற்கோ டீஸ்வரி பாலியே

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௫௦௭. சுந்தரம் பிள்ளை—குருமலை

இவர் சர்வசனமித்திரன் என்னும் பத்திரிகைக்கு உதவியாசிரியராக இருந்தார். 'பொற்றொடி' என்னும் நீண்ட தொடர் கதையும் வேறு சில நூல்களையும் எழுதியுள்ளார். சுதேசமித்திரன் பத்திரிகையிலும் ஆசிரியராக இருந்தார். இலக்கண நூல் ஒன்றும் எழுதி வெளியிட்டார். பல கட்டுரைகளைச் சுதேசமித்திரனில் எழுதினார். இவருடைய தமிழ்நடை அழகு வாய்ந்

தது. எளிய நடையில் பெரிய கருத்துக்களை யமைத்துத் தெளிவாய் விளங்க எழுதும் ஆற்றல் அமையப்பெற்றவர். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள், சுப்பிரமணிய ஐயர் வரலாறு, தாதாபாய் நௌரோசி வரலாறு, பாலகங்காதர திலகர் வரலாறு, சுரேந்திரநாத பானர்சி வரலாறு, இலசபதிராய் வரலாறு, விபின சந்திரபாலர் வரலாறு, கோபால கிருட்டிண கோகலே வரலாறு முதலியன.

## ௫௦அ. சுந்தரம் பிள்ளை. குரு—மா

இவரைப் பற்றிய விவரம் புலப்படவில்லை. இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் வாழ்ந்திருந்தவர். சமயப் பற்றுந் தமிழ்ப்பற்றும் மிக்கவர். 'பாமாலை' முதலிய நூல்களை இவர் பாடியுள்ளார். பாமாலை ஒவ்வோர் ஊரிலும் திருக்கோயில் கொண்டருளிய இறைவன்மீது பாடியது போலும். ஒரு பாடலை அடியிற்காண்க.

திருக்கோயிற் பட்டினம்

கண்ணானே கரந்தானே கருதுமனந் தானே
காணரிய மெய்யானே காண்பவரும் எவரோ
பெண்ணானே ஆணானே பெண்ணாணானே
பேசிடுமா றறியாத பேதைமதி யேனை
என்னானே என்னுவனே வேங்கியருள் வானே
எங்கெங்கு விடுவானே யாமெளிதே யுணர்தற்
கொன்னானே யானறியேன் உரைப்பாரைக் காணேன்
உயர்கோயிற் பட்டினத்தெம் உத்தமனும் அவனே.

## ௫௦௧. சுந்தரம் பிள்ளை (திரிசிரபுரம்)

(19 - நூ.)

இவர் திரிசிபுரத்தில் இருந்தவர். மீனாட்சியம்மையின் வரலாற்றை இவர் "மீனாட்சியம்மை நாடகம்" என்னும் பெயரோடு நாடகமாக இயற்றியிருக்கிறார்.

"தென்னவன் மகளாய் வந்து திசையெலாஞ் சயங்கொண் டாண்ட
கன்னியைக் குமரி தன்னைக் கருணையால் எம்மைக் காக்கும்
அன்னையை அமலை தன்னை அங்கயற் கன்னி என்னும்
பொன்னையன் புடனே நாளும் போற்றுவாஞ் சாற்று வாமே"

என்பது மீனுட்சியம்மை வணக்கம். இந்நூல் 1889 ஆம் ஆண்டில் முதற் பதிப்பு அச்சிடப்பட்டிருக்கிறது.

## ருகம. சுந்தரராச வைணவதாசர் (சிவகங்கை)

இவர் பாண்டிவள நாட்டில் சிவகங்கையில் இருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் முத்துக்கிருட்டிண வைணவதாசர். இவர் திருமாலிருஞ் சோலையில் திருக்கோயில் கொண்டுள்ள அழகர் மீது, வருகைப் பதிகம் தூதுமாலை முதலிய நூல்களியற்றியுள்ளார். வருகைப் பதிகத்தில் ஒரு பாடலை அடியிற் காண்க.

"கூவி யழைந்தேன் தேவரனு கூலா வருக குழலிசைத்த
கோவே வருக அடியர்மிடி குமைத்தாய் வருக கோருமென்பால்
மேவி வருக மேன்மைவினை விப்பாய் வருக விரவிவினை
விலக வருக கோலமிகு விமல வருக மேறுமென
நாவி யுவக்க நினதருளை அருள வருக வேறுதுணை
அறியேன் வருக உய்யும்வகை அமைய வருக அடல்நெடிய
மாவின் கொடிய உடல்கிழிய வகிர்ந்தாய் வருக வருகவே"
வளமுற் றிலகு சோலைமலை வாழ்வே வருக வருகவே.

## ருகக. சுந்தரலிங்கப் பிள்ளை (மதுரை) (1888)

இவர் மதுரை திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனத்தில் ஆதினப் புலவராக விளங்கி யிருந்தார். இயற்றிய நூல்களைப் பற்றிய விவரந் தெரியவில்லை. 'தென்காசைப்பள்ளு' என்னும் நூலுக்குப் பன்னிரண்டு பாடல்களாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

"இமயமலைக் கொடிகருணை சுரந்தளிந்த
திருமுலைப்பால் இனிது மாந்திச்
சமையமெவற் றினுஞ்சைவ சமயமே
சமயமெனத் தலத்தில் நாட்டி
அமையமுணர் கவுணியர்கோன் அருளியசெந்
தமிழ் வேதத் தருமை காட்டி
நமையமற உணர்த்தியபேர் வைகைவளம்
எந்நாளும் நல்கு நாடு"

என்பது சிறப்புப்பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ருகஉ. சுந்தராச்சாரி. சி.—கி.

(1908)

இவர் விஸ்வ குலத்தில் தோன்றிக் கல்வி கற்றுச் சிறப்புற்றவர். சென்னையில் இருந்தவர். இவர் 'தரும சுபாகர நாடகம்' என்னும் நாடகத்தை இயற்றியிருக்கிறார். தருமசுபாகரன் என்பவன் சப்தபுரி என்னும் பட்டணத்துக்கு அரசன். அவனுடைய மனைவியின் பெயர் அமுதாம்பிகை. மகனுடைய பெயர் ஞானசிகாமணி. தருமசுபாகரனுடைய அறநெறி முறைமையை நாரதர் சிவபெருமானுக்குத் தெரியப்படுத்துகிறார். சிவபெருமான் சனிபகவானை விட்டு அரசனைப் பலவாறு ஆராய்கிறார். பிறகு சிவபெருமான் தருமசுபாகரனுக்குத் தண்ணருள் செய்கிறார் என்பது கதை.

'கணவனை யன்றி வேறு
    கழறிடுந் தெய்வம் உண்டோ
இனமுறும் என்தாய் விடு
    எகினல் ஏசு வார்கள்
மணமுறு நின்னை விட்டு
    மறந்துநான் பிரிய மாட்டேன்
குணம்பெறும் நின்பின் னேயே
    கோமானே வருகின் றேனே''

என்பது நாடகத்தில் ஒரு பாட்டு.

## ருகௗ. சுந்தரி தாசர் (தரங்கை)

(1913)

இவர் தரங்கம்பாடி என்னும் ஊரில் இருந்தவர். பிற்காலத்தில் சென்னைமா நகரில் தங்கியிருந்தாரென்று தெரிகிறது. இவர் "திருவொற்றியூர்த் திரிபுர சுந்தரிமாலை"என்னும் நூலைப் பாடியுள்ளார்.

''கார்கொண்ட கூந்தலும் மின்னூர்
    முகமுங் கயல்விழியும்
வதூர்கொண்ட கொங்கையும்
    கூந்தளங்கையும் மணியிடையும்

ஏர்கொண்ட பாதமுங் கான
நிதமும் எனக்கருள்வாய்
சீர்கொண்ட மாஒற்றி ஊர்வாழ்
திரிபுர சுந்தரியே"

என்பது மாலையின் முதற்பாட்டு.

## ௫௧௪. சுந்தரேச ஐயர் (மதுரை)

(1912)

இவர் மதுரைமாநகரில் புலவராகத் திகழ்ந்திருந்தார். இயற்றிய நூல்களைப் பற்றிய விவரங் கிடைக்கவில்லை. இவர் இயற்றிய தனிப் பாடல் ஒன்றை அடியிற் காண்க.

"சீர்கொண்ட நின்திருத் தாதையடி பரவுமொரு
பிறியமறை முனிதன் உயிர்மேல்
சீறிவரும் மறலியை விலக்கிநிறை ஆயுளருள்
செய்தனன நன்றி யுமதிக்
கூர்கொண்ட க்ஷயநோயும் வருணன்கொள் குன்மமாம்
கொடியபிணி யும்போக் கினன்
குவலயம நில்தாதை செயல்மைந்தர் செயலெனக்
கூறுமறை மெய்யா கவே
பேர்கொண்ட நின்பொற் றலத்திருப் பணிசெயப்
பெரிதுபொருள் உதவி செய்யும்
பெருமைபெறு சன்மார்க்க சபைநிறுவி யும்நினைப்
பேணுமுயர் பழநியப்பன்
ஏர்கொண்ட உடலினுறு பிணிநீக்கி நெடிநாயுள்
ஈந்தருள் செயச்சிக் கலென்
எழிற்பதி விளங்குசிங் காரவே லவ உன்றன்
இணையடி வழுத்து வோமே"

## ௫௧௫. சுப்ப நாயக்கர்– கி.

(20 - நூ.)

இவர் கொங்குவள நாட்டில் கோயமுத்தூர் மாவட்டத்தில் உடுமலைப் பேட்டை தாலுகா அம்மாப்பட்டி புதூரில் காங்கலார் கிருட்டிணம நாயக்கர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றித் தக்க அறிஞர்களிடத்தில் கல்வி கற்றுச் செய்யுள்பாடுந்திற

மடைந்தார். 'பழநியாண்டவர்மாலை' என்னும் நூலை இவர் பாடியுள்ளார். பாப்புச்சாமி நாயுடு, அ. திருமலைசாமி அய்யர், விராட்சி மங்கலம் திரவியம் பிள்ளை, இராமசாமிச் செட்டியார் என்போர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

"இட்டமாய் இருந்த மானிடர் எல்லாம்
என்பொருள் அதிகமாய்ந் நின்று
துட்டனென் றென்னைத் தொல்புவி தனிலே
தூடணம் அநேகங்கள் பேசி
நட்டமே செய்ய நினைந்திருக் கின்றார்
நானிலந் தன்னிலே அவரைக்
கட்டமே படுத்திக் கசடரைத் துணிப்பாய்
கர்த்தனே பழநியாண் டவனே"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௫கக. சுப்பராய அய்யர்—வீ.
## (1911)

பாண்டிவள நாட்டில் இராமநாதபுரம் மாவட்டம் திருப்புத்தூர்ப் பிரிவு செந்நெற்குடி என்னும் ஊரில் வீமகவி என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் தந்தையாரிடமே கல்வி கற்றுக் கவிபாடும் புலமையடைந்தார். குமார பேட்டை என்னும் ஊரில் எழுந்தருளிய அழகிநாயகியம்மை மீது இவர் பதிகம் ஒன்று இயற்றினர். அப்பதிகம் "அழகிநாயகியம்மை பதிகம்" என்று பெயர் பெறும்.

"பொங்கிவரு கடலினிடை நீருண்டு மிகுமழை
பொழிந்திடப் போந்து நிற்கும்
மங்குல்நிகர் வடிவழகி மயிலனைய சாயலாய்
மாரனுக் கினிய மாமி
சிங்கவா கனிகௌரி மகிடனைச் சிறிவரு
தேமொழி எமக்க ருளுவாய்
அங்கனக மாரிபொழி செங்கனக வல்லிநிகர்
அழகிநா யகியம் மையே"

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு. இவருடைய தந்தையாராகிய வீமகவிராயரும் வீமகவிராயரின் தந்தையும் இவருடைய பாட்டனாரும் ஆகிய சுப்பராய ஐயர் என்பவருஞ் சிறந்த புலவர்கள். அவர்களும் நூல்கள் செய்துள்ளனர்.

## ௫௧எ. சுப்பராய சிவயோகியார் (குளத்தூர்)
(19 - நூ.)

இவர் குளத்தூர் என்னும் ஊரினர். வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலையுணர்ந்த இந்திர பீடத்தைச் சேர்ந்த பொன்னம்பல சுவாமிகள் என்னும் பெரியாரிடம் அருளுரை பெற்றவர். "குருபரம்பரைத் தோத்திரம்" என்னும் நூலை இயற்றியுள்ளார்.

"ஆதிமத் தியாந்த ரகிதமாய் நிறைவாய்
அதுலமாய் அருவுரு விலாமெய்ப்
போதமாய் விபுவாய்ப் போக்கொடு வரவும்
புணர்வுமோர் சார்புமற் றதுவாய்
நாதமாய் விந்து கலாதிமுப் பொருளாம்
நற்சதா சிவப்பெயர் கொண்டு
தீதிலா இந்திர பீடமுற் குருவாய்த்
திகழ்கர பாத்திர குருவே"

என்பது நூலின் முதற் பாட்டு. இதைத் தவிர இவரால் இயற்றப்பட்ட வேதாந்த நூல்கள் சில உள்ளன.

## ௫௧அ. சுப்பராய செட்டியார்—த. க.
(19 - நூ.)

இவர் நடு நாட்டில் பண்ணுருட்டி என்னும் ஊரில் கஞ்சமலைச் செட்டியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர். இவர் புலவர் திலகராய் விளங்கிப் பல நூல்கள் இயற்றினர். இவரால் இயற்றப் பெற்ற நூல்கள், "அமுதநாயகி பதிகம், வெள்ளிவேற் பதிகம், காளி திருவிருத்தம், வீரட்டேசுரர் அந்தாதி, பெரிய நாயகி பிள்ளைத்தமிழ், ஆதிபுரத்தல புராணம்" முதலியன. ஆதிபுரத்தல புராணத்தைப் பாராட்டி யாழ்ப்பாணம் வே. சுப்பிரமணிய பிள்ளை, தஞ்சை மருத்துவர் சண்முகம் பிள்ளை, அரன் வாயல் தங்கவேலுப்பிள்ளை முதலியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர்.

" மாழையுந் தளிர்த்துக் கோங்குகள் அரும்பி
மந்தரஞ் சந்தனம் பூத்துத்
தாழைகள் விரித்துக் கன்னியை முறுக்கச்
சண்பகம் வெறியிலி குசத்தின்

வாழைநா ரத்தின் னெடுமரீஇக் கமழ
மதலையும் நாகத்தை மறைக்க
ஏழையர் விழிக்காம் பிண்டியுஞ் செழிக்கும்
இன்டையெப் புனல்மருங் கினுமே''

என்பது ஆதிபுரத் தலபுராணத்தில் ஒரு பாட்டு.

## ௫௧௯. சுப்பராயபூபதி நாயகர் (கந்தமங்கலம்)

(19 - நா.)

இவர் கந்தமங்கலம் என்னும் ஊரில் வன்னியர் குலத்தில் தோன்றியவர். இவர் நாராயணசாமி என்பவர் கேட்டுக் கொண்டதற் கிணங்கி, ''நாட்டுச் செல்வ விநாயகர் பதிகம்'' என்னும் நூலைப் பாடியுள்ளார். இந்நூலுக்குப் புரசை குமாரசாமி முதலியார் என்பவர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்.

'' ஒளிர்மணிக் கலசம் அனையபொற் றனங்கள்
உறமகிழ் வல்லபை தழுவும்
அளிகள்பன் பாடும் அலர்களார் புயனே
அன்பருக் கின்பதை யருளிக்
களிகொளு முகிலேலீசிற்சுகா னந்தக்
கருணையார் கலியுறும் அமுதே
தெளிவுயர் சென்னை அம்பதி வாழும்
செல்வவி நாயக மணியே ''

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு. மல்லிகேசுவரர் பஞ்சரத்தின ஆசிரிய விருத்தம் என்னும் நூலும் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது.

## ௫௨௦. சுப்பராயப் புலவர்—முரு.

(1874)

சென்னைமாநகரில் புரசவாக்கத்தில் முருகேசமுதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் சிறந்த புலவராக விளங்கினார். இவர் சம்பரனுடைய கதையை இசைப்பாடலாக இயற்றியுள்ளார். அந்நூல் ''சம்பரன் மான்மிய கீர்த்தனை'' என்று பெயர் பெற்றது. நூலைப் பாராட்டிச் சுப்பராய பிள்ளை, கோ. இராசகோபால பிள்ளை, திருமணம் கேசவ சுப்பராய முதலியார், புலவர் அண்ணுச்சாமி முதலியார், கி. சிங்காரவேலு

முதலியார், கந்தாடை துரைசாமி ஐயங்கார், தஞ்சை சட்டாவ தானம் பாலவைரக்கண் வேலாயுதப் புலவர், புரசை சோதிட முத்திருளப்ப பண்டிதர், களத்தூர் வேதகிரி முதலியார் குமாரர் ஆறுமுக முதலியார், கந்தசாமி முதலியார் ஆகியோர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். நூலை இயற்றி அச்சிடற்கு உதவி செய்த செட்டிராவ் என்பவர் மீது இவர் இயற்றிய பாடல்.

"பூவந்த நான்முகன் பொருவிலண் டத்தினில்
புகழுடைய சேர ளமெனப்
புகலவரு நன்னக ரடுத்தகள் ளிக்கோட்டை
புரிதவப் பயனென் னவே
பாவந்த நாவலர்கள் பகர்தர உதித்தசெய
பாக்கிய வுதார னுலகில்
பரிபவம் உறும்வறியர் வேண்டுவன யாவும்
பரிந்திதல் புரிகற் பகம்
மீவந்த கதிர்மதியை அணுகுகொடு முடியோங்கு
வியனுறும் பழனி வேலன்
மென்கமல சரணனு தினம்பரவு செட்டிராவ்
விற்பனன் செய்யு தவியால்
நாவந்த சம்பரன் மான்மியக் கீர்த்தனை யை
நயசுப்ப ராய கவிஞன்
நாட்டமொடு தமிழினில் பாடியச் சிடுவித்து
நற்கீர்த்தி யுற்ற னனரோ."

என்பதாகும். இசைப்பாடல்களின் இடை இடையே விருத்தப் பாடல்களும் அமைந்துள்ளன.

## ௫௨௧. சுப்பராயப் புலவர் (வாணியம்பாடி) (1910)

வாணியம்பாடி என்னும் ஊரில் புலவராய் விளங்கியிருந்த இவர் பள்ளியில் ஆசிரியராகத் தொழில் புரிந்தார். நூற்றிரண்டு பாடல்களையுடைய "விரிந்திஸ்வரர் சதகம்" என்னும் நூல் இவரால் இயற்றப் பெற்றிருக்கிறது. சதகத்தின் பாடல் ஒன்றை அடியிற் காண்க.

"தனமில்லை யாகிலோ கட்டமாம்
தனம்மிகுந் தாலோ மகாகட்டமாம்
தனயரிலை யாகிலும் கட்டமாம்
தனயருண் டாகிலோ மகாகட்டமாம்

மனைவியில்லை யாகிலுங் கட்டமாம்
மனைவியொடு வாழ்வது மகாகட்டமாம்
வாகனமி லாமல்வழி ஏகவுங் கட்டம்அது
வைத்தால் மகா கட்டமாம்
தினமுங் கடன்வாங்குவது கட்டம் கடன்
தீர்ப்பது மகா கட்டமாம்
செகதுரைத் தனமிலாக் கட்டமாம் செங்கோல்
செலுத்தவும் மகா கட்டமாம்
வினயகுணம் மேவுநல் லோர்தொழும் பாதனே
மெய்ம்முத்து லிங்க மதவேள்
வேணருள் வாணிபுரி பெரியநா யகிமகிழ்
விரிந்திஸ் வரக் கடவுளே.''

## ருஉஉ. சுப்பராய முதலியார்—தி.

(20 - நூ.)

தொண்டைவள நாட்டில் செங்கல்பட்டென இந்நாளில் வழங்கும் செங்கழுநீர்ப்பட்டில் இருந்தவர். பேறை தசாவதானம் செகநாதப்பிள்ளையிடங் கல்வி கற்றவர்களில் இவருமொருவர். சிறந்த புலவராகத் திகழ்ந்திருந்த இவர் சித்திரகவி முதலியவைகளையும் பாடும் திறம்பெற்றிருந்தமையால் 'சித்திரகவி' என்னுஞ் சிறப்புப் பெயராலும் கூறப்பெற்றார். இவர் பல நூல்கள் இயற்றினாராம். அவைகளுள் "பொன்னியம்மன் பஞ்சமணிமாலை'' என்பதொன்று நமது பார்வைக்குக் கிடைத்துள்ளது. பாடல் ஒன்றை அடியிற் காண்க.

'' கானவதி நாயமுக் கோணசக் கிர நடுவில்
கலகலென நடன மாடும்
காரணி உலகபரி பூரணி இதுதருணம்
கருணை புரி காத்யாயனி
மாணமுறும் விசையையே பாணர்கள் கொண்டாடும்
மதுபதிமா தாரியே
மாலினி சண்டி திரிசூலினி யோகினி
மாதாங்கி பத்திரகாளி
ஆணவம லாதிகள் நாணஉன் அருளுக்கை
அனுக்கிரகிக் காத தென்னே
ஆரணிபாற் கொண்ட நாரணி உனையல்லால்
ஆதாரம் எவர் கூறுவாய்

பேணவருள் பேராட்டி வினராய் உழலுமெம்
பிழைகளைப் பொறுக்க வேண்டும்
பேட்டைப்புலிப் பாக்கமலைப் பாட்டையில் அமர்ந்திலகும்
பெருமைசேர் பொன்னியுமையே.''

## ௫௨௩. சுப்பராய முதலியார்—அ. க.
(20 - நூ.)

இவர் தொண்டைவள நாட்டில் அத்திப்பேடு என்னும் ஊரில் தோன்றியவர். காஞ்சிபுரத்தில் இருந்த பெரும் புலவர் சபாபதி முதலியாருடைய புதல்வராகிய பாலசுப்பிரமணிய முதலியாரிடம் கல்வி கற்றுச் சிறந்த புலவரானார்.

'' கந்தனுடைக் கழல்பணிந்து குணவேந்தன் கடைநோக்கால்
பந்தமெனும் பாராசை பழுதறவே பொடிசெய்த
எந்தமுடை நண்பனும் எழிற்குணவேல் எனும்பேரோன்
சொந்தமெனும் அருள்மாரி சொரிந்தனவாஞ் சுகம்பெறவே.''

என்பது இவருடைய பாடல்களில் ஒன்று.

## ௫௨௪. சுப்பராயலு செட்டியார்—மெ. கோ.
(1910)

சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் நாச்சியார் கோவில் எனவழங்கும் திருநறையூரில் இருந்தவர். இலக்கியப் பயிற்சியிலும் காலக் கணிதத்திலுஞ் சிறந்து விளங்கியவர். “ஆகாசமாரியம்மன் பதிகம்'' என்னும் நூலை இவர் பாடியுள்ளார்.

'' எப்போதும் உன்றனிரு பாதார விந்தமலர்
யானுமே பணிய இலையோ
ஏழையான் சொல்லிடும் சொல்லெலாம் வந்துன
திருசெவிக் கேற விலையோ
தப்பான காரியஞ் செய்தனோ என்றன்மேல்
சற்றுமே தயவில்லையோ
தமியேன் படுந்துயர்க் களவில்லை என்பதும்
தாய்மனம் அறிய இலையோ?
ஒப்பான உனதுபணி செய்யா திருந்தனோ
உன்கிருபை பெறவும் அடியேன்
உன்னுடைய திருநாமம் எப்போதுஞ் சிந்தையில்
உறுதியாய் வைக்க இலையோ?

மைப்போநின் கண்மாதர் சூழ்புடை எந்நாளும்
வஞ்சுளம் பதியின் மேவும்
வழியர்இடர் தீரஒரு நொடியில்வரும் ஆகாச
மாரியெனும் அம்மை உமையே.''

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௫௨௫. சுப்பராயலு நாயுடு—ரா. மு.
## (1910)

சென்னை மாநகரில் இராயபுரத்தில் வாழ்ந்திருந்தவர். வே. கி. நாராயணசாமிப் பிள்ளை என்பவருக்கு மாணவராகிக் கல்வி கற்றார். இவருக்கு அமுதகவி என்னும் சிறப்புப் பெயர் உண்டாகியிருந்தது. இவர் திருத்தில்லை முக்குறுணியரிசிப் பிள்ளையார் மீது பதிகம் ஒன்று இயற்றினார். இப்பதிகத்தைப் பாராட்டி அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியார், பூஞ்சோலை முத்துவீர நாவலர், பாண்டி மண்டலம் செல்வ மாநகரம் நெயினா முகம்மதுப் பாவலர், கோ. சி. பார்த்தசாரதி பிள்ளை, மை. த. துரைசாமி செட்டியார், வே. நா. புருடோத்தம பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' வல்லபை மனோகரா வருகவிது சமயமே
வடிவம்மை மகிழ்புத்திரா
வாராது இடரொன்றும் காத்தருள வேநன்கு
வரமருளும் ஏகாட்சரா
பொல்லாத சம்சார சாகரந் தெனைமீட்டு
புரியுமருள் பஞ்சாட்சரா
புள்ளிமயி லேறும்வடி வேலவன் சோதரா
புனிதனே பிசாட்சரா
செல்லாது பலவிதமென் சிந்தையது நிலைநிற்கச்
செய்தருளும் விக்நேஸ்வரா
சிவயோகர் சந்ததமும் துதிபுரியும் பிரணவச்
சின்மயாநந்த வடிவே
நல்லோர்கள் இதயம்விட் டகலாத மூர்த்தியே
நற்பதி சிதம்பரம்வாழ்
நக்கன்மகிழ் முக்குறுணி அரிசிபிள்ளையாரெந்த
நாளுமெனைக் காத்தருள்வையே ''

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௫௨௬. சுப்பா ஐயர்—வி.

(20 - நூ.)

இவர் தொண்டைவள நாட்டில் வேலூரில் ஊர்காவல் பள்ளியில் இருந்தவர். "தோத்திரப்பாமாலை" என்னும் நூல் ஒன்றை இயற்றியுள்ளார். நூலைப் பல அறிஞர்கள் புகழ்ந்து பாராட்டியுள்ளனர்.

"காத்தருள்வை நீயென்று கசிந்துநான்
மன்றுடிக் கனிவ தாக
ஏத்தவருள் தான்கொடுக்கும் ஈசாநின்
தாளதனை இனிது காட்டி
மாற்றலரின் வசைகளைநான் மதியாத
மனமடைய வழியே தந்து
தேற்றிவிரி உலகினிடைத் திரிந்துலவ
நல்லருளைச் செய்யே கம்பா"

என்பது ஏகாம்பரேசுவர பஞ்சரத்தினத்தில் ஒரு பாட்டு.

## ௫௨௭. சுப்பிரமணிய அடிகள் (தென்பரம்பை)

(20 - நூ.)

இவ்விருபதாம் நூற்றுண்டுத் தொடக்கத்தில் தமிழறிவிற் சிறந்து விளங்கியவர். இவருடைய திருப்பெயருக்கு முன்னுல் "தென்பரம்பை ஞான சபாலய வாசி சடாந்த சமரச" என்னும் அடைச் சொற்கள் காணப்படுகின்றன. இவர் "தண்டாயுத பாணி கலி வெண்பா, தண்டாயுதபாணி போற்றி விருத்தம்" என்னும் நூல்களைப் பாடியுள்ளார். இத்தண்டாயுதபாணி வெளிநாட்டில் திருக்கோயில் கொண்டவர்.

"வள்ளியை மணம்புணர்ந்து
வையக மெல்லா மின்று
ஒள்ளிய மயிலி லேறி
உலகெலாங் காக்குங் கோவே
நள்ளிரு ளனைய சூரை
நகைத்துயிர் அழித்த நாதா
தெள்ளிய நதிசூழ் சாலித்
திருநகர் உறையுந் தேவே"

என்பது போற்றித் திருவிருத்தத்தில் ஒரு பாட்டு.

## ருஉஅ. சுப்பிரமணிய அய்யர்—குரு.

" விரும்புதமிழ் முனிவனென வியனுலகுகொண்டாடும்
விளக்கம் வாய்ந்த
பெரும்புலமை நிறைந்திடுஞ் சுப்பிரமணிய பாரதியாம்
பிரபலோனே "

என்று பாராட்டப் பெற்ற இவர் குருமூர்த்தி ஐயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர். இவருடைய சொந்த ஊர் முதலியன விளங்கவில்லை. முசிரியில் வாழ்ந்திருந்தார். முசிரி வழக்கறிஞர் கலியாண சுந்தரம் பிள்ளை வேண்டுகோளின்படி "பழநிப் பதிற்றுப் பத்தந்தாதி" என்னும் நூலை இவர் பாடியுள்ளார். அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியார், சேலம் சரவணப் பிள்ளை, காங்கயம் அட்டாவதானம் சேடாசல நாயுடு, நாமக்கல் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் ம. சி. ஆனையப்ப முதலியார், முசிரி கு. அ. ஆறுமுகம் பிள்ளை, முசிரி வி. அப்பாயி நாயுடு, திருநயம் நரசிம்ம பாரதி, பரமக்குடி சு. கோபாலையங்கார், தேவகோட்டை சிதம்பரச் செட்டியார் ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். அந்தாதியின் பாடல் ஒன்றை அடியிற் காண்க.

" உலகெனும் அணங்குக் கிட்ட
ஒளி நுதல் திலக மென்னப்
பலர்புகழ்ந் துரைக்கத் தக்க
பழநியில் தண்ட பாணி
அலகிலா மலைகள் ஒப்ப
அடியனேன் நெஞ்சக் கல்லும்
இலகுறு கோயிலாக் கொண்
டிருந்தனன் பொருந்துமென்றே "

(க)

## ருஉகூ. சுப்பிரமணிய ஐயர்—மணி
(20 - நூ.)

நடுநாட்டில் பண்டுருட்டியில் இருந்தவர். கல்வி கேள்விகளில் வல்லவராகிய இவர் திருக்கைலாய பரம்பரை பொம்மபுரம் சிவஞான பாலைய தேசிகேந்திர சுவாமிகளின் ஆதீனப் புலவராக இருந்தவர். இவர் பலருக்குக் கல்வி கற்பித்துக் கொண்டிருந்த

தோடு நூல்களும் இயற்றினர். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் :—

க. திருவதிகை செல்வ விநாயகர் பதிகம்
உ. பண்ருட்டி சுந்தர விநாயகர் பதிகம்
௩. ,, அப்பாவைய சுவாமிகள் அருண்மணி மாலை
௪. ,, ,, அருங்கவி வெண்பா
௫. ,, ,, பஞ்சரத்தினம்
௬. ,, ,, இங்கிலீஷ் நோட்
௭. திருவதிகை விரட்டப்பத்து
௮. திருவதிகை குணதர வீச்சுரப்பத்து
௯. திருவதிகை திருநாவுக்கரசு சுவாமிகள் வண்ணம்
க0. ,, ,, பஞ்சரத்தினம்
கக. உத்தரத் தணிகை உன்னதப் புகழ்ச்சி
கஉ. ,, திருவருட் கண்ணி
க௩. ,, வேலாசலத்தோன் வெற்றிப்புகழ்ச்சி
க௪. பொம்மபுரம் சிவஞான பாலைய சுவாமிகள் போற்றிப் பஞ்சகம்
க௫. ,, ,, அட்டகம்
க௬. ,, ,, வருக்கம் மணிமாலை
க௭. ,, ,, நவமணி மாலை
க௮. சங்கராச்சாரிய சுவாமிகள் பஞ்சகம்
க௯. வடலூர் இராமலிங்க தேசிக மாலை
உ0. தேவிநகர் சொக்கலிங்க மணிமாலை
உக. ,, கைலாயநாத சுவாமி பஞ்சரத்தினம்
உஉ. குன்றைக்குடி குமரக்கடவுள் சிகாமணி மாலை
உ௩. பண்ணுருட்டி சித்தி விநாயகச் செல்வமணி மாலை

என்பன. சித்தி விநாயகச் செல்வமணி மாலையில் ஒரு பாட்டை அடியிற் காண்க.

"ஆசையினு லாசைநக மிமிசையயோ ரைவர்புகழ்த்
தேசுறவோர் மருப்புகொடு தீட்டிமகிழ்ந் திடுஞ்சிவமே
பேசரும்பல் வளமருவு வராகபுரி பிறங்கிவளர்
மாசறுஞ்சீர்ச்சித்தி விநாயக மாமணியே"

## ௫௩௦. சுப்பிரமணிய ஐயர்—சி. வி.

(20 - நூ.)

இவர் வேலூர் மகந்து உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரிய ராக இருந்தவர். 'மீனாட்சி சுந்தரேசப் பதிகம்' என்னும் பதிகம் ஒன்றை இவர் பாடியுள்ளார்.

"கங்கையொடு திங்களணி தேவர்பணி யீசனைக்
கைதொழாக் கைகளேனோ
கண்கவரும் ஈசனது பாதமலர் சேவியாக்
கண்களிரு புண்களெனவோ
சங்குநிகர் மேனியஞ் சம்புவை வணங்காத
சென்னிபெறு பயனென் கொலோ
செப்பரிய தீர்த்தங்கள் சென்றுமுழு காதமெய்
சிறுமையுறு மட்பாண் டமோ
செங்குமுத வண்ணனுயர் இசைகள்புக லாதநா
செல்லுறழ் பறைகளன்றோ
செந்நெறிச் செலவிடாச்செல்வமது காடுகொள்
சிறப்பிலா நிலவென் னவோ
துங்கமிகு நின்பதச் சேவைபெற வேண்டுமென்
துயர்களைந் திடவருகுவாய்
தூயவருள் மீனாட்சி அம்மையொரு பான்மருவு
சுந்தரே சக்க டவுளே"

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

## ௫௩௧. சுப்பிரமணிய ஐயர் (மழவராயனேந்தல்)

(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் மழவராயனேந்தல் என்னும் ஊரின ராகிய இவர் புதுக்கோட்டை நாட்டைச் சேர்ந்த இராயபுரம் முதலிய இடங்களில் வசித்திருந்தார். திருவிளையாடற் புராணச் செய்தியை இசைப்பாடலாகப் பாடியிருப்பதன்றித் திருவாரூர்த் தியாகராச சாமிபதிகம் முதலிய சிறுநூல்களையும் பாடியுள்ளார்.

"இனமான என்பத்து நான்குநா லுயிரம்
எனுஞ்சீவ பேதம் இதனில்
இசையுமறி வோடுகல் வித்திறமை எதிலுமே
எழின்மிகும் மனித சனனட்

இச்சனன முற்றுன் பதம்பெறத் தவமுயல
வேயாயு ளோவதித் தியம்
இனியமெய்ஞ் ஞானத் துணர்ந்நாலு நிர்க்குணத்
திநயமடை வதும பூர்வம்
மனமான சாலேக் குரங்குகரு மத்தொழிலின்
வசமாகும் என்று நம்பி
வருநித்ய கர்மயா காதிகளி லேமிக
வருந்திச்செய் தாலு மதனின்
மருவியொரு குறைவரின் முழுவதும் நட்டமாம்
மறுவுரும லியற்றினும்
மகிழ்விஞறு சொர்க்கபதம் அல்லாது நின்பாத
மலரடைவ தில்லே யின்பம்
நினேவினுஞ் சொற்கத்தின் அமுதுண்டு மரமினுர்
நேயம் படைத்து லாவ
நேசிக்கினும்நகுடனும் யாதிராசனும்
நிலேயற்ற தென்னவும் மாம்
நின்பத்தி செய்துவே தாமகம புராணத்து
நீதியா கிலும லாது
நியமமற் றறிவின்றி மண்கோம யாதிலிங்
கத்துவிளே யாட்டி னுனும்
அனகநினே யொருதுளிந ணீர்கிறிய சருகொன்றி
ஞலுமே பூசிக்கினும்
அல்லாதுன் ஞமமொரு கால்நவின் ருனுமெனி
ஞனுமதி மகிழ்வி னுனும்
அற்பசந் தோஷி ! நீ ஆனதால் உன்தஞ்சம்
ஆகினேன் அருள்வை யாரூர்
அலர்செவந் தித் தோடும்இலகுசெங் கழுநீரும்
அணிதியா கரா சேசனே"

என்பது தியாகராசர் பதிகத்தில் ஒரு பாட்டு.

## ருசுஉ. சுப்பிரமணிய ஐயர்—௩.

இவர் சென்னேமா நகரில் இருந்தவர். சென்னே • திருவல்லிக் கேணி வல்லப அக்ரஹாரம் கார்ப்பரேஷன் மாடல் பள்ளியில் தலைமை ஆசிரியராக இருந்தார். "ஞானப்பிரகாசம் மத்யம—வ்யா யோகம்" என்னும் நூல்களை இவர் இயற்றியுள்ளார். ஞானப்பிரகாசம் என்பது வேதாந்த நாடகம். மத்யம—வ்யா யோகம் என்பது வடமொழியில் பாசமகா கவியால் இயற்றப் பட்ட நாடக நூலின் தமிழ்மொழி பெயர்ப்பு. இதற்குக் கோ.

வடிவேலுச் செட்டியார் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். மொழி பெயர்ப் பாசிரியரின் காப்புச் செய்யுளை அடியிற் காண்க:

" புவிவானங் களில்நிறைந்து புகழ்மறையின்
முடியிலகும் பொருள தாக
எவனுதப் படுவனெவன் ஈச்சுவர
மொழிக்குரியன் எழில்சேர் ஞானச்
சிவயோகர் உவப்பநெவன் சிறப்பநெவன்
சத்தியமாய்ச் சிவமாய் மோனத்
தவர்தேடற் குரியனெவன் அவனருளை
அகத்துன்னி அன்பு செய்வாம்."

## ௫௩௩. சுப்பிரமணிய ஐயர்—மு.

(19 - நூ.)

நடுநாட்டிலே பண்ணுருட்டியிலே முத்தையர் என்னும் வீரசைவர்க்குப் புதல்வராகத் தோன்றியவர். இவர் திருத்தணிகை விசாகப் பெருமாளையரிடம் கல்வி பயின்ற பட்டாம்பாக்கம் வேலைமடம் சுப்புராய ஐயரிடங் கல்வி கற்றார். மாணவர் பலருக்குக் கல்விபோதித்துக் கொண்டு இல்லறத்தில் இருந்தார். திருவதிகையில் இருந்த தணிகைராய முதலியார் என்பவர்க்கு ஆசிரியராய் அவர்க்குப் பல நூல்களைக் கற்பித்தார். நமசிவாய நாவலர், சண்முக ஐயர் என்பவர்கள் இவருடைய புதல்வர்கள். இவர் நாற்பத்திரண்டாவது அகவையில் இறைவன் திருவடி நீழலையடைந்தார். இவர் இயற்றிய நூல்களைப் பற்றிய விவரம் கிடைக்கவில்லை. இவருடைய புதல்வர் நமசிவாய நாவலர் மயிலாசல சதகம் பாடியுள்ளார். இவருடைய பெயரர் சுப்பிரமணிய ஐயருஞ் சிறந்த புலவராக விளங்கியிருந்தார்.

## ௫௩௪. சுப்பிரமணிய ஆசாரியார்

(20 - நூ.)

வி. கோ. சூரிய நாராயண சாத்திரியாருடைய மாணவர்களில் ஒருவர். ஸ்காட்லாந்து மிஷன் கலாசாலைப் போதகாசிரியராக இருந்தார். விஞ்ஞானத் தொடர்பான பொருள்களைப் பற்றி எழுதுவதில் இவர் வல்லவர். அத்துறையிற் சிறந்த ஆராய்ச்சித்

திறமையும் உடையவர். இவர் இயற்றிய நூல்கள் ''ஔவையார் ஆராய்ச்சி, வியாபார நீதி, பழிக்குப்பழி முதலியன.'' ஔவையார் ஆராய்ச்சி என்பது ஔவையார் ஒருவரா பலரா என்பதைப் பற்றியது.

## ௫௩௫. சுப்பிரமணிய ஐயர்—கு.
(1911)

இவர் இளங்காடு விரசைவம் புராண வசவதேசிகர் வழிமுறையில் தோன்றியவர். களத்தூரில் வசித்திருந்தவர். சிறுகனூர் என்பதும் இவருடைய ஊர்போலும். திருவிளையாடற் புராணப் படலச் செய்திகளை ஒவ்வொரு பாடலிலும் அமைத்துத் ''திருவிளையாடற் சதகம்'' என்னும் சதகத்தைப் பாடியுள்ளார். சதகத்தைப் பாராட்டித் திருநயம் நரசிம்ம பாரதியார், கோட்டாத்தூர் அம்பலவாணப் புலவர், திரிசிரபுரம் தி. கு. சோமசுந்தரம் பிள்ளை, க. மதுரைநாயகம் பிள்ளை ஆகியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். பரிநரியாக்கிய படலப்பாட்டை அடியிற் காண்க:

''மன்னன் பரிச்சேனை கண்டுமகிழ் வுற்றனன்
வாதவூ ராரு மனைபோய்
மாசுந் தரக்கடவுள் தன்கவலை மாற்றின
மகிழ்ச்சியின் மருண்டி ருக்க
உன்னுமவ் விரவில்நடு நாளிரவி னிற்பரிகள்
ஊளையிடும் நரிக ளாகி
உறுதியுறு சங்கிலி முறிந்துகந் திறவே
உடைத்துப் பிடுங்கிப் பினும்,
முன்னிருந் திடுகுதிரை யைக்கடித் துத்தின்று
முன்னுறுங் கானின் மறைய
முன்னிரி னிற்பரிதி உறவரசன் முன்சொல
முகங்கடுத் திடமந்த்திரி
சின்னமுற வேசெய்து பணம்வாங்கி விடுமெனச்
சேவகர்க் குரைத்திவனையாள்
திசைபுகழு மீனாட்சி உமைதருநல் லரசாட்சி
செய்துவரு கருணாட்சனே.''

இச் சதகத்தை யன்றிப் ''பிரமோத்திரகாண்ட சதகம்'' ''உருக்மாங்கன் சதகம்'' என்பவைகளையும் இவர் இயற்றியுள்ளார்.

## ௫௬. சுப்பிரமணிய ஐயர்—கா.

(19 - நூ.)

கொங்குவள நாட்டில் சாமக் குளம் என்னும் ஊரில் புலவ ராக விளங்கியிருந்த காசி இராமச்சந்திர ஐயர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றித் தமிழ் கற்றுச் சிறந்து விளங்கியவர்.

"கலிமுதலிற் பாண்டவர்கள் துறக்கமடைந்
திடுமரிய கதையைப் பார்மேல்
ஒலிகுலவு நாடகமாய் விளங்கவமுஉப்
பொலிவகற்றி உயர்வாம் அச்சில்
மலிதமிழ்தேர் கலியாண சுப்ரமணி
யையனென வழங்கு மேலோன்
நலிவறுநல் எல்லையன் அருள்குமரன்
பதிந்திந்நாள் நலம்பெற் ருனே"

என்பது இவருடைய சிறப்புப் பாயிரப் பாடல்களில் ஒன்று.

## ௫௭. சுப்பிரமணிய ஐயர்—வையை.

(20 - நூ.)

சோழவள நாட்டில் வையை என்னும் ஊரில் வாழ்ந்திருந் தவர். இவர் 'திருவருட் கோவை' என்னும் நூலைப்பாடியுள்ளார். இக்கோவை நூறு பாட்டுடையதாய் விளங்குகின்றது. ஒரு பாட்டை அடியிற் காண்க:

காட்சி

"சொற்பொருள் கடந்த சொருபமே யான
சற்குரு நாதன் சற்சிடனைக் கண்டது"

"திருவருட் கேயொரு பாய்மடை யாகத் திறந்தநெஞ்சும்
ஒருபொருட் கேனு இடந்தரா தாறி யுறைந்தகண்ணும்
குருபரற் கேவைத்த காணிக்கை யாகிய கோலமுமாய்ப்
பெருவியப் பேதந்தென் முன்னெரு பேரன்பு நிற்கின்றதே."

## ௫௮. சுப்பிரமணிய ஐயர் (உடையார்பாளையம்)

(19 - நூ.)

இவர் உடையார் பாளையம் பெருநிலக் கிழாருடைய அவைக் களப்புலவராக அமர்ந்து பெருநிலக்கிழார் மகிழும்படியாக அவ்

வப்போது பல பாடல்களைப் புதிதாக இயற்றிக் கூறிவந்தார். தனிப்பாடல்களை யன்றி நூல் செய்ததாகத் தெரியவில்லை. இவர் காலத்தில் சாமிமலையில் வாழ்ந்திருந்த கனகசபை ஐயர் என்பவர் பெண்ணை நதிப் புராணம்பாடினர். அப்புராணத்திற்கு இவர்;

"சீர்மேவு பயறணிப் பாளையந் திற்றிகழ்செய்
செல்வமொடு புத்தி மிக்கோன்
திசையாளு மன்னர்புகழ் சதுரனிவ் வுலகில்
சிறந்தநயை சாந்த மெய்ம்மை
ஏர்மேவு வள்ளன்மை இவையெலாம் பெற்றுளோன்
என்னரிய சுகுண சீலன்
இன்னடைய மாதர்க்கு மாரவேள் போற்றிகழ்வன்
எங்கள்யுவ ரெங்க பூபன்
கார்மேவு சிகரமுள அரண்மனைச் சமூகக்
கவிப்புலவர் தங்க ளுக்குள்
கற்பனைய தாய்நிமிட கவிதைசொலும் வன்மைசேர்
காப்பிய மெலாம றிந்தோன்
பார்மேவு சிவசங்க ரையர்சேய் கனகசபை
பண்டிதந் திறநா வலன்
பாலோடு தேன்கலந் தென்னவே பெண்ணைப்
புராணம் பகர்ந்தன னரோ"

என்னுஞ் செய்யுளைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார், இவருடைய தனிப்பாடல்கள் பல கிடைக்கின்றன. நூல்களியற்றிய விவரந் தெரியவில்லை.

## ௫௩௧. சுப்பிரமணிய சாத்திரி—பா.

(1910)

இவர் சென்னைமாநகரில் சிந்தாதிரிப் பேட்டையில் விசுவகர்மா வேதத்தியான பாடசாலையில் ஆசிரியராக இருந்தவர். "விஸ்வகர்மா நுட்டானவேத மஞ்சரி" என்னும் நூலை இவர் இயற்றியுள்ளார். அந்நூலில், சந்தியாவந்தனம், புருடசூக்தம், ஸ்ரீ சூக்தம், மந்த்ர புஷ்பம், தீபாராதனை மந்திரம், விக்கினேசுவர பூசை, புண்ணியாவசன மந்திரம், ஆசீர்வாத மந்திரம் முதலியபல செய்திகள் அடங்கியுள்ளன. இவர் விஸ்வகர்ம மரபைச்சேர்ந்தவர்.

## ருசo. சுப்பிரமணிய சாத்திரி—ரா.

(1904)

இவர் சென்னை மா நகரில் இருந்தவர். வடமொழியிலுந் தென் மொழியிலும் வல்லவர். இரத்நவிமானம் என்னும் கதையை இவர் எழுதியிருக்கிறார்.

## ருசக. சுப்பிரமணிய சுவாமி (வெள்ளைக் கிணறு)

(19 - நூ.)

கொங்குவள நாட்டில் கோயமுத்தூர்ப் பிரிவில் உள்ள வெள்ளைக் கிணறு என்னும் ஊரில் விசுவப்பிரம குலத்தில் தோன்றிய இவர் நூல்பல கற்று ஒரு மடத்தின் தலைவராக அமர்ந்திருந்தார். இவர் "இரத்தினசலக் குமரகுருசாமி பதிகம்" முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

" சீர்மருவு மெய்ஞ்ஞான வேதாந்த நாதன் நல்
திவ்ய மணிக்கிரீடந்
தினகரோ தயகவச குண்டலமும் இயல்புறத்
தெளிவுசெய் வதன மாறும்
தீர்க்கசுக கருணையங் கடல்மடை திறந்தொழுகு
செய்யநய னங்க ளாறும்
தெளிவான வேதங்கள் மந்தரப் புன்னகை
செறிந்தகனி வாய்க ளாறும்
ஆர்மருவ லங்கிருத கடப்பநற் ருரொடு
அணிந்தமுத் தார நிருத
அட்டகா சப்பராக் ரமகடு ரகாடன்ய
அத்தமதில் இலகு வேலும்
ஆனலங் கனதுல்ய மணியுலவு கேயூர
அழகுபுய மீரா றுடன்
அரியநவ ரத்தனபூ டணவதுல தாவள்ய
அம்பொன்நூல் மார்பின் அழகும்
வார்மருவு குஜமகுட வர்த்தனி சலாப குற
வள்ளிநா யகியு மகவான்
வரோதயப் பிடிதெய்வ யானையு முகப்பினெடு
மன்னிவா ழுறும ருங்கும்
வர்னபீ தாம்பரந் திடையும்வர தாபயம்
வயங்குகரம் ஈரா றுடன்

வனசபத யுகளம் உதயபாஸ் கரவொளியை
மதியிலேன் நரிசிக் கவே
போர்மருவு வள்ளூகிர் நிலந்நிற் பதிந்நமுகு
பூரித் தெழுந் துவரி சூழ்
பூலோக மெங்கணும் நொடிக்குள் வருகலபிமேல்
புனிதவந் தருள்வ தென்றே
போற்றுசிவ சுப்ரமன் யன்தமிழ்க் கனுகூல
புண்யசி லாவி சாலா
புயல்வண்ணன் மருகரந் துசலக் குமரகுரு
பூரண வடிவே லனே ''

இது பதிகத்தில் ஒரு பாட்டு. வெள்ளைக்கிணறு இராமையர், சிறுமுகை வீரபத்திர சுவாமிகள், சின்னத்தம்பிப்பிள்ளை, கணபதிவாசுதேவ பிள்ளை, அந்தியூர் ஆறுமுக ஆசாரி, பெங்களூர் வீரனுசாரி முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ருசஉ. சுப்பிரமணிய சுவாமி (பேரூர்)

(20 - நூ.)

கொங்குவள நாட்டில் கோயமுத்தூருக்கு அண்மையில் உள்ள பேரூரில் துறவியாக வாழ்ந்திருந்தவர். இவர் பேரூர்க் கோவிலில் அறுபத்துமூன்று நாயன்மார் திருப்பணி செய்து கொண்டிருந்ததோடு, அறிவுநூல்களை மாணவர்களுக்குப் போதித்துக்கொண்டும் இருந்தார். ''திருப்பேரூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி'' என்னும் நூல் இவரால் பாடப்பட்டுள்ளது. திரிசிரபுரம் வரகனேரி, சோ. வீரபத்திரப்பிள்ளை, அ. கந்தசாமிப் பிள்ளை, பேரூர் இராமசாமிச் சிவாச்சாரியார், பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் மடம் சிதம்பர மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள் ஆகியோர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

'' அன்ன லைப்புரம் மூன்றும் அழலெழப்
பன்னும் வெண்ணகைப் பேரைப் பரமனை
நன்ன லாதபுன் னுயனை யாரையே
எண்ணில் மேவும் இயம்பரும் இன்னலே''

என்பது நூலில் ஒரு பாட்டு. இவரும் முற் கூறியவரும் ஒருவராக இருத்தல் கூடும்.

## ௫௪௩. சுப்பிரமணிய சுவாமிகள் (திருவாவடுதுறை)
(1889)

இவர் திருவாவடு துறையாதீனத்தில் முதலில் தங்கிச் சைவ சித்தாந்த நூல்களையும் பிற நூல்களையுங் கற்றார். பிறகு திருவா மாத்தூர் மடத்தையடைந்து அங்கு வசித்திருந்தார். இவர் இயற்றிய நூல்களைப்பற்றிய விவரந்தெரியவில்லை. சாமிமலைக் கனகசபை ஐயர் இயற்றிய பெண்ணைநதிப் புராணத்திற்கு இவர்,

" சீராரும் அவ்வைதிருப் பாட்டாலே
செழுந்ததிநெய் தீம்பால் தம்மைப்
பூராவாய் நந்திவரை முதலிந்த
பெண்ணை நதிப் புராணந் தந்தான்
கூராரும் பிரணவத்தைச் சிவபெருமான்
தனக் குகந்து கூறலுற்ற
காராரும் ஏரகம்வாழ் வீரசைவக்
கனகசபைக் கவிஞன் தானே "

என்னும் பாட்டைச் சிறப்புப்பாயிரமாகப் பாடியுள்ளார். இவர் நூல்கள் சில இயற்றியுள்ளார். அவைகள் இப்பொழுது கிடைக்க வில்லை.

## ௫௪௪. சுப்பிரமணியதாசன் (அகிலாண்டபுரம்)
(1910)

சோழவள நாட்டில் திருவையாற்றுக் கண்மையில் உள்ள அகிலாண்டபுரம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இவருடைய பெயர் குறிச்சி அண்ணுச்சாமிச் சிவன் எனவும் வழங்கியது. இவர் சோமயாசி மாறனார் வரலாறு, தியாகேசர்பள்ளு என்னும் நூல்களை இயற்றியுள்ளார். தியாகேசர் பள்ளுப்பாடல் சிறப் புடையதன்று.

" கிட்டிவருகிறான் மாடு தின்னிப் பறையன்—சாலை
கிட்டி வருகிறான்யாகம் கெட்டிடு மென்றும்
கொம்மலிட்டுக் கூப்பாடிட்டுக் கூட்டங் கலங்கிப்பயந்து
மறையோர் நாலு திக்குமாக வோடினார்"

என்பது பள்ளில் ஒரு பாட்டு.

## ௫௪௫. சுப்பிரமணிய தேசிகர்

தஞ்சை மாவட்டத்தில் கீழ்வேளூரில் இருந்தவர். திரிசிர புரம் பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களும் இவரிடம் சில நூல்களைப் பாடங்கேட்டனர். இவர் கந்தசுவாமியம் என்னும் பெயருடைய நிகண்டு ஒன்றைச் செய்துள்ளார். கீழ் வரும் பாடல் கலைமகளின் பெயர்களை உணர்த்துகிறது.

" கலைமகள் பெயர்வெண் கமலைகா யத்திரி
ஞான மூர்த்தி நாமகள் இசைமகள்
நண்டாச் சிறப்பினள் சாவித் திரியே
பாரதி வெண்மேனியாள் பனுவ லாட்டி
வாக்காள் உலக மாதா தூயாள்
வாணி பூர வாகனி பாமகள்
அபிரா மியென ஐம்மூன் றிரண்டே."

## ௫௪௬. சுப்பிரமணிய நாடார்—௩.

(20 - நூ.)

இவர் கோயமுத்தூர் தாலுகா ஒத்தக்கல் மண்டபம் என்னும் ஊரில் இருந்தவர். வெள்ளிமலைப் பதிகம், வெள்ளியங் கிரி மாலை முதலிய நூல்களை இவர் பாடியுள்ளர்:

" அநாதரட் சகனே போற்றி
அடியவர்க் கருள்வாய் போற்றி
பிநாகபா ணியனே போற்றி
பிஞ்ஞகா போற்றி போற்றி
சனனநோய் தீர்ப்பாய் போற்றி
சங்கரா போற்றி போற்றி
விநாயகன் தன்னை ஈன்ற
வெள்ளியங் கிரியாய் போற்றி"

என்பது நூலில் ஒரு பாட்டு.

## ௫௪௭. சுப்பிரமணிய பண்டிதர்—௫.

(20 - நூ.)

பாண்டிவள நாட்டில் திருச்செந்தூரில் ஒளிமுத்துப் பண்டிதர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிய இவர் பெங்

கரூர் இராமசாமிப் புலவரிடம் கல்விகற்றுப் புலமையடைந்தார் மாணவர் பலருக்குக் கல்விகற்பித்தார். 'மோகனாங்கி விலாசம்' என்னும் பெயருடைய நாடகம் ஒன்றை ஏறக்குறைய நானூறு பக்கங்கள் உடையதாக இயற்றியிருக்கிறார்.

" கருவளரும் பிரபஞ்ச வாழ்க்கைதனை யேநம்பிக்
கடலாடை சூழுலகிலே
உருவளரும் இருளகலப் பகலவனுங் கீழ்த்திசையின்
உதயகிரி தோன்றுமாபோல்
மருவளரும் பலகலையும் இலக்கண இலக்கியமென்
மனம்புகுந்தே இருக்கத்தந்த
திருவளரும் இராமசா மிப்புலமை யாரியரின்
செஞ்சரணஞ் சென்னிசேர்ப்பாம்."

இஃது இவர் நூலின் தொடக்கத்தில் கூறிய ஆசிரிய வணக்கம். சங்கர சுப்புதாசர், விருதுப்பட்டி இராமலிங்கக் குருக்கள், அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார், அரன்வாயல் தங்கவேலுப் பிள்ளை, கோ. வடிவேலுச் செட்டியார், வா. மகாதேவ முதலியார், ஆரணிமேடிகை சென்ன கேசவலு நாயுடு, ம. இராசகோபால பிள்ளை, வல்லி ப. தெய்வநாயக முதலியார், சிந்தாதிரிப்பேட்டை மா. நமசிவாயம் பிள்ளை, அ. வீராச்சாமி நாயுடு, ஏ. இ. இராமசாமிச் செட்டியார், சி. கி. சுந்தராச்சாரி, கொடுமுடி முத்துக்குமாரசாமி, வேலாயுதம் பிள்ளை, கொடுமுடி பாண்டிய நாடார், போத்தநதி அருணாசலம் பண்டிதர், கல்போது நீராத்திலிங்கத்தேவர், புதுவை நடேச ஆச்சாரி, மோசூர் முனிசாமி முதலியார், சண்முக முதலியார், ஆர். சாமி நாயுடு, தி. நாராயணசாமிப் பிள்ளை, கந்தசாமி நாயகர், ப. சண்முகத்தம்மாள்என்போர் இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர்.

## ௫௪௮. சுப்பிரமணியபாரதி—வே.

இவர் குடுமிமாமலை என்னும் ஊரில் வேதவைத்யநாத தீட்சிதர் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றியவர். கல்வி கேள்விகளில் வல்லவராய்ச் சிறந்து விளங்கியவர். இராமசாமி மூப்பனார் என்பவருடைய வேண்டுகோளுக்கிணங்க இவர் வீர பத்திர சுவாமி பதிகம் என்னும் பதிகத்தைப் பாடியுள்ளார்.

" நீண்டசெஞ் சடைமுடியு முக்கண்ணும் நிலவுவெண்
ணீறிட்ட திருமேனியும்
நிரையான வக்கிரப் பற்களும் பாம்பணியும்
நிகரறு முனைச் சூலமும்
மூண்டசின வேங்கையந் தோலும்என் பாரமும்
முழக்கமுங் கொண்டாட் டமும்
முட்பாத குறடும்வி ராவேச முங்கன
முழுக்குந் தருக்கு மாக
ஆண்டகைமை தனதென்ப துலகெலாந் தெரிவிக்க
அக்கணம் தக்கன் யாகம்
அழிந்தவன் சிரமறுத் தரிபிரம னுதியா
அமரரையும் வெருள வன்றோ
வேண்ட வொரு வாறருள்செய் அந்தனே நிந்தனே
விபுதனே என்முன் வருக
விசயவடி வாள்வயங் குந்தின்பு யத்தனே
வீரபத் திரசு வாமியே."

என்பது பதிகத்தில் ஒரு பாட்டு.

"பொருட் டொகை நிகண்டு" என்னும் நிகண்டையும் இவர் இயற்றியுள்ளார். 693ஆவது சூத்திரத்தை அடியிற்காண்க :

" குற்றமெட் டாமவை ஞான வரணியம்
தரிசன வரணியம் வேதநீயம்
மோகநீய மாயு நாமங்
கோத்திர மந்த ராய மென்ப
இவையா குகத மதநூல் கூறுமே."

## ருசசு. சுப்பிரமணிய பிள்ளை (கழுகுமலை)
## (1913)

பாண்டிவள நாட்டில் கழுகுமலையில் இருந்தவர். இவருடைய பாட்டனார், அட்டாவதானம் இராமசாமியா பிள்ளையாவார். இவர் தம்முடைய பாட்டனாரிடம் தமிழ்மொழியின் இலக்கண இலக்கியங்களை நன்கு தெரிந்து சிறந்த அறிஞராகத் திகழ்ந்தார்.

" கங்கையணி வேணியரன் திருநாமம்
தலைக்கொண்ட காசி மேவும்
செங்கைவடி வேலவன்மேல் சிவகாசி
அந்தாதித் தெரியல் வேய்ந்தான்

இங்கைகழு காசலம்வாழ் எழிற்சினி
நாடனருளிய நம் மாழ்வார்
நங்கையலர் மேலொடுநா மகளருளும்
பெற்றுயர்ந்த நாவ லோனே''

என்பது இவர் இயற்றிய பாடல்களில் ஒன்று.

## ௫௫௦. சுப்பிரமணிய பிள்ளை—தி.
## (1910)

சோழவள நாட்டில் கும்பகோணத்தைச் சேர்ந்த கோவில் தேவராயன் பேட்டை என்னும் ஊரில் தோன்றிக் கல்விகற்று ஆசிரியராகத் தொழில் புரிந்தவர். இவர் பாண்டிவள நாட்டில் கோனுப்பட்டு என வழங்கும் கோநகரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் கற்பக விநாயகர்மீது தோத்திரப்பா, முனிசுரர்கும்மி முதலிய நூல்களைப் பாடியுள்ளார்.

"தேவா லயத்தினும் தெய்வங்கள் இல்லினும்
திருமடம் நதிக்கரை யினும்
தெருவருச் சந்தியும் சுபாசுப விடத்தினுஞ்
சேர்ந்திடும் நிர்த் தோடனே
மூவா முதற்பொருள் ஆனதால் உனைப்போற்றி
மூவரும் முனிசு ரர்களும்
முக்காலும் உனையேத்தி முகமலர்ந் தன்போடு
மூண்டுமே நினைப்ப ணிகுவார்
தேவர்தி தேவிமீ னும்பிகையும் சொக்கர்வாழ்
திருவுற்ற கோந கரிலே
தேவாலயமதில் ஈசான திசையில்வாழ்
தேவனே எனையா ளுவாய்
பூவாலுனைப்போற்றிக் கோநகரில் உறைகின்ற
புகழ்தன வைசி யர்க்குப்
புகழோடு செல்வமீந் திதயத் தமர்ந்திடும்
புனிதனே கற்பகக் கனியே''

என்பது விநாயகர் தோத்திரத்தில் ஒரு பாட்டு.

## ௫௫௧. சுப்பிரமணிய பிள்ளை—வி.
## (1910)

இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் சாத்தூர்த் தாலுகாவில் திருத்தங்கால் என்னும் ஊரில் விநாயகம் பிள்ளை என்பவருக்குப்

புதல்வராகத் தோன்றினார். இலக்கண இலக்கியங்களை நன்கு பயிலாதபோதும் தெய்வத் திருவருளால் செய்யுள் பாடுந் திறன் இவருக்கு நன்கு அமைந்தது. அதனால் கோமதியம்பாள் பதிகம், கோமதியம்பாள்மாலை முதலிய நூல்களை இவர் இயற்றியிருக்கிறார்.

"பூவுலகில் ராசமா நகர்புன்னை வனமதில்
பொன்னிலகு பூஞ்சோலையில்
பூரணம தாய்ச் சங்க ரேசருடன் வாழ்கின்ற
பூவையே அபிராமியே
ஆவலொடு நாயகன் தனதுசுய ரூபமே
அருள்செய்ய வேண்டும் என்று
ஆடிஉத் ராடமதில் ஊசிமுனை நின்றநின்
அருந்தவப் பெருமை காண
மேவுமடி யார்களுடன் நிற்கின்ற வேளையவ்
விமலரிரு ரூப மாக
வேவருதல் கண்டுதன் எண்ணமது நிறைவேற
இல்லையென நிற்கும் வேளை
தீவிரம தாயிடப மீதிலே தனதுசுய
தேசோம யானந்த மாய்ச்
சென்றகண் காட்சியைக் கண்ணுற்ற தேவியே
செல்விகோ மதியம்மை யே"

என்பது கோமதி யம்மை பதிகத்தில் ஒரு பாட்டு.

## ருருஉ. சுப்பிரமணிய பிள்ளை—தா.

(20 - நூ.)

இவர் தாமோதரபுரம் என்னும் ஊரில் இருந்தவர். தேவிகோட்டை தி. அ. அ. அண்ணாமலைச்செட்டியார் விருப்பத்தின்படி 'திருச் சுழியற் கொம்பிலா வெண்பா வந்தாதி' என்னும் அந்தாதியை இவர் பாடியுள்ளார். இவ்வந்தாதி நூறு பாடல்களால் ஆகியது, கொம்பில்லாமல் (ெ) அமைந்தது.

"காரணா நான்மறையும் காணா தாற்றுகின்ற
பூரணா புன்னைவனம் புக்கவா—தாரணத்த
ருன்னு வடிவுடையா யுன்மா சறவருளன்
பின்னுனதாள் யான் கைப்பிடித்து"

என்பது நூலில் முப்பத் தொன்பதாவது பாட்டு.

## ருருங. சுப்பிரமணிய முதலியார்—க.
(19 - நூ.)

கொங்குவள நாட்டில் கோயமுத்தூரில் இருந்தவர். ச. திருச்சிற்றம்பலம் பிள்ளை என்னும் அறிஞரிடம் கல்வி கற்றுச் சிறந்த புலவரானார். சென்னை திருவல்லிக்கேணி இந்துவாலிப பக்தசன சபையார் விருப்பத்தின்படி இவர் திருவல்லிக்கேணி, அரசடிக் கற்பக விநாயகர் பதிகம், சிங்கார வேலர் பஞ்சரத்தினம் என்னும் நூல்களை இயற்றியுள்ளார்.

> "சீர்பூத்த திருவல்லிக் கேணி யில்வாழ்
> சிங்கார வேலரெ னும் சிறந்த தேவின்
> ஏர்பூத்த திருப்பதமாம் கரும்பைத் தேனை
> இனியதொரு கற்கண்டை எழில்கொள் பாலை
> நார்பூத்த மனத்தினராய் நம்பிக் கொள்ளின்
> நலமுறஇவ் வுலகதனில் வாழ்ந்து பின்னர்க்
> கார்பூத்த வாகனந்தே கவின்பெற் றோங்கிக்
> கலந்துருகன் அடிவிட்டின் வாழ்வாரன்றே,"

என்பது பஞ்சரத் தினத்தில் ஒரு பாட்டு. இவர் பின்னளிற் சென்னை மாநகரில் தங்கியிருந்தார் என்று தெரிகிறது.

## ருருச. சுப்பிரமணியம் பிள்ளை—சா.
(1910)

இவர் மைசூர் சாமிநாத பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றியவர். 'ஞானப்பிரகாச விளக்கம்' என்னும் நூலையும் வேறு சில நூல்களையும் இயற்றியுள்ளார். ஞானப்பிரகாச விளக்கம் உரைநடையாக அமைந்தது. அதனடியில் பின்வரும் பாடலை எழுதி முடித்திருக்கிறார்.

> "திங்கள் செங்கதிர் சீர்புவி மாநதி
> பொங்கும் வேலை புரந்தரர் மாதவர்
> சங்க மேவிடு சற்சனர் யாருமே
> துங்க மோடு துலங்கிட வாழியே."



